மலையுடனெடுத்தவல்லரக்கனீண்முடி
தலையுடனெரித்தருள்செய்தசங்கரா
விலையுடைநீற்றர்வெண்காடுமேவிய
வலையுடைப்புனல்வைத்தவடிகளல்லரே. (அ)

ஏடவிழ்நறுமலரயனுமாலுமாய்த்
தேடவுந்தெரிந்தவர்தேரகிற்கிலா
வேடமதுடையவெண்காடுமேவிய
வாடலையமர்ந்தவெம்மடிகளல்லரே. (கூ)

போதியர்பிண்டியர்பொருத்தமிலிக
ணீதிகள்சொல்லியுநினையகிற்கிலா
வேதியர்பரவுவெண்காடுமேவிய
வாதியையடிதொழவல்லலில்லையே. (க0)

நல்லவர்புகலியுண்ஞானசம்பந்தன்
செல்வனெஞ்சிவனுறைதிருவெண்காட்டின்மேற்
சொல்லியவருந்தமிழ்பத்துமவல்லவ
ரல்லலோடருவினையறுதலாணையே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

பண்காட்டிப்படியாயதன்பத்தர்க்குக்
கண்காட்டிக்கண்ணினின்றமணியொக்கும்
பெண்காட்டிப்பிறைச்சென்னிவைத்தான்றிரு
வெண்காட்டையடைந்துய்மடநெஞ்சமே. (க)

கொள்ளிவெந்தழல்வீசிநின்றாடுவா
ரொள்ளியகணஞ்சூழுமைபங்கனார்
வெள்ளியன்கரியன்பசுவேறிய
தெள்ளியன்றிருவெண்காடடைநெஞ்சே. (உ)

ஊனோக்குமின்பம்வேண்டியுழலாதே
வானோக்குமவழியாவதுநின்மினோ
தானோக்குந்தன்னடியவர்நாவினின்
றேனோக்குந்திருவெண்காடடைநெஞ்சே. (௩)

பருவெண்கோட்டுப்பைங்கண்மதவேழத்தி
னுருவங்காட்டினின்றானுமையஞ்சவே
பெருவெண்காட்டிறைவன்னுறையுமிடந்
திருவெண்காடடைந்துய்மடநெஞ்சமே. (௪)

பற்றவன்கங்கைபாம்புமதியுட
னுற்றவன்சடையானுயர்ஞானங்கள்
கற்றவன்கயவர்புரமோரம்பாற்
செற்றவன்றிருவெண்காடடைநெஞ்சே. (ரு)

கூடினானுமைபாளொருபாகமாய்
வேடனாயவிசயற்கருளசெய்தவன்
சேடனாசிவனார்சிந்தைமேயவெண்
காடனாரடியேயடைநெஞ்சமே. (௬)

தரித்தவன்கஙகைபாமபுமதியுடன்
புரித்தபுன்சடையான்கயவாபுர
மெரித்தவன்மறைநான்கினோடாறஙகம்
விரித்தவன்னுறைவெணகாடடைநெஞ்சே. (௭)

பட்டமிணடையவைகொடுபத்தர்கள்
சிட்டனாதியெனறுசிநதைசெய்யவே
நட்டமூாத்திஞானசசுடராயநின்ற
வட்டமூாத்திதன்வெண்காடடைநெஞ்சே. (௮)

ஏனவேடத்தினானும்பிரமனுந
தானவேடமுன்றுமுநதறிகினறிலா
ஞானவேடனவிசயறகருள்செயுங
கானவேடன்றனவெண்காடடைநெஞ்சே. (௯)

பாலையாடுவர்பன்மறையோதுவா
சேலையாடியகணணுமைபஙகனா
வேலையார்விடமுண்டவெண்காடர்க்கு
மாலையாவதுமாணடவரஙகமே. (௧௦)

இராவணன்செயமாமதிபற்றவை
யிராவணமமுடையான்றனையுள்குமி
னிராவணன்றனையூன்றியருள்செயத
விராவணன்திருவெணகாடடைமினே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாணடகம.

திருச்சிற்றம்பலம்

தூண்டுசுடர்மேனித்தூநீறுடிச
சூலஙகையேநதியோர்சுழலவாயநாகம
பூணடுபொறியரவஙகாதிறபெயது
பொறசடைகளவைதாழபபுரிவெணணூலர்
நீண்டுகிடநதிலஙகுதிஙகள்சூடி
நெடுநதெருவேவநதெனதுநெஞ்சஙகொணடார்
வேண்டுநடைநடககுமவெளளேறேறி
வெண்காடுமேவியவிகிாதனாரே. (௧)

பாதநதனிபபார்மேலவைத்தபாதர்
பாதாளமேழுருவப்பாய்நதபாத
ரோதமபடாவண்ணநின்றபாத
ரேழுலகுமாய்நினறவேகபாத

ரோததொலிமடங்கியூருணடேறி
யொத்துலகமெலலாமொடுங்கியபினை
வேதததொலிகொண்டுவீணைகேடபாா
வெண்காடுமேவியவிகிர்தனோ. (௨)

நெனனலையோரோடேநதிப்பிசசைக்கெனறு
வநதார்க்குவநதேனென்றிலலேபுககே
னநிலையேநிற்கினறாையஙகொளளா
ாருகேவருவார்போனேக்குகின்றா
றுநநிலைமையேதோநுமமூர்தானேதோ
வென்றேனுக்கொனறுகசசொலலமாட்டார்
மென்முலையார்கூடி விரும்பியாடும
வெணகாடுமேவியவிகிர்தனோ. (௩)

ஆகத்துமையடககியாறுசூடி
யைவாயரவசைத்தஙகானேறேறிப்
போகமபலவுடைத்தாயப்பூதஞசூழப
புலிததோலுடையாப்புகுநதுநினறா
பாகிடுவான்சென்றேனைப்பறறிநோககிப்
பரிசழித்தென்வளைகவாநதாாபாவியேனை
மேகமுகிலுரிஞசுசோலைசூழநத
வெணகாடுமேவியவிகிர்தனோ. (௪)

கொளளைககுழைககாதிற்குணடைப்பூதங
கொடுகொட்டிகொட்டிககுனிததுப்பாட
வுள்ளஙகவர்நதிடடுப்போவாாபோல
வுழிதர்வர்நானறெரியமாட்டேன்மீண்டேன
களளவிழிவிழிப்பர்காணககண்ணுற்
கணணுளார்போலேகரநதுநிறபா
வெளளைசசடைமுடியர்வேதநாவர்
வெணகாடுமேவியவிகிர்தனோ. (௫)

தொடடிலஙகுசூலததர்மழுவாளேநதிச
சுடர்ககொனறைததாரணிநதுசுவைகள்பேசிப
பட்டிவெள்ளேறேறிபபலியுஙகொளளாா
பார்ப்பாரைப்பரிசழிப்பாரொககின்றாராற்
கடடிலஙகுவெண்ணீறறர்கனலப்பேசிக
கருததழித்துவளைகவர்நதாாகாலைமாலை
விடடிலஙகுசடைமுடியாவேதநாவர்
வெணகாடுமேவியவிகிர்தனோ. (௬)

பெணபாலொருபாகமபேணுவாழககைக
கோணகம்பூண்பூணவுநாணுஞ்சொலலா
ருணபாருறஙகுவாரொவவாநஙகா
யுணபதுநஞசனறேலோபியுணணா
பணபாலவிரிசடையர்பறறிநோககிப
பாலைப்பரிசழியபபேசுகினறார்

விண்பானமதிசூடிவேதமோதி
வெண்காடுமேவியவிகிர்தனாரே. (எ)

மருதங்களாமொழிவர்மங்கையோடு
வானவருமாலயனுங்கூடித்தங்கள்
சுருதங்களாற்றுதித்துத்தூநீராட்டித்
தோத்திரங்கள்பலசொல்லித்தூபங்காட்டிக்
கருதுங்கொல்லெம்பெருமான்செய்குற்றேவ
லென்பார்க்குவேண்டும்வரங்கொடுத்து
விகிர்தங்களாடுப்பர்வெள்ளேறேறி
வெண்காடுமேவியவிகிர்தனாரே. (அ)

புள்ளானுநான்முகனும்புக்கும்போந்துங்
காணார்பொறியழலாய்நின்றான்றன்னை
யுள்ளானையொன்றலாவுருவினானை
யுலகுக்கொருவிளக்காய்நின்றான்றன்னைக்
கள்ளேறுகொன்றைதூயகாலமூன்று
மோவாமேநின்றுதவங்கள்செய்த
வெள்ளானைவேண்டும்வரங்கொடுப்பார்
வெண்காடுமேவியவிகிர்தனாரே. (கூ)

மாகக்குன்றெடுத்தோன்றன்மைந்தனாகி
மாவேழம்வில்லாமதித்தான்றன்னை
நோக்கருந்துணைத்தேவரொல்லார்நிற்க
நொடிவரையினேவ்விழித்தான்றன்னைக்
காக்குங்கடலிலங்கைக்கோமான்றன்னைக்
கதிர்முடியுங்கண்ணும்பிதுங்கவூன்றி
வீக்கந்தவிர்த்தவிரலார்போலும்
வெண்காடுமேவியவிகிர்தனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

படங்கொணாகஞ்சென்னிசேர்த்திப்பாயபுலித்தோலரையில்வீக்கி
யடங்கலாரூரெரியச்சீறியன்றுமூவர்க்கருள்புரிந்தீர்
மடங்கலானைச்செற்றுகந்தீர்மனைகடோறுந்தலைகையேந்தி
விடங்கராகித்திரிவதென்னேவேலைசூழ்வெண்காடனீரே. (௧)

இழித்துகந்தீர்முன்னைவேடமிமையவர்க்குமுரைகள்பேணா
தொழித்துகந்தீர்நீர்முன்கொண்டவுயர்தவத்தையமரர்வேண்ட
வழிக்கவந்தகாமவேளையவனுடையதாதைகாண
விழித்துகந்தவெற்றியென்னேவேலைசூழ்வெண்காடனீரே. (௨)

படைகளேநதிபபாரிடமுமபாதமபோற்றமாதுநீரு
முடையோர்கோவணத்தராகியுணமைசொலலீருண்மையனறே
சடைகடாழகக்ரணமிட்டுத்தனமைபேசியிலபலிககு
விடையதேறித்திரிவதெனனேவேலைசூழ்வெண்காடனீரே. (௩)

பணணுளீராய்ப்பாடுமோனீர்பத்தர்சித்தமபரவிக்கொணடீர்
கணணுளீராயக்கருததிலுமமைககருதுவார்கள்காணுமவணண
மணணுளீராய்மதியமவைததீர்வானநாடர்மருவியேத்த
விணணுளீராயநிற்பதென்னேவேலைசூழவெணகாடனீரே. (௪)

சுடமெடுததுநீருமபூவுஙகொணடுதொணடோவலசெய்ய
நடமெடுததொன்றாடிப்பாடிநலகுவீர்நீர்புலகும்வணணம
வடமெடுத்தகொஙகைமாதோர்பாகமாகவாகடலவாய
விடமிடறறிலவைத்ததென்னேவேலைசூழவெணகாடனீரே. (௫)

மாறுபடடவனத்தகத்தின்மருவவநதவன்களிற்றைப்
பீறியிட்டமாயபோர்ததீர்பெய்பலிககெனறிலலநதோறுங
கூறுபடடகொடியுநீருஙகுலாவியேற்றையடரவேறி
வேறுபடடுத்திரிவதெனனேவேலைசூழவெணகாடனீரே. (௬)

காதலாலேகருதுதொணடர்காரணத்தராகினறே
பூதமபாடப்புரிநதுநடடமபுவனியேத்தவாடவலலீர்
நீதியாகவேழிலோசைநித்தராகிசசித்தர்சூழ
வேதமோதிததிரிவதெனனேவேலைசூழவெணகாடனீரே. (௭)

குரவுகொனறைமதியமத்தஙகொஙகைமாதாகஙகைநாகம
விரவுகின்றசடையுடையீர்விருத்தரானீர்கருததிலுமமைப
பரவுமென்மேற்பழிகள்போககீர்பாகமாயமஙகையஞசி
வெருவவேழஞசெற்றதெனனேவேலைசூழவெணகாடனீரே. (௮)

மாடஙகாடடுங்கசசியுள்ளீர்நிசசயத்தானினைப்புளாாபாற
பாடுஙகாடடிலாடலுள்ளீர்பரவுமவன்னமெஙஙனேதா
னூடுஙகாடடிலயனுமாலுநணுகாவணணமனலுமாய
வேடஙகாடடித்திரிவதெனனேவேலைசூழவெணகாடனீரே. (௯)

விரிததவேதமோதவல்லார்வேலைசூழவெண்காடுமேய
விருத்தனுயவேதன்றன்னைவிரிபொழிற்றிருநாவலூர
னருத்தியாலாரூரனறேண்டனடியனகேட்டமாலைபததுந
தெரித்தவணணமொழியவலலாாசெமமையாளர்வானுளாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருவெண்காடுததிருபபதிகம் - ௬.

---

சுவாமிதிருநாமம் - சுவேதாரணியர்.
தேவிதிருநாமம - பிரமவித்தியாநாயகி.

---

ஆக திருப்பதிகம் - ௩௮.

# கஉ. கீழைத்திருக்காட்டுப்பள்ளி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

செயயருகேபுனலபாயவோஙகிசசெஙகயல்பாயசசிலமலாததேன்
கையருகேகனிவாழையீன்றுகானலெலலாஙகமழகாடடுப்பள்ளிப
பையருகேயழல்வாயவைவாய்பபாம்பணையானபணைததோளிபாக
மெய்யருகேயுடையானையுள்கிவிணடவரேறுவர்மேலுலகே. (க, உ)

திரைகளெலலாமலருஞசுமநதுசெழுமணிமுத்தொடுபொனவரன்றிக்
கரைகளெலலாமணிசேர்நதுரிஞசிககாவிரிகாலபொருகாட்டுபபள்ளி
யுரைகளெலலாமுணர்வெய்திநலலவுத்தமராயுயர்நதாருலகி
லரவமெலலாமரையார்ததசெலவாக்காடசெயவல்லலறுககலாமே. (ந)

தோலுடையானவணணப்போாவையினனசுணணவெணணீறுதுதைநதிலஙகு
நூலுடையானிமையோர்பெருமானுணணறிவாலவழிபாடுசெயயுங
காலுடையானகரிதாயகண்டனகாதலிககபபடுஙகாட்டுபபளளி
மேலுடையானிமையாதமுககணமின்னிடையாளொடுமேவேணடினனே. (ச)

சுலசலசநதகிலோடுமுநதிசசநதனமேகரைசார்த்தியெஙகும
பலபலவாயததலையார்ததுமணடிபபாயநதிழிகாவிரிபபாஙகரினவாயக
கலகலசின்றதிருஙகழலான்காதலிக்கபபடுஙகாடடுப்பள்ளிச
சொலவலதொண்டர்களேத்தநின்றசூலமவல்லானகழல்சொலலுவோமே. (ரு)

தளையவிழ்தண்ணிறநீலநெயதருமரைசெஙகழுநீருமெல்லாங
களையவிழுஙகுழலாாகடியக்காதலிககப்படுஙகாடடுபபள்ளித
துளைபயிலுஙகுழல்யாழமுரலததுனணியவின்னிசையாற்றுதைநத
வளைபயிலபாமபரையார்ததசெலவாககாட்செய்யவலலலறுககலாமே. (சு)

முடிகையினறறொருடுமோடடுழவர்முன்கைத்தருகூகைககருமபின்கடடிக்
கடிகையினலெறிகாட்டுபபள்ளிகாதலசெய்தானகரிதாயகணடன
பொடியணிமேனியினனையுள்கிப்போதொடுநீாசுமநதேத்திமுனனின
றடிகையினறறொழவல்லதொண்டாருவினையைததுரநதாட்செய்வாரே. (எ)

பிறையுடையானபெரியோர்களபெமமான்பெய்கழனடொறுமபேணியேத்த
மறையுடையானமழுவாளுடையான்வார்தருமாலகடனஞசமுணட
கறையுடையான்கனலாடுகணணாற்காமனைக்காய்நதவனகாடடுப்பள்ளிக
குறையுடையானகுறட்பூதச்செலவனகுரைகழலேகைகளகூப்பினோமே. (அ)

செற்றவர்தமமரணமமவறறைசசெவவழலவாயெரியூட்டிநினறுங
கறறவர்தாநதொழுதேததநின்றனகாதலிககபபடுஙகாட்டுபபள்ளி
யுறறவர்தாமுணாவெயதிநல்லவும்பருளளார்தொழுதேத்தநினற
பெற்றமருமபெருமானையலலாறபேசுவதுமற்றோர்பேசிலோமே. (கூ)

ஒண்டுவராததிலாடைமெய்போர்த்துச்சிகொளாமையுண்டேயுமைக்குங்
குண்டர்களோடக்கூறையில்லார்கூறுவதாங்குணமல்லகண்டீ
ரண்டமறையவனமாலுங்காணுவாதியினுனைகாட்டுப்பள்ளி
வண்டமருமமலர்க்கொன்றைமாலைவார்சடையானகழல்வாழ்த்துவோமே. (க0

பொன்னியருமணிநீலநெய்தலபோதுகளாற்பொலிவெய்துபொய்கைக்
கன்னியர்தாங்குடைகாட்டுப்பள்ளிக்காதலனைக்கடற்காழியர்கோன
றுன்னியவின்னிசையாறறுதைந்துசொல்லியஞானசம்பந்தனல்ல
தனனிசையாற்சொன்னமாலைபத்துந்தாங்கவல்லார்புகழ்தாங்குவாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிதிருநாமம் - ஆரணியசுந்தரர்.
தேவிதிருநாமம - அகிலாண்டநாயகி.

ஆ திருப்பதிகம் - ௩௧.

# கந. திருக்குருகாவூர்வெள்ளடை.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - அந்தாளிக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

சுண்ணவெண்ணீறணிமார்பிறறோலபுனைந்
தெண்ணருஞ்பல்கணமேத்தநின்றுடுவார்
விண்ணமர்பைமபொழிலவெள்ளடைமேவிய
பெண்ணமர்மேனியெமபிஞருகனே. (க)

திரைபுல்குகங்கைதிகழசடைவைத்து
வரைமகளோடுடனாடுதிர்மல்கு
விரைகமழதணபொழிலவெள்ளடைமேவிய
வரைமலகுவாளரவாட்டுகந்தீரே. (உ)

அடையலர்தொன்னகர்மூன்றெரிததன்ன
நடைமடமங்கையொர்பாகநயந்து
விடையுகந்தேறுதிர்வெள்ளடைமேவிய
சடையமர்வெணபிறைச்சங்கரனீரே. (௩)

வளங்கிளர்கங்கைமடவரலோடு
களமபடவாடுதிர்காடரங்காக
விளங்கியதண்பொழிலவெள்ளடைமேவிய
விளம்பிறைசேர்சடையெமபெருமானே. (௪)

சுரிகுழனலலதுடியிடையோடு
பொரிபுல்குகாட்டிடையாடுதிர்பொங்க
விரிதருபைம்பொழிலவெள்ளடைமேவிய
வெரிமழுவாட்படையெந்தைபிரானே. (ரு)

காவியங்கணமடவாளொடுங்காட்டிடைத்
தீயகலேந்திநின்றாடுதிர்தேனமலர்
மேவியதணபொழில்வெள்ளடைமேவிய
வாவினிலேந்துகொண்டாட்டுகந்தீரே. (௬,௭,௮,௯,௧௦,௧௧)

திருச்சிற்றம்பலம்,

## சுந்தரமூர்த்திநாயனார்.

### பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

இத்தனையாமாற்றையறிந்திலேனெம்பெருமான்
பித்தரோயென்றுமமைப்பேசுவர்பிறரெல்லா
முத்தினைமணிதன்னைமாணிக்கமுளைத்தெழுந்த
வித்தனேகுருகாவூர்வெள்ளடைநீயன்றே (௧)

ஆவியைப்போகாமேதவிர்த்தெனையாட்கொண்டாய்
வாவியிற்கயல்பாயக்குளத்திடைமடைதோறுங்
காவியுங்குவளையுங்கமலஞ்செங்கழுநீரு
மேவியகுருகாவூர்வெள்ளடைநீயன்றே. (௨)

பாடுவார்பசிதீர்ப்பாய்பரவுவார்பிணிகளைவா
யோடுநன்கலனாகவுண்பலிக்குழல்வானே
காடுநின்னிடமாகக்கடுவிருண்டமாடும
வேடனேகுருகாவூர்வெள்ளடைநீயன்றே (௩)

வெப்பொடுபிணியெல்லாந்தவிர்த்தெனையாட்கொண்டா
யொப்புடையொளிநீலமோங்கியமலர்ப்பொய்கை
யப்படியழகாயவணிநடைமடவன்ன
மெய்ப்படுகுருகாவூர்வெள்ளடைநீயன்றே. (௪)

வரும்பழிவாராமேதவிர்த்தெனையாட்கொண்டாய்
சுரும்புடைமலர்க்கொன்றைச்சுண்ணவெண்ணீற்றானே
யரும்புடைமலர்ப்பொய்கையல்லியுமல்லிகையும்
விரும்பியகுருகாவூர்வெள்ளடைநீயன்றே. (௫)

பண்ணிடைத்தமிழொப்பாய்பழத்தினிற்சுவையொப்பாய்
கண்ணிடைமணியொப்பாய்கடுவிருட்சுடரொப்பாய்
மண்ணிடையடியார்கண்மனத்திடர்வாராமே
விண்ணிடைக்குருகாவூர்வெள்ளடைநீயன்றே. (௬)

போந்தனைதரியாமேநமன்றமர்புகுந்தென்னை
நோந்தனைசெய்தாலுநுன்னலதறியேனான்
சாந்தனைவருமேலுந்தவிர்த்தெனையாட்கொண்ட
வேந்தனேகுருகாவூர்வெள்ளடைநீயன்றே. (௭)

மலக்கினின்னடியார்கண்மனத்திடைமாறீப்பாய்
சலச்சலமிடுக்குடையதருமனார்தமரென்னைக்
கலக்குவானவந்தாலுங்கடுந்துயர்வாராமே
விலக்குவாய்குருகாவூர்வெள்ளடைநீயன்றே. (௮)

படுவிப்பாயுனக்கேயாட்பலரையும்பணியாமே
தொடுவிப்பாய்துகிலொடுபொன்றோலுடுத்துழல்வானே
கெடுவிப்பாயல்லாதார்கேடிலாப்பொன்னடிக்கே
விடுவிப்பாய்குருகாவூர்வெள்ளடைநீயன்றே. (௯)

வளங்கனிபொழின்மல்குவயலணிந்தழகாய
விளங்கொளிகுருகாவூர்வெள்ளடையுறைவானை
யிளங்கிளையாரூரன்வனப்பகையவளப்ப
னுளங்குளிர்தமிழ்மாலைபத்தர்கட்குறையாமே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்குருகாவூர் வெள்ளடைத் திருப்பதிகம் - ௨.

---

சுவாமிதிருநாமம் - வெள்ளடைநாதர்.
தேவிதிருநாமம் - காவியங்கண்ணி.

---

ஆ திருப்பதிகம் - ௪௧.

---

சுந்தரமூர்த்திநாயனார், பரவையாருடன் திருவாரூரிலே, வாழ்ந்திருக்குங் காலத்திலே, சிவஸ்தலயாத்திரை செய்யவிரும்பி, திருநள்ளாறுமுதலிய ஸ்தலங்களை வணங்கி, திருப்பதிகம்பாடிப்போய், சீர்காழியின் எல்லையை வலங்கொண்டு வணங்கி, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருடைய திருவடிகளைத் துதித்து, திருக்குருகாவூருக்குப் போம்படி வழிக்கொண்டார். வழியிலே, சுவாமி, அவர் பசியினாலும் தாகத்தினாலும் வருந்துதலை அறிந்து, தண்ணீரும் பொதிசோறும் கொண்டு வந்து வெய்யில் வெப்பத்தைத் தணிக்கும்பொருட்டு ஒரு பக்கத்திலே ஒருபந்தலையுண்டாக்கி, அங்கே பிராமணவேடங்கொண்டு, சுந்தரமூர்த்தி நாயனாரை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார் அப்பொழுது சுந்தரமூர்த்திநாயனார் திருத்தொண்டர்களுடன் அவ்விடத்திலே வந்து, பந்தரின்கீழே போய், அந்தப்பிராமணர் சமீபத்திலே பஞ்சாக்ஷரத்தைச் சொல்லிக்கொண்டிருந்தார் பிராமணர் அவரைப்பார்த்து, "நீர்மிகப் பசிகொண்டிருக்கின்றீர். இந்தப்பொதிசோற்றை உண்டு இந்தத்தண்ணீரைக் குடித்து இளைப்பாறும்" என்று சொல்லியருள, சுந்தரமூர்த்திநாயனார் அதற்கு இசைந்து, அந்தப்பொதிசோற்றை வாங்கி, திருத்தொண்டருடன் அமுதுசெய்து, அளவில்லாத பரிசனங்களெல்லாரும் அமுதுசெய்யப் பண்ணினார் பண்ணியபின்னும், அந்தப் பொதிசோறு அவ்விடத்திலே பசித்துவந்த பிறரும் உண்ணும்படி குறையாது பொலிந்தது. சுந்தரமூர்த்திநாயனார் போஜனம் பண்ணியபின் ஜலபானம்பண்ணி, அந்த ஐயரைப்புகழ்ந்து, அவர் சமீபத்திலே பரிசனங்களோடு நித்திரை செய்ய, ஐயர் பந்தருடனே மறைந்தருளினார் சுந்தரமூர்த்திநாயனார் விழித்து எழுந்து, ஐயரைக்காணாமையால் அதிசயங்கொண்டு, "இத்தனையாமாற்றையறிந்திலேன்" என்னும் திருப்பதிகம்பாடி, திருக்குருகாவூரை அடைந்து, சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு, அங்கே இருந்தார்.

# கச. திருப்பிரமபுரம்*.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

தோடுடையசெவியன்விடையேறியோர்தூவெண்மதிசூடிக்
காடுடையசுடலைப்பொடிபூசியென்னுள்ளங்கவர்கள்வ
னேடுடையமலரான்முனைநாட்பணிந்தேத்தவருள்செய்த
பீடுடையபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (க)

முற்றலாமையிளநாகமோடேனமுளைக்கொம்பவைபூண்டு
வற்றலோடுகலனாப்பலிதேர்ந்தெனதுள்ளங்கவர்கள்வன்
கற்றல்கேட்டலுடையார்பெரியார்கழல்கையாற்றொழுதேத்தப்
பெற்றமூர்ந்தபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (உ)

நீர்பரந்தநிமிர்புன்சடைமேலோர்நிலாவெண்மதிசூடி
யேர்பரந்தவினவெள்வளைசோரவென்னுள்ளங்கவர்கள்வ
னூர்பரந்தவுலகின்முதலாகியவோரூரிதுவென்னப்
பேர்பரந்தபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (ங)

விண்மகிழ்ந்தமதிலெய்ததுமன்றிவிளங்குதலையோட்டி
லுண்மகிழ்ந்துபலிதேரியவந்தெனதுள்ளங்கவர்கள்வன்
மண்மகிழ்ந்தவரவம்மலர்க்கொன்றைமலிந்தவரைமார்பிற்
பெண்மகிழ்ந்தபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (ச)

ஒருமைபெண்மையுடையன்சடையன்விடையூருமிவனென்ன
வருமையாகவுரைசெய்யவமர்ந்தெனதுள்ளங்கவர்கள்வன்
கருமைபெற்றகடல்கொள்ளமிதந்ததோர்காலம்மிதுவென்னப்
பெருமைபெற்றபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (ரு)

மறைகலந்தவொலிபாடலோடாடலராகிமழுவேந்தி
யிறைகலந்தவினவெள்வளைசோரவென்னுள்ளங்கவர்கள்வன்
கறைகலந்தகடியார்பொழினீடுயர்சோலைக்கதிர்சிந்தப்
பிறைகலந்தபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே (சா)

சடைமுயங்குபுனலன்னனலன்னெரிவீசிச்சதிர்வெய்த
வுடைமுயங்குமரவோடுழிதந்தெனதுள்ளங்கவர்கள்வன்
கடன்முயங்குகழிசூழ்குளிர்கானலம்பொன்னஞ்சிறகன்னம்
பெடைமுயங்குபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (எ)

வியரிலங்குவரையுந்தியதோள்களைவீரம்விளைவித்த
வுயரிலங்கையரையன்வலிசெற்றெனதுள்ளங்கவர்கள்வன்
றுயரிலங்குமுலகிற்பலவூழிகடோன்றும்பொழுதெல்லாம்
பெயரிலங்குபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (அ)

* திருப்பிரமபுரம் என்பது சீர்காழி.

தாணுதலசெயதிறைகாணியமாலொடுதண்டாமரையானு
நீணுதலசெய்தொழியநமிமிர்நதானெனதுள்ளஙகவர்களவன
வாணுதலசெய்மகளீர்முதலாகியவையததவரோததப
பேணுதல்செயபிரமாபுரமேவியபெமமானிவனனறே (௯)

புத்தரோடுபொறியில்சமணுமபுறஙகூறநெறிநிலலா
வொததசொலலவுலகம்பலிதேர்நதெனதுள்ளஙகவாகள்வன
மத்தயானைமறுகவ்வுரிபோாத்ததோர்மாயமமிதுவென்னப
பிததர்போலுமபிரமாபுரமேவியபெமமானிவனனறே. (௧0)

அருநெறியமறைவலலமுனியகனபொய்கையலர்மேய
பெருநெறியபிரமாபுரமேவியபெமமானிவன்றனனை
யொருநெறியமனமவைத்துணர்ஞானசமபநதன்னுரைசெய்த
திருநெறியதமிழவலலவர்தொலவினைதீர்தலெளிதாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

சோழமண்டலத்திலே, பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, காழி, கொச்சைவயம், கழுமலம் என்னும், பன்னிரண்டு திருநாமங்களையுடைய சிவஸ்தலத்திலே, பிராமண குலத்திலே, கௌணியர் கோத்திரத்திலே, சிவபாதவிருதயரென்பவர் ஒருவர் இருந்தார் அவர் மனைவியார் கற்பிலேசிறந்த பகவதியாரென்பவர் அவர்கள் அநாதிமுத்த சித்துருவாகிய சிவபெருமானையே பரம்பொருளெனக் கருதும் மெய்யறிவினையும், உண்மாசைநீக்கும் பெருமையுடையதென்று உபநிடதங்களாலே உணர்த்தப்பட்ட விபூதிமேல்வைத்த பேரன்பைப் பரிபாலிக்குந் தன்மையையும் உடையர்களாகி, இல்லறத்திலே வாழ்ந்திருந்தார்கள்.

அங்ஙனமிருக்கும்பொழுது, சிவபாதவிருதயர், தமிழ்நாடெங்கும் ஆருகதமும் பௌத்தமுமாகிய பொய்ச்சமயங்களேபெருக, மெய்ச்சமயமாகிய சைவ சமயம் அருகி, விபூதி சாதன விளக்கங் குன்றுதலைக் கண்டு, கவலைகொண்டு, சர்வாபீஷ்டவரதராகிய தோணியப்பரையும் பெரியநாயகியாரையும் நோக்கி, பரசமயநிராகரணம்பண்ணிச் சைவஸ்தாபனம் செய்யவல்ல ஒருசற்புத்திரரைப் பெறும்பொருட்டு, மிகுந்தஅன்பினோடு தவஞ்செய்தார். அத்தவபலம் பற்றி, தோணியப்பருடைய பெருங்கருணையினாலே, பகவதியாருடைய அருமைத் திருவயிற்றிலே, கருப்பம் உண்டாகி, திருவாதிரைநக்ஷத்திரத்திலே, பரசமயத்தருக்கு நீங்கவும், வைதிகமார்க்கமும் சைவமார்க்கமுந் தழைத்தோங்கவும், வேதவேள்விகள் பெருகவும், எம்மொழிகளினுந் தமிழ் மொழியும், எவ்வுலகங்களினும் பூலோகமும் அப்பூலோகத்துப் பலநாடுகளினும் தமிழ்நாடுமே சிறக்கவும், பிள்ளையார் அவதரித்தருளினார்.

பிள்ளையார், மூன்றும் ஆண்டிலே, தம்முடைய தந்தையாராகிய சிவபெருமான் தம்மைச் சிவபாதவிருதயருக்குப் புத்திரராகக்கொடுக்க அவரைப்பிரிந்தமையால், ஓரோர்கால் அப்பிரிவு உள்ளத்திற்றோன்ற வெருக்கொண்டாற்போலக் குறிப்பயிலாய் அழுவர் இங்ஙனநிகழுநாளிலே வேறொருநாள், தந்தையாராகிய சிவபாதவிருதயர், ஸ்நானம்பண்ணுதற்குப் போம்பொழுது, பிள்ளையார், பரமசிவனுடைய திருவருள்கூட, அவரைத்தொடர்ந்து அழுதுகொண்டு பின் சென்றார். பின்சென்ற பிள்ளையாரைத் தந்தையார் திரும்பிப்பார்த்து, கோபமுடையவர்போல விலக்குதலும், பிள்ளையார் கால்கொட்டி மீளாராக; தந்தையார் "உன்செய்கை இதுவாயில்வா" என்று, கொண்டு சென்று, ஆலயத்தினுள்ளிருக்கின்ற தீர்த்தத்தை அடைந்து, அப்பிள்ளையாரைக் கரையிலே வைத்து

விட்டு, தாந்தீர்த்தத்தினுள்ளே இறங்கி நின்றுகொண்டு, சங்கற்பம் அகமருஷணசூக்தபடன முதலியன செய்தார். அப்பொழுது பிள்ளையார் பார்த்துக்கொண்டிருந்தார் பின்பு தந்தையார் ஸ்நானம்பண்ணும்பொழுது, பிள்ளையார் அவரைக்காணாது இறையளவாயினுந் தரியார் என்னும் நிலைமை தலைக்கீடாக, சிவபிரானுடைய திருவடிகளை வழிபட்ட முன்னுணர்ச்சி மூள, கரையினின்று கண்களைக் கண்ணீர் ததும்பும்படி கைகளினாலே பிசைந்து, அதரந்துடிக்க, எவ்வுலகங்களும் குதூகலிக்க, பொருமி அழுதார். தம்முடைய முற்சார்பை அறிந்தோ பிள்ளைமையானோ, சுவாமியுடைய திருத்தோணிச்சிகரத்தைப்பார்த்து, "அம்மே அப்பா" என்று, அழைத்தழைத்து அழுதார். அப்பொழுது தோணியப்பர் அவருடைய முற்றிருத்தொண்டை நினைந்து, அவருக்கு அருள்செய்தற்குத் திருவுளங்கொண்டு, பார்வதிதேவியாரோடும் இடபாரூடராய் எழுந்தருளி, தீர்த்தக்கரையை அடைந்து, உமாதேவியாரை நோக்கி, "உன்னுடைய முலைப்பாலைப் பொன்வள்ளத்திலே கறந்து இவனுக்கு ஊட்டு" என்று அருளிச்செய்தார் உமாதேவியார் சென்றணைந்து, தம்முடைய திருமுலைப்பாலைப் பொன்வள்ளத்திலே கறந்து, சிவஞானத்தைக் குழைத்து, பிள்ளையாருடைய கண்ணீரைத்துடைத்து, கையிலே கொடுத்து ஊட்ட, சிவபெருமான் அழுகைதீர்த்து அநுக்கிரகஞ்செய்தருளினார், அப்பிள்ளையார் சர்வான்மாக்களுக்கும் பரமபிதாமாதாக்களாகிய சிவன் சத்தி இருவராலும் ஆளப்பட்டமையினாலே ஆளுடையபிள்ளையார் என்னும் திருநாமமும், சிவஞானத்தோடு சம்பந்தஞ் செய்தலினாலே திருஞானசம்பந்தமூர்த்தி என்னும் திருநாமமும் உடையராயினார்.

சிவபாதவிருதயர் சிறிதுபொழுதிலே தம்முடைய நியமங்களை முடித்துக்கொண்டு கரையிலேறி, பரஞானக்கண்ணினாலே சிவத்தைத் தரிசித்து அதில அதீதப்பட்டு நின்ற ஆளுடைய பிள்ளையாரை நோக்கி, "நீ யார் தந்தபாலை உண்டாய்" என்று கோபித்து, "எச்சில மயங்க உனக்கு இதனைத் தந்தவரைக்காட்டு" என்று சொலவி, கையில் எடுத்த ஒரு சிறிய மாறுகொண்டோச்ச, பிள்ளையார் ஆனந்தபாஷ்பஞ் சொரிய, உச்சியின்மேல் எடுத்தருளிய ஒரு திருக்கை விரலினாலே சுட்டி, ஆகாயத்திலே இடபாரூடராகி உமாதேவியாரோடு நின்றருளிய சிவபெருமானைக்காட்டி, உள்ளே நிறைந்து எழுந்த சத்தியஞானத் திருமொழியினாலே, எல்லையில்லாத வேதத்தினுட்சிறந்த தாற்பரியங்களெல்லாவற்றையும் ஆன்மாக்கள் உய்யும்பொருட்டுத் தமிழினாலே திருவாய்மலர்ந்தருளுதற்குத் திருவுளங்கொண்டு, அவவேதத்திற்கு ஆதியாகிய அக்ஷரத்தை மெய்யொடு புணர்த்தி, தம்முடையபாடல் சிவபெருமானுடைய திருச்செவியில் ஏறும்பொருட்டு முன்னர் அத்திருச்செவியையே சிறப்பித்து, "தோடுடையசெவியன் விடையேறியோர் தூவெண் மதிசூடிச், காடுடையசுடலைப்பொடி பூசியென்னுள்ளங் கவர்கள்வ,னேடுடையமலரான்முனை நாட்பணிந் தேத்த வருள்செய்த பீடுடையபிரமாபுர மேவிய பெம்மானிவனன்றே, என்றுபாடத்தொடங்கியருளினார். சிவபெருமான் தமக்குப் பிழைசெய்த ஆன்மாக்களும் பின் தம்மை வந்தடையின் அவர்களுக்கு அநுக்கிரகம் செய்வாரென்பதை விளக்கும்பொருட்டு, தம்மைமதியாமல் தாம் வீற்றிருக்கின்ற திருக்கைலாசத்தை எடுத்துத் தன்வலியிழந்த இராவணன் பின் தம்மேல் இசைபாட அவனுக்கு அருள்புரிந்த திறத்தை எட்டாந்திருப்பாட்டிலும், எவ்வகைப்பட்ட சிறப்பினரும் சிவபெருமானை அன்போடு வழிபடினன்றி அவரை அடையார்கள் என்பதை விளக்கும்பொருட்டு, சிவபெருமான் தம்மை வணங்குகின்றவர்களுக்கே அருள்செய்வாரென நினைந்து அவரை வணங்காது வழுவாகிய மானத்தை மேற்கொண்டு மயங்கிய பிரமவிஷ்ணுக்கள் இழிவாகிய பன்றியும் அன்னமுமாய்த்தேடியும் அடையாதவர்களாகிப் பின்பு திருவைந்தெழுத்தைத் துதித்தே உய்ந்த திறத்தை ஒன்பதாந்திருப்பாட்டிலும், வேதகாரணராகிய கடவுளை அடையுநெறியை அறிந்து உய்யாத சமணரும் புத்தருமாகிய கையர்களுடைய சமயங்கள் கபடமாக்கங்

கள் என்னுந் திறத்தைப் பத்தாந்திருப்பாட்டிலும், அமைத்துப் பாடியருளினார். இங்ஙனந் திருப்பதிகத்தை நிறைவித்து, திருக்கடைக்காப்புச் சாத்தித்தொழுது கொண்டு நின்றார் சிவபெருமானுடைய பெருங்கருணையைக் கண்டு ஆகாயத்திலே தேவர்களெல்லாரும் புஷ்பமழை பொழிந்தார்கள். சிவபிரான் தேவதுந்துபிகள் முழங்க, கந்தருவர் கின்னரர் கீதவொலிசெய்ய, அரிபிரமேந்திராதியர் துதிக்க, சிவகணர்கள் ஹர ஹர என்று சொல்ல, முநிவர்கள் வேதகோஷத்தோடு சூழ, பார்வதியாரோடு திருத்தோணிக்கு எழுந்தருளினார். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் அதைக்கண்டு அவரைத்தொடர்ந்து சிவபிரான் எழுந்தருளிய திருக்கோயிலினுள்ளே பிரவேசித்தார் அநந்தகோடி சிவபுண்ணியங்களைச் செய்து அப்பிள்ளையாருக்குப் பிதாவாயிருக்கப்பெற்ற சிவபாதவிருதயர் கைகுவித்து ஆனந்தக்கூத்தாடி, வெருட்சியும் வியப்பும் விருப்பும் அடைந்து, அவர் திருவாய்மலர்ந்தருளிய திருநெறித்தமிழின் பொருளை உணர்ந்தார். பிள்ளையாரைப்போலச் சிவபிரானைத் தரிசிக்கப்பெற்றிலராயினும், அங்குநிகழ்ந்த அற்புதத்தைக்கண்டே, அது தோணியப்பருடைய திருவருளெனத் துணிந்து, பேரானந்தத்தோடு முன்சென்ற பிள்ளையாருக்குப் பின்சென்றார்.

---

பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்

எம்பிரானெனக்கமுதமாவானுந்தன்னடைந்தார்
தம்பிரானாவானுந்தழன்மேந்துகையானுங்
கம்பமாகரியுரித்தகாபாலிகறைக்கண்டன்
வம்புலாம்பொழிற்பிரமபுரத்துறையும்வானவனே (௧)

தாமென்றுமனந்தளராத்தகுதியராயுலகத்துக்
காமென்றுசரண்புகுந்தாரதமைக்காக்குங்கருணையினா
னோமென்றுமறைபயில்வார்பிரமபுரத்துறைகின்ற
காமன்றனுடலெரியக்கனல்சேர்ந்தகண்ணானே. (௨)

நன்னெஞ்சேயுன்னையிரந்தேனம்பெருமான்றிருவடியே
யுன்னஞ்செய்திருகண்டாயுய்வதனைவேண்டுதியே
லன்னஞ்சேர்பிரமபுரத்தாரமுதையெப்போதும்
பன்னஞ்சீர்வாயதுவேபார்க்கண்ணேபரிந்திடவே. (௩)

சாநாளின்றிம்மனமேசங்கைதனைத்தவிர்ப்பிக்குங்
கோனாளுந்திருவடிக்கேகொழுமலர்தூவெத்தனையுந்
தேனாளும்பொழிற்பிரமபுரத்துறையுந்தீவண்ணனை
நாநாளுநன்னியமஞ்செய்தவன்சீர்நவின்றேத்தே. (௪)

கண்ணுதலான்வெண்ணீற்றான்கமழ்சடையான்விடையேறி
பெண்ணிதமாமுருவத்தான்பிஞ்ஞகன்பேர்பலவுடையான்
விண்ணுதலாத்தோன்றியசீர்ப்பிரமபுரந்தொழவிரும்பி
யெண்ணுதலாஞ்செல்வத்தையியல்பாகவறிந்தோமே. (௫)

எங்கேனுமியாதாகிப்பிறந்திடினுந்தன்னடியாரக்
கிங்கேயென்றருள்புரியுமெம்பெருமானெருதேறிக்
கொங்கேயுமலர்ச்சோலைக்குளிர்பிரமபுரத்துறையுஞ்
சங்கேயொத்தொளிர்மேனிச்சங்கரன்றன்றன்மைகளே. (௬)

சிலையதுவெஞ்சிலையாகத்திரிபுரமூன்றெரிசெய்த
விலைநுனைவேற்றடக்கையனேந்திழையாளொருகூற
னலைபுனல்சூழ்பிரமபுரத்தருமணியையடிபணிந்தா
ரிலையுடையபெருஞ்செலவமீலகிற்பெறலாமே. (எ)

எரித்துமயிராவாணரக்கன்வெற்பெடுக்கத்தோளொடுதா
ணெரித்தருளுஞ்சிவமூர்த்திநீறணிந்தமேனியினு
ணுரித்தவரித்தோலுடையானுறைபிரமபுரந்தனனைத
தரித்தமனமெப்போதும்பெறுவார்தாந்தக்காரே. (கம) (அ)

கரியானுநான்முகனுங்காணாமைக்கனலுருவா
யரியானுமபரமேட்டியரவுஞ்சேரகலத்தான்
றெரியாதானிருந்துறையுந்திகழ்பிரமபுரஞ்சேர
வுரியாராமேழுலகுமுடனாளவுரியாரே. (கூ)

உடையிலார்சீவரத்தார்தன்பெருமையுணர்வரியான்
முடையிலாவெண்டலைக்கைமூர்த்தியாந்திருவுருவன
பெடையிலார்வண்டாடும்பொழிற்பிரமபுரத்துறையுஞ்
சடையிலாவெண்பிறையானருளபணிவார்தக்காரே. (அ) (கo)

தன்னடைந்தார்க்கின்பங்கடருவானைத்தத்துவனைக
கன்னடைந்தமதிற்பிரமபுரத்துறையுங்காவலனை
முன்னடைந்தானசம்பந்தன்மொழிபத்துமிவைவல்லார்
பொன்னடைந்தாரபோகங்களபலவடைந்தாரபுண்ணியரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

கறையணிவேலிலாபோலுங்கபாலந்தரித்திலாபோலு
மறையுநவின்றிலர்போலுமாசுணமார்த்திலர்போலும
பறையுங்கரத்திலர்போலும்பாசம்பிடித்திலர்போலும
பிறையுஞ்சடைக்கிலாபோலும்பிரமபுரமமர்ந்தாரே. (க)

கூரம்பதுவிலாபோலுங்கொக்கினிறகிலர்போலு
மாரமுமபூண்டிலர்போலுமானையணிந்திலர்போலுந
தாருஞ்சடைக்கிலர்போலுஞ்சண்டிக்கருளிலாபோலும்
பேருமபல்விலர்போலுமபிரமபுரமமர்ந்தாரே. (உ)

சித்தவடிவிலாபோலுந்தேசந்திரிந்திலர்போலுங
கத்திவருங்கடுங்காளிகத்தங்கடவிர்த்திலாபோலு
மெய்த்தநயனமிடந்தார்க்காழியளித்திலர்போலும
பித்தவடிவிலர்போலுமபிரமபுரமமர்ந்தாரே. (ங)

நச்சரவாட்டிலர்போலுநஞ்சமிடற்றிலர்போலுங
கச்சுத்தரித்திலர்போலுங்கங்கைதரித்திலர்போலு
மொய்ச்சவன்பேயிலர்போலுமுப்புரமெய்திலர்போலும்
பிச்சையிரந்திலர்போலுமபிரமபுரமமர்ந்தாரே. (ச)

தோடுசெவிக்கிலர்போலுஞ்சூலம்பிடித்திலர்போலு
மாடுதடக்கைவலியயானையுரித்திலர்போலு
மோடுகரத்திலர்போலுமொள்ளழலுகையிலர்போலும
பீடுமிகுத்தெழுசெல்வப்பிரமபுரமமர்ந்தாரே. (௫)

விண்ணவர்கண்டிலர்போலுமவேள்வியழித்திலர்போலு
மண்ணலயனறலைவீழவன்றுமறுத்திலர்போலும
வண்ணவெலும்பினொடக்குவடங்கட்டித்திலர்போலும
பெண்ணினமொய்த்தெழுசெல்வப்பிரமபுரமமர்ந்தாரே. (௬)

பன்றியின்கொம்பிலர்போலும்பார்த்தற்கருளிலர்போலுங்
கன்றியகாலனைவீழக்காலகொடுபாய்ந்திலர்போலுந்
துன்றுபிணஞ்சுடுகாட்டிலாடித்துதைந்திலர்போலும
பின்றியும்பீடுமபெருகும்பிரமபுரமமர்ந்தாரே. (௭)

பரசுதரித்திலர்போலும்படுதலைபூண்டிலர்போலு
மரசனிலங்கையர்கோனையன்றுமடர்த்திலர்போலும
புரைசெய்புனத்திளமானும்புலியினதளிலர்போலும்
பிரசமலர்ப்பொழிலசூழ்ந்தபிரமபுரமமர்ந்தாரே. (௮)

அடிமுடிமாலயன்றேடவன்றுமளப்பிலர்போலுங்
கடிமலரைங்கணைவேளைக்கனலவிழித்திலர்போலும
படிமலர்ப்பாலனுக்காகப்பாற்கடலீந்திலர்போலும
பிடிநடைமாதர்பெருகும்பிரமபுரமமர்ந்தாரே. (௯)

வெற்றரைச்சீவரத்தார்க்குவெளிப்படகின்றிலர்போலு
மற்றவராணிழலல்வர்க்கறங்களுரைத்திலர்போலு
முற்றலொன்றிலர்போலுமோடுமுடிக்கிலர்போலும
பெற்றமுமூர்ந்திலர்போலும்பிரமபுரமமர்ந்தாரே. (௧௦)

பெண்ணுருவாணுருவல்லாபபிரமபுரநகர்மேய
வண்ணலசெய்யாதனவெல்லாமறிந்துவகைவகையாலே
நண்ணியஞானசம்பந்தனவின்றனபத்துமவல்லார்கள
விண்ணவரோடினிதாகவீற்றிருப்பாரவர்தாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்

கரமுன்மமலராற்புனன்மலர்தூவியேகலந்தேத்துமின்
பரமனூர்பலபேரினற்பொலிபத்தர்சித்தர்கடாமபயில
வரமுன்னவருள்செய்யவல்லவெம்மையனாடொறுமேயசீர்ப்
பிரமனூர்பிரமாபுரத்துறைபிஞ்ஞகனருள்பேணியே. (௧)

விண்ணிலார்மதிசூடினன்விரும்புமமறையவன்றன்றலை
யுண்ணநன்பலிபேணினனுலகத்துளூனுயிரான்மலைப்
பெண்ணினார்திருமேனியான்பிரமாபுரத்துறைகோயிலு
ளண்ணலாரருளாளனாயமர்கின்றவெம்முடையாதியே. (௨)

எலலையிலபுகழாளனும்மிமையோர்கணததுடன்கூடியும
பலலையார்தலையிற்பலியதுகொண்டுகநதபடிறனூர
தொல்லைவையகத்தேறுதொண்டாகமேலர்சொரிநதேத்தவே
மலலையமபொழிறேன்பிலகும்பிரமாபுரத்துறைமைநதனே. (௩)

அடையலார்புரஞ்சீறியநதணரேத்தமாமடமாதொடும
பெடையெலாங்கடறகானல்புல்குமபிரமாபுரத்துறைகோயிலான்
றொடையலார்நறுங்கொன்றையானறொழிலேபரவிநின்றேத்திரு
லிடையிலாசிவலோகமெய்துதற்கீதுகாரணங்காணமினே. (௪)

வாயிடைமமறையோதிமஙகையர்வந்திடப்பலிகொண்டுபோயப்
போயிடம்மெரிகானிடைப்புரிநாடகம்மினிதாடினன்
பேயொடுங்குடிவாழவினன்பிரமாபுரத்துறைபிஞ்ஞகன்
றாயிடைப்பொருடநதையாகுமென்றேதுவாககருடன்மையே. (௫)

ஊடினாலினியாவதென்னுயர்நெஞ்சமேயுறுவல்வினைக்
கோடிநீயுழலகின்றதென்னழலனாறுதன்கையிலேநதினான்
வீடுநேர்நததுகொளகையானபிரமாபுரததுறைவேதிய
னேடுநேர்மதியோடராவணியெநதையென்றுநின்றேததிடே. (௬)

செய்யன்வெளளியனொளளியார்சிலரொனறுமேத்திநினைநதிட
வையனுணடகையநதணனருமாமறைபபொருளாயினான
பெய்யுமாமழையானவனபிரமாபுரமமிடமபேணிய
வெய்யவெண்மழுவேநதியைநினைநதேததுமினவினைவீடவே. (௭)

கன்றொருக்கையிலேநதிநலவிளவினகனிபடவூறியுஞ
சென்றொருகியமாமறைபபொருடேர்நதசெமமலரோனுமா
யனறரககினைச்செறறவனனடியுமமுடியவைகாண்கிலா
பினறருககியதணபொழிற்பிரமாபுரத்தரனபெற்றியே (௮)

உணடுடுக்கைவிட்டார்களுமமுயர்களுஞ்சிமண்டைகொடேரும
பண்டடககுசொற்பேசுமப்பரிவொன்றிலார்கள்சொற்கொளளன்மின்
றண்டொடககுவன்சூலமுநதழன்மாமழுபபடைதனகையிற
கொண்டொடுக்கியமைநதனெமபிரமாபுரததுறைகூத்தனே. (௯)

பித்தனைப்பிரமாபுரத்துறைபிஞ்ஞகனகழல்பேணியே
மெய்ததவத்துநின்றோர்களுக்குரைசெய்துநன்பொருணமேவிட
வைத்தசிநதையுண்ஞானசம்பநதன்வாயநவினறெழுமாலைகள்
பொய்த்தவமபொறிநீஙகவின்னிசைபோறறிசெயயுமெய்யமமாநதரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்



பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

இறையவனீசனெநதையிமையோர்தொழுதேத்தநின்ற
கறையணிகணடனவெணடோடணிகாதினன்காலததனாறு
மறைமொழிவாய்மையினன்மலையாளொடுமென்னுசென்னிய
பிறையணிசெஞ்சடையான்பிரமாபுரமபேணுமினே. (௧)

சடையினன்சாமவேதன்சரிகோவணவன்மழுவாட்
படையினனபாய்புலித்தோலுடையானமறைபலகலைநூ
லுடையவனூனமில்லியுடனாயுமைநஙகையென்னும
பெடையொடுமபேணுமிடமபிரமாபுரமபேணுமினே. (௨)

மாணியைநாடுகாலனுயிர்மாய்தரசசெறறுககாளி
காணியவாடலகொணடான்கலநதூர்வழிசென்றுபிசசை
யூணியலபாககொண்டஙகுடனேயுமைநஙகையொடும
பேணியகோயின்மன்னுமபிரமாபுரமபேணுமினே. (௩)

பாரிடமவிண்ணுமெஙகுமபயினஞசுபாநதுமிண்டப
பேரிடர்த்தேவாகணமபெருமானிதுகாவென்னு
மோரிடத்தேகரநதஙகுமைநஙகையொடுமமுடனே
பேரிடமாககொண்டபிரமாபுரமபேணுமினே. (௪)

நசசரவசசடைமேனளிர்திஙகளுமொன்றவைத்தங
கசசமெழவிடைமேலழகாமமூவேநதிநலல
விச்சைபகர்நதுமிகவிடுமின்பலியென்றுநாளும
பிசசைகொளண்ணனன்னுமபிரமாபுரம்பேணுமினே. (௫)

பெற்றவன்முப்புரஙகள்பிழையாவணணம்வாளியினாற்
செற்றவன்செஞசடையிற்றிகழகஙகைதனைததரித்திட
டொற்றைவிடையினனுயுமைநஙகையொடுமமுடனே
பெற்றிமையாலிருந்தான்பிரமாபுரமபேணுமினே (௬)

வேதமலிநதவொலிவிழவினனொலிவீணையொலி
கீதமலிநதுடனேகிளரததிகழபௌவமறை
யோதமலிநதுயாவான்முகடேறவொண்மால்வரையான்
பேதையொடுமிருநதான்பிரமாபுரம்பேணுமினே. (௭)

இமையவரஞ்சியோடவெதிராவாரவர்தமமையினறி
யமைதருவலலரககனனடாத்துமலையனறெடுப்பக்
குமையதுசெய்துபாடககொற்றவாளொடுநாளகொடுத்திட
டுமையொடிருநதபிரான்பிரமாபுரமுன்னுமினே. (௮)

ஞாலமளிததவனுமமரியும்மடியோடுமுடி
காலம்பலசெலவுஙகணடிலாமையினாற்கததறி
யோலமிடவருளியுமைநஙகையொடுமமுடனா
யேலவிருநதபிரான்பிரமாபுரமேத்துமினே (௯)

துவருறுமாடையினாதொககபீலியாநக்கரைய
ரவரவாதன்மைகள்கணடணுகேன்மின்னருளபெறுவீர்
கவருறுசிநதையொனறிககழிகாலமெல்லாம்படைத்த
விவரவனொன்றிறைஞசிப்பிரமாபுரமேததுமினே. (௧௦)

உரைதருநான்மறையோர்புகழநதேத்தவொணமாதினொடும்
வரையெனவீற்றிருநதான்மலிகினறபிரமபுரத
தரசினையேத்தவலலவணிசமபநதனபத்துமவலலார்
விரைதருவிண்ணுலகமமெதிர்கொளளவிருமபுவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

# தேவாரம்.

## வேணுபுரம்.

### பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

வண்டார்குழலரிவையொடுபிரியாவகைபாகம்
பெண்டான்மிகவானான்பிறைச்சென்னிப்பெருமானூர்
தண்டாமரைமலராளுறைதவளநெடுமாடம்
விண்டாங்குவபோலுமமிகுவேணுபுரமதுவே (க)

படைப்புநிலையிறுதிப்பயன்பருமையொடுநேர்மை
கிடைப்பலகணமுடையானகிறிபூதப்படையானூர்
புடைப்பாளையினகமுகின்னொடுபுன்னைமலர்நாற்றம
விடைத்தேவருதென்றன்மிகுவேணுபுரமதுவே. (உ)

கடநதாஙகியகரியையவர்வெருவவுரிபோாத்துப
படநதாஙகியவரவக்குழைப்பரமேட்டிதனபழவூர்
நடநதாஙகியநடையார்நலபவளததுவர்வாய்மேல
விடந்தாஙகியகணணார்பயிலவேணுபுரமதுவே. (ங)

தக்கன்றனசிரமொன்றினையரிவிததவன்றனககு
மிக்கவ்வரமருள்செயதவெமவிண்ணோர்பெருமானா
பககம்பலமயிலாடிடமேகமமுழவதிர
மிககம்மதுவணடாாபொழிலவேணுபுரமதுவே (ச)

நானாவிதவுருவானமையாள்வானணுகாதார்
வானார்திரிபுரமூன்றெரியுணணசசிலைதொட்டான்
றேனார்நதெழுகதலிககனியுண்பான்றிகழமநதி
மேனோக்கினதிற்நகுமபொழிலவேணுபுரம்துவே (ரு)

மண்ணோாகளும்விண்ணோர்களுமவெருவிமிகவஞ்சக
கணணார்சலமூடிககடலோஙகவ்வுயர்நதானூர்
தணணார்நறுஙகமலமமலர்சாயவ்விளவாளை
விண்ணாகுதிகொள்ளுமவியனவேணுபுரமதுவே. (சா, எ)

மலையான்மகளஞசவ்வரையெடுததவ்வலியரககன்
றலைதோளவைநெரியசசரணாகிர்வைத்தவனறனனூர்
கலையாறொடுசுருதித்தொகைகற்றோர்மிகுகூடடம
விலையாயினசொறறோர்தருவேணுபுரமதுவே. (அ)

வயமுண்டவமாலுமமடிகாணாதலமாக்கும
பயனாகியபிரமனபடுதலையேநதியபரனூர்
கயமேவியசஙகந்தருகழிவிட்டுயர்செநநெல
வியனமேவிவந்துறங்குமபொழிலவேணுபுரமதுவே. (கூ)

மாசேறியவுடலாரமண்குழுக்களொடுதேரர்
தேசேறியபாதமவணஙகாமைத்தெரியானூா
தூசேறியவலகுறறுடியிடையார்துணைமுலையாா
வீசேறியபுருவததவாவேணுபுரமதுவே, (கo)

வேதத்தொலியானும்மிகுவேணுபுரந்தன்னைப்
பாதத்தினின்மனம்வைத்தெழுபந்தன்றனபாட
லேதத்தினையில்லாவிவைபத்துமிசைவல்லார்
கேதத்தினையில்லார்சிவகதியைப்பெறுவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

நிலவும்புனலுந்நிறைவாளரவு
மிலங்குஞ்சடையார்க்கிடமாமெழிலா
ருலவும்வயலுக்கொளியார்முத்த
மிலங்குங்கடலார்வேணுபுரமே. (௧)

அரவார்கரவன்னமையார்திரடோட்
குரவார்குழலாளொருகூறனிடங்
கரவாதகொடைக்கலந்தாரவர்க்கு
விரவாகவல்லார்வேணுபுரமே. (௨)

ஆகம்மழகாயவடான்வெருவ
நாகம்முரிபோர்த்தவனண்ணுமிடம்
போகந்தருசீர்வயல்சூழ்பொழில்கண்
மேகந்தவழும்வேணுபுரமே. (௩)

காசக்கடலில்விடமுண்டகண்டத்
தீசர்க்கிடமாவதுவின்னறவ
வாசக்கமலத்தனமன்றிரைகள்
வீசத்துயிலும்வேணுபுரமே. (௪)

அரையார்கலைசேரனமென்னடையை
யுரையாவுகந்தானுறையுமிடமா
நிரையார்கமுகின்னிகழ்பாளையுடை
விரையார்பொழில்சூழ்வேணுபுரமே. (௫)

ஒளிரும்பிறையுமுறுகூவிளவின்
றளிருஞ்சடைமேலுடையானிடமா
நளிரும்புனலின்னலசெங்கயல்கண்
மிளிரும்வயல்சூழ்வேணுபுரமே. (௬)

ஏவும்படைவேந்தனிராவணனை
யாவென்றலறவடர்த்தானிடமாந்
தாவும்மறிமானொடுதண்மதிய
மேவும்பொழில்சூழ்வேணுபுரமே. (௭)

கண்ணன்கடிமாமலரிற்றிகழு
மண்ணலிருவரறியாவிறையூர்
வண்ணச்சுதைமாளிகைமேற்கொடிகள்,
விண்ணிற்றிகழும்வேணுபுரமே. (௮)

போகமமறியார்துவாபோரத்துழல்வா
ராகமமறியாவடியாரிறையூர்
மூகமமறிவார்கலைமுத்தமிழநூன்
மீகமமறிவார்வேணுபுரமே. (கூ)

நலமார்கடலைபோலவளமார்தருநற
புலமார்தருவேணுபுரததிறையை
நலமாாதருஞானசமபநதன்சொனன
குலமாாதமிழ்கூறுவர்கூர்மையரே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

பூதததின்படையினீா பூஙகொன்றைத்தாரினீ
ரோதத்திெனொலியொடுமுமபாாவானவாபுகுநது
வேதத்தினிசைபாடிவிரைமலர்கள்சொரிநதேத்துமெ
பாதததீாவேணுபுரமபதியாககொண்டீரே. (க)

சுடுகாடுமேவினீர்துன்னமபெயகோவணநதோ
லுடையாடையதுகொணடீருமையாளையொருபாக
மடையாளமதுகொணடீரஙகையினிறபரசுவெனும்
படையாள்வீர்வேணுபுரமபதியாககொண்டீரே. (உ)

கஙகைசேர்சடைமுடியீாகாலனைமுனசெற்றுகநதீர்
திஙகளோடிளவரவநதிகழசென்னிவைத்துகநதீா
மஙகையோாகூறுடையீர்மறையோாகணிறைநதேத்தப
பஙகயஞ்சேர்வேணுபுரமபதியாககொணடீரே. (ங)

நீர்கொணடசடைமுடிமேனீண்மதியமபாம்பினொடு
மோர்கொண்டகொன்றையினேடெழின்மததமிலஙகவே
சீர்கொணடமாளிகைமேற்சேயிழையார்வாழத்துரைப்பக
கார்கொண்டவேணுபுரமபதியாககலநதீரே. (ச)

ஆலைசேர்தண்கழனியழகாகநறவுண்டு
சோலைசேர்வணடினஙகளிசைபாடததூமொழியார்
காலையேபுகுநதிறைஞ்சிகைதொழமெய்மாதினொடும்
பாலையாழவேணுபுரமபதியாககொண்டீரே (ரு)

மணிமல்குமாலவரைமேன்மாதினொடுமகிழநதிருநதீர்
துணிமல்குகோவணத்தீர்சுடுகாடிலாடுகநதீர்
பணிமலகுமறையோர்கள்பரிநதிறைஞ்சவேணுபுரத்
தணிமலகுகோயிலேகோயிலாகமாநதீரே. (சா)

நீலஞ்சேர்மிடறறினீாநீண்டசெஞ்சடையினீர்
கோலஞ்சேர்விடையினீர்கொடுங்காலன்றனைச்செற்றீ
ராலஞ்சேர்கழனியழகார்வேணுபுரமமருங
கோலஞ்சேரகோயிலேகோயிலாககொண்டீரே. (எ)

இறைமண்டிச்சஙகேறுஙகடலசூழதெனனிலஙகையரகோன
விறைமண்டுமுடிநெரியவிரல்வைத்தீரவனைதன்னிற
கறைமணடிப்பேரோதஙகலநதெற்றுஙகடற்கவின்ரா
விறைமண்டுவேணுபுரமேயமர்நதுமிககீரே. (அ)

தீயோமபுமறைவாணாக்காதியாநதிசைமுகன்மால்
போயோஙகியிழிநதாருமபோற்றரியதிருவடியீர
பாயோஙகுமரககலஙகள்படுதிரையான்மொதததுண்டு
சேயோஙகுவேணுபுரஞ்செழுமபதியாததிகழநதீரே. (கூ)

நிலையார்நதவுணடியினாநெடுஙகுண்டாசாக்கியர்கள்
புலையாஞரறவுரையைப்போற்ருதுன்பொன்னடியே
நிலையாகப்பேணிநீசரணென்ருர்தமையென்றும
விலையாகவாடகொண்டுவேணுபுரமவிருமபினையே. (௧௦, ௧.

திருச்சிற்றம்பலம்.

---

# திருப்புகலி.

பண் - தக்கராகம.

திருச்சிற்றம்பலம்.

விதியாய்விளைவாயவிளைவின்பயனுகிக
கொதியாவருகூறறையுதைத்தவாசேருமம
பதியாவதுபஙகயநினறலரத்தேன்
பொதியார்பொழிலசூழபுகலிநகாதானே. (க)

ஒன்ருபுரமூன்றுமெரித்தவொருவன்
மினனுரிடையாளொடுகூடியவேடந
தனனுலுறைவாவதுதண்கடல்சூழநத
பொன்னூவயற்பூமபுகலிநகாதானே. (உ)

வலியினமதிசெஞ்சடைவைததமணாளன்
புலியின்னதளகொணடரையாாத்தபுனிதன்
மலியுமபதிமாமறையோாநிறைநதீண்டிப்
பொலியும்புனறபூம்புகலிநகாதானே. (ங)

கயலார்தடஙகணணியொடுமெருதேறி
யயலார்கடையிற்பலிகொண்டவழக
னியலாலுறையும்மிடமெண்டிசையோாககும
புயலாாகடற்பூமபுகலிநகர்தானே. (ச)

காதாாகனபொற்குழைதோடதிலங்கத்
தாதாாமலாதண்சடையேறமுடித்து
நாதனுறையும்மிடமாவதுநாளும
போதாாபொழிறபூம்புகலிநகாதானே. (ரு)

வலமார்படைமான்மழுவேந்தியமைந்தன்
கலமார்கடனஞ்சமுதுண்டகருத்தன்
குலமார்பதிகொன்றைகள்பொன்சொரியத்தேன்
புலமார்வயற்பூம்புகலிந்நகர்தானே. (௬)

கறுத்தான்கனலான்மதின்மூன்றையும்வேவச்
செறுத்தான்றிகழுங்கடனஞ்சமுதாக
வறுத்தானயன்றன்சிரமைந்திலுமொன்றைப்
பொறுத்தானிடம்பூம்புகலிந்நகர்தானே. (௭)

தொழிலான்மிகுதொண்டர்கடோத்திரஞ்சொல்ல
வெழிலார்வரையாலன்றரக்கனைச்செற்ற
கழலானுறையுமிடங்கண்டலகண்மிண்டிப்
பொழிலானமலிபூம்புகலிந்நகர்தானே. (௮)

மாண்டார்சுடலைப்பொடிபூசிமயானத்
தீண்டாநடமாடியவேந்தன்றன்மேனி
நீண்டானிருவர்க்கெரியாயரவாரம்
பூண்டானகர்பூம்புகலிந்நகர்தானே. (௯)

உடையார்துகில்போர்த்துழல்வாரசமண்கைய
ரடையாதனசொல்லுவராதர்களோதுவதைக்
கிடையாதவன்றன்னகர்நன்மலிபூகம்
புடையார்தருபூம்புகலிந்நகர்தானே. (௧௦)

இரைக்கும்புனல்செஞ்சடைவைத்தவெம்மான்றன்
புரைக்கும்பொழிற்பூம்புகலிந்நகர்தன்மே
லுரைக்குந்தமிழ்ஞானசம்பந்தனொண்மாலை
வரைக்குந்தொழில்வல்லவர்நல்லவர்தாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

ஆடலரவசைத்தானருமாமறைதான்விரித்தான் கொன்றை
சூடியசெஞ்சடையான்சுடுகாடமர்ந்தபிரா
னேடவிழ்மாமலையாளொருபாகமமர்ந்தடியா ரேத்த
வாடியவெம்மிறையூர்புகலிப்பதியாமே. (௧)

ஏலமலிகுழலாரிசைபாடியெழுந்தருளாற் சென்று
சோலைமலிசுனையிற்குடைந்தாடித்துதிசெய்ய
வாலைமலிபுகைபோயண்டர்வானத்தைமூடிநின்று நல்ல
மாலையதுசெயயும்புகலிப்பதியாமே. (௨)

ஆறணிசெஞ்சடையானழகார்புரமூன்றுமன்று வேவ
நீறணியாகவைத்தநிமிர்புன்சடையெம்மிறைவன்
பாறணிவெண்டலையிற்பகலேபலியென்றுவந்து நின்ற
வேறணிகோலத்தினான்விரும்பும்புகலியதே. (௩)

வெள்ளமதுசடைமேற்கரநதானவிரவாரபுரங்கண் மூன்றுங்
கொள்ளவெரிமடுத்தானகுறையினறியுறைகோயி
லள்ளல்விளைகழனியழகார்விரைத்தாமரைமே லன்னம
புள்ளினம்வைகியெழுமபுகலிபபதிதானே. (௪)

சூடுமதிசசடைமேறசுரும்பார்மலர்க்கொன்றைதுன்ற நடட
மாடுமமரர்பிரானழகாருமையோடுமுடன்
வேடுபட்டநடநதவிகிர்தன்குணமபரவித் தொண்டர்
பாடவினிதுறையுமபுகலிப்பதியாமே. (௫)

மைநதணிசோலையினவாய்மதுப்பாய்வரிவண்டினங்கள் வநது
நநதிசைபாடநடமபயிலகின்றநம்பனிட
மநதிசெயமநதிரததாலடியார்கள்பரவியெழ விரும்பு
புநதிசெயநான்மறையோர்புகலிபபதிதானே. (௬)

மங்கையோர்கூறுகநதமழுவாளன்வார்சடைமேற திங்கள
சங்கைதனைக்கர்நதகறைககண்டன்கருதுமிடஞ்
செங்கயல்வார்கழனிதிகழுமபுகலிதனைச சென்றுத
மங்கையினாற்றொழுவாரவலமமறியாரே. (௭)

வலலியநுணணிடையாளுமையாளவிருப்பனவ னண்ணு
நல்லிடமென்றறியானலியும்விறலரக்கன
பல்லொடுதோணெரியவிரலூனறிப்பாடலுமே கைவா
ளொலலையருளபுரிநதானுறையுமபுகலியதே. (௮)

தாதலர்தாமரைமேலயனுநதிருமாலுந தேடி
யோதியுங்காண்பரியவுமைகோனுறையுமிட
மாதவிவானவகுளமலாநதெங்குமவிரைதோய வாயநத
போதலர்சோலைகள்சூழபுகலிப்பதிதானே. (௯)

வெநதுவாமேனியினாவிரிகோவணநீத்தார் சொலலு
மநதரஞானமெல்லாமவையோரபொருளென்னேல்
வநதெதிருமபுரமூனறெரிததானுறைகோயில வாய்நத
புநதியினார்பயிலும்புகலிப்பதிதானே. (௧௦)

வேதமோர்கீதமுணர்வாணர்தொழுதேத்த மிகுவாசப
போதனைபபோன்மறையோரபயிலும்புகலிதன்னு
ளாதனைஞானமிகுசமபநதன்றமிழமாலை நாவி
லோதவல்லாருலகிலுறுநோய்களைவாரே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

பண் - இந்தளம்.

---

திருச்சிற்றம்பலம்

உகலியாழகடலோங்குபாருளீ
ரகலியாவினையல்லலபோயறு,
மிகலியாரபுரமெய்தவன்னுறை
புகலியாநகர்போற்றிவாழமினே. (௧)

பண்ணியாள்வதோரேற்றாபான்மதிக
கண்ணியாகமழகொன்றைசோமுடிப
புண்ணியன்னுறையும்புகலியை
நண்ணுமின்னலமானவேண்டிலே. (உ)

வீசுமின்புரைகாதன்மேதகு
பாசவலவினைதீர்த்தபண்பினன்
பூசுநீறறினனபூமபுகலியைப்
பேசுமினபெரிதின்பமாகவே. (௩)

கடிகொள்கூவிளமத்தமவைத்தவன்
படிகொளபாரிடமபேசுமபானமையன
பொடிகொண்மேனியனபூமபுகலியு
ளடிகளையடைந்தன்புசெயயுமே. (௪)

பாதத்தாரொலிபலசிலமபின
ஞேதத்தார்விடமுண்டவனபடைப்
பூதத்தான்புகலிநகர்தொழ
வேதததாக்கிடமில்லையென்பரோ. (௫)

மறையினுனெலிமலகுவீணைய
னிறையினாாிமிர்புனசடையனெம
பொறையினனுறையுமபுகலியை
நிறையினறதொழநேசமாகுமே. (௬)

கரவிடைமனத்தாரைக்காண்கிலா
னிரவிடைப்பலிகொள்ளுமெமமிறை
பொருவிடையுயாத்தான்புகலியைப
பரவிடபபயிலபாவம்பாறுமே. (௭)

அருப்பினார்முலைமஙகைபஙகினன
விருபபினனரக்கன்னுரஞ்செகும
பொருபபினன்பொழிலாாபுகலியூ
ரிருப்பினனடியேத்திவாழத்துமே. (௮)

மாலுநான்முகன்றானும்வார்கழற்
சீலமுமமுடிதேடநீண்டெரி
போலுமேனியன்பூமபுகலியுட்
பாலதாடியபண்பனல்லனே. (௯)

நின்றுதுயபபவர்நீசாதேரர்சொல
லொன்றதாகவையாவுணர்வினு
ணினறவன்னிகழும்புகலியைச
சென்றுகைதொழசெலவமாகுமே. (௰)

புலலமேறிதன்பூம்புகலியை
நலலஞானசம்பநதனுவினுற்
சொலலுமாலையீரைந்துமவலலவர்க்
கிலலையாம்வினையிருநிலததுளே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

# திருவிராகம்.

## பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

முன்னியகலைப்பொருளுமூவுலகில்வாழ்வும்
பன்னியவொருத்தர்பழவூர்வினவின்ஞாலந்
தன்னினிமையோர்கடுதிசெய்துமுன்வணங்குஞ்
சென்னியாவிருப்புறுதிருப்புகலியாமே (க)

வண்டிரைமதிச்சடைமிலைத்தபுனல்சூடிப்
பண்டெரிகையாடுபரமன்பதியதென்பர்
புண்டரிகவாசமதுவீசமலர்ச்சோலைத்
தெண்டிரைகடற்பொலிதிருப்புகலியாமே. (உ)

பாவணவுசிந்தையவர்பத்தரொடுகூடி
நாவணவுமந்தணன்விருப்பிடமதென்பர்
பூவணவுசோலையிருண்மாலையெதிர்கூரத்
தேவணவிழாவளர்திருப்புகலியாமே (௩)

மைதவழுமாமிடறன்மாநடமதாடிக்
கைவளையினாளொடுகலந்தபதியென்பர்
செய்பணிபெருத்தெழுமுருத்திரர்கள்கூடித்
தெய்வமதிணக்குறுதிருப்புகலியாமே. (௪)

முன்னமிருமூன்றுசமயங்களவையாகிப்
பின்னையருள்செய்தபிறையாளனுறைகோயில்
புன்னைமலர்ப்பொழில்களகிலின்புகைகளாட்டச்
செந்நெல்வயலார்தருதிருப்புகலியாமே. (௫)

வங்கமலியுங்கடல்விடத்தினைநுகர்ந்த
வங்கணனருத்திசெய்திருக்குமிடமென்பர்
கொங்கணவியன்பொழிலின்மாசுபனிமூசத்
தெங்கணவுதேன்மலிதிருப்புகலியாமே. (௬)

நல்குரவுமின்பமுநலங்களவையாகி
வல்வினைகடீர்த்தருளுமைந்தனிடமென்பர்
பல்குமடியார்களடியாரவிசைபாடிச்
செல்வமறையோருறைதிருப்புகலியாமே. (௭)

பரப்புறுபுகழ்ப்பெருமையாளன்வரைதன்னா
லரக்கனையடர்த்தருளுமண்ணலிடமென்பர்
நெருக்குறுகடற்றிரைகண்முத்தமணிசிந்தச்
செருக்குறுபொழிற்பொலிதிருப்புகலியாமே. (௮)

கோடலொடுகூன்மதிகுலாயசடைதன்மே
லாடரவம்வைத்தருளுமப்பனிருவர்க்கு
நேடவெரியாகியிருபாலுமடிபேணித்
தேடவுறையுநகர்திருப்புகலியாமே. (௯)

கற்றமணருற்றுலவுதேரருரைசெய்த
குற்றமொழிகொள்கையதிலாதபெருமானூர்
பொற்றொடிமடந்தையருமைந்தர்புலனைந்துஞ்
செற்றவர்விருப்புறுதிருப்புகலியாமே. (௧௦)

செந்தமிழ்பரப்புறுதிருப்புகலிதன்மே
லந்தமுதலாகிநடுவாயபெருமானைப்
பந்தனுரைசெய்தமிழ்கள்பத்துமிசைகூர
வந்தவணமேத்துமவர்வானமுடையாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

உருவார்ந்தமெல்லியலோர்பாகமுடையீரடைவோர்கட்குக்
கருவார்ந்தவானுலகங்காட்டிக்கொடுத்தலைக்கருத்தானீர்
பொருவார்ந்ததெண்கடலொண்சங்கந்திளைக்கும்பூம்புகலித்
திருவார்ந்தகோயிலேகோயிலாகத்திகழ்ந்தீரே. (௧)

நீரார்ந்தசெஞ்சடையீர்நிரையார்கழல்சேர்பாதத்தீ
ரூரார்ந்தசில்பலியீருழைமானுரிதோலாடையீர்
போரார்ந்ததெண்டிரைசென்றணையுங்கானற்பூம்புகலிச்
சீரார்ந்தகோயிலேகோயிலாகச்சேர்ந்தீரே. (௨)

அழிமல்குபூம்புனலுமரவுஞ்சடைமேலடைவெய்த
மொழிமல்குமாமறையீர்கறையார்கண்டத்தெண்டோளீர்
பொழின்மல்குவண்டினங்களறையுங்கானற்பூம்புகலி
யெழின்மல்குகோயிலேகோயிலாகவிருந்தீரே. (௩)

கையிலார்ந்தவெண்மழுவொன்றுடையீர்கடியகரியின்றோல்
மயிலார்ந்தசாயன்மடமங்கைவெருவமெய்போர்த்தீர்
பயிலார்ந்தவேதியர்கள்பதியாய்விளங்கும்பைம்புகலி
யெயிலார்ந்தகோயிலேகோயிலாகவிசைந்தீரே. (௪)

நாவார்ந்தபாடலீராடலரவமரைக்கார்த்தீர்
பாவார்ந்தபல்பொருளின்பயன்களானீரயன்பேணும்
பூவார்ந்தபொய்கைகளும்வயலுஞ்சூழ்ந்தபொழிற்புகலித்
தேவார்ந்தகோயிலேகோயிலாகத்திகழ்ந்தீரே. (௫)

மண்ணார்ந்தமண்முழவந்ததும்பமலையான்மகளென்னும்
பெண்ணார்ந்தமெய்மகிழப்பேணியெரிகொண்டாடினீர்
விண்ணார்ந்தமதியமிடைமாடத்தாரும்வியன்புகலிக்
கண்ணார்ந்தகோயிலேகோயிலாகக்கலந்தீரே. (௬)

களிபுல்குவல்லவுணரூர்மூன்றெரியக்கணைதொட்டீ
ரளிபுல்குபூமுடியீரமரரேத்தவருள்செய்தீர்
தெளிபுல்குதேனினமுமலருள்விரைசேர்திண்புகலி
யொளிபுல்குகோயிலேகோயிலாகவுகந்தீரே. (௭)

பரந்தோங்கு பல்புகழ்சேர் அரக்கர்கோனை வரைக்கீழ்அட்
டுரந்தோன்றும் பாடல்கேட் டுகவையளித் தீருகவாதார்
புரந்தோன்று மும்மதிலு மெரியச்செற் றீர்பூம்புகலி
வரந்தோன்று கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. (அ)

சலந்தாங்கு தாமரைமே லயனுந் தரணியளந்தானுங்
கலந்தோங்கி வந்திழிந்துங் காணவொண்ணாக் கழலானீர்
புலந்தாங்கி யைம்புலனுஞ் செற்றார்வாழ் பூம்புகலி
நலந்தாங்கு கோயிலே கோயிலாக நயந்தீரே. (௯)

நெடிதாய வன்சமணும் நிறைவொன்றி லாச்சாக்கியருங்
கடிதாய கட்டுரையாற் கழறமேலோர் பொருளானீர்
பொடியாரு மேனியினீர் புகலிமறையோர் புரிந்தேத்த
வடிவாருங் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. (௧0)

ஒப்பரிய பூம்புகலி யோங்குகோயின் மேயானை
யப்பரிசிற் பதியான வணிகொண்ஞான சம்பந்தன்
செப்பரிய தண்டமிழாற் றெரிந்தபாட லிவைவல்லா
ரெப்பரிசி லிடர்நீங்கி யிமையோருலகத் திருப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்



பண் — செவ்வழி.

---

திருச்சிற்றம்பலம்

விடையதேறி வெறியக்கரவார்த்த விமலனார்
படையதாகப் பரசுதரித்தார்க் கிடமாவது
கொடையிலோவார் குலமு முயர்ந்த மறையோர்கடாம்
புடைகொள்வேள்விப் புகையும்பருலாவும் புகலியே. (௧)

வேலைதன்னின் மிகுநஞ்சினை யுண்டிருள் கண்டனார்
ஞாலமெங்கும் பலிகொண்டுழல்வார் நகராவது
சாலநல்லார் பயிலும் மறைகேட்டுப் பதங்களைச்
சோலைமேவுங் கிளித்தான் சொற்பயிலும் புகலியே. (௨)

வண்டுவாழுங் குழன்மங்கையோர் கூறுகந்தார் மதித்
துண்டமேவுஞ் சுடர்த்தொல் சடையார்க் கிடமாவது
கெண்டைபாயும் மடுவி லுயர்கேதகை மாதவி
புண்டரீக மலர்ப்பொய்கை நிலாவும் புகலியே. (௩)

திரியுமூன்று புரமு மெரித்துத் திகழ்வானவர்க்
கரியபெம்மா னரவக் குழையார்க் கிடமாவது
பெரியமாடத் துயருங் கொடியின் மிடைவால்வெயிற்
புரிவிலாத தடம்பூம் பொழில்சூழ் தண்புகலியே. (௪)

ஏவிலாருஞ் சிலைப்பார்த் தனுக்கின் னருள்செய்தவர்
நாவினாண் மூக்கரிவித்த நம்பர்க் கிடமாவது
மாவிலாருங் கனிவார் கிடங்கில் விழவாளைபோய்ப்
பூவிலாரும் புனற்பொய்கையில் வைகும் புகலியே. (௫)

தக்கன்வேள்விதகர்த்ததலைவன்றையலாளொடு
மொக்கவேயெமுரவோனுறையுமிடமாவது
கொக்குவாழைபலவின்கொழுந்தண்கனிகொன்றைகள்
புக்கவாசப்புன்னைபொன்றிரள்காட்டும்புகலியே. (௬,௭)

தொலைவிலாதவரக்கன்னுரத்தைத்தொலைவித்தவன்
றலையுந்தோளுநெரித்தசதுரர்க்கிடமாவது
கலையின்மேவும்மனத்தோரிரப்போர்க்குக்கரப்பிலார்
பொலியுமந்தண்பொழில்சூழ்ந்தழகாரும்புகலியே. (௮)

கீண்டுபுக்காப்பறந்தேயுயர்ந்தார்கேழலன்னமாய்க்
காண்டுமென்றார்கழல்பணியநின்றார்க்கிடமாவது
நீண்டநாரையிரையாரலவாரநிறைசெறுவினிற்
பூண்டுமிக்கவ்வயல்காட்டுமந்தண்புகலியதே. (௯)

தடுக்குடுத்துத்தலையைப்பறிப்பாரொடுசாக்கிய
ரிடுக்கணுய்ப்பாரிறைஞ்சாதவெம்மாற்கிடமாவது
மடுப்படுக்குஞ்சுருதிப்பொருள்வல்லவர்வானுளோ
ரடுத்தடுத்துப்புகுந்தீண்டுமந்தண்புகலியதே. (௧௦)

எய்தவொண்ணாவிறைவனுறைகின்றபுகலியைக்
கைதவமில்லாக்கவுணியன்ஞானசம்பந்தன்சீர்
செய்தபத்துமிவைசெப்பவல்லார்சிவலோகத்தி
லெய்திநல்லவிமையோர்களேத்தவிருப்பார்களே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## நாலடிமேல்வைப்பு

பண் — காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்

இயலிசையெனும்பொருளின்றிறமாம்
புயலனமிடறுடைப்புண்ணியனே
கயலனவரிநெடுங்கண்ணியொடு
மயலுலகடிதொழவமர்ந்தவனே
கலனாவதுவெண்டலைகடிபொழிற்புகலிதன்னு
ணிலனாடொறுமின்புறநிறைமதியருளினனே. (௧)

நிலையுறுமிடர்நிலையாதவண்ண
மிலையுறுமலர்கள்கொண்டேத்துதுமியா
மலையினிலரிவையைவெருவவன்றே
லலைவருமதகரியுரித்தவனே
யிமையோர்கணின்றுதொழவெழில்திகழ்பொழிற்புகலி
யுமையாளொடுமன்னினையுயர்திருவடியிணையே. (௨)

டாடினையருமறைவரன்முறையா
லாடினைநான்முகனொருதலைதிற
சாடினைகாலனைத்துயர்கெடச்சே
டீடுவெண்பிறைமுடிநின்மலனே
நினையேயடியார்தொழநெடுமதிற்புகலிந்நகர்
தனையேயிடமேவினைநவநெறியருளெமக்கே. (௩)

நிழறிகழ்மழுவினையானையின்றோ
லழறிகழ்மேனியிலணிந்தவனே
கழறிசைசிலம்பொலியலம்பநல்ல
முழவொடுமருநடமுயற்றினனே
முடிமேன்மதிசூடினைமுருகமர்பொழிற்புகலியு
ளடியாரவரோதத்துறவழிகொடுமிருந்தவனே. (௪)

கருமையின்னொளிர்கடனஞ்சமுண்ட
வுரிமையினுலகுயிரளித்தநின்றன்
பெருமையைநிலத்தவர்பேசினல்லா
லருமையிலளப்பரிதாயவனே
பரவேரிடையாளொடுமலைகடன்மலிபுகலிப்
பொருள்சேர்தரநாடொறும்புவிமிசைப்பொலிந்தவனே. (௫)

அடையரிமாவொடுவேங்கையின்றோல்
புடைபடவரைமிசைப்புனைந்தவனே
படையுடைநெடுமதிற்பரிசழித்த
விடையுடைக்கொடிமல்குவேதியனே
விகிர்தாபரமாநினைவிண்ணவர்தொழப்புகலித்
தகுவாய்மடமாதொடுந்தாள்பணிந்தவர்தமக்கே. (௬)

அடியவர்தொழுதெழவமரரேத்தச்
செடிபடுபலவினைசிதைப்பவனே
துடியிடையகலல்குற்றூமொழியைப்
பொடியணிமார்புறப்புல்கினனே
புண்ணியாபுனிதாபுகரேற்றினைபுகலிந்நகர்
நண்ணினாய்கழலேத்திடநண்ணகிலாவினையே. (௭)

இரவொடுபகலதாமெம்மானுன்னைப்
பரவுதலொழிகிலன்வழியடியேன்
குரவிரிநறுங்கொன்றைகொண்டணிந்த
வரவிரிசடைமுடியாண்டகையே
யனமென்னடையாளொடுமதிர்கடலிலங்கைமன்னை
யினமார்தருதோளடர்த்திருந்தனைபுகலியுளே. (௮)

உருகிடவுவகைதந்துடலினுள்ளாற்
பருகிடுமமுதனபண்பினனே
பொருகடல்வண்ணனும்பூவுளானும்
பெருகிடுமருளெனப்பிறங்கெரியா
யுயர்ந்தாயினிநீயெனையொண்மலரடியிணைக்கீழ்
வயந்தாங்குறநல்கிடுவளாமதிற்புகலிமனே. (௯)

கையினிலுண்பவர் கணிக்கநோன்பர்
செய்யவண்டுவர்மலர்ச்செதுமதியார்
பொய்யவருரைகளைப்பொருளெனருத
மெய்யவரடிதொழவிரும்பினனே
வியந்தாயவெள்ளேற்றினைவிண்ணவர்தொழுபுகலி
யுயர்ந்தார்பெருங்கோயிலுளொருங்குடனிருந்தவனே. (௧௦)

புண்ணியர்தொழுதெழுபுகலிநகர்
விண்ணவரடிதொழவிளங்கினனை
நண்ணியஞானசம்பந்தனவாயமை
பண்ணியவருந்தமிழ்பத்துமவல்லார்
நடலையவையின்றிப்போய்நண்ணுவர்சிவனுலக
மிடராயினவின்றித்தாமெய்துவர்தவநெறியே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

பண் - காந்தாரபஞ்சமம்.

---

திருச்சிற்றம்பலம்

கண்ணுதலானும்வெண்ணீற்றினானுங்கழலார்க்கவே
பண்ணிசைபாடநின்றாடினானும்பரஞ்சோதியும்
புண்ணியநான்மறையோர்களேத்தும்புகலிந்நகர்ப்
பெண்ணினல்லாளொடும்வீற்றிருந்தபெருமானன்றே (௧)

சாம்பலோடுந்தழலாடினானுஞ்சடையின்மிசைப்
பாம்பினோடும்மதிசூடினானும்பசுவேறியும்
பூம்படுகல்லிளவாளைபாயும்புகலிந்நகர்க்
காம்பனதோளியொடும்மிருந்தகடவுளன்றே (௨)

கருப்புநல்வார்சிலைக்காமன்வேவக்கடைக்கண்டானு
மருப்புநல்லானையினீருரிபோர்த்தம்மணாளனும்
பொருப்பனமாமணிமாடமோங்கும்புகலிந்நகர்
விருப்பினல்லாளொடும்வீற்றிருந்தவிமலனன்றே. (௩)

அங்கையினங்கழலேந்தினானுமழகாகவே
கங்கையைச்செஞ்சடைசூடினானுங்கடலின்னிடைப்
பொங்கியநஞ்சமுதுண்டவனும்புகலிந்நகர்
மங்கைநல்லாளொடும்வீற்றிருந்தமணவாளனே. (௪)

சாமநல்வேதனுந்தக்கனற்வேள்விதகர்த்தானு
நாமநூறாயிரஞ்சொல்லிவானோர்தொழுநாதனும்
பூமலருந்தண்பொழின்மன்னுமந்தண்புகலிந்நகர்க்
கோமளமாதொடும்வீற்றிருந்தகுழகனன்றே. (௫)

இரவிடையொள்ளெரியாடினானுமிமையோர்தொழச்
செருவிடைமுப்புரந்தீயெரித்தசிவலோகனும்
பொருவிடையொன்றுகந்தேறினானும்புகலிந்நக
ரரவிடைமாதொடும்வீற்றிருந்தவழகனன்றே. (௬)

சோபபொழுதுமலேவேலினுனுந்திகழபாலனமேல
வோடபதுசெயதவெஙகூறறுதைத்தநாளுமவேளவிபபுகை
போர்ப்பதுசெயதணிமாடமோஙகுமபுகலிநகர்ப
பாரப்பதியோடுடன்வீற்றிருநதபரமனன்றே. (எ)

கனனெடுமாலவரைக்கீழரககன்னிடாகணடானும
வின்னெடுமபோரவிறலவேடனுகிவிசயறகொரு
பொன்னெடுஙகோலகொடுத்தானுமநதண்புகலிநக
ரன்னமனனநடைமஙகையொடுமமமர்நதானனறே. (அ)

பொனனிறநான்முகனபசசையானெனறிவர்புகககுழித
தன்னேயின்றுனெனககாணபரியதழறசோதியும்
புன்னேபொன்றூதுதிரமலகுமநதணபுகலிநககர
மின்னிடைமாதொடுமவீற்றிருநதவிமலனன்றே. (கூ)

பிணடியுமபோதியுமபேணுவார்பேணேபபேணுததோர்
தொண்டருங்காதலசெயசோதியாயசுடர்சசோதியான்
புணடரீகமமலாபபொய்கைசூழநதபுகலிநககா
வணடமர்கோதையொடும்மிருநதமணவாளனே. (க0)

பூங்கமழகோதையொடுமமிருநதான்புகலிநகர்ப்
பாஙகனேஞானசமபநதன்சொனனதமிழபதத்தினை
யாஙகமரவெய்தியவாதியாகவிசைவலலவ
ரோஙகமராவதியோரதொழசசெலவதுறுணமைபே. (கக)

திருசசிற்றம்பலம

---

# திருப்புகலியும் - திருவீழிமிழலையும்.

விநாவுரை.

பண - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்

மைம்மருபூஙகுழற்கற்றைதுற்றவாணுதன்மான்விழிமஙகையோடும
பொயயமமொழியாமறையோர்களேத்தபபுகலிநிலாவியபுண்ணியனே
யெம்மிறையேயிமையாதமுககணீசவெனேசவிதென்கொல்சொலலாய்
மெய்ம்மொழிநான்மறையோரமிழலைவிணணிழிகோயில்விரும்பியதே. (க)

கழன்மல்குபநதொடம்மானேமுற்றில்கறறவர்சிற்றிடைககன்னிமார்கள்
பொழின்மல்குகிள்ளையைசசொறபயிறறுமபுகலிநிலாவியபுணணியனே
யெழினமலரோன்சிரமேநதியுண்டோரின்புறுசெல்வமிதென்கொலசொலலாய்
மிழலையுளவேதியரோததிவாழததவிண்ணிழிகோயிலவிரும்பியதே. (உ)

கனனியராடலகலநதுமிக்ககநதுகவாடைகலந்துதுங்கப்
பொன்னியன்மாடநெருஙகுசெல்வப்புகலிநிலாவியபுண்ணியனே [ய
யின்னிசையாழமொழியாளோரபாகத்தெமமிறையேயிதுவென்கொல்சொலலா
மின்னியனுண்ணிடையார்மிழலைவிண்ணிழிகோயிலவிரும்பியதே. (ங)

நாகபணந்திகழல்குன்மலகுநன்னுதன்மான்விழிமங்கையோடும
பூகவனம்பொழில்சூழ்ந்தவந்தண்புகலிநிலாவியபுண்ணியனே
யேகபெருந்தகையாயபெம்மானெம்மிறையேயிதுவென்கொலசொலலாய
மேகமுரிஞ்செயிலசூழ்மிழலைவிண்ணிழிகோயில்விரும்பியதே. (ச)

சந்தளறேறுதடங்கொளகொங்கைததையலொடுந்தளராதவாய்மைப்
புந்தியினூலமறையோர்களேத்தும்புகலிநிலாவியபுண்ணியனே
யெந்தமையாளுடையீசவெமமானெமமிறையேயிதுவென்கொலசொல்லாய்
வெந்தவெண்ணீறணிவாரமிழலைவிண்ணிழிகோயிலவிரும்பியதே. (ரு)

சஙகொலியிப்பிசுறுமகரந்தாஙகிநிரந்துதரஙகமேன்மேற்
பொஙகொலிநீர்சுமந்தோஙகுசெமமைப்புகலிநிலாவியபுண்ணியனே [ய்
யெஙகள்பிரானிமையோர்கள்பெமமானெமமிறையேயிது வென்கொலசொலலா
வெஙகதிர்தோயபொழில்சூழமிழலைவிண்ணிழிகோயில்விரும்பியதே. (சா)

காமனெரிபபிழம்பாகநோக்கிககாமபனதோளியொடுஙகலந்து
பூமருநான்முகன்போலவரேத்தபபுகலிநிலாவியபுண்ணியனே
யீமவனத்தெரியாடுகந்தவெமபெருமானிதுவென்கொலசொல்லாய
வீமருதணபொழில்சூழமிழலைவிண்ணிழிகோயிலவிரும்பியதே. (எ)

இலஙகையாவேநதெழிலவாய்ததிணடோளிற்றலறவ்விரலொற்றினயந்து
புலஙகளைகட்டவாபோற்றவந்தன்புகலிநிலாவியபுண்ணியனே
யிலஙகெரியேந்திநின்றெலலியாடுமெம்மிறையேயிதுவெனகொலசொல்லாய
விலஙகலொண்மாளிகைசூழமிழலைவிண்ணிழிகோயில்விரும்பியதே. (அ)

செறிமுளரித்தவிசேறியாறுஞ்செற்றதிலவீற்றிருநதானுமற்றைப்
பொறியரவத்தணையானுங்காணுப்புகலிநிலாவியபுண்ணியனே
யெறிமழுவோடிளமான்கையின்றியிருந்தபிரானிதுவென்கொல்சொல்லாய
வெறிகமழபூமபொழிலசூழமிழலைவிண்ணிழிகோயிலவிரும்பியதே (கூ)

பத்தர்கணமபணிநதேத்தவாய்த்தபான்மையதன்றியுமபலசமணும
புத்தருநின்றலர்தூற்றவந்தணபுகலிநிலாவியபுண்ணியனே
யெததவத்தோர்க்குமிலக்காய்நின்றவெமபெருமானிதுவென்கொலசொலலாய
வித்தகர்வாழபொழிலசூழமிழலைவிண்ணிழிகோயிலவிரும்பியதே. (க0)

விண்ணிழிகோயிலவிரும்பிமேவுமவித்தகமென்கொலிதென்றுசொலலிய
புண்ணியனைப்புகலிநிலாவுபூஙகொடியோடிருநதானைபபோற்றி
நண்ணியசீர்த்திநலஙகொள்கேளவிநான்மறைஞானசமபந்தன்சொனன
பண்ணியலபாடல்வல்லார்களிநதப்பாரொடுவிண்பரிபாலகரே. (கக)

திருச்சிற்றம்பலம்

---

# திருவெங்குரு.

## பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

காலைநன்மாமலர்கொண்டடிபரவிககைதொழுமாணியைககறுததவெஙகால
னோலமதிடமுன்னுயிரொடுமாளவுதைத்தவனுமையவள்விருப்பனெமபெருமான்
மாலைவந்தணுகவோதம்வந்துலவிமறிதிரைசஙகொடுபவளமுன்னுந்தி
வேலைவந்தணையுஞ்சோலைகளசூழ்ந்தவெஙகுருமேவியுள்வீற்றிருநதாரே. (க)

"மைமருபூங்குழல்" என்னும் பதிகத்தின் இறுதியில் விம்பட்டது.

திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவம்பரை நீங்கி, ஸ்ரீவாகீசமூர்த்தியோடு திருக்கடவூருக்குச் சமீபித்து, அங்குநின்று வந்து எதிர்கொண்டு வணங்கிய குங்குலியக்கலயநாயனார் முதலாகிய அடியார்களோடு, திருவீரட்டானத்திற்சென்று சுவாமிதரிசனஞ்செய்து, திருப்பதிகம்பாடி, அக் குங்குலியக்கலயநாயனார் வீட்டில் திருவமுதுசெய்து, திருக்கடவூர்மயானத்தையும் வணங்கிக்கொண்டிருந்தார்.

சிலநாளாயினபின் திருக்கடவூரை நீங்கி, திருவாக்கூர்முதலிய ஸ்தலங்களை வணங்கிக்கொண்டு திருவீழிமிழலையை அடைந்து, சுவாமிதரிசனஞ்செய்து திருப்பதிகம்பாடி, புறத்தணைந்து, அப்பமூர்த்தி ஒரு மடாலயத்தை அடைய, தாம வேறொரு மடாலயத்திலே போயிருந்தார் இருக்கும் நாளிலே, சீர்காழியிற் பிராமணர்கள், திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரைக் காணல்வேண்டுமென்னும் ஆசை செலுத்த, திருவீழிமிழலையை அடைந்து, தங்களை எதிர்கொண்ட அவவூர்ப் பிராமணர்களோடு திருக்கோயிலிலே போய்ச் சுவாமிதரிசனஞ் செய்து கொண்டு, அந்நாயனார் எழுந்தருளியிருக்கும் மடாலயத்திற் சென்று அவரை நமஸ்கரித்து, "சுவாமி! தேவரீர் அடியேங்களோடு சீர்காழிக்கு எழுந்தருளல வேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள் பிள்ளையார் அதுகேட்டு, "மிக நன்று, இன்று கழித்துத் திருவீழிமிழலையில் எழுந்தருளியிருக்குஞ் சிவபிரானுடைய அருளைப் பெற்றுக்கொண்டு, திருத்தோணியப்பரை வணங்குதற்கு உங்களோடு வருவேன்" என்றார் தோணியப்பர் அன்றிரவு பிள்ளையாருக்குச் சொப்பனத்திலே தோன்றி, "நாம் திருத்தோணியில எழுந்தருளியிருக்குந் திருக்கோலத்தை இத்திருவீழிமிழலையிலே உள்ள விண்ணிழிந்த விமானத்திலே காட்டுவோம், காண்" என்று சொல்லி, மறைந்தருளினார் பிள்ளையார் விழித்து எழுந்து, திருக்கோயிலிற்சென்று, அங்கே சுவாமியைத் தாம் முன்னே திருத்தோணியிற் கண்டபடியே கண்டு, திருவுளமகிழ்ந்து, "மைம்மருபூங்குழல" என்னும் விடையைப்பதிகம் பாடிப்போந்து, சீர்காழிப்பிராமணர்களை நோக்கி, "திருத்தோணியப்பர் தாம் எழுந்தருளியிருக்கும் ஸதலங்களெங்குஞ் சென்று தரிசித்துத திருப்பதிகம் பாடி வருதலின் மேறகொண்ட என் விருப்பத்தைக் கண்டு, தாம் அங்கே அமர்ந்த திருக்கோலத்தை இங்கே எனக்குக் காட்டியருளினார், நீங்கள் சீர்காழிக்குப் போங்கள்" என்றார் அதைக் கேட்ட பிராமணர்கள் சீர்காழிக்குப் போய்விட்டார்கள்.

——oo✻oo——

# கரு. திருக்கோலக்கா.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்

மடையில்வாளைபாயமாதரார்
குடையும்பொய்கைக்கோலக்காவுளான்
சடையும்பிறையுஞ்சாம்பற்பூச்சுங்கீ
ழுடையுங்கொண்டவுருவமென்கொலோ. (௧)

பெண்டான்பாகமாகப்பிறைச்சென்னி
கொண்டான்கோலக்காவுகோயிலாக்
கண்டான்பாதங்கையாற்கூப்பவே
யுண்டான்நஞ்சையுலகமுய்யவே. (௨)

பூணற்பொறிகொளரவம்புன்சடை
கோணற்பிறையன்குழகன்கோலக்கா
மாணப்பாடிமறைவல்லானையே
பேணப்பறையும்பிணிகளானவே. (௩)

தழுக்கொள்பாவந்தளரவேண்டுவீர்
மழுக்கொள்செல்வன்மறிசேரங்கையான்
குழுக்கொள்பூதப்படையான்கோலக்கா
விழுக்காவண்ணமேத்திவாழ்மினே. (௪)

மயிலார்சாயன்மாதோர்பாகமா
வெயிலார்சாயவெரித்தவெந்தைதன்
குயிலார்சோலைக்கோலக்காவையே
பயிலாநிற்கப்பறையும்பாவமே. (௫)

வெடிகொள்வினையைவீட்டவேண்டுவீர்
கடிகொள்கொன்றைகலந்தசென்னியான்
கொடிகொள்விழவார்கோலக்காவுளெம்
மடிகள்பாதமடைந்துவாழ்மினே. (௬)

நிழலார்சோலைநீலவண்டினங்
குழலார்பண்செய்கோலக்காவுளான்
கழலான்மொய்த்தபாதங்கைகளாற்
றொழலார்பக்கற்றுயரமில்லையே. (௭)

எறியார்கடல்சூழிலங்கைக்கோன்றனை
முறியார்தடக்கையடர்த்தமூர்த்திதன்
குறியார்பண்செய்கோலக்காவையே
நெறியாற்றொழுவார்வினைசேணீங்குமே. (௮)

நாற்றமலர்மேலயனும்நாகத்தி
லாற்றலணைமேலவனுங்காண்கிலாக்
கூற்றமுதைத்தகுழகன்கோலக்கா
வேற்றான்பாதமேத்திவாழ்மினே. (௯)

பெற்றமாசுபிறக்குஞ்சமணரு
முற்றதுவர்தோயுருவிலாளருங்
குற்றநெறியார்கொள்ளார்கோலக்காட்
பற்றிப்பரவப்பறையும்பாவமே. (௰)

நலங்கொள்காழிஞானசம்பந்தன
குலங்கொள்கோலக்காவுளானையே
வலங்கொள்பாடல்வல்லவாய்மையா
ருலங்கொள்வினைபோயோங்கிவாழ்வரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

புற்றில்வாளரவார்த்தபிரானைப
பூதநாதனைப்பாதமேதொழுவார்
பற்றுவானற்றுணையெனக்கெளிவந்த
பாவநாசனைமேவரியானை
முற்றலார்திரிபுரமொருமூன்றும
பொன்றவென்றிமால்வரையரியம்பாக்
கொற்றவில்லங்கையேந்தியகோனைக்
கோலக்காவினிற்கண்டுகொண்டேனே. (௧)

அங்கமாறுமாமறையொருநான்கு
மாயகம்பனைவேய்புரைதோளி
தங்குமாதிருவுருவுடையானைத
தழல்மதிசடைமேற்புனைந்தானை
வெங்கணானையின்னீருரியானை
விண்ணுளார்தொடுமென்னுளார்பரசுங
கொங்குலாம்பொழிற்குரவெறிகமழுங்
கோலக்காவினிற்கண்டுகொண்டேனே. (௨)

பாட்டகத்திசையாகிநின்றானைப்
பத்தர்சித்தம்பரிவினியானை
நாட்டகத்தேவர்செய்கையுளானை
நட்டமாடியைநம்பெருமானைக்

காட்டகத்துறுபுலியுரியானைக்
கண்ணொர்மூன்றுடையண்ணலையடியேன்
கோட்டகப்புனலார்செழுங்கழனிக்
கோலக்காவினிற்கண்டுகொண்டேனே. (௩)

ஆத்தமென்றெனையாளுகந்தானை
யமரர்நாதனைக்குமரனைப்பயந்த
வார்த்தயங்கியமுலைமடமானை
வைத்துவான்மிசைக்கங்கையைக்கரந்த
தீர்த்தனைச்சிவனைச்செழுந்தேனைத்
தில்லையம்பலத்துண்ணிறைந்தாடுங்
கூத்தனைக்குருமாமணிதன்னைக்
கோலக்காவினிற்கண்டுகொண்டேனே. (௪)

அன்றுவந்தெனையகலிடத்தவர்மு
னாளதாகவென்றாவணங்காட்டி
நின்றுவெண்ணெய்நல்லூர்மிசையொளித்த
நித்திலத்திரட்டொத்தினைமுத்திக்
கொன்றினைநறவையும்பாபிரானை
யுயருமவல்லரணங்கொட்சிறுங்
குன்றவில்லியைமெல்லியலுடனே
கோலக்காவினிற்கண்டுகொண்டேனே. (௫)

காற்றுத்தீப்புனலாகிநின்றானைக்
கடவுளைக்கொடுமால்விடையானை
நீற்றுத்தீயுருவாயநிமிர்ந்தானை
நிரம்புபல்கலையின்பொருளாலே
போற்றிநந்தன்கழற்றொழுமவருயிரைப்
போக்குவானுயிர்நீக்கிடத்தாளாற்
கூற்றைத்தீங்குசெய்குணாக்கழலானைக்
கோலக்காவினிற்கண்டுகொண்டேனே. (௬)

அன்றயனசிரமரிந்ததிறபலிகொண்
டமரர்க்கருள்வெளிப்படுத்தானைத்
துன்றுபைங்கழலிற்சிலம்பார்த்த
சோதியைச்சுடர்போலொளியானை
மின்றயங்கியவிடைமடமங்கை
மேவுமீசனைவாசமாமுடிமேற்
கொன்றையஞ்சடைக்குழகனையழகார்
கோலக்காவினிற்கண்டுகொண்டேனே. (௭)

நாளுமின்னிசையாற்றமிழ்பரப்பு
ஞானசம்பந்தனுக்குலகவர்முன்
றாளமீந்தவன்பாடலுக்கிரங்குந்
தன்மையாளனையென்மனக்கருத்தை
யாளும்பூதங்கள்பாடநின்றாடு
மங்கணன்றனையெண்கணமிறைஞ்சுங்

கோளிலிபெருங்கோயிலுள்ளானைக்
கோலக்காவினிற்கண்டுகொண்டேனே. (௮)

அரக்கனாற்றலையழித்தவன்பாடற்
கன்றிரங்கியவென்றியினானைப்
பரக்கும்பாரளித்துண்டுகந்தவர்கள்
பரவியும்பணிதற்கரியானைச்
சிரக்கண்வாய்செவிமூக்குயிர்காய
மாகித்தீவினைதீர்த்தவெம்மானைக்
குரக்கினங்குதிகொண்டுகள்வயல்சூழ்
கோலக்காவினிற்கண்டுகொண்டேனே. (௯)

கோடரம்பயில்சடையுடைக்கருமிடைக்
கோலக்காவுளெம்மானைமெய்ம்மானப்
பாடரங்குடியடியவர்விரும்பப்
பயிலுநாவலாரூரன்வன்றொண்ட
னாடிரங்கிமுன்னறியுமந்நெறியா
னவின்றபத்திவைவிளம்பியமாந்தர்
காடரங்கெனநடநவின்றான்பாற்
கதியுமெய்துவர்பதியவர்க்கதுவே. (௰)

திருச்சிற்றம்பலம்

---

திருஞானசம்பந்தப்பிள்ளையார், உமாதேவியாரது திருமுலைப்பாலுண்டருளிய மற்றநாள் பிராதக்காலத்திலே, சீர்காழியிலுள்ள ஆலயத்திற் சென்று, தம்முடைய பிதாமாதாக்களாகிய பரமசிவனையும் பார்வதியாரையும் வணங்கித் துதித்து, அருள்பெற்று, திருக்கோலக்கா வென்னுந் திருப்பதியை அடைந்து, திருக்கோயிலை வலஞ்செய்து முன்னின்று, கையினாலே ஒத்தறுத்துத் திருப்பதிகம் பாடத்தொடங்கினார். பாடும்பொழுது, சிவபெருமானுடைய திருவருளினாலே ஸ்ரீபஞ்சாக்ஷரம் எழுதப்பட்டிருக்கின்ற பொற்றாளம் உலகமெல்லாம் உய்யும்படி பிள்ளையாருடைய திருக்கரத்தே வந்திருந்தது பிள்ளையார் அதைக் கண்டு, திருவருளை வியந்து, களிகூர்ந்து, ஏழிசையுந் தழைத்தோங்க, திருப்பதிகத்தைப் பாடி முடித்து, திருக்கடைக்காப்புச் சாத்தினின்றார். அவர் பாடும்பொழுது, விண்ணுலகமும் அதிசயிக்கும்படி ஓங்கிய அதிமதுர நாதத்தைநோக்கித் தும்புரு நாரதர் முதலாகிய சங்கீத வித்துவான்கள் ஸ்தோத்திரஞ்செய்து, புஷ்பமாரிபொழிந்தார்கள். பிள்ளையார், பொற்றாளம்பெற்றபொழுது, திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகம் சிதலமானவற்றிற் சேர்ந்ததாயினும், அந்த அற்புதத்தை, சுந்தரமூர்த்திநாயனார் அருளிச்செய்த "புற்றில்வாளரவார்த்தபிரானை" என்னுந் திருப்பதிகத்திலே, "நாளுமின்னிசை யாற்றமிழ் பரப்பு ஞானசம்பந்த னுக்குல கவர்முன்-றாளமீந்தவன் பாடலுக்கிரங்குந் தன்மையாளனை" என்று எட்டாந்திருப்பாட்டிலே எடுத்துப் பாடியருளினார்.

---

திருக்கோலக்காத் திருப்பதிகம் - ௨.

---

சுவாமிதிருநாமம் - சப்தபுரீநாதர்.
தேவிதிருநாமம் - ஓசைகொடுத்தநாயகி.

---

ஆ திருப்பதிகம் - ககசு.

# ௧௬. புள்ளிருக்குவேளூர்*

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்

கள்ளார்ந்தபூங்கொன்றைமதமத்தங்கதிர்மதியம்
உள்ளார்ந்தசடைமுடியெம்பெருமானாருறையுமிடந்
தள்ளாயசம்பாதிசடாயென்பார்தாமிருவர்
புள்ளானார்க்கரையனிடம்புள்ளிருக்குவேளூரே. (௧)

தையலாளொருபாகஞ்சடைமேலாளவளோடும்
ஐயந்தேர்ந்துழல்வாரோரந்தணனாருறையுமிடம்
மெய்சொல்லாவிராவணனைமேலோடியீடழித்துப்
பொய்சொல்லாதுயிர்போனான்புள்ளிருக்குவேளூரே. (௨)

வாசநலஞ்செய்திமையோர்நாடோறுமலர்தூவ
ஈசனெம்பெருமானாரினிதாகவுறையுமிடம்
யோசனைபோய்ப்பூக்கொணர்ந்தங்கொருநாளுமொழியாமே
பூசனைசெய்தினிதிருந்தான்புள்ளிருக்குவேளூரே. (௩)

மாகாயம்பெரியதொருமானுரிதோலுடையாடை
ஏகாயமிட்டுகந்தவெரியாடியுறையுமிடம்
ஆகாயந்தேரோடுமிராவணனையமரின்கட்
போகாமேபொருதழித்தான்புள்ளிருக்குவேளூரே. (௪)

கீதத்தைமிகப்பாடுமடியார்கள்குடியாகப்
பாதத்தைத்தொழநின்றபரஞ்சோதிபயிலுமிடம்
வேதத்தின்மந்திரத்தால்வெண்மணலேசிவமாகப்
போதத்தால்வழிபட்டான்புள்ளிருக்குவேளூரே. (௫)

திறங்கொண்டவடியார்மேற்றீவினைநோய்வாராமே
அறங்கொண்டுசிவதன்மமுரைத்தபிரானமருமிடம்
மறங்கொண்டங்கிராவணன்றன்வலிகருதிவந்தானைப்
புறங்கண்டசடாயென்பான்புள்ளிருக்குவேளூரே. (௬)

அத்தியினீருரிமூடியழகாகவனலேந்திப்
பித்தரைப்போற்பலிதிரியும்பெருமானார்பேணுமிடம்
பத்தியினால்வழிபட்டுப்பலகாலந்தவஞ்செய்து
புத்தியொன்றவைத்துகந்தான்புள்ளிருக்குவேளூரே. (௭)

பண்ணொன்றவிசைபாடுமடியார்கள்குடியாக
மண்ணின்றிவிண்கொடுக்குமணிகண்டனமருமிடம்
எண்ணின்றிமுக்கோடிவாணாளதுடையானைப்
புண்ணொன்றப்பொருதழித்தான்புள்ளிருக்குவேளூரே. (௮)

* புள்ளிருக்குவேளூர் என்பது வைத்தீசுரன்கோயில்.

வேதித்தாபுரமூன்றுமவெங்கணையாலவெந்தவியச
சாதித்தவில்லாளிகண்ணுளன்சாருமிட
மாதித்தனமகனென்னவகன்ஞாலத்தவரோடும
போதித்தசடாயென்பான்புள்ளிருக்குவேளூரே. (௯)

கடுத்துவருங்கங்கைதனைக்கமழ்சடையொன்றூடாமே
தடுத்தவனெமபெருமானாதாமினிதாயுறையுமிடம
விடைத்துவருமிலங்கைக்கோன்மலங்கச்சென்றிராமற்காப
புடைத்தவனைபபொருதழித்தான்புள்ளிருக்குவேளூரே. (௧0)

செடியாயவுடறீர்ப்பான்றீவினைக்கோர்மருந்தாவான்
பொடியாடிக்கடிமைசெய்தபுள்ளிருக்குவேளூரைக
கடியார்ந்தபொழிற்காழிக்கவுணியனசம்பந்தன்சொன்ன
மடியாதுசொல்லவல்லார்க்கில்லையாமறுபிறப்பே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருநாவுக்கரசுநாயனர்.

### திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

வெள்ளெருக்கரவமவிரவுஞ்சடைப்
புள்ளிருக்குவேளூரரனபொற்கழ
லுள்ளிருக்குமுணர்ச்சியிலாதவர
ளள்ளிருட்பாநரகக்குழியிலே. (௧)

மாற்றமொன்றறியீர்மனைவாழ்க்கைபோயக
கூற்றமவந்துமைக்கொள்வதன்முன்னமே
போற்றவல்லிரேற்புள்ளிருக்குவேளூா
சீற்றமாயினதேய்ந்தறுங்காணமினே. (௨)

அருமறையனையாணொடுபெண்ணனைக
கருவிடமிக்வுண்டவெங்கண்டனைப்
புரிவெண்ணூலனைப்புள்ளிருக்குவேளூ
ருருகிநைபவருள்ளங்குளிருமே. (௩)

தன்னுருவையொருவர்க்கறிவொண்ணா
மின்னுருவனைமேனிவெண்ணீற்றனைப்
பொன்னுருவனைப்புள்ளிருக்குவேளூ
ரென்னவல்லவர்க்கில்லையிடர்களே. (௪)

செங்கண்மால்பிரமற்குமறிவொண்ணா
வங்கியின்னுருவாகியழல்வதோா
பொங்கரவனைபபுள்ளிருக்குவேளூர்
மங்கைபாகனைவாழ்த்தவருமினபே. (௫)

குற்றமில்லியையச்சோலைச்சிலையினாற்
செற்றவர்புரஞ்செந்தழலாக்கியைப்
புற்றரவனைப்புள்ளிருக்குவேளூர்
பற்றவல்லவர்பாவம்பறையுமே. (சு)

கையினோடுகால்கட்டியுமரொலா
மையன்வீடினனென்பதன்முன்னநீர்
பொய்யிலாவரன்புள்ளிருக்குவேளூர்
மையுலாவியகண்டனைவாழ்த்துமே. (எ)

உள்ளமுள்கியுகந்துசிவனென்று
மெள்ளவுள்கவினைகெடுமெய்ம்மையே
புள்ளினார்பணிபுள்ளிருக்குவேளூர்
வள்ளல்பாதம்வணங்கித்தொழுமினே (அ,கூ)

அரக்கனார்தலைபத்துமழிதர
நெருக்கிமாமலர்ப்பாதநிறுவிய
பொருப்பனூருறைபுள்ளிருக்குவேளூர்
விருப்பினாற்றொழுவார்வினைவீடுமே. (க0)

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

ஆண்டானையடியேனையாளாக்கொண்டு
வடியோடுமுடியயனமாலறியாவண்ண
நீண்டானைநெடுங்களமாகரான்றன்னை
நேமிவானபனடியாணீளூரவோனைக்
கீண்டானைக்கேதாரமேவினானைக்
கேடிலியைக்கிளர்பொறிவாளரவோடென்பு
பூண்டானைப்புள்ளிருக்குவேளூரானைப்
போற்றாதேயாற்றநாளபோக்கினேனே (க)

சீர்த்தானைச்சிறந்தடியேன்சிந்தையுள்ளே
திகழ்ந்தானைச்சிவன்றன்னைத்தேவதேவைக்
கூர்த்தானைக்கொடுநெடுவேற்கூற்றந்தன்னைக்
குரைகழலாற்குமைத்துமுனிகொண்டவச்சம
பேர்த்தானைப்பிறப்பிலியையிறப்பொன்றில்லாப்
பெம்மானைக்கைம்மாவீனுரிவைபோணிட்
போர்த்தானைப்புள்ளிருக்குவேளூரானைப்
போற்றாதேயாற்றநாள்போக்கினேனே. (உ)

பத்திமையாற்பணிந்தடியேன்றன்னைப்பன்னாட்
பாமாலைபாடப்பயில்வித்தானை
யெத்தேவுமேத்துமிறைவன்றன்னை
யெம்மானையென்னுள்ளத்துள்ளேயூறு

மத்தேனையமுததனைதயாவின்பாலை
யண்ணிக்குநதிங்கருமமையபரனையாதிப
புததேளைபபுள்ளிருககுவேளூரானைப்
போற்றாதேயாறறநாளபோக்கினேனே. (ங)

இருளாயவுள்ளத்தினிருளைநீககி
யிடாபாவஙகெடுததேழையேனையுய்யத்
தெருளாதசிந்தைதனைத்தெருட்டிததன்போற்
சிவலோகநெறியறியசசிநதைதநத
வருளானையாதிமாதவத்துளானை
யாறஙகநால்வேததநப்பானின்ற
பொருளானைப்புள்ளிருக்குவேளூரானைப
போறறாதேயாற்றநாள்போககினேனே. (ச)

மின்னுருவைவிணணகததிலொன்றாயமிக்கு
வீசுஙகாறறன்னகததிலிரண்டாய்சசெநதீத்
தன்னுருவினமூன்றாய்த்தாழபுனலினுன்காயத
தரணிதலத்தஞ்சாகியெஞசாத்தஞ்ச
மன்னுருவைவாளபவளக்கொழுநதைமுத்தை
வளரொளியைவயிரத்தைமாசொன்றில்லாப
பொன்னுருவைபபுள்ளிருக்குவேளூரானைப்
போறறாதேயாறறநாள்போக்கினேனே (ரு)

அறையாரபொறகழலாரபபவணியாாதில்லை
யமபலத்துணடமாடுமழகனறனனைக்
கறையாரமூவிலைநெடுவேற்கடவுடனனைக
கடலுநைககாரோணஙகருதினானை
யிறையானையெனனுளளத்துளளேவிள்ளா
திருநதானையேழ்பொழிலுநதாஙகிநின்ற
பொறையானைப்புளளிருககுவேளூரானைப்
போறறாதேயாற்றநாளபோக்கினேனே. (சு)

நெருபபனையதிருமேனிவெணணீறறானை
நீஙகாதென்னுள்ளததினுளளேநினற
விருப்பவனைவேதியனைவேதவித்தை
வெணகாடுமவியனாறாதிஙகருமேவி
யிருபபவனையிடைமருதோடீஙகோய்நீஙகா
விறையவனையெனையாளுஙகயிலையென்னும்
பொருபபவனைப்புள்ளிருககுவேளூரானைப்
போறறாதேயாற்றநாள்போககினேனே. (எ)

பேராயிரம்பரவிவானோரேத்தும்
பெமமானைப்பிரிவிலாவடியார்க்கென்றும்
வாராதசெலவமவருவிப்பானை
மநதிரமுநதநதிரமுமருநதுமாகித்
தீராநோயதீர்த்தருளவல்லான்றன்னைத்
திரிபுரங்கடீயெழததிணசிலைகைக்கொண்ட

போரானைப்புள்ளிருக்குவேளூரானைப்
போற்றாதேயாற்றநாள்போக்கினேனே. (அ)

பணணியனைப்பைங்கொடியாள்பாகன்றன்னைப்
படாசடைமேற்புனல்கரந்தபடி றன்றன்னை
நணணியனையென்னாக்கித்தன்னானானை
நான்மறையினற்பொருளைநளிரவெண்டிங்கட
கணணியனைக்கடியநடைவிடையொன்றேறுங்
காரணனைநாரணனைக்கமலத்தோங்கும்
புண்ணியனைப்புள்ளிருக்குவேளூரானைப்
போற்றாதேயாற்றநாளபோக்கினேனே. (௯)

இறுத்தானையிலங்கையர்கோனசிரங்களபத்து
மெழுநரம்பினின்னிசைகேட்டின்பற்றானை
யறுத்தானையடியார்தம்மருநோய்பாவ
மலைகடலிலாலாலமுண்டுகண்டங்
கறுத்தானைக்கண்ணழலாற்காமனாகங்
காய்ந்தானைக்கனன்மழுவுங்கலையுமங்கை
பொறுத்தானைப்புள்ளிருக்குவேளூரானைப்
போற்றாதேயாற்றநாளபோக்கினேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

புள்ளிருக்குவேளூர்த்திருப்பதிகம் - ௩.

சுவாமிதிருநாமம் - வைத்தியநாதர்
தேவிதிருநாமம் - தையனாயகி.

ஆ திருப்பதிகம் - ௧௧௭.

# ௧௭. திருக்கண்ணார்கோயில்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

தண்ணார்திங்கட்பொங்கரவந்தாழ்புனல்சூடிப்
பெண்ணாணாயபேரருளாளன்பிரியாத
கண்ணார்கோயில்கைதொழுவோர்கட்கிடர்பாவந்
நண்ணாவாகுநல்வினையாயநண்ணுமமே. (௧)

கந்தமர்சந்துங்காரகிலுந்தண்கதிர்முத்தும்
வந்தமர்தெண்ணீர்மண்ணிவளஞ்சேர்வயன்மண்டிக்
கொந்தலர்சோலைக்கோகிலமாடக்குளிர்வண்டு
செந்திசைபாடுஞ்சீர்திகழ்கண்ணார்கோயிலே. (௨)

பல்லியல்பாணிப்பாரிடமேத்தப்படுகானி
னெல்லிநடஞ்செய்யீசனெம்மான்றனிடமென்பா
கொல்லையின்முல்லைமல்லிகைமௌவற்கொடிபின்னிக்
கல்லியலிஞ்சிமஞ்சமர்கண்ணார்கோயிலே. (ங)

தருவளர்கானந்தங்கியதுங்கப்பெருவேழ
மருவளர்கோதையஞ்சவுரித்துமறைநால்வர்க
குருவளராலநீழலமர்ந்தீங்குரைசெய்தார்
கருவளர்கண்ணார்கோயிலடைந்தோர்கற்றோரே. (ச)

மறுமாணுருவாய்மற்றிணையின்றிவானோரைச
செறுமாவலிபாற்சென்றுலகெல்லாமளவிட்ட
குறுமாணுருவன்றற்குறியாகக்கொண்டாடுங
கறுமாகண்டனமேயதுகண்ணார்கோயிலே. (ரு)

விண்ணவருக்காவேலையுணஞ்சம்விருப்பாக
வுண்ணவனைததேவர்க்கமுதீந்தெவ்வுலகிற்கு
கண்ணவனைக்கண்ணார்திகழ்கோயிற்கனிதன்னை
நண்ணவல்லோர்கட்கில்லைநமன்பானடலையே. (சா)

முன்னொருகாலத்திந்திரனுற்றமுனிசாபம
பின்னொருநாளவ்விண்ணவரேத்தப்பெயர்வெய்தித்
தன்னருளாற்கண்ணாயிரமீந்தோன்சார்பென்பா
கன்னியர்நாளுந்துன்னமர்கண்ணார்கோயிலே. (எ)

பெருக்கெண்ணாதபேதையரக்கனவரைக்கீழா
னெருக்குண்ணாத்தன்னீள்கழனெஞ்சினினைந்தேத்த
முருக்குண்ணாதோர்மொய்கதிர்வாடேர்முன்னீந்த
திருக்கண்ணாரென்பார்சிவலோகஞ்சேர்வாரே (அ)

செங்கமலப்போதிற்றிகழ்செல்வன்றிருமாலு
மங்கமலக்கண்ணோங்கருமவண்ணத்தழலானை
றங்கமலக்கண்ணார்திகழ்கோயிற்றமதுள்ளத்
தங்கமலத்தோடேத்திடவண்டத்தமரவாரே. (கூ)

தாறிடுபெண்ணைத்தட்டுடையாருந்தாமுண்ணுஞ்
சோறுடையார்சொற்றேறன்மின்வெண்ணூல்சேர்மார்ப
னேறுடையன்பரனென்பணிவானீள்சடைமேலோ
ராறுடையண்ணல்சேர்வதுகண்ணார்கோயிலே. (க0)

காமருகண்ணார்கோயிலுளானைக்கடல்சூழ்ந்த
பூமருசோலைப்பொன்னியன்மாடப்புகலிக்கோ
னாமருதொன்மைத்தன்மையுண்ஞானசம்பந்தன்
பாமருபாடல்பத்தும்வல்லார்மேற்பழிபோமே (கக)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிதிருநாமம் - கண்ணாயிரநாதர்.
தேவிதிருநாமம் - முருகுவளர்கோதை.

ஆ. திருப்பதிகம் - ககஅ.

# கஅ. திருக்கடைமுடி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

அருத்தனையறவனையமுதனைநீர்
விருத்தனைப்பாலனைவினவுதிரே
லொருத்தனையல்லதிங்குலகமேத்துங்
கருத்தவன்வளநகர்கடைமுடியே. (க)

திரைபொருதிருமுடிதிங்கள்விம்ம
மரைபொருபுலியதளடிகளிடந்
திரையொடுநுரைபொருதெண்சுனைநீர்
கரைபொருவளநகர்கடைமுடியே. (உ)

ஆலிளமதியினொடரவுகங்கை
கோலவெண்ணீற்றனைத்தொழுதிறைஞ்சி
யேலநன்மலரொடுவிரைகமழுங்
காலனவளநகர்கடைமுடியே. (௩)

கொய்யணிநறுமலர்க்கொன்றையந்தார்
மையணிமிடறுடைமறையவனூர்
பையணியரவொடுமானுமழுவுங்
கையணிபவனிடங்கடைமுடியே. (௪)

மறையவனுலகவன்மாயமவன்
பிறையவன்புனலவனனலுமவ
னிறையவனெனவுலகேத்துங்கண்டங்
கறையவன்வளநகர்கடைமுடியே. (௫)

படவரவேரல்குற்பல்வளைக்கை
மடவரலாளையோர்பாகம்வைத்துக்
குடதிசைமதியதுசூடுசென்னிக்
கடவுடன்வளநகர்கடைமுடியே. (௬)

பொடிபுல்குமார்பினிற்புரிபுல்குநூ
லடிபுல்குபைங்கழலடிகளிடங்
கொடிபுல்குமலரொடுகுளிர்சுனைநீர்
கடிபுல்குவளநகர்கடைமுடியே. (௭)

நோதலைச்செய்தரக்கனைநோக்கழியச்
சாதல்செய்தவனடிசரணெனலு
மாதரவருள்செய்தவடிகளவர்
காதல்செய்வளநகர்கடைமுடியே. (௮)

* திருக்கடைமுடி என்பது கீழூர்.

அடிமுடி காணகிலரோரிருவர்
புடைபுலகியருளென்றுபோற்றிசைபச்ச
சடையிடைப்புனலவைத்தசதுரனிடங்
கடைமுடியதனயலகாவிரியே. (௯)

மண்ணுதலபறித்தலுமாயமிவை
யெண்ணியகாலவையினபமலல
வொண்ணுதலுமையையொருபாகமவைத்த
கணணுதலவளநகாகடைமுடியே. (௧௦)

பொன்றிகழ்காவிரிபபொருபுனலசீா
சென்றடைகடைமுடிசசிவனடியை
நன்றுணாஞானசமபநதனசொனன
வின்றமிழிவைசொலவினபமாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிதிருநாமம - கடைமுடிநாதா.
தேவிதிருநாமம - அபிராமி.

ஆ திருப்பதிகம - ௧௪௬.

# ௧௪௭. திருநின்றியூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

பண் - நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

சூலமபடைகணணபுடொடி சாநதஞுசுடுநீறு
பாலமமதிபவளசசடைமுடிமேலதுபணடைக்
காலனவலிகாலினொடுபோக்கிககடிகமழுந
நீலமமலாப்பொயகைநின்றியூரினனிலையோாககே. (௧)

அசசமிலாபாவமமிலாகேடுமிலரடியாா
நிசசமமுறுநோயுமமிலாதாமுநநின்றியூரி
னசசமிடறுடையாாநறுங்கொன்றைநயநதாருப
பசசம்முடையடிகடிருப்பாதமபணிவாரே. (௨)

பறையினொலிசஙகினொலிபாஙகாரவுமாா
வறையுமமொலியெங்குமமவையறிவாரவாதனுமை
நிறையும்புனற்சடைமேலுடையடிகணின்றியூரி
லுறையுமமிறையலலதெனதுள்ளமமுணராதே. (௩)

பூண்டவ்வரைமாாபிற்புரிநூலன்விரிகொன்றை
யீண்டவ்வதனேடுமமொருபாலம்மதியதனைத
தீணடும்பொழிலசூழநததிருநின்றியதுதன்னி
லாண்டகழறொழிலலலதுவறியாரவராறிவே. (௪)

குழலின்னிசைவண்டின்னிசைகண்டுகுயில்கூவு
நிழலின்னெழிருழுந்தபொழிலசூழ்ந்தநின்றியூரி
லழலினவலனங்கையதுவேந்தியனலாடு
கழலினனொலியாடுமபுரிகடவுளகளைகணே. (௫)

மூரன்மூறுவலவெண்ணகையுடையாளொருபாகஞ்
சாரன்மதியதனோடுடனசலவஞ்சடைவைத்த
வீரனமலியழகாாபொழின்மிடையுந்திருநின்றி
யூரன்கழலலலாதெனதுள்ளமுணராதே. (௬)

பறறியொருதலைகையினிலேந்திபபலிதேருமி
பெறறியதுவாகித்திரிதேவாபெருமானார்
சுறறியொருவேங்கையதளோடுமபிறைசூடு
நெற்றியொருகண்ணானின்றியூரின்னிலையாரோ (௭,௮)

நல்லமலாமேலானொடுஞாலமமதுவுண்டா
னலலனெனவாவனெனநின்றுமமறிவரிய
நெலலினபொழில்சூழுந்தநின்றியூரினனிலையானொரு
செலவரடியலலாதெனசிந்தையுணராதே. (௯)

நெறியிலவருபேராவகைநினையாநினைவொனறை
யறிவிலசமணுதருளைகேடுமயராநே
நெறியிலலவாகுறிகண்ணினையாதேநின்றியூரின
மறியேந்தியகையானடிவாழ்த்துமமதுவாழ்ததே. (௧௦)

குன்றமதுவெடுததானுடறோளுநெரிவாக
நின்றங்கொருவிரலாலுறவைததானின்றியூரை
நன்றாதருபுகலிததமிழஞானமமிகுபந்தன
குன்றாத்தமிழசொலலகுறைவின்றிநிறைபுகழே. (௧௧)

திருசசிற்றம்பலம்.

# திருநாவுக்கரசுநாயனார்.

## திருககுறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

கொடுங்கணவெணடலைகொணடுகுறைவிலைப்
படுங்கணொனறிலராய்ப்பலிதோநதுணபா
நெடுங்கணமங்கையராடடயர்நின்றியூாக
கடுங்கைக்கூற்றுதைததிடடகருததரோ. (௧)

வீதிவேனெடுங்கணணியாவெளவலை
நீதியேகொளபபாலதுநின்றியூா
வேதமோதிவிளங்குவெணடோடராய்க
காதிலவெணகுழைவைத்தவெங்கள்வரோ. (௨)

புற்றினாரவம்புலித்தோன்மிசைச
சுற்றினாசுணணபபோாவைகொண்டாசுடா
நெற்றிக்கணணுடையான்மாநின்றியூா
பற்றினாைப்பற்றாவினைபாவமே. (௩)

பறையினோசையும்பாடலினோசையு
மறையினோசையுமல்கியயலெலா
நிறையும்பூம்பொழில்சூழ்திருநின்றியூ
ருறையுமீசனையுள்குமென்னுள்ளமே. (ச)

சுனையுணீலஞ்சுளியுநெடுங்கணு
ளினையளெனஞறென்றுமேசுவதென்கொலோ
நினையுநந்தன்வயல்சூழ்திருநின்றியூர்ப்
பனையினீருரிபோர்த்தபரமனே. (ரு)

உரைப்பக்கேணமினுமுசசியுளான்றனை
நிரைபபொனமாமதில்சூழ்திருநினறியூ
ருரைபபொறகறறையராரிவரோவெனிற்
றிரைததுப்பாடித்திரிதருசெல்வரே. (சா)

கனறியூர்முகிலபோலுஙகருஙகளி
றின்றியேறலினுலிதுவென்கொலோ
நின்றியூரபதியாகநிலாயவன்
வெனறியேறுடையெஙகளவிகிர்தனே. (எ)

நிலையிலாவெள்ளைமாலையனீண்டதோள
சொலையிலாலெயிலெய்தகொடியவ
னிலையினாவயல்சூழதிருநினறியூ
ருளையினுற்றொழுவார்வினைபோயுமே. (அ)

அஞ்சியாகிலுமன்புபட்டாகிலு
நெஞ்சம்வாழிநினைநினறியூரைநீ
யிஞ்சிமாமதிலெய்திமையோர்தொழக
குஞ்சிவானபிறைசூடியகூத்தனே (கூ)

எளியனுமொழியாவிலங்கைக்கிறை
களியினற்கயிலாயமெடுத்தவ
னெளியவூனறவலானமாநினறியூ
ரளியினற்றொழுவாவினையலகுமே. (கO)

திருச்சிற்றம்பலம்

## சுந்தரமூர்த்திநாயனர்.

பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்

அற்றவனாரடியார்தமக்காயிழைபங்கினராம
பற்றவனுரெம்பராபரரென்றுபலர்விரும்புங
கொற்றவனார்குறுகாதவரூர்நெடுவெஞ்சரத்தாற்
செற்றவனார்க்கிடமாவதுநந்திருநின்றியூரே. (க)

வாசத்தினாமலர்க்கொன்றையுள்ளாரவடிவார்ந்தநீறு
பூசத்தினார்புகலிந்நகர்போற்றுமெம்புண்ணியத்தார்
நேசத்தினாலென்னையாளுங்கொண்டார்நெடுமால்கடல்சூழ்
தேசத்தினார்க்கிடமாவதுநந்திருநின்றியூரே. (உ)

பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்

திருவும்வண்மையுந்திண்டிறலரசுஞ்
சிலந்தியார்செய்தசெய்பணிகண்டு
மருவுகோச்செங்கணானுக்களித்த
வார்த்தைகேட்டுநுன்மலரடியடைந்தேன்
பெருகுபொன்னிவந்துந்துபன்மணியைப்
பிளிறுபல்சனம்பணையுளன்ணிந்த
தெருவுந்தெற்றியுமுற்றமும்பற்றித்
திரட்டுந்தென்றிருநின்றியூரானே (க)

அணிகொளாடையம்பூணணிமாலை
யமுதுசெய்தமுதம்பெறுசண்டி
யிணைகொளேழெழுநூறிரும்பனுவ
லீன்றவன்றிருநாவினுக்கரையன்
கணைகொள்கண்ணப்பனென்றிவர்பெற்ற
காதலின்னருளாதரித்தடைந்தேன்
றிணைகொள்செந்தமிழ்ப்பைங்கிளிதெரியுஞ்
செல்வத்தென்றிருநின்றியூரானே. (உ)

மொய்த்தசீர்முந்நூற்றறுபதுவேலி
மூன்றுநூறுவேதியரொடுநுனக்கு
வொத்தபொன்மணிக்கலசங்களேந்தி
யோங்குநின்றியூரென்றுனக்களிப்பப்
பத்திசெய்தவப்பரசுராமற்குப்
பாதங்காட்டியநீதிகண்டடைந்தேன்
சித்தர்வானவர்தானவர்வணங்குஞ்
செல்வத்தென்றிருநின்றியூரானே. (௩)

இரவிநீள்சுடரெழுவதன்முன்ன
மெழுந்துதன்முலைக்கலசங்களேந்திச்
சுரபிபால்சொரிந்தாட்டிநின்பாதந்
தொடர்ந்தவார்த்தைதிடம்படக்கேட்டுப்
பரவியுள்கிவன்பாசத்தையறுத்துப்
பரமவந்துநுன்பாதத்தையடைந்தே
னிரவிநித்திலமத்தகச்செம்பொ
னளிக்குந்தென்றிருநின்றியூரானே. (௪)

வந்தொரிந்திரன்வழிபடமகிழ்ந்து
வானநாடுநீயாளெனவருளிச்
சந்திமூன்றிலுந்தாபரநிறுத்திச்
சகளிசெய்திறைஞ்சகத்தியர்தமக்குச்
சிந்துமாமணியணிதிருப்பொதியிற்
சேர்வுநல்கியசெல்வங்கண்டடைந்தேன்
செந்தண்மாமலர்த்திருமகண்மருவுஞ்
செல்வத்தென்றிருநின்றியூரானே. (௫)

யாக்காதேயாதொன்றுமாக்கினானை
யணுகாதாரவாதமையணுகாதானைத்
தேக்காதேதெண்கடனஞ்சுண்டான்றன்னைத்
திருப்புன்கூர்மேவியசிவலோகனை
நீக்காதபேரொளிசேர்நீரோனை
நீதனேனென்னேநானினையாவாறே (௫)

பூணலாப்பூணானைப்பூசாச்சாந்
முடையானைமுடைநாறும்புன்கலத்தி
லூணலாவூணானையொருவர்காணா
வுத்தமனையொளிதிகழுமேனியானைச்
சேணுலாஞ்செழும்பவளக்குன்றொப்பானைத்
திருப்புன்கூர்மேவியசிவலோகனை
நீணுலாமலர்க்கழனிநீரோனை
நீதனேனென்னேநானினையாவாறே (௬)

உரையார்பொருளுக்குலப்பிலானை
யொழியாமேயெவ்வுருவுமானான்றன்னைப்
புரையாயகனமாயாழ்ந்தாழாதானைப்
புதியனவுமாயமிகவும்பழையான்றன்னைத்
திரையார்புனல்சேர்மகுடத்தானைத்
திருப்புன்கூர்மேவியசிவலோகனை
நிரையார்மணிமாடநீரோனை
நீதனேனென்னேநானினையாவாறே. (௭)

கூரரவத்தணையானுங்குளிர்தண்பொய்கை
மலரவனுங்கூடிச்சென்றறியமாட்டா
ராரொருவரவன்றன்மையறிவார்தேவ
ரறிவோமென்பார்க்கெல்லாமறியலாகாச்
சீரரவக்கழலானைச்சிட்டர்போற்றுந்
திருப்புன்கூர்மேவியசிவலோகனை
நீரரவத்தண்கழனிநீரோனை
நீதனேனென்னேநானினையாவாறே. (அ)

கையெலாநெய்டாயக்கழுத்தேயிட்டுக்
காணிபிரத்துநின்றுண்ணுங்கையர்சொன்ன
பொய்யெலாமெய்யென்றுகருதிப்புக்குப்
புள்ளுவரால்கப்பட்டாதுய்யப்போந்தேன்
செய்யெலாஞ்செழுங்கமலப்பழனவேலித்
திருப்புன்கூர்மேவியசிவலோகனை
நெய்தல்வாய்ப்புனற்படப்பைநீரோனை
நீதனேனென்னேநானினையாவாறே. (௯)

இகழுமாறெங்ஙனேயேழைநெஞ்சே
யிகழாதுபரந்தொன்றாய்நின்றான்றன்னை
நகழுமாலவரைக்கீழிட்டரக்கர்கோனை
நலனழித்துநன்கருளிச்செய்தான்றன்னைத்

கோலமால்வரைமத்தெனநாட்டிக்
கோளரவுசுற்றிக்கடைந்தெழுந்த
ஆலநஞ்சுகண்டவர்மிகவிரிய
வமரர்கட்கருள்புரிவதுகருதி
நீலமார்கடல்விடந்தனையுண்டு
கண்டத்தேவைத்தபித்தநீசெய்த
சீலங்கண்டுநின்றிருவடியடைந்தேன்
செழும்பொழிற்றிருப்புன்கூருளானே. (ரு)

இயக்கர்கின்னரரியமனொடுவருண
ரியங்குதீவளிஞாயிறுதிங்கண
மயக்கமில்புலிவானரநாகம
வசுக்கள்வானவர்தானவரெல்லா
மயர்ப்பொன்றின்றிநின்றிருவடியதனை
யர்ச்சித்தார்பெறுமாரருள்கண்டு
திகைப்பொன்றின்றிநின்றிருவடியடைந்தேன்
செழும்பொழிற்றிருப்புன்கூருளானே. (சா)

போர்த்தநீள்செவியாளரந்தணர்க்குப்
பொழில்கொளாலின்கீழறம்புரிந்து
பார்த்தனுக்கன்றுபாசுபதங்கொடுத்
தருளினாய்பண்டுபகீரதன்வேண்ட
வார்த்துவந்திழியும்புனற்கங்கை
நங்கையாளைநின்சடைமிசைக்கரந்த
தீர்த்தனேநின்றன்றிருவடியடைந்தேன்
செழும்பொழிற்றிருப்புன்கூருளானே. (எ)

மூவெயில்செற்றஞான்றுய்ந்தமூவ*
ரிருவர்நின்றிருக்கோயிலின்வாய்தல
காவலாளரென்றேவியபின்னை
யொருவனீகரிகாடரங்காக
மானைநோக்கியோர்மாநடமகிழ
மணிமுழாமுழக்கவருள்செய்த
தேவதேவநின்றிருவடியடைந்தேன்
செழும்பொழிற்றிருப்புன்கூருளானே (அ)

அறிவினான்மிக்கவறுவகைச்சமய
மவ்வவர்க்கங்கேயாரருள்புரிந்து
வெறியுமாக விலங்கையர்கோனைத்
துலங்கமால்வரைக்கீழடர்த்திட்டுக்
குறிகொள்பாடலினின்னிசைகேட்டுக்
கோலவாளொடுநாளதுகொடுத்த
செறிவுகண்டுநின்றிருவடியடைந்தேன்
செழும்பொழிற்றிருப்புன்கூருளானே. (கூ)

கம்பமால்களிற்றின்னுரியானைக்
காமற்காய்ந்ததோர்கண்ணுடையானைச்

* "மூவரிலிருவர்" என்றும்பாடம்.

செமபொனேயொககுநதிருவுருவானைச
செழுமபொழிறறிருபபுன்கூருளானை
யுமபராளியையுமையவள்கோனை
யூரன்வன்றெண்டனுளளத்தாலுகந் தி
ன்பினாற்சொன்னவருநதமிழைநதோ
டைநதும்வல்லவராருவினையிலரோ. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

சுந்தரமூர்த்திநாயனார் தாம் தினந்தோறும் சுவாமிதரிசனஞ்செய்து திருப பதிகங்கள் பாடிக்கொண்டு திருவாரூரில் வசிக்குங்காலத்திலே, தாம் பரமசிவனைத் தூதனுப்பிய சமாசாரத்தைத் திருப்பெருமங்கலத்திலிருந்த ஏயர்கோன் கலிக்காமநாயனார் கேள்வியுற்று அது தகுதி அன்று என்று தம்மேலே கோபங்கொண்டிருந்தலை அறிந்து, அதைக் குறித்துப் பரமசிவனுக்கு விண்ணப்பஞ் செய்தார் பரமசிவன் அக்கலிக்காமநாயனாரைச் சூலைநோயினால வருத்தி, அவரிடத்தில் எழுந்தருளி, "சுந்தரனாலன்றி இந்நோயதீராது" என்று அருளிச்செய்து, அவர் சுந்தரமூர்த்திநாயனாரைக் கொண்டு அந்நோயைத் தீர்ப்பிதற்கு உடன்படாமையைக்கண்டு, சுந்தரமூர்த்திநாயனாரிடத்திற சென்று, 'நம்முடைய ஏவலாலே கலிக்காமனை வருத்துகின்ற சூலையை நீ போயதீர்ப்பாய்" என்றார். சுந்தரமூர்த்திநாயனார் அதைக் கேட்டு மனமகிழ்ந்து, அவரிடத்திற்குப் போம்படி பிரஸதானமாகி, சூலை தீர்க்கும்படி தாம் வருஞ் சமாசாரத்தை அவருக்குத்தெரிவித்தற்கு ஆளனுப்பினார் அவ்வாளினாலே அவர் வரவை அறிந்த கலிக்காமநாயனார் உடைவாளினாலே தன் வயிற்றைக் கிழித்துக்கொண்டு இறந்துபோனார். சுந்தரமூர்த்திநாயனார் அங்கே சென்றபோது கலிக்காமநாயனார் இறந்து கிடத்தலைக்கண்டு, 'நானும் இவர்போலே இறந்துபோவேன்" என்றுசொல்லி உடைவாளை எடுத்தார். உடனே சிவபிரானுடைய திருவருளினாலே கலிக்காமநாயனார் உயிர்த்து எழுந்து, அவர் கையில் வாளைப்பிடித்துக்கொள்ள, அவர் விழுந்து நமஸ்கரித்தார். கலிக்காமநாயனாரும சுந்தரமூர்த்திநாயனாரை நமஸ்கரித்தார். பின்பு இருவரும் எழுந்து ஒருவரை யொருவர் தழுவி அதிக நண்புள்ளவரானார்கள். பின்பு சுந்தரமூர்த்திநாயனார் கலிக்காமநாயனாரோடு திருப்புன்கூருக்குப் போய், சுவாமிதரிசனஞ் செய்யும்பொழுது, அந்தஸதலத்திலுள்ளார் வந்து, வந்தனைசெய்து, "சுவாமீ நெடுங்காலமாக மழைவருஷித்தலின்றி வருந்துகின்றோம்" என்று விண்ணப்பஞ் செய்ய, "அங்ஙனமாயின், மழை வருஷித்தால், சுவாமிக்கு யாது தருவீர்கள்" என்று சுந்தரமூர்த்தி நாயனார் கேட்க, "அந்தஸ்தலத்தார் சுவாமிக்குப் பன்னிருவேலிநிலம் தானஞ் செய்கின்றோம்" என்றார்கள் நாயனார் திருவுளம் இரங்கி, திருப்பதிகம் பாடியருளினார். உடனே மழை பெய்யத் தொடங்கி, விடாது வருஷித்தது. அப்பொழுது, "மழை நிற்கும்படி செய்தருளினால் இன்னமும் பன்னிருவேலிநிலம் சுவாமிக்குத் தானஞ் செய்கின்றோம்" என்று அத்தலத்தார் பிரார்த்தித்தமாத்திரத்தில், நாயனார் மீட்டுந் திருப்பதிகம் பாடினார் உடனே மழை நின்றது. பின்பு சுவாமிதரிசனஞ் செய்து, "அந்தணாளனுன் னடைக்கலம்" என்னுந் திருப்பதிகம் பாடினார். அத்திருப்பதிகத்திலே, "ஏயர்கோனுற்ற விருபிணிதவிர்த்து" என்றும்,

"வையகமுற்று மாமழைமறந்து வயலினீரிலை மாநிலந்தருகோ-மூய்யக்கொள்க மற்றெங்களையென்ன வொளிகொள் வெண்முகி லாய்ப்பரந்தெங்கும் - பெய்யு மாமழைப் பெருவெள்ளந்தவிர்த்துப் பெயர்த்தும பன்னிரு வேலிகொண்டரு ளும்" என்றும் எடுத்து அருளிச்செய்தார்

திருப்புன்கூர்த்திருப்பதிகம் - ௩.

சுவாமிதிருநாமம - சிவலோகநாதர்.
தேவிதிருநாமம - சொககநாயகி.

ஆ திருப்பதிகம - கஉ௬.

# உக. திருநீடூர்.

## சுந்தரமூர்த்திநாயனார்

பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்

ஊராவதோராவிடையொன்றுடையானை
யொண்ணுதற்றனிககண்ணுதலானைக
காரதாரகறைமாமிடற்றானைக
கருதலாரபுரமூன்றெரித்தானை
நீரில்வாளைவராலகுதிகொள்ளு
நிறைபுனற்கழனிசசெல்வநீடூர்
பாருளார்பரவித்தொழநின்ற
பரமனைபபணியாவிடலாமே. (க)

துன்னுவாாசடைததூமதியானைத
துயக்குறுவகைதோன்றுவிப்பானைப
பன்னுநானமறைபாடவலலானைப
பாரத்தனுக்கருளசெய்தபிரானை
யென்னையின்னருளெய்துவிபபானை
யேதிலாதமக்கேதிலன்றனனைப
புன்னைமாதவிபோதலாநீடூர்ப்
புனிதனைபபணியாவிடலாமே. (உ)

கொல்லுமூவிலைவேலுடையானைக்
கொடியகாலனையுங்குமைததானை
நலலவாநெறிகாட்டுவிப்பானை
நாலுநாமுகக்கிளைறபிரானை
யலலலிலலருளேபுரிவானை
யாடுநீாவயல்சூழ்புனனீடூர்க்
கொல்லைவெள்ளேறுதேறவலலானைக்
கூறிநாமபணியாவிடலாமே. (௩)

தோடுகாதிடு தூநெறியானைத்
தோற்றமுந் துறப்பாயவன் றன்னைப்
பாடுமாமறை பாடவல்லானைப்
பைம்பொழிற் குயில் கூவிடமாடே
யாடுமாமயி லன்னமோடாட
வலைபுனற்கழனித் திருநீடூர்
வேடனாயபிரா னவன்றன்னை
விரும்பிநாம் பணியாவிடலாமே. (௪)

குற்றமொன் றடியாரிலரானாற்
கூடுமாறு தனைக் கொடுப்பானைக்
கற்றகல்வியி லும்மினியானைக்
காணப்பேணுமவர்க் கெளியானை
முற்றவஞ்சுதுறந் திருப்பானை
மூவரின் முதலாயவன் றன்னைச்
சுற்றுநீள்வயல் சூழ்திருநீடூர்த்
தோன்றலைப் பணியாவிடலாமே. (௫)

காடிலாடிய கண்ணுதலானைக்
காலனைக் கடிந்திட்ட பிரானைப்
பாடியாடும் பரிசே புரிந்தானைப்
பற்றினோடு சுற்ற மொழிப்பானைத்
தேடிமாலயன் காணவரியானைச்
சித்தமுந் தெளிவார்க் கெளியானைக்
கோடிதேவர்கள் கும்பிடுநீடூர்க்
கூத்தனைப் பணியாவிடலாமே. (௬)

விட்டிலங்கெரி யார்கையினானை
வீடிலாதவியன் புகழானைக்
கட்டுவாங்கந் தரித்த பிரானைக்
காதிலார்கனகக் குழையானை
விட்டிலங்கு புரிநூலுடையானை
வீந்தவார்தலை யோடுகையானைக்
கட்டியின்கரும் போங்கியநீடூர்க்
கண்டுநாம் பணியாவிடலாமே. (௭)

மாயமாய மனங்கெடுப்பானை
மனத்துளே மதியா யிருப்பானைக்
காயமாயமு மாக்குவிப்பானைக்
காற்றுமாய்க் கனலாய்க் கழிப்பானை
யோயுமாறுறு நோய்ப்புணர்ப்பானை
யொல்லைவல்வினைகள் கெடுப்பானை
வேயொடோங்குமை பாகனைநீடூர்
வேந்தனைப் பணியாவிடலாமே. (௮)

கண்டமுங் கறுத்திட்ட பிரானைக்
காணப்பேணுமவர்க் கெளியானைத்

தொண்டரைப்பெரிதும்முகப்பானைத்
துன்பமுநதுறநதின்பினியானைப
பணடைவலவினைகள்கெடுப்பானைப்
பாகமாமதியானவன்றனனைக்
கெணடைவாளைகிளாபுனனீரோக
கேணமையாறபணியாவிடலாமே. (கூ)

அலலலுள்ளனதீாததிடுவானை
யடைநதவாக்கமுதாயிடுவானைக்
கொலலைவலலரவமமைநதானைக்
கோலமாாகரியினனுரியானை
நலலவாக்கணியானவனறனனை
நானுங்காதலசெயகினறபிரானை
யெல்லிமலலிகையேகமழ்நீடு
ரோததிநாம்பணியாவிடலாமே. (ய0)

பேரோராயிரமுமமுடையானைப
பேசினறபெரிதுமமினியானை
நீருலவாாசடைநினமலனறனனை
நீரோநின்றுகநதிடடபிரானை
யாரூரன்னடிகாணபதற்கனபா
யாதரித்தழைததிடடவிமமாலை
பாருருமபரவித்தொழவல்லாா
பததராயமுநதிதாம்பெறுவாரே (கக)

திருசசிறறமபலம

சுவாமிதிருநாமம் - சோமநாதா
தேவிதிருநாமம - வேயுறுதோளி

ஆ திருபபதிகம - சஉஎ.

# ௨௨. திரு அன்னியூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

திருவிருக்குக்குறள்.

பண - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

மனனியூருறை
செனனியாபிறை
யன்னியூரமா
மனனுசோதியே. (க)

பழகுநதொணடாவும
மழகனனனியூாக
குழகனசேவடி
தொழுதுவாழ்மினே. (உ)

1322 நீதிபேணுவீ
ராதியன்னியூாச
சோதிநாமமே
யோதியுய்ம்மினே. (ங)

1323 பத்தராயினீ
ரத்தரன்னியூாச
சித்தாதாடொழ
முத்தராவிரே. (ச)

நிறைவுவேண்டுவீ /324
ரறவனன்னியூ
மறையுளான்கழற
குறவுசெய்ம்மினே (௫)

இன்பம்வேண்டுவீ
ரன்பனன்னியூ
நன்பொன்னெனுமி
னும்பராகவே. (௬)

அந்தணாளர்த
தந்தையன்னியூ
ரெந்தையடியெனா
பந்தநீங்குமே (௭)

ஆர்த்தனைச்செற்ற
தீர்த்தனன்னியூ
ராத்தமாவடை
தேத்தியுய்ம்மினே. (௮)

இருவர்நாடிய
வரவனன்னியூ
பரவுவாரவிணையுக்
கொருவராவரோ (௯)

குண்டர்தேரருக்
கண்டனன்னியூர்த
தொண்டுளாரவினை
விண்டுபோகுமே. (௧௦)

பூந்தராயபந்த
ஞயந்தபாடலால
வேந்தனன்னியூர்
சேர்ந்துவாழ்மினே (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

பாறலைத்தபடுவெண்டலையினை
னீறலைத்தசெம்மேனியனேரிழை
கூறலைத்தமெய்கோளரவாட்டிய
வாறலைத்தசடையனன்னியூரரே. (௧)

பண்டொத்தமொழியாளையொர்பாகமா
யிண்டைச்செஞ்சடையன்னிருள்சேர்ந்ததோர்
கண்டத்தன்கரியின்னுரிபோர்த்தவ
னண்டத்தப்புறத்தானன்னியூரரே. (௨)

பரவினாளும்பணிந்தவர்தம்வினை
துரவையாகத்துடைப்பவர்தம்மிடங்
குரவநாறுங்குழலுமைகூறரா
யரவமாட்டுவார்போலன்னியூரரே. (௩)

வேதகீதர்விண்ணோர்க்குமுயர்ந்தவர்
சோதிவெண்பிறைதுன்றுசடைக்கணி
நாதர்நீதியினாலடியார்தமக்
காதியாகினின்றாரன்னியூரரே. (௪)

எம்பிரானிமையோர்கட்கெலா
மின்பராகியிருந்தவெம்மீசனார்
துன்பவல்வினைபோகத்தொழுமவர்க்
கன்பராகிநின்றாரன்னியூரரே. (௫)

வெந்தநீறுமெய்பூசுநன்மேனியா
கந்தமாமலர்சூடுங்கருத்தினர்
சிந்தையாற்சிவனார்செய்யதீவண்ண
ரந்தணாளர்கண்டாரன்னியூரரே. (௬)

ஊனையாரதலையிற்பலிகொண்டுழல
வானைவானவர்தாங்கள்வணங்கவே
தேனையார்குழலாளையொர்பாகமா
வானையீருரியாரன்னியூரரே. (௭)

காலைபோய்ப்பலிதேர்வர்கண்ணார்நெற்றி
மேலைவானவர்வந்துவிரும்பிய
சோலைசூழ்புறங்காட்டரங்காகவே
யாலின்கீழறத்தாரன்னியூரரே. (௮)

எரிகொண்மேனியரென்பணிந்தின்பராய்த்
திரியும்மூவெயிற்றீயெழச்செற்றவர்
கரியமாலொடுநான்முகன்காணபதற்
கரியராகிநின்றாரன்னியூரரே. (௯)

வஞ்சரக்கன்கரமுஞ்சிரத்தொடு
மஞ்சுமஞ்சுமொராறுநான்குமிறப்
பஞ்சிமெல்விரலாலடர்த்தாயிழை
யஞ்சலஞ்சலென்றாரன்னியூரரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

அன்னியூர்த்திருப்பதிகம் - ௨.

---

சுவாமிதிருநாமம் - ஆபற்சகாயர்.
தேவிதிருநாமம் - பெரியநாயகி.

---

ஆடு திருப்பதிகம் - ௧௨௯.

## உரு. { திருவேள்விக்குடியும், திருத்துருத்தியும். }

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்.

பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

ஓங்கிமேலுழிதருமொலிபுனற்கங்கையையொருசடைமேற்
றாங்கினாரிடுபலிதலைகலனாக்கொண்டதம்மடிகள்
பாங்கினாலுமையொடும்பகலிடம்புகலிடம்பைம்பொழில்சூழ்
வீங்குநீர்த்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே. (க)

ஆறுசேர்சடையினர்சுடரொளியாடுவர்துளங்கொளிசேர்
நீறுசாந்தெனவுகந்தணிவர்வெண்பிறைமல்குசடைமுடியார்
நாறுசாந்திளமுலையரிவையோடொருபகலமர்ந்தபிரான்
வீறுசேர்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே. (உ)

மழைவளரிளமதிமலரொடுதலைபுல்குவார்சடைமேற்
கழைவளர்புனல்புகக்கண்டவெங்கண்ணுதற்கபாலியார்தா
மிழைவளர்துகிலல்குலரிவையோடொருபகலமர்ந்தபிரான்
விழைவளர்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே. (௩)

கரும்பனவரிசிலைப்பெருந்தகைக்காமனைக்கவினழித்த
சுரும்பொடுதேன்மல்குதூமலர்க்கொன்றையஞ்சுடர்ச்சடையா
ரரும்பனவனமுலையரிவையோடொருபகலமர்ந்தபிரான்
விரும்பிடந்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே. (ச)

வளங்கிளர்மதியமும்பொன்மலர்க்கொன்றையும்வாளரவுங்
களங்கொளச்சடையிடைவைத்தவெங்கண்ணுதற்கபாலியார்தாந்
துளங்குநூன்மார்பினரரிவையோடொருபகலமர்ந்தபிரான்
விளங்குநீர்த்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே. (௫)

பொறியுலாமடப்புலியுரிவையர்வரியராப்பூண்டிலங்கு
நெறியுலாம்பலிகொளுநீர்மையர்சீர்மையைநினைப்பரியார்
மறியுலாங்கையினர்மங்கையோடொருபகலமர்ந்தபிரான்
வெறியுலாந்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே. (௬)

புரிதருசடையினர்புலியுரியரையினர்பொடியணிந்து
திரிதருமியல்பினர்திரிபுரமூன்றையுந்தீவளைத்தார்
வரிதருவனமுலைமங்கையோடொருபகலமர்ந்தபிரான்
விரிதருதுருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே. (௭)

நீண்டிலங்கவிரொளிநெடுமுடியரக்கனிந்நீள்வரையைக்
கீண்டிடந்திடுவனென்றெழுந்தவனுள்வினைகீழ்ப்படுத்தார்
பூண்டநூன்மார்பினரரிவையோடொருபகலமர்ந்தபிரான்
வேண்டிடந்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே. (௮)

கரைகடலரவணைக்கடவுளுந்தாமரைநான்முகனுங்
குரைகழலடிதொழக்கூரெரியெனநிறங்கொண்டபிரான்
வரைகெழுமகளொடும்பகலிடம்புகலிடமவணபொழில்சூழ்
விரைகமழ்தருத்துருத்தியாரிரவிடத்துறைவாவேள்விக்குடியே. (கூ)

அயமுகவெயினிலையமணருங்குண்டருஞ்சாக்கியரு
நயமுகவுரையினர்கருவனசரிதைகள்செய்துழலவர்
கயலனவரிநெடுங்கண்ணியொடொருபகலமர்ந்தபிரான்
வியனகர்த்துருத்தியாரிரவிடத்துறைவாவேள்விக்குடியே. (க0)

விண்ணுலாமவிரிபொழில்விரைமணற்றுருத்திவேள்விக்குடியு
மொண்ணுலாமொலிகழலாடுவாரிரவையோடுறைபதியை
நண்ணுலாமபுகலியுளருமறைஞானசம்பந்தன்சொன்ன
பண்ணுலாமருந்தமிழ்பாடவொராடுவார்பழியிலரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

மூப்பதுமில்லைபிறப்பதுமில்லையிறப்பதில்லை
சேர்ப்பதுகாட்டகத்தூரினுமாகச்சிந்திக்கினல்லால்*
காப்பதுவேள்விக்குடிதண்டுருத்தியெங்கோனரைமே
லார்ப்பதுநாகமறிந்தோமேனுமிவர்க்காட்படோமே. (க)

கட்டக்காட்டின்நடமாடுவர்யாவர்க்குங்காட்சியொண்ணார்
சுட்டவெண்ணீறணிந்தாடுவர்பாடுவர்தூயநெய்யால்
வட்டக்குண்டத்திலெரிவளர்த்தோம்பிமறைபயில்வா
ரட்டகொண்டுண்பதறிந்தோமேனுமிவர்க்காட்படோமே. (உ)

பேருமோராயிரம்பேருடையார்பெண்ணோடாணுமல்ல
ரூருமொற்றியூர்மற்றையூர்பெற்றவாநாமறியோங்
காருங்கருங்கடனஞ்சமுதுண்டுகண்டங்கறுத்தார்க்
காரம்பாம்பாவதறிந்தோமேனுமிவர்க்காட்படோமே. (ங)

ஏனக்கொம்பும்மிளவாமையும்பூண்டங்கோரேறுமேறிக்
கானக்காட்டிற்றொண்டர்கண்டனசொல்லியுங்காமுறவே
மானைத்தோலொன்றையுடுத்துப்புலித்தோல்பியற்குமிட்டு
யானைத்தோல்போர்ப்பதறிந்தோமேனுமிவர்க்காட்படோமே. (ச)

ஊட்டிக்கொண்டுண்பதோரூணிலரூரிடுபிச்சையல்லா
பூட்டிக்கொண்டேற்றினையேறுவரேறியோர்பூதந்தம்பாற்
பாட்டிக்கொண்டுண்பவர்பாழிதொறும்பலபாம்புபற்றி
யாட்டிக்கொண்டுண்பதறிந்தோமேனுமிவர்க்காட்படோமே. (ரு)

குறவனார்தம்மகண்மகனார்மணவாட்டிகொல்லை
மறவனாராயங்கோர்பன்றிப்பின்போவதுமாயங்கண்டோ
மிறைவனாராதியார்சோதியாராயங்கோர்சோர்வுபடா
வுறவனாராவதறிந்தோமேனுமிவர்க்காட்படோமே. (சு)

* "சிந்திக்கல்லா" என்றும்பாடம்.

பித்தரையொத்தொருபெற்றியர்நற்றவையென்னைப்பெற்ற
முற்றவைதம்மனைதந்தைக்குந்தவ்வைக்குந்தம்பிரானார்
செத்தவர்தந்தலையிற்பலிகொள்வதேசெல்வமாகி
லித்தவமாவதறிந்தோமேனுமிவர்க்காட்பட்டோமே. (எ)

உம்பரானூழியானாழியானோங்கிமலருறைவா
னம்பரமல்லவர்சிந்திப்பவர்தடுமாற்றறுப்பா
னெம்பரமல்லவினெஞ்சத்துள்ளுமிருப்பதாகி
லம்பரமாவதறிந்தோமேனுமிவர்க்காட்பட்டோமே. (அ)

இந்திரனுக்குமிராவணனுக்குமருள்புரிந்தார்
மந்திரமோதுவார்மாமறைபாடுவார்மானமறியார்
சிந்துரக்கண்ணனுநான்முகனுமுடனாயதனியே
யந்தரஞ்செல்வதறிந்தோமேனுமிவர்க்காட்பட்டோமே. (கூ)

கூடலாமன்னன்குலநாவலூரர்கோனலந்தமிழைப்
பாடவல்லபரமனடியார்க்கடிமைவழுவா
நாடவல்லதொண்டனாரூரனுடையமாறுசொல்லிப்
பாடவல்லார்பரலோகத்திருப்பதுபண்டமன்றே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

திருவேள்விக்குடித் திருப்பதிகம் - உ

---

சுவாமிதிருநாமம் - கலியாணசுந்தரர்.
தேவிதிருநாமம் - பரிமளசுகந்தநாயகி.

---

ஆ திருப்பதிகம் - கஙஉ.

---

# உச. எதிர்கொள்பாடி.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

---

பண் - இந்தளம்.

---

திருச்சிற்றம்பலம்

மத்தயானையேறிமன்னர்சூழவருவீர்காள்
செத்தபோதிலாருமில்லைசிந்தையுள்வைம்மின்கள்
வைத்தவுள்ளமாற்றவேண்டாவம்மின்மனத்தீரே
யத்தர்கோயிலெதிர்கொள்பாடியென்பதடைவோமே. (க)

தோற்றமுண்டேன்மரணமுண்டுதுயரமனைவாழ்க்கை
மாற்றமுண்டேல்வஞ்சமுண்டுநெஞ்சமனத்தீரே
நீற்றரேற்றர்நீலகண்டர்நிறைபுனனீள்சடைமே
லேற்றர்கோயிலெதிர்கொள்பாடியென்பதடைவோமே. (உ)

செடிகொளாக்கைசென்றுசென்றுதேய்ந்தொல்லைவீழாமுன்
வடிகொள்கண்ணார்வஞ்சனையுட்பட்டுமயங்காதே
கொடிகொளேற்றர்வெள்ளைநீற்றர்கோவணவாடையுடை
யடிகள்கோயிலெதிர்கொள்பாடியென்பதடைவோமே. (௩)

வாழ்வாக்கண்டீர்நம்முள்ளேவாவஞ்சமனத்தீரோ
யாவராலுமிகழப்பட்டிங்கல்லலில்வீழாதே
மூவராயுமிருவராயுமுதல்வனவனேயாந்
தேவர்கோயிலெதிர்கொள்பாடியென்பதடைவோமே (௪)

அரித்துநம்மேலாவிகொண்டுகாலற்றைப்பான்பொருட்டாற்
சிரித்தபல்வாய்வெண்டலைபோயூர்ப்புறஞ்சேராமுன்
வரிக்கொடுத்திவ்வாளர்க்காவஞ்சமதினமூன்று
மெரித்தவில்லிகோயிலெதிர்கொள்பாடியென்பதடைவோமே. (௫)

பொய்யாக்கண்டவாழ்க்கையாளாபொறுத்தடைப்பான்பொருட்டான
மையல்கொண்டுமோடாடிநீருமனத்திரோ
நையவேண்டாவிம்மையேத்தவம்மைநமக்கருளு
மையர்கோயிலெதிர்கொள்பாடியென்பதடைவோமே. (௬)

கூசநீக்கிக்குற்றநீக்கிச்செற்றமனநீக்கி
வாசமல்குகுழலினார்கள்வஞ்சமனைவாழ்க்கை
பாசைநீக்கியன்புசேர்த்தியென்பணிந்தேத்து
மீசர்கோயிலெதிர்கொள்பாடியென்பதடைவோமே. (௭)

இட்டமுன்பேற்றுன்பமுண்டுவேழைமனைவாழ்க்கை
முன்புசொன்னமோழைமையான்முட்டைமனத்தீரோ
யண்டரல்லாலணிகொள்கொன்றையடிகளடிசேரா
மானபாகோயிலெதிர்கொள்பாடியென்பதடைவோமே. (௮)

தந்தையாருந்தவ்வையாருமெட்டனைச்சார்வாகார்
வந்துநம்மோடுள்ளளாவிவானநெறிகாட்டுஞ்
சிந்தையீரோநெஞ்சினீரேதிகழ்மதியஞ்சூடு
மெந்தைகோயிலெதிர்கொள்பாடியென்பதடைவோமே. (௯)

குருதிசோரவானையின்றோல்கொண்டகுழற்சடையன்
மருதுகீறியூடுபோனமாலயனுமறியாச்
சுருதியார்க்குஞ்சொல்லவொண்ணாச்சோதியெம்மாதியான்
கருதுகோயிலெதிர்கொள்பாடியென்பதடைவோமே. (௧௦)

முத்துநீற்றுப்பவளமேனிச்செஞ்சடையானுறையும்
பத்தர்பந்தத்தெதிர்கொள்பாடிப்பரமனையேபணியச்
சித்தம்வைத்ததொண்டர்தொண்டனசடையனவன்சிறுவன்
பத்தனூரன்பாடல்வல்லார்பாதம்பணிவாரோ. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிதிருநாமம் - அயிராவதநாதர்.
தேவிதிருநாமம் - மலர்க்குழனாயகி.

௯ திருப்பதிகம் - க௯௫.

# உரு. திருமணஞ்சேரி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

அயிலாரும்அம்பதனாற்புரமூன்றெய்து
குயிலாருமென்மொழியாளொருகூறாகி
மயிலாருமல்கியசோலைமணஞ்சேரி
பயில்வானைப்பற்றிநின்றார்க்கில்லைபாவமே. ( )

விதியானைவிண்ணவர்தாந்தொழுதேத்திய
நெதியானைநீள்சடைமேல்நிகழ்வித்தவான்
மதியானைவண்பொழில்சூழ்தருமணஞ்சேரிப்
பதியானைப்பாடவல்லார்வினைபாறுமே. (உ)

எய்ப்பானார்க்கின்புறுதேனளித்தூறிய
இப்பாலாயெனையுமாளவுரியானை
வைப்பானமாடங்கள்சூழ்தருமணஞ்சேரி
மெய்ப்பானைமேவிநின்றார்வினைவீடுமே. (ங)

விடையானைமேலுலகேழுமிப்பாரெலா
முடையானையூழிதோறூழியுளதாய
படையானைப்பண்ணிசைபாடுமணஞ்சேரி
அடைவானையடையவல்லார்க்கில்லையல்லலே. (ச)

எறியார்பூங்கொன்றையினோடுமிளமத்தம்
வெறியாருஞ்செஞ்சடையாரமிலத்தானை
மறியாருங்கையுடையானைமணஞ்சேரிச்
செறிவானைச்செப்பவல்லார்க்கிடர்சேராவே. (ரு)

மொழியானைமுன்னொருநான்மறையாறங்கம்
பழியாமைப்பண்ணிசையானபகர்வானை
வழியானைவானவரேத்துமணஞ்சேரி
இழியாமையேத்தவல்லார்க்கெய்துமின்பமே. (சா)

எண்ணானையெண்ணமர்சீரிமையோர்கட்குக்
கண்ணானைக்கண்ணொருமூன்றுமுடையானை
மண்ணானைமாவயல்சூழ்தருமணஞ்சேரிப்
பெண்ணானைப்பேசநின்றார்பெரியோர்களே. (எ)

எடுத்தானையெழின்முடியெட்டுமிரண்டுந்தோள்
கெடுத்தானைக்கேடிலாச்செம்மையுடையானை
மடுத்தாரவண்டிசைபாடுமணஞ்சேரி
பிடித்தாரப்பேணவல்லார்பெரியோர்களே. (அ)

சொல்லானைத்தோற்றங்கண்டானுநெடுமாலுங்
கல்லானைக்கற்றனசொல்லித்தொழுதோங்க
வல்லாரநன்மாதவரேத்துமணஞ்சேரி
யெல்லாமாமெம்பெருமான்கழலேத்துமே. (௯)

சற்றேயுந்தாமறிவில்சமண்சாக்கியர்
சொற்றேயும்வண்ணமொருமெய்ம்மையுடையானை
வற்றாதவாவிகள்சூழ்ந்தமணஞ்சேரி
பற்றாகவாழ்பவர்மேல்வினைபற்றாவே. (௧௦)

கண்ணாருங்காழியர்கோன்கருத்தார்விகிர்தன்
தண்ணார்சீர்ஞானசம்பந்தன்றமிழ்மாலை
மண்ணாருமாவயல்சூழ்ந்தமணஞ்சேரி
பண்ணாரப்பாடவல்லார்க்கில்லைபாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பட்டநெற்றியர்பாய்புலித்தோலினர்
நட்டநின்றுநவில்பவர்நாடொறுஞ்
சிட்டர்வாழ்திருவார்மணஞ்சேரியெம்
வட்டவார்சடையாரவண்வாழ்த்துமே. (௧)

துன்னுவார்குழலாளுமையாளொடும்
பின்னுவார்சடைமேற்பிறைவைத்தவர்
மன்னுவார்மணஞ்சேரிமருந்தினை
யுன்னுவார்வினையாயினவோயுமே. (௨)

புற்றிலாடரவாட்டும்புனிதனார்
தெற்றினார்புரந்தீயெழச்செற்றவர்
சுற்றினார்மதில்சூழ்மணஞ்சேரியார்
பற்றினாரவர்பற்றவர்காண்மினே. (௩)

மத்தமும்மதியும்வளர்செஞ்சடை
முத்தர்முக்கணர்மூசரவம்மணி
சித்தர்தீவணர்சீர்மணஞ்சேரியெம்
வித்தர்தாம்விருப்பாரைவிருப்பரே. (௪)

துள்ளுமான்மறிதூயமழுவாளினார்
வெள்ளநீர்கரந்தார்சடைமேலவ
ரள்ளலார்வயல்சூழ்மணஞ்சேரியெம்
வள்ளலார்கழல்வாழ்த்தல்வாழ்வாவதே. (௫)

நீர்பரந்தநிமிர்புன்சடையின்மே
லூர்பரந்தவுரகமணிபவர்
சீர்பரந்ததிருமணஞ்சேரியா
ரேர்பரந்தவிலங்குசூலத்தரே. (௬)

சுண்ணத்தர்சுடுநீறுகந்தாடலார்
விண்ணத்தம்மதிசூடியவேதியர்
மண்ணத்தம்முழவார்மணஞ்சேரியார்
வண்ணத்தம்முலையாளுமைவண்ணரே. (௭)

துன்னவாடையர்தாமழுவாளினர்
பின்னுசெஞ்சடைமேற்பிறைவைத்தவர்
மன்னுவார்பொழில்சூழ்மணஞ்சேரியெம்
மன்னனார்கழலேதொழுவாய்கருமே. (௮)

சித்தர்தேவர்கணமாலொடுநான்முகன்
புத்தர்தேரமணகையர்புகழவே
மத்தர்தாமறியார்மணஞ்சேரியெம்
மத்தனாரடியார்க்கல்லலில்லையே. (௯)

கடுத்தமேனியரக்கன்கயிலையை
யெடுத்தவனைநெடுநீண்முடிபத்திறப்
படுத்தலும்மணஞ்சேரியருளெனக்
கொடுத்தனர்கொற்றவாளொடுநாமமே. (௧௰)

திருச்சிற்றம்பலம்

---

திருமணஞ்சேரித்திருப்பதிகம் - உ.

---

சுவாமிதிருநாமம் - அருள்வள்ளனாதர்.
தேவிதிருநாமம் - யாழினுமென்மொழியாள்.

---

ஆ திருப்பதிகம் - கஅரு.

---

## உ௬. திருக்குறுக்கைவீரட்டம்.

### திருநாவுக்கரசுநாயனார்.

### திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

ஆதியிற்பிரமனார்தாமர்ச்சித்தாரடியிணைக்கீ
ழோதியவேதநாவருணருமாறுணரலுற்றார்
சோதியுட்சுடராய்த்தோன்றிச்சொல்லினையிறந்தார்பல்பூக்
கோதிவண்டறையுஞ்சோலைக்குறுக்கைவீரட்டனாரே. (௧)

நீற்றினைநிறையப்பூசிநித்தலுநியமஞ்செய்து
வாற்றுநீர்பூரித்தாட்டுமந்தணனாரைக்கொல்வான்
சாற்றுநாளற்றதென்றுதருமராசற்காய்வந்த
கூற்றினைக்குமைப்பர்போலுங்குறுக்கைவீரட்டனாரே. (௨)

தழைத்ததோராத்தியின்கீழ்த்தாபரமணலாற்கூப்பி
யழைத்தங்கேயாவின்பாலைக்கறந்துகொண்டாட்டக்கண்டு
பிழைத்ததன்றாதைதாளைப்பெருங்கொடுமழுவால்வீசக்
குழைத்ததோரமுதமீந்தார்குறுக்கைவீரட்டனாரே. (௩)

சிலந்தியுமானைக்காவிற்றிருநிழற்பந்தர்செய்து
வுலந்தவணிறந்தபோதேகோச்செங்கணானுமாகக்
கலந்தநீர்க்காவிரிசூழ்சோணாட்டுச்சோழர்தங்கள்
குலந்தனிற்பிறப்பித்திட்டார்குறுக்கைவீரட்டனாரே. (௪)

ஏறுடனேழடர்த்தானெண்ணியாயிரம்பூக்கொண்டு
வாறுடைச்சடையினானையர்ச்சித்தானடியிணைக்கீழ்
வேறுமோர்பூக்குறையமெய்ம்மலர்க்கண்ணைமீண்டக்
கூறுமோராழியீந்தார்குறுக்கைவீரட்டனாரே. (௫)

கல்லினாலெறிந்துகஞ்சிதாமுணுஞ்சாக்கியனா
நெல்லினார்சோறுணாமைநீள்விசும்பாளவைத்தா
ரெல்லியாங்கெரிகையேந்தியெழிறிகழ்நட்டமாடிக்
கொல்லியாம்பண்ணுகந்தார்குறுக்கைவீரட்டனாரே. (௬)

காப்பதோர்வில்லுமம்புங்கையதோரிறைச்சிப்பாரந்
தோற்பெருஞ்செருப்புத்தொட்டுத்தூயவாய்க்கலசமாட்டித்
தீப்பெருங்கண்கள்செய்யகுருதிநீரொழுகத்தன்கண்
கோப்பதும்பற்றிக்கொண்டார்குறுக்கைவீரட்டனாரே. (௭)

நிறைமறைக்காடுதன்னினீண்டெரிதீபந்தன்னைக்
கறைநிறத்தெலிதன்மூக்குச்சுட்டிடக்கனன்றுதூண்ட
நிறைகடன்மண்ணும்விண்ணுநீண்டவானுலகமெல்லாங்
குறைவறக்கொடுப்பர்போலுங்குறுக்கைவீரட்டனாரே. (௮)

அணங்குமைபாகமாகவடக்கியவாதிமூர்த்தி
வணங்குவாரிடர்கடீர்க்குமருந்துநல்லருந்தவத்த
கணம்புல்லர்க்கருள்கள்செய்துகாதலாமடியார்க்கென்றுங்
குணங்களைக்கொடுப்பர்போலுங்குறுக்கைவீரட்டனாரே. (௯)

எடுத்தனனெழிற்கைலையிலங்கையர்மன்னன்றன்னை
யடுத்ததொருவிரலாலூன்றவலறிப்போயவனும்வீழ்ந்து
விடுத்தனன்கைநரம்பால்வேதகீதங்கள்பாடக்
கொடுத்தனர்கொற்றவாணாள்குறுக்கைவீரட்டனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.



## திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

நெடியமால்பிரமனோடுநீரொடும்பிலயங்கொள்ள
வடியொடுமுடியுங்காணாரருச்சுனற்கம்பும்வில்லுந்
துடியுடைவேடராகித்தூயமந்திரங்களசொல்லிக்
கொடியொடுதேர்கொடுத்தார்குறுக்கைவீரட்டனாரே. (க)

ஆத்தமாமயனுமாலுமன்றிமற்றொழிந்ததேவர்
சோத்தமெம்பெருமானென்றுதொழுதுதோத்திரங்களசொல்லத்
தீர்த்தமாமட்டமிமுன்சீருடையேழுநாளுங்
கூத்தராய்வீதிபோந்தார்குறுக்கைவீரட்டனாரே (உ)

திருச்சிற்றம்பலம்

திருக்குறுக்கைத்திருப்பதிகம்

சுவாமிதிருநாமம் வீரட்டேசர்.
தேவிதிருநாமம் - ஞானாம்பிகை

ஆ திருப்பதிகம் - கரு

# உஎ. திருக்கருப்பறியலூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

### திருவிராகம்

பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

சுற்றமொடுபற்றவைதுயக்கறவறுத்துக்
குற்றமில்குணங்களொடுகூடுமடியார்கள்
மற்றவரைவானவர்தம்வானுலகமேற்றக்
கற்றவனிருப்பதுகருப்பறியலூரே. (க)

வண்டணைசெய்கொன்றையதுவார்சடைகள்மேலே
கொண்டணைசெய்கோலமதுகோளரவினோடும்
விண்டணைசெய்மும்மதிலும்வீழ்தரவொரம்பாற்
கண்டவனிருப்பதுகருப்பறியலூரே. (உ)

வேதமொடுவேதியர்கள்வேள்விமுதலாகப்
போதினொடுபோதுமலர்கொண்டுபுனைகின்ற
நாதனெனநள்ளிருண்முன்னாடுகுழைதாழுங்
காதவனிருப்பதுகருப்பறியலூரே. (௩)

மடம்படுமலைக்கிறைவன்மங்கையொருபங்க
னுடம்பினைவிடக்கருதிநின்றமறையோனைத்
தொடர்ந்தணவுகாலனுயிர்காலவொருகாலாற்
கடந்தவனிருப்பதுகருப்பறியலூரே. (ச)

ஒருத்தியுமையோடுமொருபாகமதுவாய
நிருத்தனவனீதியவனித்தனெறியாய
விருத்தனவன்வேதமெனவங்கமவையோதுங்
கருத்தவனிருப்பதுகருப்பறியலூரே. (ரு)

விண்ணவர்கள்வெற்பரசுபெற்றமகண்மெய்த்தேன்
பண்ணமருமென்மொழியினாளையணைவிப்பா
னெண்ணிவருகாமனுடலவேவவெரிகாலுங்
கண்ணவனிருப்பதுகருப்பறியலூரே. (சு)

ஆதியடியைப்பணியவப்பொடுமலர்ச்சேர்
சோதியொளிநற்புகைவளர்க்குவடுபுக்குத்
தீதுசெயவந்தணையுமந்தகனரங்கக்
காதினனிருப்பதுகருப்பறியலூரே. (எ)

வாய்ந்தபுகழ்விண்ணவருமண்ணவருமஞ்சப்
பாய்ந்தமர்செயுந்தொழிலிலங்கைநகர்வேந்தற்
கேய்ந்தபுயமத்தனையுமிற்றுவிழமேனாட்
காய்ந்தவனிருப்பதுகருப்பறியலூரே. (அ)

பரந்ததுநிரந்தவருபாயதிருமங்கை
கரந்தெரிசடைமேன்மிசையுகந்தவளைவைத்து
நிரந்தரநிரந்திருவர்நேடியறியாமற்
கரந்தவனிருப்பதுகருப்பறியலூரே. (கூ)

அற்றமறையாவமணராதமிலிபுத்தர்
சொற்றமறியாதவர்கள்சொன்னசொலைவிட்டுக்
குற்றமறியாதபெருமான்கொகுடிக்கோயிற்
கற்றெனவிருப்பதுகருப்பறியலூரே. (க0)

நலந்தருபுனற்புகலிஞானசம்பந்தன்
கலந்தவர்கருப்பறியன்மேயகடவுள்ளைப்
பலந்தருதமிழ்க்கிளவிபத்துமிவைகற்று
வலந்தருமவர்க்குவினைவாடலெளிதாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்திநாயனார்

பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்

சிம்மாந்துசிம்புளித்துச்சிந்தையினில்வைத்துகந்துதிறம்பாவண்ணங்
கைம்மாவினுரிவைபோர்த்துமைவெருவக்கண்டானைக்கருப்பறியலூர்க்
கொய்ம்மாவின்மலர்ச்சோலைக்குயில்பாடமயிலாடுங்கொகுடிக்கோயி
லெம்மானைமனத்தினானினைந்தபோதவர்நமக்கினியவாறே. (௧)

நீற்றாருமேனியராய்நினைவார்தம்முள்ளத்தேநிறைந்துதோன்றுங்
காற்றானைத்தீயானைக்கதிரானைமதியானைக்கருப்பறியலூர்க்
கூற்றானைக்கூற்றுதைத்துக்கோல்வளையாளவளோடுங்கொகுடிக்கோயி
லேற்றானைமனத்தினானினைந்தபோதவர்நமக்கினியவாறே (௨)

முட்டாமேநாடோறுநீர்மூழ்கிப்பூப்பறித்துமூன்றுபோதுங்
கட்டார்ந்தவிண்டைகொண்டடிசேர்த்துமந்தணர்தங்கருப்பறியலூர்க்
கொட்டாட்டுப்பாட்டாகிநின்றானைக்குழகனைக்கொகுடிக்கோயி
லெட்டானமூர்த்தியைநினைந்தபோதவர்நமக்கினியவாறே. (௩)

விருந்தாயசொன்மாலைகொண்டேத்திவினைபோகவேலிதோறுங்
கருந்தாளவாழைமேற்செங்கனிகடேன்சொரியுங்கருப்பறியலூர்க்
குருந்தாயமுள்ளெயிற்றுக்கோல்வளையாளவளோடுங்கொகுடிக்கோயி
லிருந்தானைமனத்தினானினைந்தபோதவர்நமக்கினியவாறே. (௪)

பொடியேறுதிருமேனிப்பெருமானைப்பொங்கரவக்கச்சையானைக்
கடிநாறுபூம்பொய்கைக்கயல்வாளைகுதிகொள்ளுங்கருப்பறியலூர்க்
கொடியேறிவண்டினமுந்தண்டேனும்பண்செய்யுங்கொகுடிக்கோயி
லடியேறுகழலானைநினைந்தபோதவர்நமக்கினியவாறே (௫)

பொய்யாதவாய்மையாற்பொடிபூசிப்போற்றிசைத்துப்பூசைசெய்து
கையினாலெரியோம்பிமறைவளர்க்குமந்தணர்தங்கருப்பறியலூர்க்
கொய்யுலாமலர்ச்சோலைக்குயில்கூவமயிலாலுங்கொகுடிக்கோயி
லையனையெனமனத்தினானினைந்தபோதவர்நமக்கினியவாறே (௬)

செடிகொணோயுள்ளளவுந்தீவினையுந்தீர்ந்தொழியச்சிந்தைசெய்ம்மின்
கடிகொள்பூந்தடமண்டிக்கருமேதிகண்படுக்குங்கருப்பறியலூர்க்
கொடிகொள்பூநுண்ணிடையாள்கோல்வளையாளவளோடுங்கொகுடிக்கோயி
லடிகளையெனமனத்தினானினைந்தபோதவர்நமக்கினியவாறே. (௭)

பறையாதவல்வினைகள்பறைந்தொழியப்பன்னாளும்பாடியாடிக்
கறையார்ந்தகண்டத்தனெண்டோளனெண்முக்கண்ணன்கருப்பறியலூர்க்
குறையாதமறைநாவர்குற்றேவலொழியாதகொகுடிக்கோயி
லுறைவானைமனத்தினானினைந்தபோதவர்நமக்கினியவாறே. (௮)

சங்கேந்துகையானுந்தாமரையின்மேலானுந்தன்மைகாணாக்
கங்கார்ந்தவார்சடைகளுடையானைவிடையானைக்கருப்பறியலூர்க்
கொங்கார்ந்தபொழிற்சோலைசூழ்கனிகள்பலவுதிர்க்குங்கொகுடிக்கோயி
லெங்கோனைமனத்தினானினைந்தபோதவர்நமக்கினியவாறே. (௯)

பலிதிரிந்துழலபண்டங்கன்மேயவையாற்றினைக்
கலிகடிந்தகையான்கடற்காழியர்காவல
னொலிகொள்சம்பந்தனொண்டமிழ்பத்துமவல்லார்கள்போய்
மலிகொள்விண்ணிடைமன்னியசீர்பெறுவார்களே. (கஉ)

திருச்சிற்றம்பலம்

## திருவிராகம்.

பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

திருத்திகழமலைச்சிறுமியோடுமிகுதேச
ருருத்திகழெழிற்கயிலைவெற்பிலுறைதற்கே
விருப்புடையவற்புதரிருக்குமிடமேரா
மருத்திகழ்பொழிற்குலவுவண்டிருவையாறே. (க)

கந்தமரவுந்துபுகையுந்தலிலவிளக்கே
ரிந்திரனுணாந்துபணியெந்தையிடமெங்குஞ்
சந்தமலியுந்தருமிடைந்தபொழில்சார
வந்தவளிநந்தணவுவண்டிருவையாறே. (உ)

கட்டுவடமெட்டுமுறுவட்டமுழவத்திற
கொட்டுகரமிட்டவொலிதட்டும்வகைநந்திக்
கிட்டமிகநட்டமவையிட்டவரிடஞ்சீர்
வட்டமதிலுட்டிகழுமவண்டிருவையாறே. (ங)

நண்ணியொராவடத்தினிழலாலாமுனிவர்க்கன்
றெண்ணிலிமறைப்பொருள்விரித்தவரிடஞ்சீர்த்
தண்ணினமலிசந்தகிலொடுந்திவருபொன்னி
மண்ணின்மிசைவந்தணவுவண்டிருவையாறே. (ச)

வென்றிமிகுதாரகனதாருயிர்மடங்கக்
கன்றிவருகோபமிகுகாளிகதமோவ
நின்றுநடமாடியிடநீடுமலாமேலான
மன்றனமலியும்பொழில்கொளவண்டிருவையாறே. (ரு)

பூதமொடுபேய்கள்பலபாடநடமாடிப்
பாதமுதல்பையரவுகொண்டணிபெறுத்திக்
கோதையரிடும்பலிகொளும்பரனிடம்பூ
மாதவிமணங்கமழும்வண்டிருவையாறே. (சா)

துன்னுகுழன்மங்கையுமைநங்கைசுளிவெய்தப்
பின்னொருதவஞ்செய்துழல்பிஞ்ஞகனுமங்கே *
யென்ன * சதியென்றுரைசெய்யங்கணனிடஞ்சீர்
மன்னுகொடையாளர்பயில்வண்டிருவையாறே. (எ)

* "சகி" என்றும்பாடம்.

இரக்கமில்குணத்தொடுலகெலாநலிவெம்போ
ரரக்கன்முடியததலைபுயத்தொடுமடங்கத
துரக்கவிரலிற்சிறிதுவைததவரிடஞ்சீர்
வரக்கருணையாளர்பயிலவணடிருவையாறே. (அ)

பருத்துருவதாகிவிணடைந்தவனொபன்றிப்
பெருததுருவதாயுலகிடநதவனுமென்றுங்
கருத்துருவொணுவகைநிமிர்நதவனிடங்கார்
வருத்துவகைதீர்கொளபொழிலவனைடிருவையாறே (கூ)

பாகியமதொன்றுமிலசமண்பதகாபுததர்
சாகியாகளென்றுடல்பொதிநதுதிரிவார்தம்
நோக்கரியதததுவனிடமபடியின்மேலான
மாக்கமுறநீடுபொழிலவணடிருவையாறே. (க0)

வாசமலியுமபொழில்கொள்வணடிருவையாற்று
ஈசனையெழிற்புகலிமனனவன்மெயஞ்ஞானப
பூசுரனுரைத்ததமிழ்பததுமிவைவலலார்
நேசமலிபததரவர்நினமலனடிக்கே. (கக)

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசுநாயனுர்.

பண - காநதாரம.

திருச்சிற்றம்பலம்

மாதாபபிறைக்கணணியானைமலையான்மகளொடுமபாடிப்
போதொடுநீர்சுமநதேத்திப்புகுவாரவர்பின்புகுவேன
யாதுஞ்சுவடுபடாமலையாறடைகின்றபோது
காதனமடபபிடியோடுகளிறுவருவனகண்டேன்
கண்டேனவர்திருபபாதங்கணடறியாதனகண்டேன். (க)

போழிளங்கணணியினுனைபபூநதுகிலாளொடுமபாடி
வாழியமபோற்றியெனறேத்திவட்டமிட்டாடாவருவே
னுழிவல்வினைறேததுமையாறடைகின்றபோது
கோழிபெடையொடுங்கூடிக்குளிர்நதுவருவனகணடேன்
கண்டேனவர்திருப்பாதஙகண்டறியாதனகணடேன. (உ)

எரிப்பிறைககண்ணியினுனையேநதிழையாளொடுமபாடி
முரிததவிலயஙகளிட்டுமுகமலர்நதாடாவருவே
னரித்தொழுகுவெளளருவியையாறடைகினறபோது
வரிக்குயிலபேடையொடாடிவைகிவருவனகணடேன
கண்டேனவர்திருப்பாதஙகண்டறியாதனகண்டேன. (ங)

பிறையிளங்கணணியினுனைபபெய்வளையாளொடுமபாடித்
துறையிளமபன்மலர்தூவித்தோளைககுளிரத்தொழுவே
னறையிளம்பூஙகுயிலாலுமையாறடைகின்றபோது
சிறையிளம்பேடையொடாடிசசேவலவருவனகணடேன்
கணடேனவர்திருப்பாதங்கணடறியாதனகணடேன. (ச)

ஏடுமதிக்கண்ணியானையேந்திழையாளொடும்பாடிக்
காடொடுநாடுமலையுங்கைதொழுதாடாவருவே
னாடலமர்ந்துறைகின்றவையாறடைகின்றபோது
பேடைமயிலொடுங்கூடிப்பிணைந்துவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (௫)

தண்மதிக்கண்ணியினானைத்தையனல்லாளொடும்பாடி
யுண்மெலிசிந்தையனாகியுணரா வுருகாவருவே
னண்ணலமர்ந்துறைகின்றவையாறடைகின்றபோது
வண்ணப்பகன்றிலொடாடிவைகிவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (௬)

கடிமதிக்கண்ணியினானைக்காரிகையாளொடும்பாடி
வடிவொடுவண்ணமிரண்டும்வாய்வேண்டுவசொல்லிவாழ்வே
னடியிணையார்க்குங்கழலானையாறடைகின்றபோது
விடிகுரலன்னதொரேனமிசைந்துவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (௭)

விரும்புமதிக்கண்ணியானைமெல்லியலாளொடும்பாடிப்
பெரும்புலர்காலையெழுந்துபெறுமலர்கொய்யாவருவே
னருங்கலம்பொன்மணியுந்துமையாறடைகின்றபோது
கருங்கலைப்பேடையொடாடிக்கலந்துவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (௮)

முற்றுப்பிறைக்கண்ணியானைமொய்குழலாளொடும்பாடிப்
பற்றிக்கயிறறுக்கில்லேன்பாடியுமாடாவருவே
னற்றருள்பெற்றுநின்றாரோடையாறடைகின்றபோது
நற்றுணைப்பேடையொடாடிநாரைவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (௯)

திங்கண்மதிக்கண்ணியானைத்தேமொழியாளொடும்பாடி
யெங்கருணல்குங்கொலெந்தையெனக்கினியென்னாவருவே
னங்கிளமங்கையராடுமையாறடைகின்றபோது
பைங்கிளிப்பேடையொடாடிப்பறந்துவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (௧௦)

வளர்மதிக்கண்ணியினானைவார்குழலாளொடும்பாடிக்
களவுபடாததோர்காலங்காண்பான்கடைக்கணிக்கின்றே
னளவுபடாததோரன்போடையாறடைகின்றபோது
விளமணநாகுதழுவியேறுவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

திருநாவுக்கரசுநாயனார், தென்கைலாசமாகிய திருக்காளத்தியை அடைந்து, அங்கே பொன்முகலியிலே ஸ்நானஞ்செய்துகொண்டு, மலையின்மேல் ஏறி, சுவாமியை வணங்கித் திருப்பதிகம்பாடி, அவருடைய வலப்பக்கத்திலே நிற்கின்ற கண்ணப்பநாயனாருடைய திருவடிகளை வணங்கி, சிலநாள் அந்த ஸ்தலத்திலே வசித்தார்.

பின் உத்தரகைலாசத்திலே சிவபிரான் எழுந்தருளியிருக்கின்ற திருக்கோலத்தைத் தரிசிக்க விரும்பி, திருக்காளத்தி மலையினின்று நீங்கி, உத்தரதிசையிலிருக்கின்ற திருப்பருப்பதத்தை அடைந்து வணங்கி, திருப்பதிகம் பாடிச்சென்று, காசியை வணங்கிக் கொண்டு, அதற்கு அப்பால இருக்கின்ற கற்சுரத்திலே சாகமூலபலங்கள் புசித்தலையும் ஒழிந்து, திருக்கைலாசதரிசனஞ் செய்யவேண்டுமென்னும் பேராசையால் இராப்பகல விடாது நடந்தார் அதனால் அவருடைய பாதங்கள் பரடுவரைக்குந் தேய்ந்தன. தேய்ந்தும், ஆசைமேலீட்டினால் தம்முடைய இரண்டு கைகளையும் ஆதரவாகக்கொண்டு தாவிச்சென்றார். அந்தக்கைகளும் மணிக்கட்டுஅசைந்து கரைந்து சிதைந்தன பின்னும் ஆசை சிறிதுங் குன்றுதலின்றி மேவிடுதலால், கொடிய நெருப்பையொத்த வெவ்விய பருக்கைக்கற்கள் பொருந்திய மார்க்கத்தில் மார்பினால நகர்ந்துபோயினார். மார்புந் தசை நைந்து சிந்த, எலும்புகளும் முறியலுற்றன பின் புரண்டு புரண்டு போயினார் அதனால் தேகமுழுதும் அரைய, நாயனார் திருக்கைலாசகிரியினிடத்தே பதிந்த அன்பின் உறுதியினால் மெல்ல நகருதற்கு முயன்றும், கூடாமையால் வழியிலே கிடந்தார். அப்பொழுது சிவபிரான், அப்பமூர்த்தியை மீளவும் தமிழ்நாட்டிற் செலுத்தி அந்நாட்டிலுள்ளோர் உய்யும்பொருட்டுத் தமிழ்வேதமாகிய தேவாரம் பாடுவித்தற்கும், அவ்வப்பமூர்த்தியுடைய கருத்தையும் மாறின்றி முடித்தற்கும், திருவுளங்கொண்டு, அவவிடத்தில ஒரு தடாகத்தை உண்டாக்கி, ஒருமுனிவர் வடிவங்கொண்டு, அந்நாயனாருக்கு முன் வந்து நின்று, "நீர் அங்கங்கள் எல்லாம் அழிந்துபோக வருத்தத்தோடும் இந்தக் கொடியகாட்டில் எதன்பொருட்டுவந்தீர்" என்று கேட்டார் அப்பமூர்த்தி மரவுரியாடையையும் யஞ்ஞோபவீதத்தையும் சடைமுடியையும் விபூதிருத்திராக்ஷ தாரணத்தையுமுடைய அந்தமுனிவரைக் கண்டபொழுதே பேசுதற்கு அற்பசத்தியுண்டாக, அவரை நோக்கி "முனிவரே, நமது கடவுளாகிய சிவபிரான் உத்தரகைலாசத்திலே உமாதேவிசமேதராய வீற்றிருக்கின்ற திருக்கோலத்தைத் தரிசித்து வணங்கும்பொருட்டு விரும்பி வந்தேன்" என்றார் அதற்கு முனிவர் "தேவர்களாலும் அடையப்படுதற்கு அரியதாகிய திருக்கைலாசகிரி மனிதர்களால் அடையப்படுதற்கு எளிதா! நீர் இந்தக் கொடுஞ்சுரத்திலேவந்து என்செய்தீர்! இனித் திரும்பி விடுதலே உத்தமம்" என்றார் உடனே அப்பமூர்த்தி "திருக்கைலாசகிரியில் இருக்கின்ற சிவபெருமானுடைய திருக்கோலத்தைத் தரிசித்தன்றி அநித்தியமாகிய இந்தத்தேகத்தைக்கொண்டு திரும்பேன்" என்று மறுத்தார் சுவாமி அவருடைய துணிவைக் கண்டு மறைந்தருளி ஆகாயத்தில் அசரீரியாகி நின்று, "நாவுக்கரசனே எழுந்திரு" என்றார் உடனே ஸ்ரீவாகீசமூர்த்தி அழிந்த உறுப்புக்களெல்லாம் முன்போல நிரம்பப்பெற்றுச் சிறந்த திருமேனியோடும் எழுந்து, "சுவாமீ, தேவரீர் திருக்கைலாசகிரியில எழுந்தருளியிருக்கின்ற திருக்கோலத்தை அடியேன் தரிசித்து வணங்கும்பொருட்டு அருள்செய்யும்" என்று பிரார்த்தித்து, நமஸ்காரம்பண்ணினார். அப்பொழுது சிவபிரான் "நீ இந்தத் தடாகத்திலே முழுகித் திருவையாற்றை அடைந்து, நம்மைக் கைலாசகிரியில வீற்றிருந்தபடி அந்தஸ்தலத்திலே தரிசித்து வணங்கு" என்று பணித்தருளினார்

ஸ்ரீவாகீசசுவாமிகள் அப்பணியைச் சிரமேற்கொண்டு, ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை ஓதி, தடாகத்திலே முழுகி, திருவையாற்றிலிருக்கின்ற ஓர் வாவியின் மேலே தோன்றிக் கரையிலேறி, வழியிலே அந்தத் திருப்பதியிலுள்ள சராசரங்கள் தங்கள் தங்கள் துணையோடும் பொலிதலைக் கண்டு, அவைகளைச் சிவமும் சத்தியுமாகப் பார்த்து வணங்கி "மாதர்ப்பிறைக்கண்ணியானை" என்னுந் திருப்பதிகம் பாடிக்கொண்டு, சிவாலயத்துக்கு முன்னே சென்றார் அவ்வாலயம் திருக்கைலாசகிரியாக, அதனிடத்தே, வேதங்களும் சிவாகமங்களும் இருபக்கத்திலும் வாழ்த்தவும், தும்புரு நாரதரென்னும் இருவரும் யாழ் வாசி

க்கவும், பிரம விஷ்ணுக்கள் இருவரும் வஸ்திரத்தை ஒதுக்கி வாயைக் கையினாலே பொத்திக்கொண்டு ஒதுங்கி நின்று தத்தங்குறைகளைச் சொல்லவும், பூதகணங்கள் கடைதோறும் காக்கவும், தேவர் சித்தர் அசுரர் சாரணர் காந்தருவர் கின்னரர் இயக்கர் விஞ்சையர் முதலாகிய கணத்தவர்கள் துதிக்கவும், திருநந்திதேவர் கையிலே பிரம்பைத் தரித்துக்கொண்டு பணிசெய்யவும், பெருங்கருணைத் தடங்கடலாகிய சிவபிரான் ஒரு திவ்வியாசனத்தின்மேலே அநந்தகோடி சூரியப்பிரகாசத்தோடும் பார்வதி சமேதராய் வீற்றிருந்தருளினார். அப்படி எழுந்தருளியிருத்தலை ஸ்ரீவாகீசமூர்த்தி தரிசித்தமாத்திரத்திலே விழுந்து நமஸ்கரித்து, உரை தடுமாற, உரோமஞ் சிலிர்ப்ப, ஆனந்த அருவி சொரிய, கரையிறந்த அருட்பெருங்கடலிலே அன்புநதி ஈர்த்துச்செல்ல, மிதந்துபோய், தெவிட்டுதலில்லாத அளவிறந்த சிவானந்தாமிர்தத்தைப்பருகி, சந்நிதானத்திலே ஆனந்தக்கூத்தாடித் திருத்தாண்டகங்கள் பாடினார். திருக்கைலாசபதியாகிய கடவுள் தம்முடையதிருக்கோலத்தை இப்படி அப்பமூர்த்திக்குத் தரிசிப்பித்து, பின் மறைந்தருள; அவ்வப்பமூர்த்தி மனம்வருந்தி, பின் ஒருவாறு தெளிந்து, திருப்பதிகங்கள் பாடிக்கொண்டு அந்தத்திருப்பதியில் இருந்தார்.

---

பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

விடகிலேனடிநாயேன்வேண்டியக்காலியாதொன்று
மிடகிலேனமணர்கள்தமறவுரைகேட்டலமந்தேன்
றொடகின்றேனுன்னுடையதூமலர்ச்சேவடிகாண்பா
னடைகின்றேனையாறர்க்காளாய்நானுய்ந்தேனே (க)

செம்பவளத்திருவுருவர்திகழ்சோதிக்குழைக்காதர்
கொம்பமருங்கொடிமருங்குற்கோலவளையாளொருபாகர்
வம்பவிழுமலர்க்கொன்றைவளர்சடைமேல்வைத்துகந்த
வம்பவளரையாறர்க்காளாய்நானுய்ந்தேனே. (உ)

நணியானேசேயானேநம்பானேசெம்பொன்னின
றுணியானேதோலானேசுண்ணவெண்ணீறணிந்தானே
மணியானேவானவர்க்குமருந்தாகிப்பிணிதீர்க்கு
மணியானையையாறர்க்காளாய்நானுய்ந்தேனே. (௩)

ஊழித்தீயாய்நின்றாயுள்குவாருள்ளத்தாய்
வாழித்தீயாய்நின்றாய்வாழ்த்துவார்வாயானே
பாழித்தீயாய்நின்றபடர்சடைமேற்பனிமதிய
மாழித்தீயையாறர்க்காளாய்நானுய்ந்தேனே. (௪)

சடையானேசடையிடையேதவழுந்தண்மதியானே
விடையானேவிடையேறிப்புரமெரித்தவித்தகனே
யுடையானேயுடைதலைகொண்டூரூண்பலிக்குழலு
மடையானையையாறர்க்காளாய்நானுய்ந்தேனே. (௫)

நீரானேதீயானேநெதியானேகதியானே
யூரானேயுலகானேயுடலானேயுயிரானே
பேரானேபிறைசூடிபிணிதீர்க்கும்பெருமானென்
றோராதவையாறர்க்காளாய்நானுய்ந்தேனே. (௬)

கண்ணானாய்மணியானாய்கருத்தானாயருத்தானா
யெண்ணானாயெழுத்தானாயெழுத்தினுக்கோரியல்பானாய்
விண்ணானாய்விண்ணிடையேபுரமெரித்தவேதியனே
யண்ணாவையாறாக்காளாய்நானுய்ந்தேனே. (௭)

மின்னானையுருமானையவேதத்தின்பொருளானை
பொன்னானைமணியானைப்பொருகடல்வாய்முத்தானை
நின்னானிருவர்க்குங்காணபரியநிமிர்சோதி
யன்னானையையாறாக்காளாய்நானுய்ந்தேனே. (௮)

முத்திசெயும்புனற்பொன்னிமொய்பவளங்கொழித்துந்தப
பத்தர்பலர்நீர்மூழ்கிப்பலகாலும்பணிந்தேத்த
வெத்திசையும்வானவர்களெம்பெருமானெனவிறைஞ்சு
மத்திசையாமையாறாக்காளாய்நானுய்ந்தேனே. (௯)

கருவரைசூழ்கடலிலங்கைக்கோமானைக்கருத்தழியத்
திருவிரலாலூதகரணஞ்செய்துகந்தசிவமூர்த்தி
பெருவரைசூழ்வையகத்தார்பேர்நந்தியென்றேத்து
மருவரைசூழையாறாக்காளாய்நானுய்ந்தேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

## திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

சிந்தைவாய்தலுளான்வந்துசீரியன்
பொந்துவார்புலால்வெண்டலைக்கையினன்
முந்திவாயதோர்மூவிலைவேல்பிடித்
தந்திவாயதோர்பாம்பரையாறரோ. (௧)

பாகமாலைமகிழ்ந்தனர்பான்மதி
போகவானையினீருரிபோர்த்தவர்
கோகமாலைகுலாயதோர்கொன்றையு
மாகவானெய்யஞ்சாடுமையாறரோ. (௨)

நெஞ்சமென்பதோர்நீள்கயந்தன்னுளே
வஞ்சமென்பதோர்வான்சுழிப்பட்டுநா
னுஞ்சும்போழ்துநின்னாமத்திருவெழுத்
தஞ்சுந்தோன்றவருளுமையாறரோ. *(௩)

நினைக்குநெஞ்சினுள்ளார்நெடுமாமதி
லனைத்துமொள்ளழல்வாயெரியூட்டினா
பனைக்கைவேழத்துரியுடல்போர்த்தவ
ரனைத்துவாய்தலுளாருமையாறரோ. (௪)

பரியதுன்னியபார்த்தற்கரியவ
ரரியபாடலராடலரன்றியுங்
கரியகண்டத்தர்காட்சிபிறர்க்கெலா
மரியர்தொண்டர்க்கெளியரையாறரோ. (௫)

புலருமபோதுமிலாபபட்டபொழ்சுடா
மலருமபோதுகளாற்பணியசசில
ரிலருமபோதுமிலாததுமன்றியு
மலருமபோதுமணியுமையாறரோ. (௬)

பஙகமாலைக்குழலியொாபாணிறக
கஙகைமாலையாகாதன்மைசெய்தவா
மங்கமாலைமதியமுஙகண்ணியு
மஙகமாலையுஞசூடுமையாறரே. (௭)

முனனையாறுமுயன்றெழுவீரொலாம்
பின்னையாறுபிரியெனும்பேதைகாண
மன்னையாறுமருவியமாதவன
றன்னையாறுதொழத்தவமாகுமே. (௮)

ஆனையாறெனவாடுகினறான்முடி
வானையாறுவளாயதுகாணமினே
நானையாறுபுககேறகவனினனருட்
டேனையாறுதிறநதாலேயொகருமே (௯)

அரக்கின்மேனியனாநதளிாமேனிய
வாக்கினசேவடியாளஞசவஞசலென்
றரக்கனீாைநதுவாயுமலறவே
யாககினானடியாலுமையாறனோ (௧௦)

திருச்சிற்றம்பலம

திருககுறுநதொகை

திருசசிற்றம்பலம்

சிநதைவணணததராய்ததிறமபாவனை
முநதிவணணத்தராய்முழுநிறணி
சநதிவண்ணததராயத்தழலபோலவதோ
ரநதிவண்ணமுமாவரையாறரோ. (௧)

மூலவணணததராய்முதலாகிய
கோலவணணத்தராகிகொழுஞசுடா
நீலவணணததராகிநெடுமபளிங
காலவணணததராவரையாறரோ. (௨)

சிநதைவண்ணமுநதியதோாவணணமு
மநதிப்போதழகாகியவணணமும
பநதிககாலனைபபாயநததோர்வண்ணமு
மநதிவணணமுமாவரையாறரே. (௩)

இருளினவண்ணமுமேழிசைவணணமுஞ
சுருளின்வணணமுஞசோதியின்வணணமு
மருளுநான்முகன்மாலொடுவண்ணமு
மருளுமவணணமுமாவரையாறரோ. (௪)

இழுக்கின்வண்ணங்களாகியவெவ்வழல்
குழைக்குவண்ணங்களாகியுங்கூடிய
மழைக்கண்மாமுகிலாகியவண்ணமு
மழைக்கும்வண்ணமுமாவளையாறரே. (ரு)

இன்டைவண்ணமுமேழிசைவண்ணமுந்
தொண்டாவண்ணமுஞ்சோதியின்வண்ணமுங்
கண்டவண்ணங்களாயக்கனமாமணி
யண்டவண்ணமுமாவளையாறரே. (சு)

விரும்பும்வண்ணமும்வேதத்தின்வண்ணமுங்
கரும்பினின்மொழிக்காரிகைவண்ணமும்
விரும்புவாரவினைதீர்த்திடும்வண்ணமு
மருமபினவண்ணமுமாவளையாறரே. (எ)

ஊழிவண்ணமுமொண்சுடாவண்ணமும்
வேழவீருரிபோர்த்தோவண்ணமும்
வாழித்தீயுருவாகியவண்ணமு
மாழிவண்ணமுமாவளையாறரே. (அ)

செய்தவன்றிருநீறணிவண்ணமு
மெய்தநோக்கரிதாகியவண்ணமுங்
கைதநாடசியரியதோர்வண்ணமு
மைதவண்ணமுமாவளையாறரே. (கூ)

எடுத்தவாளரக்கன்றிறலவண்ணமு
மிடர்களபோறபெரிதாகியவண்ணமுங்
கடுத்தகைநரம்பாலிசைவண்ணமு
மடுத்தவண்ணமுமாவளையாறரே. (கo)

திருச்சிற்றம்பலம்

## திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

கங்கையைச்சடையுள்வைத்தார்கதிர்பொறியரவும்வைத்தார்
திங்களைத்திகழவைத்தார்திசைதிசைதொழவும்வைத்தார்
மங்கையைப்பாகமவைத்தார்மான்மறிமழுவும்வைத்தா
ரங்கையுளனலும்வைத்தாரையனையாறனாரே. (க)

பொடிதனைப்பூசவைத்தார்பொங்குவெண்ணூலும்வைத்தார்
கடியதோர்நாகம்வைத்தார்காலனைக்காலவைத்தார்
வடிவுடைமங்கைதன்னைமார்பிலோர்பாகம்வைத்தா
ரடியிணைதொழவும்வைத்தாரையனையாறனாரே. (உ)

உடைதருகீளும்வைத்தாருலகங்களனைத்தும்வைத்தார்
படைதருமழுவும்வைத்தார்பாய்புலித்தோலும்வைத்தார்
விடைதருகொடியும்வைத்தார்வெண்புரிநூலும்வைத்தா
ரடைதரவருளும்வைத்தாரையனையாறனாரே. (ங)

தொண்டாகடொழவும்வைத்தார் தூமதிசடையிலவைத்தா
ரிண்டையைததிகழவைததாரெமக்கென்றுமினபமவைத்தார
வண்டுசேர்குழலினுளைமருவியோாபாகம்வைத்தா
ரண்டவானவாகளேத்துமையனையாறனுரே. (சு)

வானவாவணஙகவைத்தார் வல்வினைமாயவைத்தா
கானிடைநடமுமவைத்தார் காமனைக்கனலாவைததா
ரானிடையைநதுமவைததாராட்டுவார்ககருளுமவைததா
ரானையினுரிவைவைத்தாரையனையாறனுரே. (ரு)

சஙகணிகுழையுமவைத்தாாசாமயர்மெயபூசவைத்தா
வெஙகதிரொரியவைத்தாாவிரிபொழிலனைத்துமவைததா
கஙகுலுமபகலுமவைத்தாாகடுவினைகளையவைத்தா
ரஙகமதோதவைததாரையனையாறனுரே. (சு)

பததாகட்கருளுமவைததாாபாய்விடையேறவைத்தார்
சித்தரையொன்றவைத்தாசிவமதேநினையவைததா
முத்தியைமுற்றவைத்தார் முறைமுறைநெறிகள்வைத்தா
ரததியினுரிவைவைததாரையனையாறனுரே. (எ)

ஏறுகநதேறவைததாரிடைமருதிடமுமவைத்தா
நாறுபூஙகொன்றைவைத்தாாநாகமுமரையில்வைததா
கூறுமைபாகமவைத்தார் கோலபுலிததோலும்வைததா
ராறுமோாசடையிலவைத்தாரையனையாறனுரே. (அ)

பூதஙகள்பலவும்வைததாாபொஙகுவெண்ணீறுமவைததா
கீதஙகள்பாடவைத்தாாகின்னரநதன்னைவைத்தா
பாதஙகளபரவவைததாாபததாகள்பணியவைத்தா
ராதியுமநதமவைத்தாரையனையாறனுரே. (கூ)

இரப்பவர்க்கியவைததாாீபவாககருளுமவைததா
கரப்பவாதஙகட்கெலலாஙகடுநரகங்களவைத்தார்
பரபபுநீரககஙகைதன்னைப்படாசடைப்பாகமவைத்தா
ரரககனுக்கருளுமவைத்தாரையனையாறனுரே. (கo)

திருச்சிற்றம்பலம்

---

## திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

குண்டனாயசசமணரோடேகூடிநான்கொணடமாலைத்
துண்டனேசுடாகொள்சோதிதூநெறியாகிநின்ற
வண்டனேயமரரோறேதிருவையாறமாநததேனே
தொணடனேன்றெழுதுனபாதஞசொலலிநான்றிரிகின்றேனே. (க)

பீலிகையிடுக்கிநாளுமபெரியதோர் தவமென்றெண்ணி
வாலியதறிகள்போலமதியிலாாபடடதெனனே
வாலியாாவணஙகியேத்துநதிருவையாறமாந்ததேனே
டாலியாவெழுந்தநெஞசமழகிதாவெழுநதவாறே. (உ)

தட்டிடுசமணரோடேதருக்கிநான்றவமென்றெண்ணி
யொட்டிடுமனத்தினீரேயும்மையான்செய்வதென்னோ
மொட்டிடுகமலப்பொய்கைத்திருவையாறமர்ந்ததேனோ
டொட்டிடுமுள்ளத்தீரேயும்மைநானுகந்திட்டேனே. (௩)

பாசிப்பன்மாசுமெய்யர்பலமிலாச்சமணரோடு
நேசத்தாலிருந்தநெஞ்சைநீக்குமாறறியமாட்டேன்
தேசத்தார்பரவியேத்துந்திருவையாறமர்ந்ததேனை
வாசத்தால்வணங்கவல்லார்வல்வினைமாயுமன்றே. (௪)

கடுப்பொடியட்டிமெய்யிற்கருதியோர்தவமென்றெண்ணி
வடுக்களோடிசைந்தநெஞ்சேமதியிலிபட்டதென்னே
மடுக்களில்வாளைபாயுந்திருவையாறமர்ந்ததேனை
யடுத்துநின்றுன்னுநெஞ்சேயருந்தவஞ்செய்தவாறே. (௫)

துறவியென்றவமதோரேன்சொல்லியசொல்லவுசெய்து
வுறவினாலமணரோடுமுணர்விலேனுணர்வொன்றின்றி
நறவமார்பொழில்கள்சூழ்ந்ததிருவையாறமர்ந்ததேனை
மறவிலாநெஞ்சமேநன்மதியுனக்கடைந்தவாறே. (௬)

பல்லுரைச்சமணரோடேபலபலகாலமெல்லாஞ்
சொல்லியசொல்லவுசெய்தேன்சோர்வனினைந்தபோது
மல்லிகைமலருஞ்சோலைத்திருவையாறமர்ந்ததேனை
யெல்லியும்பகலுமெல்லாநினைந்தபோதினியவாறே. (௭)

மண்ணுளார்விண்ணுளாரும்வணங்குவார்பாவம்போக
வெண்ணிலாச்சமணரோடேயிசைந்தனையேழைநெஞ்சே
தெண்ணிலாவெறிக்குஞ்சென்னித்திருவையாறமர்ந்ததேனைக்
கண்ணினாற்காணப்பெற்றுக்கருதிற்றேமுடிந்தவாறே. (௮)

குருந்தமதொசித்தமாலுங்குலமலர்மேவினானுந்
திருந்துநற்றிருவடியுந்திருமுடிகாணமாட்டா
ரருந்தவமுனிவரேத்துந்திருவையாறமர்ந்ததேனைப்
பொருந்திநின்றுன்னுநெஞ்சேபொய்வினைமாயுமன்றே. (௯)

அறிவிலாவரக்கனோடியருவரையெடுக்கலுற்று
முறுகினான்முறுகக்கண்டுமூதறிவாளனோக்கி
நிறுவினான்சிறுவிரலானெரிந்துபோய்நிலத்தில்வீழ
வறிவினாலருள்கள்செய்தான்றிருவையாறமர்ந்ததேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

தானலாதுலகமில்லைச்சகமலாதடிமையில்லைக்
கானலாதாடலில்லைகருதுவார்தங்களுக்கு
வானலாதருளுமில்லைவார்குழன்மங்கையோடு
மானலாதூர்வதில்லையையனையாறனார்க்கே. (௧)

ஆலலாலிருக்கையில்லையருந்தவமுனிவர்க்கன்று
நூலலாநெறிவதில்லைநுண்பொருளாய்ந்துகொண்டு
மாலுநான்முகனுங்கூடிமலரடிவணங்கவேலை
யாலலாலமுதமில்லையையனையாறனார்க்கே. (௨)

நரிபுரிசுடலைதன்னினடமலானவிற்றலில்லைச
சுரிபுரிகுழலியோடுந்துணையலாலிருக்கையில்லைத்
தெரிபுரிசிந்தையார்க்குத்தெளிவலாலருளுமில்லை
யரிபுரிமலர்கொடேத்துமையனையாறனார்க்கே. (௩)

தொண்டலாற்றுணையுமில்லைத்தோலலாதுடையுமில்லைக்
கண்டலாதருளுமில்லைக்கலந்தபின்பிரிவதில்லைப்
பண்டைநான்மறைகள்காணாப்பரிசினனென்றெண்ணி
யண்டவானவர்களேத்துமையனையாறனார்க்கே. (௪)

எரியலாலுருவமில்லையேறலாலேறலில்லைக்
கரியலாற்போர்வையில்லைக்காண்டகுசோதியார்க்குப்
பிரிவிலாவமரர்கூடிப்பெருந்தகைப்பிரானென்றேத்து
மரியலாற்றேவியில்லையையனையாறனார்க்கே. (௫)

என்பலாற்கலனுமில்லையெருதலாலூர்வதில்லைப்
புன்புலாற்றுறுகாட்டிற்பொடியலாற்சாந்துமில்லைத்
துன்பிலாத்தொண்டர்கூடித்தொழுதழுதாடிப்பாடு
மன்பலாற்பொருளுமில்லையையனையாறனார்க்கே. (௬)

கீளலாலுடையுமில்லைக்கிளர்பொறியரவமபைம்பூண
டோளலாற்றுணையுமில்லைத்தொத்தலர்கின்றவேனில
வேளலாற்காயப்பட்டவீரருமில்லைமீளா
வாளலாற்கைம்மாறில்லையையனையாறனார்க்கே. (௭)

சகமலாதடிமையில்லைத்தானலாற்றுணையுமில்லை
நகமெலாந்தேயக்கையானாண்மலர்தொழுதுதூவி
முகமெலாங்கண்ணீர்மல்கமுன்பணிந்தேத்துந்தொண்ட
ரகமலாற்கோயிலில்லையையனையாறனார்க்கே. (௮)

உமையலாதுருவமில்லையுலகலாதுடையதில்லை
நமையெலாமுடையராவார்நன்மையேதீமையில்லைக்
கமையெலாமுடையராகிக்கழலடிபரவுந்தொண்டர்க்
கமைவிலாவருள்கொடுப்பாரையனையாறனார்க்கே. (௯)

மலையலாலிருக்கையில்லைமதித்திடாவரக்கன்றன்னைத்
தலையலாநெரித்ததில்லைத்தடவரைக்கீழடர்த்து
நிலையிலார்புரங்கள்வேவநெருப்பலாலவிர்ந்ததில்லை
யலையினார்பொன்னிமன்னுமையனையாறனார்க்கே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

## திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

குறுவித்தவாகுற்றநோய்வினைகாட்டிக்குறுவித்தநோ
யுறுவித்தவாவுற்றநோய்வினைதீர்ப்பானுகந்தருளி
யறிவித்தவாறடியேனையையாறனடிமைக்களே
செறிவித்தவாதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (க)

கூரவித்தவாகுற்றநோய்வினைகாட்டியுங்கூரவித்தநோ
யூரவித்தவாவுற்றநோய்வினைதீர்ப்பானுகந்தருளி
யோரவித்தவாறடியேனையையாறனடிமைக்களே
சேரவித்தவாதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (உ)

தாக்கினவாசலமேவினைகாட்டியுந்தண்டித்தநோய்
நீக்கினவாநெடுநீரினின்றேறநினைந்தருளி
யாக்கினவாறடியேனையையாறனடிமைக்களே
நோக்கினவாதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (௩)

தருக்கினநானறகவின்றியுமோட்டச்சலமதனு
ணெருக்கினவாநெடுநீரினின்றேறநினைந்தருளி
யுருக்கினவாறடியேனையையாறனடிமைக்களே
பெருக்கினவாதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (௪)

இழிவித்தவாறிட்டநோய்வினைகாட்டியிடப்படுத்துக்
கழிவித்தவாகட்டநோய்வினைதீர்ப்பான்கலந்தருளி
யழிவித்தவாறடியேனையையாறனடிமைக்களே
தொழுவித்தவாதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (ரு)

இடைவித்தவாறிட்டநோய்வினைகாட்டியிடப்படுத்து
வுடைவித்தவாவுற்றநோய்வினைதீர்ப்பானுகந்தருளி
யடைவித்தவாறடியேனையையாறனடிமைக்களே
தொடர்வித்தவாதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (௬)

படக்கினவாபடநின்றுபன்னாளும்படக்கினநோ
யடக்கினவாறதுவன்றியுந்தீவினைபாவமெல்லா
மடக்கினவாறடியேனையையாறனடிமைக்களே
தொடக்கினவாதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (எ)

மறப்பித்தவாவல்லநோய்வினைகாட்டிமறப்பித்தநோய்
துறப்பித்தவாதுக்கநோய்வினைதீர்ப்பானுகந்தருளி
யிறப்பித்தவாறடியேனையையாறனடிமைக்களே
சிறப்பித்தவாதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (அ)

துயக்கினவாதுக்கநோய்வினைகாட்டித்துயக்கினநோ
யியக்கினவாறிட்டநோய்வினைதீர்ப்பானிசைந்தருளி
யயக்கினவாறடியேனையையாறனடிமைக்களே
மயக்கினவாதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (௯)

கறுத்துமிட்டார்கண்டங்கங்கைசடைமேற்கரந்தருளி
யிறுத்துமிட்டாரிலங்கைக்கிறைதன்னையிருபதுதோ
ளறுத்துமிட்டாரடியேனையயாறனடிமைக்கண்
பொறுத்துமிட்டார்தொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

## திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சிந்திப்பரியனசிந்திப்பவர்க்குச்சிறந்துசெந்தேன்
முந்திப்பொழிவனமுத்திகொடுப்பனமொய்த்திருண்டு
பந்தித்துநின்றபழவினைதீர்ப்பனபாம்புசுற்றி
யந்திப்பிறையணிந்தாடுமையாறனடித்தலமே. (௧)

இழித்தனவேழேழ்பிறப்புமறுத்தனவென்மனத்தே
பொழித்தனபேரொழிலகூற்றையுதைத்தனபோற்றவார்க்காய்க்
கிழித்தனதக்கன்கிளரொளிவேள்வியைக்கீழ்முன்சென்று
வழித்தனவாறங்கமானவையாறனடித்தலமே. (௨)

மணிநிறமொப்பனபொன்னிறமன்னினமின்னியல்வாய்
கணிநிறமன்னகைலைப்பொருப்பனகாதல்செய்யத்
துணிவனசீலத்தராகித்தொடாந்துவிடாததொண்டாக
கணியனசேயனதேவர்க்கையாறனடித்தலமே (௩)

இருடருதுன்பப்படலமறைப்பமெய்ஞ்ஞானமென்னும்
பொருடருகண்ணிழந்துண்பொருணாடிப்புகலிழந்த
குருடருந்தம்மைப்பரவக்கொடுநரகக்குழிநின்
றருடருகைகொடுத்தேற்றுமையாறனடித்தலமே (௪)

எழுவாயிறுவாயிலாதனவெங்கட்பிணிதவிர்த்து
வழுவாமருத்துவமாவனமாநரகக்குழிவாய்
விழுவாரவாதம்மைவீழ்ப்பனமீட்பனமிக்கவன்போ
டழுவார்க்கமுதங்களகாண்கவையாறனடித்தலமே. (௫)

துன்பக்கடலிடைத்தோணித்தொழில்பூண்டதொண்டாதம்மை
யின்பக்கரைமுகந்தேற்றுந்திறத்தனமாற்றயலே
பொன்பட்டொழுகப்பொருந்தொளிசெய்யும்பொய்பொருந்தா
வன்பர்க்கணியனகாண்கவையாறனடித்தலமே. (௬)

களித்துக்கலந்ததொர்காதற்கசிவொடுகாவிரிவாய்க்
குளித்துத்தொழுதுமுன்னின்றவிப்பத்தரைக்கோதில்செந்தேன்
றெளித்துச்சுவையமுதூட்டியமரர்களசூழிருப்ப
வளித்துப்பெருஞ்செல்வமாக்குமையாறனடித்தலமே. (௭)

திருத்திக்கருத்தினைச்செவ்வேநிறுத்திச்செறுத்துடலை
வருத்திக்கடிமலர்வாளெடுத்தோச்சிமருங்குசென்று
விருத்திக்குழக்கவல்லோர்கட்குவிண்பட்டிகையிடுமா
லருத்தித்தருந்தவர்ோத்துமையாறனடித்தலமே. (௮)

பாடும்பறண்டையுமொந்தையுமார்ப்பரந்துபல்பேய்
கூடிமுழவக்குவிகவிழ்கொட்டக்குறுநரிக
ணீடுங்குழல்செய்யவையநெளியநிணப்பிணக்காட்
டாடுந்திருவடிகாணகவையாறனடித்தலமே. (௯)

நின்போலமரர்கணீண்முடிசாய்த்துநிமிர்ந்துகுந்த
பைம்போதுழக்கிப்பவளந்தழைப்பனபாங்கறியா
வென்போலிகள்பறித்திட்டவிலையுமுகையுமெல்லா
மம்போதெனக்கொளுமையையாறனடித்தலமே. (௧௦)

மலையார்மடந்தைமனத்தனவானோர்மகுடமன்னி
நிலையாயிருப்பனநின்றோர்மதிப்பனநீணிலத்துப்
புலையாடுபுன்மைதவிர்ப்பனபொன்னுலகம்மளிக்கு
மலையார்புனற்பொன்னிசூழ்ந்தவையாறனடித்தலமே (௧௧)

பொலம்புண்டரீகப்புதுமலர்போல்வனபோற்றியென்பார்
புலம்பும்பொழுதும்புணர்துணையாவனபொன்னனையாள்
சிலம்புஞ்செறிபாடகமுஞ்செழுங்கிண்கிணித்திரளு
மலம்புந்திருவடிகாணகவையாறனடித்தலமே. (௧௨)

உற்றாரிலாதார்க்குறுதுணையாவனவோதிநன்னூல்
கற்றார்பரவப்பெருமையுடையனகாதல்செய்ய
இறபார்தமக்குக்கிளரொளிவானகந்தான்கொடுக்கு
மற்றாக்கரும்பொருள்காண்கவையாறனடித்தலமே (௧௩)

வானைக்கடந்தண்டத்தப்பான்மதிப்பனமந்திரிப்பா
ருனைக்கழித்துய்யக்கொண்டருள்செய்வனவுத்தமர்க்கு
ஞானச்சுடராய்நடுவேயுதிப்பனநங்கையஞ்ச
வானையுரித்தனகாண்கவையாறனடித்தலமே. (௧௪)

மாதிரமாநிலமாவனவானவர்மாமுகட்டின
மீதனமென்கழல்வெங்கச்சுவீக்கினவெந்நமனார்
தூதரையோடத்துரப்பனதுன்பறத்தொண்டுபட்டார்க்
காதரமாவனகாணகவையாறனடித்தலமே. (௧௫)

பேணித்தொழுமவர்பொன்னுலகாளப்பிறங்கருளா
லேணிப்படிநெறியிட்டுக்கொடுத்திமையோர்முடிமேன்
மாணிக்கமொத்துமரகதம்போன்றுவைரமன்னி
யாணிக்கனகமுமொக்குமையாறனடித்தலமே. (௧௬)

ஓதியஞானமுஞானப்பொருளுமொலிசிறந்த
வேதியர்வேதமும்வேள்வியுமாவனவிண்ணுமண்ணுஞ்
சோதியஞ்செஞ்சுடர்ஞாயிறுமொப்பனதூமதியோ
டாதியுமந்தமுமானவையாறனடித்தலமே. (௧௭)

சுணங்குமுகத்துத்துணைமுலைப்பாவைசுரும்பொடுவண்
டணங்குங்குழலியணியார்வளைக்கரங்கூப்பிநின்று
வணங்கும்பொழுதும்வருடும்பொழுதும்வளர்காந்தள்போ
துணங்குமரவிந்தமொக்குமையாறனடித்தலமே. (௧௮)

சுழலாதுயாவெயிறசுட்டிடுமேபோதடித்தொண்டாதுன்னு
நிழலாவனவென்றுநீங்காப்பிறவிநிலைகெடுத்துக்
கழலாவினைகளகழற்றுவகாலவனங்கடந்த
வழலாரொளியனகாண்கவையாறனடித்தலமே. (௧௯)

வலியானதலைபத்துமவாய்விட்டலறவரையடர்த்து
மெலியாவலியுடைக்கூற்றையுதைத்துவிண்ணோர்கண்முன்னே
பலிசோபடுகடைபார்த்துப்பன்னாளும்பலரிகழ
வலியாநிலைபிறக்குமையனையாறனடித்தலமே (௨௦)

திருச்சிற்றம்பலம்.

## திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அந்திவட்டத்திங்கட்கண்ணியனையாறமர்ந்துவந்தென்
புந்திவட்டத்திடைபுக்குநின்றானையும்பொய்யென்பனே
சிந்திவட்டச்சடைக்கற்றையலம்பச்சிறிதலர்ந்த
நந்திவட்டத்தொடுகொன்றைவளாவியநம்பனையே. (௧)

பாடகக்கால்கழற்கால்பரிதிக்கதிருக்கவந்தி
நாடகக்கானங்கைமுன்செங்கணேனத்தின்பின்னடந்த
காடகக்காலகணங்கைத்தொழுங்காலெங்கணுய்கின்றகா
லாடகக்காலரிமாதேரவல்லனையாறனவே. (௨)

திருச்சிற்றம்பலம்.

## திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

ஆராத்திரிபுரங்கணீறுநோக்கு
மனலாடியாரமுதேயென்றேனானே
கூராமழுவாட்படையொன்றேந்திக
குறட்பூதப்பல்படையாயென்றேனானே
பேராயிரமுடையாயென்றேனானே
பிறைசூடுமபிஞ்ஞகனேயென்றேனானே
யாராவமுதேயென்னையாறனே
யென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (௧)

தீவாயின்முப்புரங்கணீறுநோக்குந
தீர்த்தாபுராணனேயென்றேனானே
மூவாமதிசூடியென்றேனானே
முதல்வாமுக்கண்ணனேயென்றேனானே
யேவார்சிலையானேயென்றேனானே
யிடுமைபைக்கடனின்றுமேறவாங்கி
யாவாவெனவருள்புரியுமையாறனே
யென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (௨)

அஞ்சண்ணவண்ணனேயென்றேனே
யடியார்கடகாரமுதேயென்றேனே
நஞ்சணிகண்டனேயென்றேனே
நாவலாகணன்மறையேயென்றேனே
நெஞ்சுணரவுளபுக்கிருந்தபோது
நிறையுமமுதமேயென்றேனே
யஞ்சாதேயாளவானேயையாறனே
யென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (ங)

தொலலைத்தொடுகடலேயென்றேனே
துலஙகுமிளமபிறையாயெனறேனே
யெலலைநிறைநதானேயெனறேனே
யேழுநரமபினின்னிசையாயென்றேனே
யலலற்கடலபுக்கழுநதுவேனை
வாஙகியருள்செய்தாயெனறேனே
யெல்லையாமையாறுவென்றேனே
யென்றெனறேநானரறறிநைகினறேனே. (ச)

இணடைச்சடைமுடியாயெனறேனே
யிருசுடாவானத்தாயெனறேனே
தொண்டர்தொழுப்படுவாயெனறேனே
துருததிநெய்த்தானத்தாயெனறேனே
கண்டஙகறுததானேயெனறேனே
கனலாகுங்கணணேயென்றேனே
யண்டத்துக்கபபாலாமையாறனே
யெனறென்றேநானரற்றிநைகின்றேனே. (ரு)

பற்றார்புரமெரிததாயென்றேனே
பசுபதீபண்டரஙகாவென்றேனே
கற்றாகணவிஞயெனறேனே
கடுவிடையொனறூாதியாயெனறேனே
பறறுநாநெஞ்சுளாயெனறேனே
பாாததறகருள்செயதாயென்றேனே
யற்றாககருளசெய்யுமையாறனே
யென்றெனறேநானரறறிநைகின்றேனே. (சு)

விணணோாதலைவனேயென்றேனே
விளஙகுமிளமபிறையாயென்றேனே
யெண்ணொயிலெரித்தாயென்றேனே
யேகம்பமேயானேயென்றேனே
பண்ணாமறைபாடியெனறேனே
பசுபதீபானீற்றுயென்றேனே
யணணவையாறனேயெனறேனே
யென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (எ)

அவனெனறுநானுனையஞ்சாதேனை
யலலலறுப்பானேயென்றேனே

சிவனெனநானுன்னையெல்லாஞ்சொல்லச
செல்வந்தருவானேயென்றேனானே
பவனாகியென்னுள்ளத்துள்ளேநின்று
பண்டைவினையறுப்பாயென்றேனானே
யவனெனறேயாதியேயையாறனே
யென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (அ)

கச்சியேகம்பனேயென்றேனானே
கயிலாயாகாரோணாவென்றேனானே
நிச்சன்மணாளனேயென்றேனானே
நினைப்பார்மனத்துளாயென்றேனானே
யச்சமபோதேறீயென்றேனானே
யுள்குவாருள்ளந்தாயென்றேனானே
யச்சமபிணிதீர்க்குமையாறனே
யென்றென்றேநானரற்றிநைகின்றேனே (௯)

வில்லாடிவேடனேயென்றேனானே
வெண்ணீறுமெய்க்கணிந்தாயென்றேனானே
சொல்லாயசூழலாயென்றேனானே
சுலாவாயதொல்னெறியேயென்றேனானே
யெல்லாமாயென்னுயிரேயென்றேனானே
யிலங்கையர்கோன்றோளிறுத்தாயென்றேனானே
யல்லாவினைதீர்க்குமையாறனே
யென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

## திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்.

ஓசையொலியெலாமானாய்நீயே
யுலகுக்கொருவனாய்நின்றாய்நீயே
வாசமலரெலாமானாய்நீயே
மலையான்மருகனாய்நின்றாய்நீயே
பேசப்பெரிதுமினியாய்நீயே
பிரானாயடியென்மேல்வைத்தாய்நீயே
தேசவிளக்கெலாமானாய்நீயே
திருவையாறகலாதசெம்பொற்சோதீ. (௧)

நோக்கரியதிருமேனியுடையாய்நீயே
நோவாமேநோக்கருளவல்லாய்நீயே
காப்பரியவைம்புலனுங்காத்தாய்நீயே
காமனையுங்கண்ணழலாற்காய்ந்தாய்நீயே
யாப்பரியமாநாகமார்த்தாய்நீயே
யடியானென்றடியென்மேல்வைத்தாய்நீயே
தீர்ப்பரியவல்வினைநோய்தீர்ப்பாய்நீயே
திருவையாறகலாதசெம்பொற்சோதீ. (௨)

கனத்தகத்துக்கடுஞ்சுடராய்நின்றாய்நீயே
கடலவரைவானுகாயமானாய்நீயே
தனத்தகத்துத்தலைகலனுக்கொண்டாய்நீயே
சாரந்தாரைத்தகைந்தாளவல்லாயநீயே
மனத்திருந்தகருத்தறிந்துமுடிப்பாயநீயே
மலாசசேவடியென்மேலவைத்தாய்நீயே
சினத்திருந்ததிருநீலகண்டனீயே
திருவையாறகலாதசெமபொறசோதீ. (௩)

வானுற்றமாமலைகளானாய்நீயே
வடகயிலைமனனியிருந்தாய்நீயே
யூனுற்றவொளிமழுவாட்படையாய்நீயே
யொளிமதியோடரவுபுனல்வைத்தாய்நீயே
யானுற்றவைந்துமமாந்தாய்நீயே
யடியாரென்றடியெனமேல்வைத்தாய்நீயே
தேனுற்றசொன்மடவாளபஙகனீயே
திருவையாறகலாதசெமபொற்சோதீ. (௪)

பெண்ணாண்பிறப்பிலியாயநின்றாயநீயே
பெரியாாகடகெல்லாமபெரியாய்நீயே
யுண்ணாவருநஞ்சமுண்டாய்நீயே
யூழிமுதலவனாயநின்றாய்நீயே
கணணாயுலகெலாஙகாத்தாயநீயே
கழற்சேவடியென்மேலவைததாய்நீயே
திண்ணாமழுவாடபடையாய்நீயே
திருவையாறகலாதசெமபொற்சோதீ. (௫)

உற்றிருந்தவுணர்வெலாமானாய்நீயே
யுறறவாக்கோர்சுற்றமாயநின்றாய்நீயே
கற்றிருந்தகலைஞானமானாயநீயே
கற்றவாக்கோாகற்பகமாய்நினறாயநீயே
பெறறிருந்ததாயவளினல்லாய்நீயே
பிரானாயடியென்மேல்வைத்தாயநீயே
செறறிருந்ததிருநீலகணடனீயே
திருவையாறகலாதசெமபொற்சோதீ. (௬)

எல்லாவுலகமுமானாய்நீயே
யேகமபமேவியிருந்தாய்நீயே
நலலாரைநனமையறிவாய்நீயே
ஞானசசுடாவிளக்காய்நினறாய்நீயே
பொல்லாவினைகளறுப்பாயநீயே
புகழசசேவடியென்மேல்வைததாயநீயே
செலவாயசெல்வந்தருவாய்நீயே
திருவையாறகலாதசெம்பொற்சோதீ. (௭)

ஆவினிலைந்துமமாந்தாயநீயே
யளவில்பெருமையுடையாய்நீயே

பூவினினுற்றமாய்நினருயநீயே
போாக்கோலங்கொண்டெயிலெய்தாய்நீயே
நாவினடுவுரையாயநின்ருயநீயே
நணணியடியென்மேல்வைத்தாயநீயே
தேவரறியாததேவனீயே
திருவையாறகலாதசெமபொற்சோதீ. (அ)

எண்டிசைககுமொணசுடராய்நின்ருய்நீயே
யேகமபமேயவிறைவனீயே
வணடிசைககுநறுநன்றைததாராயநீயே
வாராவுலகருளவலலாயநீயே
தொணடிசைததுன்னடிபரவநின்ருயநீயே
தாமலாசசேவடியென்மேலவைததாயநீயே
திணசிலைக்கோாசரஙகூடடவலலாயநீயே
திருவையாறகலாதசெம்பொற்சோதீ. (கூ)

விணடாாபுரமூன்றுமெய்தாய்நீயே
விண்ணவாககுமேலாகிநின்ருயநீயே
கணடாாைகமொலலுநஞ்சுண்டாய்நீயே
காலஙகளூழியாயநின்ருய்நீயே
தொணடாவடியேனையாணடாயநீயே
தாமலாசசேவடியெனமேலவைததாய்நீயே
திண்டோளவிடடெரியாடலுகநதாய்நீயே
திருவையாறகலாதசெமபொற்சோதீ. (க0)

ஆருமறியாவிடத்தாய்நீயே
யாகாயந்தேரூரவலலாயநீயே
பேருமபெரியவிலஙகைவேநதன்
பெரியமுடிபததிறுத்தாயநீயே
யூருமபுரமூன்றுமடடாய்நீயே
யொண்டாமரையானுமாலுஙகூடித்
தேருமடியெனமேல்வைததாய்நீயே
திருவையாறகலாதசெமபொற்சோதீ. (கக)

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்திநாயனர்.

பண - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

பரவும்பரிசொன்றறியேனுன்பண்டேயும்மைபபயிலாதே
னிரவுமபகலுநினைநதாலுமெயததநினையமாட்டேனை
கரவிலருவிகமுகுண்ணத்தெஙகஙகுலைக்கீழக்கருப்பாலை
யரவநதிரைக்காவிரிக்கோடடத்தையாறுடையவடிகளோ. (க)

எங்கேபோவேனாயிடினுமங்கேவந்தென்மனத்திராய்ச
சங்கையொன்றுமின்றியேதலைநாள்கடைநாளாககவே!
கங்கைசடைமேற்கரந்தானேகலைமான்மறியுங்கனன்மழுவுந
தங்குந்திரைக்காவிரிக்கோட்டததையாறுடையவடிகளோ. (௨)

மருவிபபிரியமாட்டேனுன்வழிநின்றொழிந்தேனொழிகிலேன
பருவிவிசசிமலைசசாரறபட்டைகொண்டுபகடாடிக
குருவியோப்பிக்கிளிகடிவார்குழன்மேனமாலைகொண்டோட்டந
தரவந்திரைகாவிரிக்கோட்டத்தையாறுடையவடிகளோ. (௩)

பழகநின்றுபணிசெயவார்பெற்றபயனென்றறிகிலே
னிகழாதுமககாட்டபட்டோர்கருவேகபட்டொன்றறைசசாதறி
குழகவாழைக்குலைத்தெங்குகொணாந்துகரைமேலெறியவே
யழகாதிரைக்காவிரிககோட்டத்தையாறுடையவடிகளோ. (௪)

பிழைத்தபிழையொன்றறியேனனபிழையைததீரபபணியாயே
மழைக்கணல்லாகுடைந்தாட்மலையுநிலனுங்கொள்ளாமைக
கழைக்கொளபிரசங்கலந்தெங்குங்கழனிமணடிகையேறி
யழைக்குந்திரைககாவிரிககோட்டததையாறுடையவடிகளோ. (௫)

காரகொள்கொன்றைசசடைமேலொனறுடையாயவிடையாயகையினன்
மூக்கர்புரமூன்றெரிசெய்தாயமுன்னீபினனீமுதலவனீ
வாரக்கொளருவிபலவாரிமணியுமுததுமபொன்னுங்கொண்
டாரக்குந்திரைககாவிரிக்கோட்டததையாறுடையவடிகளோ. (௬)

மூலைக்கணமடவாளொருபாலாய்ப்பறறியுலகமபலிதேர்வாய்
சிலைக்கொள்கணையாலெயிலெயதாய்செங்கணவிடையாயதீரத்தனீ
மலைக்கொளருவிபலவாரிமணியுமுததுமபொன்னுங்கொண்
டலைக்குந்திரைக்காவிரிக்கோட்டத்தையாறுடையவடிகளோ. (௭)

போழுமதியமபுனக்கொன்றைபுனல்சேர்சென்னிபபுணணியா
சூழுமரவசசுடாசசோதீயுனைத்தொழுவாாதுயாபோக
வாழுமவாகளங்கங்கேவைததசிந்தையுயததாட்ட
வாழுந்திரைககாவிரிக்கோட்டததையாறுடையவடிகளோ. (௮)

கதிரக்கொள்பசியேயொத்தேநான்கணடேனுமமைக்காணதே
னெதிாததுநீந்தமாட்டேனெமமானறமமானறமமானே
விதிாத்துமேகமழைபொழியவெள்ளமபரந்துநுரைசிதறி
யதிாககுந்திரைக்காவிரிக்கோட்டத்தையாறுடையவடிகளோ. (௯)

கூசியடியாரிருந்தாலுங்குணமொனறில்லீர்குறிப்பிலீா
தேசவேந்தன்றிருமாலுமலாமேலயனுங்காண்கிலாத்
தேசமெங்குந்தெளித்தாடததெண்ணீரருவிகொணாந்தெங்கும்
வாசந்திரைக்காவிரிக்கோட்டத்தையாறுடையவடிகளோ. (௧0)

கூடியவடியாரிருந்தாலுங்குணமொன்றில்லீர்குடிப்பிலீ
ரூடியிருந்துமுணாகிலேனும்மைத்தொண்டனூரனேன்
றேடியெங்குங்காண்கிலேன்றிருவாரூரேசிந்திப்ப
ரோடுந்திரைக்காவிரிக்கோட்டத்தையாறுடையவடிகளோ. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவையாற்றுத் திருப்பதிகம் - கஅ.

---

சுவாமிதிருநாமம் - செம்பொற்சோதி.
தேவி திருநாமம் - அறம்வளர்த்தாள.

---

ஆ திருப்பதிகம் - உ0௫.

---

திருவாரூரில் வசிக்குங்காலத்திலே, பலநாட்சென்றபின், சேரமான்பெருமாணுயனூர் சுந்தரமூர்த்திநாயனாரை வணங்கி, தம்முடைய ஊருக்கு எழுந்தருளிவரும்படி பிரார்த்திக்க; சுந்தரமூர்த்திநாயனார் அதற்கு இசைந்து, சேரமான்பெருமாணுயனாரோடும் எழுந்துபோய், வன்மீகநாதனை வணங்கிக்கொண்டு, திருவாரூரை நீங்கி, மேற்றிசையைநோக்கிக் காவேரிநதியின் தென்கரைவழியே சென்று, திருக்கண்டியூரை அடைந்து சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு புறப்பட்டார். அப்பொழுது வடகரையிலிருக்கின்ற திருவையாறு எதிரேதோன்ற; சேரமான்பெருமாணுயனார்கண்டு வணங்கி, சுந்தரமூர்த்திநாயனாரைப் பார்த்து, "சுவாமீ, அடியேன்மனம் திருவையாற்றை வணங்க விரும்புகின்றது. நாங்கள் இந்நதியைக் கடந்துபோய் வணங்குவோம்" என்றார். அதைக்கேட்ட சுந்தரமூர்த்திநாயனார், அக்காவேரிநதி இருகரையையும் அழிந்து ஓடங்கள் செல்லாதபடி பெருகுதலைக்கண்டு, "பரவும் பரிசொன் றறியேன்" என்றுதிருப்பதிகந் தொடங்கி, திருப்பாட்டின் இறுதிதோறும் "ஐயாறுடைய வடிகளோ" என்றுசொல்லி அழைத்துப் பாடினார். அப்பொழுது கடவுள், கன்று அழைத்தலைக் கேட்டுக் கதறிக் கனைக்கின்ற பசுப்போல, சராசரங்களெல்லாம் கேட்கும்படி "ஓலம்" என்று சொல்லியருளினார். உடனே காவேரிநதி பிரிந்து வழிகாட்டியது. மேற்றிசையினீர் பளிங்குமலைபோல நிற்க, கிழ்த்திசையினீர் வடிந்த நடுவழி மணற்பரப்பாய் இருந்தது. அதனைக் கண்ட அடியார்களெல்லாரும், உரோமாஞ்சங்கொள்ள, ஆனந்தபாஷ்பஞ்சொரிய, அஞ்சலிசெய்தார்கள். சேரமான்பெருமாணுயனார் சுந்தரமூர்த்திநாயனாருடைய திருவடிகளை நமஸ்கரிக்க, சுந்தரமூர்த்திநாயனாரும் அவரை வணங்கி, "கடவுள் உமக்கருளியதன்றோ" என்று சொல்லிக் கடவுளைத் துதித்துக்கொண்டு, அவரோடும் பரிசனங்களோடும் நதியின் மத்தியிலிருக்கின்ற மணல்வழியேபோய், திருவையாற்றை அடைந்து, சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு, திரும்பிக் காவேரிநதியின் முன் சென்றபடியே நடுவழியேவந்து தென்கரையிலேறினார். உடனே பிரிந்து மலைபோல நின்றநீர் தொடர்ந்துபாய்ந்தது. அதைக்கண்டு சுந்தரமூர்த்திநாயனாரும் சேரமான்பெருமாணுயனாரும் அதிசயித்து, திருவருளைத் துதித்துக்கொண்டு, மேற்றிசையைநோக்கி வழிக்கொண்டார்கள்.

# ௫௨. திருநெய்த்தானம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்

மையாடியகண்டனமலைமகள்பாகமதுடையான்
கையாடியகேடில்கரியுரிமூடியவொருவன்
செயயாடியகுவளைமமலாநயனத்தவளோடு
நெயயாடியபெருமானிடநெய்த்தானமெனீரே. (௧)

பறையுமபழிபாவமபடுதுயரமபலதீரும்
பிறையுமபுனலரவுமபடுசடையெமபெருமானூ
ரறையுமபுனலவருகாவிரியலைசேரவடகரைமே
னிறையுமபுனைமடவாரபயினெய்த்தானமெனீரே. (௨)

பேயாயினபாடப்பெருநடமாடியபெருமான்
வேயாயினதோளிக்கொருபாகம்மிகவுடையான்
றாயாகியவுலகஙகளைநிலைபேறுசெயதலைவ
னேயாடியபெருமானிடநெய்த்தானமெனீரே. (௩)

சுடுநீறணியண்ணல்சுடாசூலமமனலேநதி
நடுநளளிருணடமாடியநமபனுறைவிடமாங
கடுவாளிளவரவாடுமிழ்கடனஞ்சமதுண்டா
னெடுவாளைகளகுதிகொள்ளுயாநெய்த்தானமெனீரே. (௪)

நுகராரமொடேலமமணிசெமபொன்னுரையுநதிப்
பகராவருபுனல்காவிரிபரவிப்பணிநதேத்து
நிகரானமணலிடுதணகரைநிகழவாயநெய்த்தான
நகரானடியேத்தநமைநடலையடையாவே. (௫)

விடையாகொடியுடையவவணலவீநதாவெளையெலும்பு
முடையாநறுமாலைசடையுடையாரவாமேய
புடையேபுனலபாயுமவயலபொழிலசூழநதநெய்த்தான
மடையாதவரென்றுமமருலகமடையாரே. (௬)

நிழலார்வயலகமழ்சோலைகணிறைகின்றநெயத்தானத்
தழலானவனனலஙகையிலேநதியழகாய
கழலானடிநாளுங்கழலாதேவிடலின்றித்
தொழலாரவாநாளுநதுயரின்றித்தொழுவாரே. (௭)

அறையாகடலிலஙகைக்கிறையணிசோகயிலாய
மிறையாரமுனெடுத்தானிருபதுதோளிறவூன்றி
நிறையாபுனனெய்ததானனனிகழசேவடிபரவக்
கறையாகதிாவாளீநதவாகழலேத்துதல்கதியே. (௮)

கோலம்முடிநெடுமாலொடுகொய்தாமரையானுஞ்
சீலம்மறிவரிதாயொளிதிகழ்வாயநெய்த்தானங்
காலம்பெறமலர்நீரவைதூவித்தொழுதேத்து
ஞாலம்புகழடியாருடலுறுநோயகலியாவே. (கூ)

மத்தம்மலிசித்தத்திறைமதியில்லவர்சமணர்
புத்தரவர்சொன்னம்மொழிபொருளாநினையேன்மி
னித்தம்பயினிமலன்னுறைநெய்த்தானமதேத்துஞ்
சித்தம்முடையடியாருடல்செறுநோயடையாவே. (கo)

தலமல்கியபுனற்காழியுட்டமிழ்ஞானசம்பந்த
னிலமல்கியபுகழான்மிகுநெய்த்தானனைநிகரில்
பலமல்கியபாடல்லிவைபத்தும்மிகவல்லார்
சிலமல்கியசெல்வன்னடிசேர்வர்சிவகதியே. (கக)

திருச்சிற்றம்பலம்

---

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

கொல்லியான்குளிர்தூங்குங்குற்றாலத்தான்
புல்லியார்புரமூன்றெரிசெய்தவ
னெல்லியானிலையானநெய்த்தானனைச்
சொல்லிமெய்தொழுவார்சுடர்வாணரே. (க)

இரவனையிடுவெண்டலையேந்தியைப்
பரவனைப்படையார்மதின்மூன்றையு
மிரவனைநிலையானநெய்த்தானனைக்
குரவனைத்தொழுவார்கொடிவாணரே. (உ)

ஆனிடையைந்துமாடுவரார்இருட்
கானிடைநடமாடுவர்காணமினோ
தேனிடைமலர்பாயுநெய்த்தானனை
வானிடைத்தொழுவார்வலிவாணரே. (ங)

விண்டவர்புரமூன்றுமவெண்ணீறெழக்
கண்டவன்கடிதாகியநஞ்சினை
யுண்டவனொளியானநெய்த்தானனைத்
தொண்டராய்த்தொழுவார்சுடர்வாணரே. (ச)

முனைகைநோவக்கடைந்தவர்நிற்கவே
சங்கியாதுசமுத்திரநஞ்சுண்டா
னங்கையோடுவினநறுநெய்த்தானனைத்
தங்கையாற்றொழுவார்தலைவாணரே. (ரு)

சுட்டநீறுமெய்பூசிச்சுடலையு
ணட்டமாடுவர்நள்ளிருட்பேயொடே
சிட்டர்வானவர்தேருநெய்த்தானனை
யிட்டமாய்த்தொழுவார்வினையுவாணமே. (சு)

கொள்ளித்தீயெரிவீசிக்கொடியதோர்
கள்ளிக்காட்டிடையாடுவர்காண்மினோ
தெள்ளித்தேறித்தெளிந்துநெய்த்தானனை
யுள்ளத்தாற்றொழுவாருமபாவாணமே (எ)

உச்சிமேலவிளங்குமிளவெண்பிறை
பற்றியாடரவோடுஞ்சடைப்பெய்தா
னெற்றியாரழற்கண்டநெய்த்தானனைச
சுற்றிமெய்தொழுவார்சுடர்வாணமே. (அ)

மாலொடுமமறையோதியநான்முகன்
காலொடுமமுடிகாணபரிதாயினான
சேலொடுஞ்செருச்செய்யுநெய்த்தானனை
மாலொடுந்தொழுவார்வினைவாடுமே. (கூ)

வலிந்ததோளவலிவாளரக்கன்றனை
நெருங்கநீள்வரையூன்றுநெய்த்தானனார்
புரிந்துகைந்நரம்போடிசைபாடலும
பரிந்தனைபபணிவார்வினைபாறுமே. (கய)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

காலனைவீழச்செற்றகழலடியிரண்டுமவந்தென
மேலவாயிருக்கப்பெற்றேன்மேதகத்தோன்றுகின்ற
கோலநெய்த்தானமென்னுங்குளிர்பொழிற்கோயின்மேய
நீலமவைத்தனையகண்டநினைக்குமாநினைக்கின்றேனே. (க)

காமனையன்றுகண்ணாற்கனலெரியாகநோக்கித்
தாமமுந்தீபங்காட்டித்தொழுமவர்க்கருள்களசெய்து
சேமநெய்த்தானமென்னுஞ்செறிபொழிற்கோயின்மேய
வாமனைநினைந்தநெஞ்சமவாழ்வுறநினைந்தவாறே. (உ)

பிறைதருசடையின்மேலேபெய்யபுனற்கங்கைதனனை
யுறைதரவைத்தவெங்களுத்தமனூழியாய
நிறைதருபொழில்கள்சூழநின்றநெய்த்தானமென்று
குறைதருமடியவர்க்குக்குழகனைக்கூடலாமே. (ங)

வடிதருமழுவொன்றேந்திவார்சடைமதியம்வைத்துப்
பொடிதருமேனிமேலேபுரிதருநூலாபோலு
நெடிதருபொழில்கள்சூழநின்றநெய்த்தானமேவி
யடிதருகழல்களார்ப்பவூடுமெமமண்ணலாரே. (ச)

காடிடமாகநின்றுகனலெரிகையிலேநதிப்
பாடியபூதஞசூழப்பண்ணுடன்பலவுஞசொல்லி
யாடியகழலர்சீராரந்துணெய்த்தானமென்று
கூடியகுழகனறைக்கூடுமாறறிகிலேனே. (௬)

வானவர்வணங்கியேத்திவைகலுமலாகவேத்
தானவர்க்கருள்கள்செய்யுஞசஙகரன்செஙகணேற்றன்
றேனமாபொழிலகள்சூழத்திகழுநெயததானமேய
கூனிளமதியினனைக்கூடுமாறறிகிலேனே. (௬)

காலதிாகழல்களார்ப்பக்கனலெரிகையிலவீசி
ஞாலமுங்குழியநின்றுநடடமதாடுகின்ற
மேலவாமுகடுதோயவிரிசடைதிசைகளபாய
மாலொருபாகமாகமகிழ்நதநெயத்தானனாே. (எ)

பந்தித்தசடையினமேலேபாய்புனலதனைவைதது
வநதிப்போதனலுமாடியடிகளையாறுபுக்கார்
வநதிப்பாாவணஙகிநின்றுவாழ்த்துவாாவாயினுள்ளாா
சிநதிப்பார்சிநதையுள்ளாாதிருநதுநெயத்தானனாே. (அ)

சோதியாயசசுடருமானார்சுண்ணவெணசாநதுபூசி
யோதிவாயுலகமேததவுகநதுதாமருள்கள்செயவா
ராதியாயநதமானாயாவருமிறைஞசியேதத
நீதியாயநியமமாகிநின்றநெய்ததானனாே. (௯)

இலையுடையபடைகையேநதுமிலங்கையர்மன்னன்றன்னைத
தலையுடனடாத்துமீணடேதானவற்கருளகள்செய்து
சிலையுடன்கணையைசசோததுத்திரிபுரமெரியசசெற்ற
நிலையுடையடிகளபோலுநின்றநெயத்தானனாே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பாரிடஞசாடியபலலுயிரவானமராககருளிக்
காரடைநதகடலவாயுமிழநஞசமுதாகவுண்டா
னாரடைநதிவ்வுலகிற்பலிகொள்வதுநாமறியோ
நீரடைநதகரைநின்றநெய்த்தானத்திருநதவனே. (௧)

தேயநதிலஙகுஞசிறுவெணமதியாய்நின்றிருசசடைமேற
பாயநதகஙகைபபுனல்பன்முகமாகிப்பரநதொலிபப
வாய்நதிலஙகும்மழுவேலுடையாயடியேற்குரைநீ
யேநதிளமஙகையுநீயுநெய்த்தானத்திருநதுவே. (௨)

கொனறடைநதாடிக்குமைததிடுங்கூற்றமொன்றாமதின்மேற்
சென்றடைநதாடிப்பொருததுநதேசமெலலாமறியுங்
குன்றடைநதாடுஙகுளிாபொழிற்காவிரியின்கரைமேற்
சென்றடைநதார்வினைதீர்க்குநெய்த்தானத்திருநதவனே. (௩)

கொட்டுமுழவரவத்தொடுகோலம்பலவணிந்து
நட்டம்பலபயின்றாடுவர்நாகமரைக்கசைத்துச்
சிட்டர்திரிபுரந்தீயெழச்செற்றசிலையுடையா
னிட்டமுமையொடுநின்றநெய்த்தானத்திருந்தவனே. (௪)

கொய்ம்மலர்க்கொன்றைதுழாய்வன்னிமத்தமுங்கூவிளமு
மெய்ம்மலர்வேய்ந்தவிரிசடைக்கற்றைவிண்ணோர்பெருமான
மைம்மலர்நீலநிறங்கருங்கண்ணியோர்பாகமகிழ்ந்தா
னின்மலனுடனிலயநெய்த்தானத்திருந்தவனே. (௫)

பூந்தார்நறுங்கொன்றைமாலையைவாங்கிச்சடைக்கணிந்து
கூர்ந்தார்விடையினையேறிப்பலபூதப்படைநடுவே
போந்தார்புறவிசைபாடவுமாடவுங்கேட்டருளிச்
சேர்ந்தாருமையவளோடுநெய்த்தானத்திருந்தவனே (௬)

பற்றினபாம்பன்படுத்தபுலியுரித்தோலுடையன
முற்றினமூன்றுமதில்களைமூட்டியெரிந்தறுத்தான
சுற்றியபூதப்படையினன்சூலமழுவொருமான
செற்றுநந்தீவினைதீர்க்குநெய்த்தானத்திருந்தவனே. (௭)

விரித்தசடையினன்விண்ணவர்கோன்விடமுண்டகண்ட
னுரித்தகரியுரிமூடியொன்னார்மதின்மூன்றுடனே
யெரித்தசிலையினனீடழியாதென்னையாண்டுகொண்ட
தரித்தவுமையவளோடுநெய்த்தானத்திருந்தவனே. (௮)

தூங்கான்றுளங்கான்றுழாய்கொன்றைதுன்னியசெஞ்சடைமேல்
வாங்கானமதியமும்வாளரவுங்கங்கைதான்புனைந்தான்
றேங்கார்திரிபுரந்தீயெழவெய்துதிக்கறுத்து
நீங்காறுமையவளோடுநெய்த்தானத்திருந்தவனே. (௯)

ஊட்டிநின்றானபொருவானிலமுமதிநீயபிரான்
மாட்டிநின்றானன்றிராவெந்துயிழவும்வானவர்கள
காட்டிநின்றான்சுதமாகக்கங்கைபாயவொரோசடையை
நீட்டிநின்றான்றிருநின்றநெய்த்தானத்திருந்தவனே. (௰)

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம்

---

திருச்சிற்றம்பலம்

வகையெலாமுடையாயுநீயேயென்றும
வானகயிலைமேவினாய்நீயேயென்று
மிகையெலாமிக்காயுநீயேயென்றும
வெண்காடுமேவினாய்நீயேயென்றும
பகையெலாந்தீர்த்தாண்டாய்நீயேயென்றும
பாசூரமர்ந்தாயுநீயேயென்றுந
திகையெலாந்தொழச்செல்வாய்நீயேயென்று
நின்றநெய்த்தானாவென்னெஞ்சுளாயே. (௧)

ஆத்தவெணக்கன்பனீயேயென்று
மாதிக்கயிலாயனீயேயெனறுங்
கூர்ததநடமாடிநீயேயெனறுங்
கோடிகாமேயகுழகாவென்றும்
பாாத்தற்கருள்செய்தாய்நீயேயென்றும்
பழையனூர்மேவியபணபாவென்றுந
தீர்த்தனசிவலோகனீயேயென்று
நின்றநெய்த்தானுவென்னெஞ்சுளாயே. (உ)

அல்லாய்ப்பகலானுய்நீயேயென்று
மாதிக்கயிலாயனீயேயெனறுங்
கல்லாலமர்நதாயுநீயேயென்றுங்
காளத்திககற்பகமுநீயேயென்றுஞ
சொல்லாயப்பொருளானுய்நீயேயென்றுஞ
சோற்றுததுறையுறைவாய்நீயேயென்றுஞ
செலவாய்ததிருவானுய்நீயேயென்று
நின்றநெய்த்தானுவென்னெஞசுளாயே. (௩)

மின்னேரிடைபஙகனீயேயென்றும
வெண்கயிலைமேவினுய்நீயேயென்றும்
பொன்னேசடைமுடியாய்நீயேயென்றும
பூதகணநாதனீயேயென்று
மென்னுவிரதத்தாயநீயேயென்று
மேகம்பததெனனீசனீயேயென்றுந
தென்னூாபபதியுளாயநீயேயென்று
நினறநெய்ததானுவென்னெஞசுளாயே. (௪)

முநதியிருநதாயுநீயேயென்று
முன்கயிலைமேவினுய்நீயேயென்று
நநதிக்கருளசெய்தாய நீயேயென்று
நடமாடிநளளாறனீயேயென்றும
பநதிபபரியாயுநீயேயென்றும்
பைஞஞீலிமேவினுயநீயேயென் றுஞ
சிநதிப்பரியாயுநீயேயென்று
நின்றநெயத்தானுவென்னெஞசுளாயே. (௫)

தககாரடியாாக்குநீயேயென்றுந
தலையாாகயிலாயனீயேயென்று
மககாரம்பூணடாயுநீயேயென்று
மாககூரிற்றுன்றேன்றிநீயேயென்றும்
புக்காயவேழுலகுநீயேயென்றும்
புள்ளிருக்குவேளூராயநீயேயெனறுந
தெக்காருமாகோணததானேயென்று
நின்றநெய்த்தானுவென்னெஞசுளாயே. (௬)

புகழுமபெருமையாய்நீயேயென்றும்
பூஙகயிலைமேவினுய்நீயேயென்று

மிகழுநதலையேநிதியேயென்று
மிராமேசசுரததின்பனியேயென்று
மகழுமதிலுடையாய்நீயேயென்று
மாலவாயமேவினயநீயேயென்றுந
திகழுமதிசூடிநீயேயென்று
நின்றநெய்ததாணுவென்னெஞ்சுளாயே. (எ)

வானவாக்குமூத்திளையாயநீயேயென்றும
வானககயிலாயனீயேயென்றுங
கானநடமாடிநீயேயென்றுங
கடவூரிலவீரட்டனீயேயென்று
மூனாமுடியறுத்தாய்நீயேயென்று
மொற்றியூராரூராய்நீயேயென்றுந்
தேனுயமுதானாய்நீயேயென்று
நின்றநெயததாணுவென்னெஞ்சுளாயே (அ)

தநதைதாயிலலாதாய்நீயேயென்றுந
தலையாாகயிலாயனீயேயெனறு
மெநதாயெமபிரானுயநீயேயென்று
மேகமபதநென்னீசனீயேயென்று
முநதியமுககணுயநீயேயென்று
மூவலூாமேவினயநீயேயென்றுஞ
சிநதையாய்தேனூராயநீயேயென்று
நின்றநெய்ததாணுவென்னெஞ்சுளாயே. (கூ)

மறிததான்வலிசெற்றாய்நீயேயென்றும
வான்கயிலைமேவினய்நீயேயென்றும்
வெறுததார்பிறட்பறுப்பாயநீயேயென்றும
வீழிமிழலையாய் நீயேயென்று
மறததாயமுதீநதாய்நீயேயெனறும
யாவாக்குநதாஙகொணுநஞசமுணடு
பொறுத்தாய்புலனைநதுநீயேயெனறு
நின்றநெய்த்தாணுவென்னெஞ்சுளாயே (கo)

திருச்சிற்றம்பலம்.

---

## திருததாண்டகம.

திருச்சிற்றம்பலம்.

மெய்த்தானத்தகம்படியுளைவர்நின்று
வேண்டிற்றுக்குறைமுடித்துவினைக்குக்கூடா
மிததானததிருநதிஙஙனுயவாவென்னு
மிதனையொழியியம்பக்கேளைழைநெஞ்சே
மைத்தானநீணயனிபஙகன்வஙகம
வருதிரைநீர்நஞ்சுண்டகண்டனமேய
நெயத்தானநனகொன்றேத்திநின்று
நினையுமாநினைநதக்காலுயயலாமே. (க)

ஈண்டாவிரும்பிறவித்துறவாவாக்கை
யிதுநீங்கலாமவிதியுண்டென்றுசொல்ல
வேண்டாவேநெஞ்சமேவிளம்பக்கேணீ
யின்னவாதம்பெருமானாரமணிலென்னை
யாண்டானன்றருவரையாற்புரமூன்றெய்த
வம்மானையரியயனுங்காணாவண்ணா
நீண்டானுறைதுறைநெய்த்தானமென்று
நினையுமாநினைந்தக்காலுய்யலாமே. (உ)

பரவிப்பலபலவுந்தேடியோடிப்
பாழாங்குரம்பையிடைக்கிடந்துவாளா
குரவிக்குடிவாழ்க்கைவாழவெண்ணிக்
குலைகைதவிர்நெஞ்சேகூறக்கேணீ
யிரவிக்குலமுதலாவானோர்கூடி
யெண்ணிறந்தகோடியமரராய
நிரவிக்கரியவனெய்த்தானமென்று
நினையுமாநினைந்தக்காலுய்யலாமே. (ங)

அலையார்வினைத்திறஞ்சேராக்கையுள்ளே
யகப்பட்டுளாசையெனும்பாசந்தன்னுட்
டலையாயகக்கடையாகுமவாழ்விலாழ்ந்து
தளராதுநெஞ்சமேயஞ்சவேண்டா
விலையாரபுனற்கொன்றையெறிநீர்த்திங்க
ளிருஞ்சடைமேல்வைத்துகந்தானிமையோரேத்து
நிலையானுறைநிறைநெய்த்தானமென்று
நினையுமாநினைந்தக்காலுய்யலாமே (ச)

தினைத்தனையோர்பொறையிலாவுயிர்போங்கூட்டைப்
பொருளென்றுமிகவுன்னிமதியாலிந்த
வனைத்துலகுமாளலாமென்றுபேசு
மகங்காரந்தவிர்நெஞ்சேயமரர்க்காக
முனைத்துவருமதின்மூன்றும்பொன்றவன்று
முதுகியவெஞ்சிலைவளைத்துச்செந்தீமூழ்க
நினைத்தபெருங்கருணையனெய்த்தானமென்று
நினையுமாநினைந்தக்காலுய்யலாமே (ரு)

மிறைபடுமிவ்வுடல்வாழ்வைமெய்யென்றெண்ணி
வினையிலேகிடந்தழுந்தியவியவேனெஞ்சே
குறைவுடையாரமனத்துளானகுமரன்றாதை
கூத்தாடுங்குணமுடையான்கொலைவேற்கையா
னறைகழலுந்திருவடிமேற்சிலம்புமார்ப்ப
வவனிதலம்பெயரவருநட்டநின்ற
நிறைவுடையானிடமாநெய்த்தானமென்று
நினையுமாநினைந்தக்காலுய்யலாமே. (சா)

பேசப்பொருளலாப்பிறவிதன்னைப்
பெரிதென்றுனசிறுமனத்தால்வேண்டியீண்டு

வாசக்குழன்மடவார்போகமென்னும்
வலைப்பட்டுவீழாதேவருகநெஞ்சே
தூசக்கரியுரித்தான்றூநீறாடித்
துதைந்திலங்குநூன்மார்பன்றொடரகில்லா
நேசர்க்கினியவனெய்த்தானமென்று
நினையுமாநினைந்தக்காலுய்யலாமே. (௭)

அஞ்சப்புலனிவற்றாலாட்டவாட்டுண்
டருநோய்க்கிடமாயவுடலின்றன்மை
தஞ்சமெனக்கருதித்தாழேனெஞ்சே
தாழக்கருதுதியேதன்னைச்சேரா
வஞ்சமனத்தவர்கள்காணவொண்ணா
மணிகண்டன்வானவர்தம்பிரானென்றேத்து
நெஞ்சாக்கினியவனெய்த்தானமென்று
நினையுமாநினைந்தக்காலுய்யலாமே. (௮)

பொருந்தாதவுடலகத்திற்புக்கவாவி
போமாறறிந்தறிந்தேபுலைவாழ்வுன்னி
யிருந்தாங்கிடர்ப்படநீவேண்டாநெஞ்சே
யிமையவர்தம்பெருமானன்றுமையாளஞ்சக்
கருந்தான்மதகரியைவெருவச்சீறுங்
கண்ணுதல்கண்டமராடிக்கருதார்வேள்வி
நிரந்தரமாவினிதுறைநெய்த்தானமென்று
நினையுமாநினைந்தக்காலுய்யலாமே. (௯)

உரித்தன்றுனக்கிவ்வுடலின்றன்மை
யுண்மையுரைத்தேன்விரதமெல்லாந்
தரித்துந்தவமுயன்றும்வாழாநெஞ்சே
தம்மிடையிலில்லார்க்கொன்றல்லார்க்கன்னே
வெரித்தானனலுடையானெண்டோளானை
யெம்பெருமானென்றேத்தாவிலங்கைக்கோனை
நெரித்தானைநெய்த்தானமேவினானை
நினையுமாநினைந்தக்காலுய்யலாமே. (௧0)

திருச்சிற்றம்பலம்

---

திருநெய்த்தானத்திருப்பதிகம் - ௬.

---

சுவாமிதிருநாமம் - நெய்யாடியப்பர்.
தேவிதிருநாமம் - வாலாம்பிகை.

---

ஆ திருப்பதிகம் - ௨௧௧.

---

# ருங. பெரும்புலியூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மண்ணுமோர்பாகமுடையார்மாலுமோர்பாகமுடையார்
விண்ணுமோர்பாகமுடையார்வேதமுடையவிமலர்
கண்ணுமோர்பாகமுடையார்கங்கைசடையிற்கரந்தார்
பெண்ணுமோர்பாகமுடையார்பெரும்புலியூர்ப்பிரியாரே. (க)

துன்னுகடற்பவளஞ்சேர்தூயனநீண்டதிண்டோள்கண்
மின்னுசுடர்க்கொடிபோலுமேனியினாளொருகங்கைக்
கன்னிகளின்புனையோடுகலைமதிமாலைகலந்த
பின்னுசடைப்பெருமானார்பெரும்புலியூர்ப்பிரியாரே. (உ)

கள்ளமதித்தகபாலங்கைதனிலேமிகவேந்தித்
துள்ளமிதித்துநின்றாடுந்தொழிலரெழின்மிகுசெல்வர்
வெள்ளநகுதலைமாலைவிரிசடைமேன்மிளிர்கின்ற
பிள்ளைமதிப்பெருமானார்பெரும்புலியூர்ப்பிரியாரே. (ங)

ஆடலிலையமுடையாரருமறைதாங்கியாறங்கம்
பாடலிலையமுடையார்பன்மையொருமைசெய்தஞ்சு
ஊடலிலையமுடையார்யோகெனும்பேரொளிதாங்கிப்
பீடலிலையமுடையார்பெரும்புலியூர்ப்பிரியாரே. (ச)

தோடுடையார்குழைக்காதிற்சுடுபொடியாரனலாடக்
காடுடையாரெரிவீசுங்கையுடையார்கடல்சூழ்ந்த
நாடுடையார்பொருளின்பநல்லவைநாளுநயந்த
பீடுடையார்பெருமானார்பெரும்புலியூர்ப்பிரியாரே. (ரு)

கற்றதுறப்பணிசெய்துகாண்டுமென்பாரவர்தங்கண்
முற்றிதறிதுமென்பார்கண்முதல்வர்வேதபுராணர்
மற்றிதறிதுமென்பார்கண்மனத்திடையார்பணிசெய்யப்
பெற்றிபெரிதுமுகப்பார்பெரும்புலியூர்ப்பிரியாரே. (சு)

மறையுடையாரொலிபாடன்மாமலர்ச்சேவடிசேர்வார்
குறையுடையார்குறைதீர்ப்பார்குழகரழகர்நஞ்செல்வர்
கறையுடையார்திகழ்கண்டங்கங்கைசடையிற்கரந்தார்
பிறையுடையார்சென்னிதன்மேற்பெரும்புலியூர்ப்பிரியாரே. (எ)

உறவியுமின்புறுசீருமோங்குதலவீடெளிதாகித்
துறவியுங்கூட்டமுங்காட்டித்துன்பமுமின்பமுந்தோற்றி
மறவியஞ்சிந்தனைமாற்றிவாழவல்லார்தமக்கென்றும்
பிறவியறுக்கும்பிரானார்பெரும்புலியூர்ப்பிரியாரே. (அ)

சீருடையாரடியார்கள்சேடரொப்பார்சடைசேரு
நீருடையார்பொடிப்பூசுநினைப்புடையார்விரிகொன்றைத்
தாருடையார்விடையூர்வார்தலைவர்நானூற்றுப்பத்தாய
பேருடையார்பெருமானார்பெரும்புலியூர்பிரியாரே. (க)

உரிமையுடையடியார்களுள்ளுறவுள்கவல்லார்கட்
கருமையுடையனகாட்டியருள்செய்மாதிமுதல்வர்
கருமையுடைநெடுமாலுங்கடிமலரண்ணலுங்காணாப்
பெருமையுடைப்பெருமானார்பெரும்புலியூர்பிரியாரே. (௰)

பிறைவளருமுடிச்சென்னிப்பெரும்புலியூர்ப்பெருமானை
நறைவளரும்பொழிற்காழிநற்றமிழ்ஞானசம்பந்தன்
மறைவளருந்தமிழ்மாலைவல்லவர்தந்துயர்நீங்கி
நிறைவளர்நெஞ்சினராகிநீடுலகத்திருப்பாரே. (கக)

திருச்சிற்றம்பலம்

சுவாமிதிருநாமம் - வியாக்கிரபுரீசர்
தேவிதிருநாமம் - சௌந்தரநாயகி.

ஆ திருப்பதிகம் - உகஉ.

# ருச. திருமழபாடி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

களையுமவல்வினையஞ்சனெஞ்சேகருதார்புர
முளையும்பூசல்செய்தானுயர்மால்வரைநல்விலா
வளையவெஞ்சரமவாங்கியெய்தானமதுத்தமபிரானை
டளையுங்கொன்றையந்தார்மழபாடியுள்அண்ணலே. (க)

காசிலாதபொன்னொக்குங்கனவயிரத்திர
ளாசிலாதபளிங்கினஞ்சுமுண்டினை
பேசினுமகக்காவதெனபேதைகாள்பேணுமின்
வாசமாளிகைசூழ்மழபாடியைவாழ்த்துமே. (உ)

உரங்கெடுப்பவனும்பர்களாயவர்தங்களைப்
பரங்கெடுப்பவனஞ்சையுண்டுபகலோன்றனை
முரண்கெடுப்பவன்முப்புரந்தீயெழச்செற்றுமுன்
வரங்கொடுப்பவன்மாமழபாடியுள்வள்ளலே. (ங)

பள்ளமார்சடையிற்புடையேயடையப்புனல்
வெள்ளமாதரித்தானவிடையேறியவேதியன
வள்ளன்மாமழபாடியுண்மேயமருந்தினை
யுள்ளமாதரிமின்வினையாயினவோயவே. (௪)

தேனுலாமலர்கொண்டுமெய்த்தேவர்கள்சித்தர்கள்
பானெய்யஞ்சுடனாட்டமுன்னாடியபால்வண்ணன்
வானநாடர்கள்கைதொழுமாமழபாடியெங்
கோனைநாடொறுங்கும்பிடவேகுறிகூடுமே. (ரு)

தெரிந்தவன்புரமூன்றுடன்மாட்டியசேவகன்
பரிந்துகைதொழுவாரவர்தம்மனம்பாவினான்
வரிந்தவெஞ்சிலையொன்றுடையானமழபாடியைப்
புரிந்துகைதொழுமின்வினையாயினபோகுமே (சு)

சந்தவார்குழலாளுமைதன்னொருகூறுடை
யெந்தையானிமையாதமுக்கண்ணினனெம்பிரான
மைந்தன்வார்பொழில்சூழ்மழபாடிமருந்தினைச்
சிந்தியாவெழுவார்வினையாயினதேயுமே. (எ)

இரக்கமொன்றுமிலானிறையான்றிருமாமலை
யுரக்கையாலெடுத்தான்றனதோண்முடிபத்திற
விரற்றலைநிறுவியுமையாளொடுமேயவன்
வரத்தையேகொடுக்குமழபாடியுள்வள்ளலே. (அ)

ஆலமுண்டமுதம்மமரர்க்கருளண்ணலார்
காலனாருயிர்வீட்டியமாமணிகண்டனார்
சாலநல்லடியார்தவத்தார்களுஞ்சார்விட
மாலயன்வணங்குமழபாடியெம்மைந்தனே. (கூ)

கலியின்வல்லமணுங்கருஞ்சாக்கியப்பேய்களு
நலியநாள்கெடுத்தாண்டவென்னாதனார்வாழ்பதி
பலியும்பாட்டொடுபண்முழவும்பலவோசையு
மலியுமாமழபாடியைவாழ்த்திவணங்குமே. (க0)

மலியுமாளிகைசூழ்மழபாடியுள்வள்ளலைக்
கலிசெய்மாமதில்சூழ்கடற்காழிக்கவுணியன். (கக)

திருச்சிற்றம்பலம

---

பண் - கொல்லி.

---

திருச்சிற்றம்பலம்.

காலையார்வண்டினங்கிண்டியகாருறு
சோலையார்பைங்கிளிசொற்பொருள்பயிலவே
வேலையார்விடமணிவேதியன்விரும்பிட
மாலையார்மதிதவழ்மாமழபாடியே. (க)

கறையணிமிடறுடைக்கண்ணுதனண்ணிய
பிறையணிசெஞ்சடைப்பிஞ்ஞகன்பேணுமூர்
துறையணிகுருகினந்தாமலர்துதையவே
மறையணிநாவினான்மாமழபாடியே. (உ)

அந்தணர்வேள்வியுமருமறைத்துழனியுஞ்
செந்தமிழ்க்கீதமுஞ்சீரினால்வளர்தரப்
பந்தணைமெல்விரலாளொடும்பயில்விடம்
மந்தம்வந்துலவுசீர்மாமழபாடியே. (௩)

அத்தியினுரிதனையழகுறப்போர்த்தவன்
முத்தியாய்மூவரின்முதல்வனாய்நின்றவன்
பத்தியாற்பாடிடப்பரிந்தவர்க்கருள்செயு
மத்தனாருறைவிடமணிமழபாடியே (௪)

கங்கையார்சடையிடைக்கதிர்மதியணிந்தவன்
வெங்கண்வாளரவுடைவேதியன்றீதிலாச்
செங்கயற்கண்ணுமையாளொடுஞ்சேர்விட
மங்கைமார்நடம்பயின்மாமழபாடியே (௫)

பாலனாருயிர்பாங்கினாலுணவருங்
காலனாருயிர்செகக்காலினாற்சாடினான்
சேலினார்கண்ணினாளொடுஞ்சேர்விட
மாலினார்வழிபடுமாமழபாடியே (௬)

விண்ணிலாரிமையவர்மெய்ம்மகிழ்ந்தேத்தவே
யெண்ணிலார்முப்புரமெரியுணநகைசெய்தார்
கண்ணினாற்காமனைக்கனலெழக்காய்ந்தவெம
மண்ணலாருறைவிடமணிமழபாடியே. (௭)

கரத்தினாற்கயிலையையெடுத்தவாரரக்கனை
சிரத்தினையூன்றலுஞ்சிவனடிசரணெனா
விரத்தினாற்கைநரம்பெடுத்திசைபாடலும
வரத்தினான்மருவிடமாமழபாடியே (௮)

ஏடலாமலர்மிசையயனெழின்மாலுமாய
நாடினார்க்கரியசீர்நாதனாருறைவிடம
பாடெலாம்பெண்ணையின்பழமவிழ்பைம்பொழின்
மாடெலாமலகுசீர்மாமழபாடியே. (௯)

உறிபிடித்தூத்தைவாய்ச்சமணொடுசாக்கியர்
நெறிபிடித்தறிவிலாநீசர்சொற்கொள்ளன்மின
பொறிபிடித்தரவினம்பூணெனக்கொண்டுமான்
மறிபிடித்தானிடமாமழபாடியே. (௧௦)

ஞாலத்தாராதிரைநாளினானொடார்ந்த
சீலத்தான்மேவியதிருமழபாடியை
ஞாலத்தான்மிக்கசீர்ஞானசம்பந்தன்சொற்
கோலத்தாற்பாடுவார்குற்றமற்றார்களே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

பண் - கௌசிகம.

திருச்சிற்றம்பலம்

அங்கையாரழலன்னழகார்சடைக்
கங்கையானகடவுள்ளிடமேவிய
மஙகையாணுறையும்மழபாடியைத்
தஙகையாறறொழுவாரதகவாளரே. (க)

விதியுமாமவினைவாமொளியாாகதஹோா
கதியுமாயகசிவாமவழியுறறமா
மதியுமாம்வலியாமழபாடியு
ணதியகதோய்சடைநாதனற்பாதமே. (உ)

முழவினன்முதுகாடுறைபேயககணக
குழுவினன்குலவுங்கயிலைகதிய
மழுவினனுறையும்மழபாடியைந்
தொழுமினுநதுயரானவைதீரவே. (௩)

கலையினன்மறையான்கதியாகிய
மலையினன்மருவாாபுரமூனறெய்த
சிலையினனசோதிருமழபாடியைத்
தலையினாலவணங்கததவமாகுமே. (௪)

நல்வினைபயனனமறையினபொருள
சலவியாயகருத்தனுாத்திரன்
செலவன்மேயதிருமழபாடியைப்
புலகியேத்துமதுபுகழாகுமே (ரு)

நீடினருலகுக்குயிராயநின்ற
றாடினனெரிகானிடைமாநடம்
பாடினரிசைமாமழபாடியை
நாடினாக்கில்லைநலகுரவானவே. (௬)

மின்னினரிடையாளொருபாகமாய
மன்னினனுறைமாமழபாடியைப்
பன்னினரிசையாலவழிபாடுசெய்
துன்னினாவினையாயினவோயுமே. (௭)

தென்னிலஙகையாமன்னன்செழுவரை
தன்னிலங்கவடாத்தருள்செய்தவன்
மன்னிலஙகியமாமழபாடியை
யுன்னிலங்கவுறுபிணியில்லையே. (அ)

திருவினயனுஞ்செழுநதாமரை
மருவினனுநதொழத்தழன்மாணமம
ருருவினனுறையுமமழபாடியைப்
பரவினாவினைபற்றறுப்பாாகளே. (௯)

நலியுநன்றறியாசசமண்சாககியா
வலியசொலலினுமாமழபாடியு
ளொலிசெய்வாாகழலானறிறமுள்கவே
மெலியுநமமுடன்மேல்வினையானவே. (௧0)

மநதமுநதுபொழின்மழபாடியு
ளெநதைசநதமினிதுகநதேததுவான
கநதமாாகடறகாழியுண ஞானசம
பநதன்மாலைவலலாாக்கிலலைபாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம

## திருநாவுக்கரசுநாயனுர்

### திருததாண்டகம

திருச்சிற்றமபலம.

நீறேறுதிருமேனியுடையானகண்டாய
நெறறிமேலொறறைககணிறைநததானகணடாய
கூறுகவுமைபாகஙகொணடானகணடாய
கொடியவிடமுண்டிருணடகணடனகணடா
யேறேறியெஙகுந திரிவானகணடா
யேழுலகுமேழ்மலையுமானுன்கண்டாய
மாறுனாதமமரனைமட்டானகணடாய
மழபாடிமனனுமணுளன்றனே. (௧)

கொககிறகுசென்னியுடையான்கணடாய
கொல்லைவிடையேறுங்கூததனகணடா
யககரைமேலாடலுடையான்கணடா
யனலஙகையேநதியவாதிகணடா
யக்கோடரவமணிநதானகண்டா
யடியாாகட்காரமுதமானுன்கண்டாய்
மறறிருநதகஙகைசசடையானகணடாய
மழபாடிமன்னுமணுளனறனே. (௨)

நெற்றித்தனிக்கணுடையான்கணடாய்
நேரிழையோாபாகமாய்நின்றுன்கணடாய
பற்றிப்பாமபாட்டுமபடிறனகணடாய
பலஹூாபலிதோபரமன்கணடாய்
செறறாபுரமூனறுஞ்செறறுன்கணடாய
செழுமாமதிசென்னிவைத்தானகணடாய
மற்றொருகுற்றமிலாதான்கணடாய்
மழபாடிமன்னுமணுளன்றனே. (௩)

அலையாாநதபுனற்கங்கைசசடையான்கண்டா
யண்டத்துக்கப்பாலாய்நின்றுன்கணடாய்

கொலையானைக்கூற்றங்குமைத்தான்கண்டாய்
கொல்வேங்கைத்தோலொன்றுடுத்தான்கண்டாய்
சிலையாற்றிரிபுரங்கள்செற்றான்கண்டாய்
செழுமாமதிசென்னிவைத்தான்கண்டாய்
மலையான்மடந்தைமணாளன்கண்டாய்
மழபாடிமன்னுமணாளன்றானே. (௪)

உலந்தார்தமங்கமணிந்தான்கண்டா
யுவகையோடின்னருள்கள்செய்தான்கண்டாய்
நலந்திகழுங்கொன்றைச்சடையான்கண்டாய்
நால்வேதமாறங்கமானான்கண்டா
யுலந்தார்தலைகலனாக்கொண்டான்கண்டா
யும்பரார்தங்கள்பெருமான்கண்டாய்
மலர்ந்தார்திருவடியென்றலைமேல்வைத்த
மழபாடிமன்னுமணாளன்றானே. (௫)

தாமரையான்றன்றலையைச்சாய்த்தான்கண்டாய்
தகவுடையார்நெஞ்சிருக்கைகொண்டான்கண்டாய்
பூமலரானேத்தும்புனிதன்கண்டாய்
புணர்ச்சிப்பொருளாகிநின்றான்கண்டா
யேமருவுவெஞ்சிலையொன்றேந்திகண்டா
யிருளார்ந்தகண்டத்திறைவன்கண்டாய்
மாமருவுங்கலைகையிலேந்திகண்டாய்
மழபாடிமன்னுமணாளன்றானே. (௬)

நீராகிநெடுவரைகளானான்கண்டாய்
நிழலாகிநீள்விசும்புமானான்கண்டாய்
பாராகிப்பௌவமேழானான்கண்டாய்
பகலாகிவானாகிநின்றான்கண்டா
யாரேனுந்தன்னடியார்க்கன்பன்கண்டா
யணுவாகியாதியாய்நின்றான்கண்டாய்
வாரார்ந்தவனமுலையாள்பங்கன்கண்டாய்
மழபாடிமன்னுமணாளன்றானே. (௭)

பொன்னியலுந்திருமேனியுடையான்கண்டாய்
பூங்கொன்றைத்தாரொன்றணிந்தான்கண்டாய்
மின்னியலும்வார்சடையெம்பெருமான்கண்டாய்
வேழத்தினுரிவிரும்பிப்போர்த்தான்கண்டாய்
தன்னியல்பார்மற்றொருவரில்லான்கண்டாய்
தாங்கரியசிவந்தானாய்நின்றான்கண்டாய்
மன்னியமங்கையோர்கூறன்கண்டாய்
மழபாடிமன்னுமணாளன்றானே. (௮)

ஆலாலமுண்டுகந்தவாதிகண்டா
யடையலார்தம்புரமூன்றுமெய்தான்கண்டாய்
காலாலக்காலனையுங்காய்ந்தான்கண்டாய்
கண்ணப்பர்க்கருள்செய்தகாளைகண்டாய்

பாலாருமொழிமடவாளபாகனகண்டாய
பசுவேறிப்பலிதிரியும்பண்பனகண்டாய
மாலாலுமறிவரியமைந்தனகண்டாய
மழபாடிமன்னுமணாளனறானே. (௯)

ஒருசுடராயுலகேழுமானான்கண்டா
யோங்காரத்துட்பொருளாய்நின்றானகண்டாய
விரிசுடராய்விளங்கொளியாயநின்றானகண்டாய
விழவொலியுமவேளவொலியுமானானகண்டா
யிருசுடர்மீதோடாவிலங்கைக்கோனை
யிடறியவிருபதுதோளிறுத்தான்கண்டாய
மருசுடரின்மாணிக்கக்குன்றுகண்டாய
மழபாடிமன்னுமணாளனறானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம

திருச்சிற்றம்பலம்

அலையடுத்தபெருங்கடனஞ்சமுதாவுண்டு
வமரர்கடந்தலைகாத்தவையாசெமபொற
சிலையெடுத்துமாநாகநெருப்புக்கோத்துத்
திரிபுரங்கடீயிட்டசெல்வர்போலு
நிலையடுத்தபசும்பொன்னுனமுத்தாளிண்ட
நிரைவயிரப்பலகையாறருவையாற்றுற
மலையடுத்தமழபாடிவயிரத்தூணே
யென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (௧)

அறைகலந்தகுழன்மொந்தைவீணையாழு
மந்தரத்திறகந்தருவரமரரோத்த
மறைகலந்தமந்திரமுநீருங்கொண்டு
வழிபட்டாரவாளுளக்கொடுத்தியன்றே
கறைகலந்தபொழிறசசிக்கமபமேய
கனவயிரத்திரடேணகலிசூழமாட
மறைகலந்தமழபாடிவயிரத்தூணே
யெனறென்றேநானரற்றிநைகின்றேனே. (௨)

உரங்கொடுக்குமிருணமெய்யாமூர்க்கர்பொல்லா
வூத்தைவாயசசமணாதமையுறவாக்கொண்ட
பரங்கெடுத்திங்கடியேனையாணடுகொணட
பவளத்தினறிரடேணபசும்பொன்முத்தே
புரங்கெடுத்துப்பொல்லாதகாமனாகம
பொடியாகவிழித்தருளிட்புவியோர்க்கென்றும்
வரங்கொடுக்குமழபாடிவயிரத்தூணே
யென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (௩)

ஊனிகந்தூணுறிகையாகுண்டாடொல்லா
வூத்தைவாயசசமணருறவாகக்கொண்டு
ஞானிகளுசோ்நதுள்ளவயிரதலைநண்ணு
நாயேனைபபொருளாகவாணடுகொண்ட
மீனகளுசோவெள்ளநீாவிதியாற்சூழும்
வேநதனைவிணணவாதமபெருமான்மேக
வானகளுசோமழபாடிவயிரத்தூணே
யென்றென்றேநானரற்றிநைகினறேனே. (௪)

சிரமேற்றநான்முகனறன்றலையுமறறைந
திருமாறன்செழுநதலையுமபொன்றசசிநதி
யுரமேற்றவிரவிபறறகாத்துசசோம
ஞெளிாகலைகளபடவுழக்கியுயிாநலகி
நரையேறறவிடையேறிநாகமபூணட
நமபியையேமறைநான்குமோலமிட்டு
வரமேற்குமமழபாடிவயிரத்தூணே
யெனறெனறேநானரறறிநைகின்றேனே. (௫)

சினநதிருத்துஞசிறுப்பெரியார்குண்டாதங்கள
செதுமதியாாதீவினைக்கேவிழுநதேனறேடிப்
புனநதிருத்தமபொல்லாதபிண்டிபேணும
பொறியிலியேன்றனைப்பொருளாவாணடுகொணடு
தனநதிருததுமவாதிறததையொழியப்பாறறித்
தயாமூலதன்மவழியெனக்குநலகி
மனநதிருததுமழபாடிவயிரததூணே
யென்றென்றேநானரறறிநைகின்றேனே. (௬)

சுழித்துணையாமபிறவிவழித்துக்கநீக்குஞ
சுருள்சடையெமபெருமானேதூயதெணணீ
ரிழிப்பரியபசுபாசபபிறபபைநீககு
மென்றுணையேயெனனுடையபெம்மான்றமமான்
பழிப்பரியதிருமாலுமயனுநகாணுப்
பரிதியேசுருதிமுடிக்கணியாய்வாயதத
வழித்துணையாமழபாடிவயிரத்தூணே
யென்றெனறேநானரறறிநைகின்றேனே. (௭, ௮, ௯, ௧௦)

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

பொனனாா்மேனியனேபுலித்தோலையரைககசைத்து
மின்னாாசெஞ்சடைமேனமிளிாகொன்றையணிநதவனே
மன்னேமாமணியேமழபாடியுண்மாணிக்கமே
யன்னேயுன்னையல்லாலினியாரைநினைக்கேனே. (௧)

கேளாரகோவணமுந்திருநீறுமெய்பூசியுனறனை
ருளேவநதடைநதேன்றலைவாவெனையேன்றுகொணீ
வாளாரகண்ணியங்காமழபாடியுண்மாணிக்கமே
கேளாய்நின்னையலலாலினியாரைநினைககேனே. (உ)

எமமானெம்மனையெனறெனககெட்டனைசசாவாகா
ரிமமாயப்பிறவிபிறந்தேயிறநதெயந்தொழிநதேன்
மைமமாம்பூம்பொழில்சூழ்மழபாடியுன்மாணிககமே
யமமாநின்னையலலாலினியாரைநினைக்கேனே. (௩)

பணடேநின்னடியேனடியாரடியாாகடகெலலாந
தொணடேபூண்டொழிநதேன்றொடராமைததுரிசறுத்தேன
வண்டாரபூமபொழிலசூழ்மழபாடியுணமாணிககமே
யணடாநின்னையலலாலினியாரைநினைககேனே. (௪)

கணணாயேழுலகுங்கருத்தாயவருத்தமுமாயப்
பண்ணாரின்றமிழாயபரமாயபரஞ்சுடரோ
மண்ணாரபூமபொழிலசூழமழபாடியுண்மாணிககமே
யண்ணாநினனையல்லாலினியாரைநினைககேனே. (௫)

நாளாராவந்தணுகிநலியாமுனநின்றனக்கே
யாளாவநதடைநதேனடியேனையுமேன்றுகொணீ
மாளாநாளருளுமழபாடியுண்மாணிககமே
யாளாநின்னையல்லாலினியாரைநினைககேனே. (௬)

சநதாருங்குழையாபசடைமேறபிறைதாஙகிநலல
வெநதாரவெணபொடியாய்விடையேறியவிததகனே
மைநதார்சோலைகளசூழமழபாடியுண்மாணிககமே
யெநதாய்நினனையலலாலினியாரைநினைககேனே. (௭)

வெயயவிரிசுடரோன்மிகுதேவாகணஙகளெலலாஞ்
செய்யமலாகளிடமிகுசெமமையுணின்றவனே
மையார்பூமபொழிலசூழமழபாடியுணமாணிககமே
யையாநினனையல்லாலினியாரைநினைககேனே. (௮)

நெறியேநின்மலனேநெடுமாலயனபோறறிசெய்யுங்
குறியேநீமையனேகொடியேரிடையாடலைவா
மறிசேரங்கையனேமழபாடியுணமாணிக்கமே
யறிவேநினனையலலாலினியாரைநினைககேனே. (௯)

ஏராருமுப்புரமுமெரியசசிலைதொடடவனை
வாராாகொஙகையுடன்மழபாடியுணமேயவனைச
சீராாநாவலாகோனூரனுரைத்ததமிழ
பாரோரேத்தவலலாாபரலோகததிருபபாரோ. (௧௦)

திருச்சிற்றமபலம்

திருமழபாடித் திருபபதிகம - ௬.

சுவாமிதிருநாமம் - வச்சிரத்தமபநாதா.
தேவிதிருநாமம - அழகமமை.

ஆ. திருப்பதிகம - உ௪௮.

சுந்தரமூர்த்திநாயனார், திருவாரூரினின்றும் திருநன்னிலம் முதலாகிய ஸ்தலங்களுக்கு யாத்திரைசெய்து, திருவாலம்பொழிலை அடைந்து, சுவாமிதரிசனஞ்செய்து, அன்றிரவு நித்திரை செய்தார். சுவாமி அவருக்குச் சொப்பனத்திலே தோன்றி, "மழபாடிக்கு வருதற்கு மறந்தாயோ" என்று சொல்லியருளினார் சுந்தரமூர்த்தி சுவாமிகள் விழித்தெழுந்து, காவேரிநதியைக் கடந்து, திருமழபாடிக்குப்போய், சுவாமிதரிசனஞ்செய்து, "பொன்னார்மேனியனே" என்னுந் திருப்பதிகம்பாடிச் சிலநாள் அங்கு வசித்தருளினார்.

# ௫௫. திருப்பழூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

முத்தன்மிகுமூவிலைநல்வேலன்விரிநூல
னத்தனெமையாளுடையவண்ணலிடமென்பர்
மைத்தழைபெரும்பொழிலின்வாசமதுவீசப
பத்தரொடுசித்தர்பயில்கின்றபழுவூரே. (௧)

கோடலொடுகோங்கவைகுலாவுமுடிதன்மே
லாடரவமவைத்தபெருமானதிடமென்பர்
மாடமலிசூளிகையிலேறிமடவார்கள
பாடலொலிசெய்யமலிகின்றபழுவூரே. (௨)

வாலியபுரத்திலவர்வேவவிழிசெய்த
போலியவொருத்தர்புரிநூலரிடமென்பர்
வேலியினவிரைகமலமன்னமுகமாதர
பாலெனமிழற்றிநடமாடுபழுவூரே. (௩)

எண்ணுமொரெழுத்துமிசையின்கிளவிதேர்வார
கண்ணுமுதலாயகடவுட்கிடமதென்பர்
மண்ணினமிசையாடிமலையாளர்தொழுதேத்திப்
பண்ணினொலிகொண்டுபயில்கின்றபழுவூரே. (௪)

சாதல்புரிவார்சுடலைதன்னில்நடமாடு
நாதனமையாளுடையநம்பனிடமென்பர்
வேதமொழிசொல்லிமறையாளரிறைவன்றன்
பாதமவையோதநிகழ்கின்றபழுவூரே. (௫)

மேவயருமும்மதிலுமவெந்தழல்விளைத்து
மாவயரவன்னுரிசெய்மைந்தனிடமென்பர்
பூவையைமடந்தையர்கள்கொண்டுபுகழ்சொல்லிப்
பாவையர்கள்கற்பொடுபொலிந்தபழுவூரே. (௬)

மந்தணமிருந்துபுரிமாமடிதன்வேள்வி
சிந்தவிளையாடுசிவலோகனிடமென்ப
ரந்தணர்களாகுதியிலிட்டவகின்மட்டார்
பைந்தொடிநன்மாதர்சுவடொற்றுபழுவூரே. (எ)

உரக்கடல்விடத்தினைமிடற்றிலுறவைத்தன்
றரக்கனையடர்த்தருளுமப்பனிடமென்பர்
குரக்கினமவிரைப்பொழிலின்மீதுகனியுண்டு
பரக்குறுபுனற்செய்விளையாடுபழுவூரே. (அ)

நின்றநெடுமாலுமொருநான்முகனுநேட
வன்றுதழலாய்நிமிருமாதியிடமென்ப
ரொன்றுமிருமூன்றுமொருநாலுமுணர்வார்கண்
மன்றினிலிருந்துடன்மகிழ்ந்தபழுவூரே. (௯)

மொட்டையமணாதர்துகின்மூடுவிரிதேரர்
முட்டைகண்மொழிந்தமுனிவான்றனிடமென்பர்
மட்டைமலிதாழையிளநீர்திசைபூகம்
பட்டையொடுதாறுவிரிகின்றபழுவூரே. (௰)

அந்தணர்களானமலையாளரவரேத்தும்
பந்தமலிகின்றபழுவூரரனையாரச்
சந்தமிகுஞானமுணர்பந்தனுரைபேணி
வந்தவணமேத்துமவர்வானமுடையாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

சுவாமிதிருநாமம் - வடமூலநாதர்.
தேவிதிருநாமம் - அருந்தவநாயகி.

ஆ. திருப்பதிகம் - ௨௧௧.

# ௫௯. திருக்கானூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்

வானார்சோதிமன்னுசென்னிவன்னிபுனங்கொன்றைத்
தேனார்போதுதானார்கங்கைதிங்களொடுசூடி
மானேர்நோக்கிகண்டங்குவப்பமாலையாடுவார்
கானூர்மேயகண்ணார்நெற்றியானார்செல்வரே. (௧)

நீந்தலாகாவெள்ளமூழ்குநீள்சடைதன்மேலோ
ரேய்ந்தகோணற்பிறையோடரவுகொன்றையெழிலார்பப்
போந்தமென்சொலின்பம்பயந்தமைந்தரவர்போலாங்
காந்தள்விம்முகானூர்மேயசாந்தநீற்றாரே. (௨)

சிறையாரவண்டுந்தேனும்விம்முசெய்யமலாககொன்றை
மறையாாபாடலாடலோடுமாலவிடைமேல்வருவா
ரிறையாாவநதெனிலபுகுநதெனெழிலநலமுஙகொணடாா
கறையாாசோலைக்கானூாமேயபிறையாாசடையாரே. (௩)

விண்ணாாதிஙகட்கணணிவெள்ளைமாலையதுசூடித்
தண்ணாரககோடாமைபூண்டுதழைபுன்சடைதாழ
வெணணாவநதெனில்புகுந்தங்கெவ்வநோய்செய்தான்
கண்ணாாசோலைக்கானூாமேயவிண்ணோாபெருமானே. (௪)

தாாகொள்கொன்றைக்கண்ணியோடுநதண்மதியஞ்சூடி
சீாகொள்பாடலாடலோடுசேடராய்வநது
ஊாகடோறுமையமேறறெனனுளவெந்நோய்செய்தாா
காாகொள்சோலைக்கானூாமேயகறைக்கணடததாரே. (௫)

முளிவெள்ளெலுமபுநீறுநூலுமூழ்குமாாபரா
யெளிவநதாாபோலையமெனறென்னில்லேபுகுந்துள்ளத
தெளிவுநாணுங்கொண்டகளவாதேறலாாபூவிற்
களிவண்டியாழ்செய்கானூாமேயவொளிவெண்பிறையாரே. (௬)

மூவாவண்ணாமுளைவெணபிறையாமுறுவலசெய்திங்கே
பூவாாகொனறைபுனைநதுவந்தாாபொக்கமபலபேசிப
போவாாபோலமாலசெய்துள்ளமபுககபுரிநூலா
தேவாாசோலைக்கானூாமேயதேவதேவரே. (௭)

தமிழினீாமைபேசித்தாளமவீணைபணணிநலல
முழவமொநதைமலகுபாடலசெய்கையிடமோவாா
குமிழின்மேனிதநதுகோலநீாமையதுகொண்டாா
கமழுஞ்சோலைககானூாமேயபவளவணணரே. (௮)

அநதமாதியயனுமாலுமாாக்குமறிவரியான்
சிநதையுள்ஞானவினமேலுஞ்சென்னியுமன்னினான்
வநதென்னுளளமபுகுநதுமாலைகாலையாடுவான
கநதமலகுகானூாமேயவெநதைபெமமானே. (௯)

ஆமையரவோடேனவெணகொம்பக்குமாலைபூண
டாமோாகளவாவெள்ளாபோலவுளவெநநோய்செய்தா
ரோமவேதநானமுகனுங்கோணுகணையானுஞ்
சேமமாயசெலவாாகானூாமேயசேடரே. (௧0)

கழுதுதுஞ்சுங்கங்குலாடுங்கானூாமேயானைப
பழுதிஞானசமபநதனசொறபததும்பாடியே
தொழுதுபொழுதுதோததிரங்கள்சொலலித்துதித்துநின்
றழுதுநக்குமன்புசெயவாரலலலறுப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

# திருநாவுக்கரசுநாயனார்.

## திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

திருவினாதனுஞ்செம்மலர்மேலுறை
யுருவனாயுலகத்தினுயிர்க்கெலாங்
கருவனாகிமுளைத்தவன்கானூரிற்
பரமனாயபரஞ்சுடர்காண்மினே. (௧)

பெண்டிர்மக்கள்பெருந்துணைநன்னிதி
யுண்டின்றேயென்றுகவன்மினேழைகாள்
கண்டுகொண்மினீர்கானூர்முளையினைப்
புண்டரீகப்பொதும்பிலொதுங்கியே. (௨)

தாயத்தார்தமர்நன்னிதியென்னுமிம்
மாயத்தேகிடந்திட்டுமயங்கிடேல்
காயத்தேயுளன்கானூர்முளையினை
வாயத்தால்வணங்கீர்வினைமாயவே. (௩)

குறியினின்றுண்டுகூறையிலாச்சம
ணெறியைவிட்டுநிறைகுழற்பற்றினே
னறியலுற்றிரேற்கானூர்முளையவன்
செறிவுசெய்திட்டிருப்பதென்சிந்தையே. (௪)

பொத்தன்மண்சுவர்ப்பொல்லாக்குரம்பையை
மெய்த்தனென்றுவியந்திடேலேழைகாள்
சித்தர்பத்தர்கள்சேர்திருக்கானூரி
லத்தன்பாதமடைதல்கருமமே. (௫)

கல்விஞானக்கலைப்பொருளாயவன்
செல்வமல்குதிருக்கானூரீசனை
யெல்லியும்பகலும்மிசைவானவர்
சொல்லிடாநுந்துயரங்கடரவே. (௬)

நீரும்பாருநெருப்புமருக்கனுங்
காருமாருதங்கானூர்முளைத்தவன்
சேர்வுமொன்றறியாதுதிகைதிகை
யோர்வுமொன்றிலரோடித்திரிவரோ. (௭)

ஓமத்தோடயன்மாலறியாவணம்
வீமப்பேரொளியாயவிழுப்பொருள்
காமற்காய்ந்தவன்கானூர்முளைத்தவன்
சேமத்தாலிருப்பாவதென்சிந்தையே. (௮,௬)

வன்னிகொன்றையெருக்கணிந்தான்மலை
யுன்னியேசென்றெடுத்தவனொண்டிற
றன்னைவீழத்தனிவிரல்வைத்தவன்
கன்னிமாமதிற்கானூர்க்கருத்தனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

திருக்கானூர்த் திருப்பதிகம் - ௨.

---

சுவாமிதிருநாமம் - செம்மேனிநாதர்.
தேவிதிருநாமம் - சிவயோகநாயகி.

---

ஆ திருப்பதிகம் - ௨௨௧.

---

## ௫௭. அன்பிலாலந்துறை.

---

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

---

பண் - தக்கராகம்.

---

திருச்சிற்றம்பலம்

கணைநீடெரிமாலரவம்வரைவில்லா
விணையாவெயின்மூன்றுமெரித்தவிறைவா
பிணைமாமயிலுங்குயில்சேர்மடவன்ன
மணையும்பொழிலன்பிலாலந்துறையாரே. (௧)

சடையார்சதுரன்முதிராமதிசூடி
விடையார்கொடியொன்றுடையெந்தைவிமலன்
கிடையாரொலியோத்தரவத்திசைகிள்ளை
யடையார்பொழிலன்பிலாலந்துறையாரே. (௨)

ஊரும்மரவஞ்சடைமேலுறவைத்துப்
பாரும்பலிகொண்டொலிபாடும்பரமர்
நீருண்கயலும்வயல்வாளைவராலோ
டாரும்புனலன்பிலாலந்துறையாரே. (௩)

பிறையும்மரவும்முறவைத்துமுடிமே
னறையுண்டெழுவன்னியுமன்னுசடையார்
மறையும்பலவேதியரோதவொலிசென்
றறையும்புனலன்பிலாலந்துறையாரே. (௪)

நீடும்புனற்கங்கையுந்தங்கமுடிமேற்
கூடும்மலையாளொருபாகமமர்ந்தார்
மாடும்முழவம்மதிரம்மடமாத
ராடும்பதியன்பிலாலந்துறையாரே. (௫)

நீறார்திருமேனியருனமிலாரபா
லூறாச்சுவையாகியவும்பர்பெருமான
வேறாகிலுமமிகுசந்தனமுந்தி
யாறாரவயலன்பிலாலந்துறையாரே. (௬)

செடியார்தலையிற்பலிகொண்டினிதுண்ட
படியாரபரமன்பரமேட்டிதன்சீரைக
கடியாமலருமபுனறூவிநின்றேத்து
மடியாரதொழுமன்பிலாலந்துறையாரே. (௭)

விடத்தாரதிகழும்மிடறன்னடமாடி
படத்தாரரவம்விரவுஞ்சடையாதி
கொடித்தேரிலங்கைக்குலக்கோன்வரையார
வடர்த்தாரருளன்பிலாலந்துறையாரே.

வணங்கிம்மலர்மேலயனுநெடுமாலும
பிணங்கியறிகின்றிலாமற்றும்பெருமை
சுணங்குமமுகத்தமமுலையாளொருபாக
மணங்குநிகழன்பிலாலந்துறையாரே. (௯)

துறியார்துகில்போரத்துழலவாசமணகையா
நெறியாவுணராநிலைகேடினாநித்தல
வெறியாமலர்கொண்டடிவீழுமவரை
யறிவாரவரன்பிலாலந்துறையாரே. (௧0)

அரவாடுபுனலன்பிலாலந்துறைதன்மேற
கரவாதவர்காழியுண்ஞானசமபந்தன்
பரவாதமிழ்பதிகைபாடவல்லாரபோய
விரவாகுவாவானிடைவீடெளிதாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

# திருநாவுக்கரசுநாயனார்.

## திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

வானஞ்சேர்மதிசூடியமைந்தனை
நீநெஞ்சேகெடுவாய்நினைகிற்கிலை
யானஞ்சாடியையன்பிலாலந்துறைக
கோனெஞ்செலவினைக்கூறிடகிற்றியே. (௧)

காரணத்தாகருத்தாகபாலியார
வாரணத்துரிபோர்த்தமணாளனு
ராரணப்பொருளன்பிலாலந்துறை
நாரணற்கரியானொருநம்பியே. (௨)

அன்பினானஞ்சமைந்துடனாடிய
வென்பினானையுரித்துக்களைந்தவ
னன்பிலானையம்மானையளனூறிய
வன்பினானினைந்தாரிந்தார்களே (௩)

சங்கையுள்ளதுஞ்சாவதுமெய்யுமை
பங்கனாரடிபாவியேனுடை
வங்கணனெந்தையன்பிலாலந்துறைச்
செங்கணாரடிசேரவும்வல்லனே. (௪)

கொக்கிறகாகுளிர்மதிசென்னியா
மிக்கரக்கர்புரமெரிசெய்தவ
ரக்கரையினரன்பிலாலந்துறை
நக்குருவருநம்மையறிவரோ. (௫)

வெள்ளமுள்ளவிரிசடைநந்தியைக்
கள்ளமுள்ளமனத்தவர்காணகில
ரள்ளலார்வயலன்பிலாலந்துறை
யுள்ளவாறறியார்சிலருமரோ. (௬)

பிறவிமாயப்பிணக்கிலழுந்தினு
முறவெலாஞ்சிந்தித்துன்னியுகவாதே
யறவனெம்பிரானன்பிலாலந்துறை
மறவாதேதொழுதேத்திவணங்குமே. (௭)

நுணங்குநூலயன்மாலுமிருவரும்
பிணங்கியெங்குந்திரிந்தெய்த்துங்காணகிலா
வணங்கனெம்பிரானன்பிலாலந்துறை
வணங்குநும்வினைமாய்ந்தறும்வண்ணமே. (௮)

பொய்யெலாமுரைக்குஞ்சமண்சாக்கியக்
கையன்மாருரைகேளாதெழுமினோ
வையனெம்பிரானன்பிலாலந்துறை
மெய்யன்சேவடியேத்துவார்மெய்யரோ. (௯)

இலங்கைவேந்தனிருபதுதோளிற்று
மலங்கமாமலைமேல்விரல்வைத்தவ
னலங்கலெம்பிரானன்பிலாலந்துறை
வலங்கொள்வாரைவானோர்வலங்கொள்வரோ. (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

அன்பிலாலந்துறைத் திருப்பதிகம் - ௨.

---

சுவாமிதிருநாமம் - சத்தியவாகீசர்.
தேவிதிருநாமம் - சௌந்தரநாயகி.

---

ஆ திருப்பதிகம் - ௨௨௩.

# ௫௮. திருமாந்துறை.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்

செம்பொனார்தருவேங்கையுஞாழலுஞ்செருந்திசெண்பகமானைக்
கொம்புமாரமுமாதவிசுரபுன்னைகுருந்தலர்பரந்துந்தி
யம்பொனேர்வருகாவிரிவடகரைமாந்துறையுறைகின்ற
வெம்பிரானிமையோர்தொழுபைங்கழலேத்துதல்செய்வோமே. (௧)

விளவுதேனொடுசாதியின்பலங்களும்வேய்மணிநிரந்துந்தி
யளவிநீர்வருகாவிரிவடகரைமாந்துறையுறைவானந்
துளவமானமக்கனங்கணைக்காமனைச்சுடவிழித்தவனெற்றி
யளகவாணுதலரிவைதன்பங்கனையன்றிமற்றறியோமே. (௨)

கோடுதேன்சொரிகுன்றிடைப்பூகமுங்கூந்தலின்குலைவாரி
யோடுநீர்வருகாவிரிவடகரைமாந்துறையுறைநம்பன்
வாடினார்தலையிற்பலிகொள்பவன்வானவர்மகிழ்ந்தேத்துங்
கேடிலாமணியைத்தொழலல்லதுகெழுமுதலறியோமே. (௩)

இலவஞாழலுமீஞ்சொடுசுரபுன்னையிளமருதிலவங்கங்
கலவிநீர்வருகாவிரிவடகரைமாந்துறையுறைகண்ட
னலைகொள்வார்புனலம்புலிமத்தமுமாடரவுடன்வைத்த
மலையைவானவர்கொழுந்தினையல்லதுவணங்குதலறியோமே. (௪)

கோங்குசெம்பகங்குருந்தொடுபாதிரிகுரவிடைமலருந்தி
யோங்குநீர்வருகாவிரிவடகரைமாந்துறையுறைவானைப்
பாங்கினாலிடுந்தூபமுந்தீபமும்பாட்டவிம்மலர்சேர்த்தித்
தாங்குவாரவர்நாமங்களுவினிற்றலைப்படுந்தவத்தோரே. (௫)

பெருகுசந்தனங்காரகில்பீலியும்பெருமரநிமிர்ந்துந்திப்
பொருதுகாவிரிவடகரைமாந்துறைப்புநிதனெம்பெருமானைப்
பரிவினாலிருந்திரவியுமதியமும்பாரமன்னர்பணிந்தேத்த
மருதவானவர்வழிபடுமலரடிவணங்குதல்செய்வோமே. (௬)

நறவமல்லிகைமுல்லையுமௌவலுநாண்மலரவைவாரி
யிறவில்வந்தெறிகாவிரிவடகரைமாந்துறையிறையன்றங்
கறவனாகியகூற்றினைச்சாடியவந்தணன்வரைவில்லா
னிறையவாங்கியேவலித்தெயிலெய்தவனிணைகழல்பணிவோமே. (௭)

மந்தமார்பொழின்மாங்கனிமாந்திடமந்திகண்மாணிக்க
முந்திநீர்வருகாவிரிவடகரைமாந்துறையுறைவானை
நிந்தியாவெடுத்தார்த்தவல்லரக்கனைநெரித்திடுவிரலானைச்
சிந்தியாமனத்தாரவர்சேர்வதுதீநெறியதுதானே. (௮)

நீலமாமணிநிறத்திலத்தொதொடுபிணைமலர்கிரந்துநதி
யாலியாவருகாவிரிவடகரைமாந்துறையமாவானை
மாலுநான்முகன்றேடியுங்காண்கிலாமலரடியிணைகளுங்
கோலமேத்திநின்றுடுமின்பாடுமினகூற்றுவனலியானே. (௯)

நின்றுணுஞ்சமணரேருஞ்சிலைமிலாநெடுங்கழைநறவேல
நன்றுமாங்கனிகதலியின்பலங்களுநாணலினுரைவாரி
யொன்றிநோவருகாவிரிவடகரைமாந்துறையொருகால
மன்றியுள்ளழிந்தெழும்பரிசழிதுவதுவாகவிடமாமே. (௧௦)

வரைவளங்கவர்காவிரிவடகரைமாந்துறையுறைவானைச்
சிரபுரம்பதியுடையவன்கவுணியன்செழுமறைநிறைநாவ
னரவெனும்பணிவல்லவன்ஞானசம்பந்தனன்புறுமாலை
பரவிடுந்தொழில்வல்லவரல்லலும்பாவமுமிலாதாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிதிருநாமம் - ஆம்பிரவனநாதர்,
தேவிதிருநாமம் - அழகம்மை.

ஆ. திருப்பதிகம் - ௨௨௪.

# ௫௯. திருப்பாற்றுறை.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

காரார்கொன்றைகலந்தமுடியினர்
சீரார்சிந்தைசெலச்செய்தார்
பாரார்நாளும்பரவியபாற்றுறை
யாரார்திமுதல்வரே. (௧)

நல்லாருமமவார்தீயொனபடுஞ்
சொல்லார்நன்மலர்சூடினார்
பல்லார்வெண்டலைச்செல்வரெம்பாற்றுறை
யெல்லாருந்தொழுமீசரே. (௨)

விண்ணார்திங்கள்விளங்குநுதலின
ரெண்ணாவந்தெனெழில்கொண்டார்
பண்ணார்வண்டினம்பாடல்செய்பாற்றுறை
யுண்ணாணாளுமுறைவரே. (௩)

பூவுந்திங்கள்புனைந்தமுடியின
ரேவினல்லாரெயிலெய்தார்
பாவந்தீர்புனன்மல்கியபாற்றுறை
யோவென்சிந்தையொருவரே. (௪)

மாகந்தோய்மதிசூடிமகிழ்ந்தென
தாகம்பொன்னிறமாக்கினார்
பாகம்பெண்ணுமுடையவர்பாற்றுறை
நாகம்பூண்டநயவரே. (௫)

போதுபொன்றிகழ்கொன்றைபுனைமுடி
நாதர்வந்தெனலங்கொண்டார்
பாதந்தொண்டர்பரவியபாற்றுறை
வேதமோதும்விகிர்தரே. (௬)

வாடல்வெண்டலைசூடினர்மால்விடை
கோடல்செய்தகுறிப்பினார்
பாடல்வண்டினம்பண்செயும்பாற்றுறை
யாடனாகமசைத்தாரே. (௭)

வெவ்வமேனியராய்வெள்ளைநீற்றினர்
ரெவ்வருசெய்தெனெழில்கொண்டார்
பவ்வநஞ்சடைகண்டரெம்பாற்றுறை
மவ்வல்சூடியமைந்தரே. (௮)

ஏனமன்னமுமானவருக்கெரி
யானவண்ணத்தெம்மண்ணலார்
பானலம்மலர்விம்மியபாற்றுறை
வானவெண்பிறைமைந்தரே. (௯)

வெந்தநீற்றினர்வேலினர்நூலினர்
வந்தெனாநலம்வௌவினார்
பைந்தண்மாதவிசூழ்தருபாற்றுறை
மைந்தர்தாமோர்மணாளரே. (௧௦)

பத்தர்மன்னியபாற்றுறைமேவிய
பத்துநூறுபெயரனைப்
பத்தன்ஞானசம்பந்தனின்றமிழ்
பத்தும்பாடிப்பரவுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

சுவாமிதிருநாமம் - திருமூலநாதர்
தேவிதிருநாமம் - மோகநாயகி

ஆக திருப்பதிகம் - ௨௨௫

# ௩௦. திருவானைக்கா.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

மழையார்மிடறாமழுவாளுடையா
யுழையாரவராவுமையாள்கணவா
விழவாரும்வெண்ணாவலின்மேவியவெம்
மழகாவெனுமாயிழையாளவளே. (௧)

கொலையார்கரியின்னுரிமூடியனே
மலையார்சிலையாவளைவித்தவனே
விலையாலெனையாளும்வெண்ணாவலுளாய்
நிலையாவருளாயெனுநேரிழையே. (௨)

காலாலுயிர்காலனைவீடுசெய்தாய்
பாலோடுநெய்யாடியபால்வண்ணனே
வேலாடுகையாயெம்வெண்ணாவலுளா
யாலாநிழலாயெனுமாயிழையே. (௩)

சுறவக்கொடிகொண்டவனீறதுவா
யுறநெற்றிவிழித்தவெமுத்தமனே
விறன்மிக்ககரிக்கருள்செய்தவனே
யறமிக்கதுவென்னுமெனாயிழையே. (௪)

செங்கட்பெயர்கொண்டவன்செம்பியர்கோ
னங்கட்கருணைபெரிதாயவனே
வெங்கண்விடையாயெம்வெண்ணாவலுளா
யங்கத்தயர்வாயினளாயிழையே. (௫)

குன்றேயமர்வாய்கொலையார்புலியின்
றன்றோலுடையாய்சடையாய்பிறையாய்
வென்றாய்புரமூன்றைவெண்ணாவலுளே
நின்றாயருளாயெனுநேரிழையே. (௬, ௭)

மலையன்றெடுத்தவரக்கன்முடிதோ
டொலையவ்விரலூன்றியதூமழுவா
விலையாலெனையாளும்வெண்ணாவலுளா
யலசாமனல்காயெனுமாயிழையே. (௮)

திருவார்தருநாரணனான்முகனு
மருவாவெருவாவழலாய்நிமிர்ந்தாய்
விரையாரும்வெண்ணாவலுண்மேவியவெம்
மரவாவெனுமாயிழையாளவளே. (௯)

புத்தர்பலரோடமண்பொய்த்தர்வாக்
கொத்தவவுரைசொல்லிவையோர்கிலா
மெய்த்ததேவர்வணங்குமவெண்ணாவலுள்
அத்தாவருளாயெனுமாயிழையே (௧௦)

வெண்ணாவலமர்ந்துறைவேதியனைக்
கண்ணார்கமழ்காழியர்தந்தலைவன்
பண்ணோடிவைபாடியபத்துமவல்லார்
விண்ணோரவரோடுவிரும்புவரோ. (௧௧)

திருச்சிற்றம்பலம்

—————

## திருவிராகம்.

பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்

வானைக்காவில்வெண்மதிமல்குபுல்குவார்சடைத்
தேனைக்காவில்இன்மொழிதேவிபாகமாயினன்
ஆனைக்காவிலண்ணலையபயமாகவாழ்பவர்
ஏனைக்காவல்வேண்டுவார்க்கேதுமேதமில்லையே. (௧)

சேறுபட்டதண்வயற்சென்றுசென்றுசேணுலாம்
ஆறுபட்டநுண்டுறையானைக்காவிலண்ணலார்
நீறுபட்டமேனியார்நிகரில்பாதமேத்துவார்
வேறுபட்டசிந்தையார்விண்ணுலகமாள்வரே. (௨)

தாரமாயமாதராடானொர்பாகமாயினன்
ஈரமாயபுன்சடையேற்றதிங்கள்சூடினன்
ஆரமாயமார்புடையானைக்காவிலண்ணலை
வாரமாய்வணங்குவாரல்வினைகண்மாயுமே. (௩)

விண்ணினண்ணுபுல்கியவீரமாயமால்விடைச்
சுண்ணவெண்ணீறாடினன்சூலமேந்துகையினன்
அண்ணல்கண்ணொர்மூன்றினானானைக்காவுகைதொழ
எண்ணுமவண்ணமவல்லவர்க்கேதமொன்றுமில்லையே. (௪)

வெய்யபாவங்கைவிடவேண்டுவீர்களாண்டசீர்
மையகொள்கண்டன்வெய்யதீமாலையாடுகாதலான்
கொய்யவிண்டநாண்மலர்க்கொன்றைதுன்றுசென்னியெம்
ஐயன்மேயபொய்கைசூழானைக்காவுசேர்மினே. (௫)

நாணுமோரவுச்சாரவுமுன்னகையுமுட்குநன்மையும்
பேணுறுந்தசெல்வமும்பேசநின்றபெற்றியான்
ஆணும்பெண்ணுமாகியவானைக்காவிலண்ணலார்
காணுங்கண்ணுமூன்றுடைக்கறைகொண்மிடறனல்லனே (௬)

கூருமாலைநண்பகற்கூடிவல்லதொண்டர்கள்
பேருமூருஞ்செல்வமும்பேசநின்றபெற்றியான்
பாரும்விண்ணுங்கைதொழப்பாயுங்கங்கைசெஞ்சடை
யாரநீரொடேந்தினானானைக்காவுசேர்மினே. (௭)

பொன்னமல்குதாமரைப்போதுதாதுவண்டினம்
மன்னமல்குதண்டுறையானைக்காவிலண்ணலைப்
பன்னவல்லநான்மறைபாடவல்லதன்மையோர்
முன்னவல்லர்மொய்கழறுன்னவல்லர்விண்ணையே. (௮)

ஊனொடுண்டனன்றெனாவூனொடுண்டறீதெனா
வானதொண்டரன்பினாற்பேசநின்றதன்மையான்
வானொடொன்றுசூடினான்வாய்மையாகமன்னிநின்
றானொடஞ்சுமாடினானானைக்காவுசேர்மினே. (௯)

கையிலுண்ணுமூகையருங்கடுக்கடின்கழுக்களு
மெய்யைப்போர்க்கும்பொய்யரும்வேதநெறியையறிகிலார்
தையல்பாகமாயினான்றழலதுருவத்தானெங்க
ளையன்மேயபொய்கைசூழானைக்காவுசேர்மினே. (௧௦)

ஊழியூழிவையகத்துயிர்கடோற்றுவானொடு
மாழியானுங்காணிலாவானைக்காவிலண்ணலைக்
காழிஞானசம்பந்தன்கருதிச்சொன்னபத்திவை
வாழியாகக்கற்பவர்வல்வினைகண்மாயுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருக்கயிலாயமுந் திருவானைக்காவுந் திருமகேந்திரமுந் திருவாரூருங் கூடற்சதுக்கம்.

திருச்சிற்றம்பலம்

மண்ணதுவுண்டரிமலரோன்காணா
வெண்ணாவல்விரும்புமகேந்திரரும்
கண்ணதுவோங்கியகயிலையாரு
மண்ணலாரூராதியானைக்காவே. (௧)

வந்துமாலயனவர்காண்பரியார்
வெந்தவெண்ணீறணிமகேந்திரரும்
கந்தவார்சடையுடைக்கயிலையாரு
மந்தணாரூராதியானைக்காவே. (௨)

மாலயனேடியமகேந்திரரும்
காலனையுயிர்கொண்டகயிலையாரும்
வேலையதோங்கும்வெண்ணாவலாரு
மாலையாரூராதியானைக்காவே. (௩)

கருடனேயேறரியயனோகாணா
வெருள்விடையேறியமகேந்திரரும்
இருடருகண்டத்தெங்கயிலையாரு
மருளாரூராதியானைக்காவே. (௪)

மதுசூதனனுன்முகன்வணங்கரியார
மதியதுசொலலியமகேநதிரருய
கதிர்முலைபுலவியகயிலையாரு
மதியனூருராதியானைக்காவே. (௫)

சக்கரம்வேணடுமால்பிரமன் கானு
மிக்கவர்கயிலைமகேநதிரரூா
தக்கனைத்தலையரிதழலுருவ
ரக்கணியவராரூராதியானைககாவே. (௬)

கண்ணனுநானமுகன்காணபரியாா
வெணணூவலவிருமபுமகேநதிரருங
கணணப்பாககருளசெய்நகயிலையெங்க
ளணணலாரூராதியானைககாவே. (எ)

கடலவண்ணனுன்முகன்காணபரியாா
தடவரையரககனைததலைநெரிததார
விடமதுவுண்டவெமமகேநதிரரு
மடலவிடையாரூராதியானைக்காவே (அ)

ஆதிமாலயனவாகாணபரியாா
வேதஙகடுதிசெயுமகேநதிரருங
காதிலொாகுழையுடைககயிலையாரு
மாதியாரூரெநதையானைக்காவே. (௯)

அறிவிலமண்புததரறிவுகொளளேல
வெறியமான்கரத்தாரூாமகேநதிரரு
மறிகடலோனயன்றேடத்தானு
மறிவருகயிலையோனானைககாவே (௧௦)

ஏனமாலயனவாகாணபரியாா
வானமாரகயிலைநனமகேநதிரரு
மானவாரூராதியானைககாவை
ஞானசமபநதன்றமிழ்சொலலுமே (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருநாவுக்கரசுநாயனா

### திருககுறுநதொகை.

திருச்சிற்றம்பலம்.

கோனைக்காவிக்குளிாநதமனததராயத்
தேனைக்காவியுணனூசிலதெண்ணாக
ளானைக்காவிலெமமானையணைகிலா
ருனைக்காவியுழிதாவருமரே. (௧)

திருகுசிந்தையைத்தீர்த்துச்செம்மைசெய்து
பருகியூறலைப்பற்றிப்பதமறிந்
துருகிநைபவர்க்கூனமொன்றின்றியே
யருகுநின்றிடுமானைக்காவண்ணலே. (௨)

துன்பமின்றித்துயரின்றியென்றுநீ
யின்பம்வேண்டிலிராப்பகலேத்துமி
னென்பொனீசனிறைவனென்றுள்குவார்க்
கன்பனாயிடுமானைக்காவண்ணலே. (௩)

நாவானன்றுநறுமலர்ச்சேவடி
யோவாதேத்தியுளத்தடைத்தார்வினை
காவாயென்றுதங்கைதொழுவார்க்கெலா
மாவாவென்றிடுமானைக்காவண்ணலே (௪)

வஞ்சமின்றிவணங்குமின்வைகலும்
வெஞ்சொலின்றிவிலகுமின்வீடுற
நைஞ்சுநைஞ்சுநின்றுள்குளிர்வார்க்கெலா
மஞ்சலென்றிடுமானைக்காவண்ணலே. (௫)

நடையைமெய்யென்றுநாத்திகம்பேசாதே
படைகள்போலவரும்பஞ்சமாபூதங்க
டையொன்றின்றியேதன்னடைந்தார்க்கெலா
மடையநின்றிடுமானைக்காவண்ணலே. (௬)

ஒழுகுமாடத்துளொன்பதுவாய்தலுங்
கழுகரிப்பதன்முன்னங்கழலடி
தொழுதுகைகளாற்றூமலர்தூவிநின்
றழுமவர்க்கன்பனானைக்காவண்ணலே. (௭)

உருளும்போதறிவொண்ணாவுலகத்தீர்
தெருளுஞ்சிக்கெனத்தீவினைசேராதே
யிருளறுத்துநின்றீசனென்பார்க்கெலா
மருள்கொடுத்திடுமானைக்காவண்ணலே. (௮)

நேசமாகிநினைமடநெஞ்சமே
நாசமாயகுலநலஞ்சுற்றங்கள்
பாசமற்றுப்பராபரவானந்த
வாசையுற்றிடுமானைக்காவண்ணலே (௯)

ஓதமாகடல்சூழிலங்கைக்கிறை
கீதங்கின்னரம்பாடக்கெழுவினை
பாதம்வாங்கிப்பரிந்தருள்செய்தங்கோ
ராதியாயிடுமானைக்காவண்ணலே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

## திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

எத்தாயரெத்தந்தையெச்சுற்றத்தா
ரெம்மாடுசும்மாடாரேவர்நல்லார்
செத்தால்வந்துதவுவாரொருவரில்லை
சிறுவிறகாற்றீமூட்டிச்செல்லாநிற்பர்
சித்தாயவேடத்தாய்நீடுபொன்னித்
திருவானைக்காவுடையசெல்வாவென்ற
னத்தாவுன்பொற்பாதமடையப்பெற்றா
லல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (௧)

ஊனாகியுயிராகியதனுணின்ற
வுணர்வாகிப்பிறவனைத்துநீயாய்நின்றாய்
நானேதுமறியாமேயென்னுள்வந்து
நல்லனவுந்தீயனவுங்காட்டாநின்றாய்
தேனாருங்கொன்றையனேநின்றியூராய்
திருவானைக்காவிலுறைசிவனேஞான
மானாயுன்பொற்பாதமடையப்பெற்றா
லல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (௨)

ஒப்பாயிவ்வுலகத்தோடொட்டிவாழ்வா
னொன்றலாத்தவத்தாரோடுடனேநின்று
துப்பாருங்குறையடிசிற்றுற்றிநற்றுன
திறமறந்துதிரிவேனைக்காத்துநீவந்
தெப்பாலுநுண்ணுணர்வேயாக்கியென்னை
யாண்டவனேயெழிலானைக்காவாவானோ
ரப்பாவுன்பொற்பாதமடையப்பெற்றா
லல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (௩)

நினைத்தவர்கணெஞ்சுளாய்வஞ்சக்கள்வா
நிறைமதியஞ்சடைவைத்தாயடையாதுன்பான்
முனைத்தவர்கள்புரமூன்றுமெரியச்செற்றாய்
முன்னானைத்தோல்போர்த்தமுதல்வாவென்றுங்
கனைத்துவருமெருதேறுங்காளகண்டா
கயிலாயமலையாய்நின்கழலேசேர்ந்தே
னனைத்துலகுமாளவானேயானைக்காவா
வல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (௪)

இம்மாயப்பிறப்பென்னுங்கடலாந்துன்பத்
திடைச்சுழிப்பட்டிளைப்பேனையிளையாவண்ணங்
கைம்மானமனத்துதவிக்கருணைசெய்து
காதலருளவைவைத்தாய்காணநில்லாய்
வெம்மானமதகரியினுரிவைபோர்த்த
வேதியனேதென்னானைக்காவுண்மேய
வம்மானின்பொற்பாதமடையப்பெற்றா
லல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (௫)

உரையாரும்புகழானேயொற்றியூராய்
கச்சியேகம்பனேகாரோணத்தாய்
விரையாருமலர்தூவிவணங்குவார்பான்
மிக்கானேயக்கரவமாரம்பூண்டாய்
திரையாரும்புனற்பொன்னித்தீர்த்தமல்கு
திருவானைக்காவிலுறைதேனேவானோ
ரரையாவுன்பொற்பாதமடையப்பெற்றா
லல்லல்கண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (௬)

மையாருமணிமிடற்றாய்மாதோர்கூறாய்
மான்மறியுமாமழுவுமனலுமேந்துங்
கையானேகாலனுடன்மாளச்செற்ற
கழற்காலாமுன்கோளும்விளைவுமானாய்
செய்யானேதிருமேனியரியாய்தேவர்
குலக்கொழுந்தேதென்னானைக்காவுண்மேய
வையாவுன்பொற்பாதமடையப்பெற்றா
லல்லல்கண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (௭)

இலையாருஞ்சூலத்தாயெண்டோளானே
யெவ்விடத்துநீயலாதில்லையென்று
தலையாரக்கும்பிடுவார்தன்மையானே
தழன்மடுத்தமாமேருக்கையில்வைத்த
சிலையானேதிருவானைக்காவுண்மேய
தீயாடீசிறுநோயானலிவணுள்ள
மலையாதேநின்னடியேயடையப்பெற்றா
லல்லல்கண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (௮)

விண்ணாரும்புனல்பொதிசெஞ்சடையாய்வேத
நெறியானேயெறிகடலினஞ்சமுண்டா
யெண்ணாரும்புகழானேயுன்னையெம்மா
னென்றென்றேநாவினிலெப்பொழுதுமுன்னிக்
கண்ணாரக்கண்டிருக்கக்களித்தெப்போதுங்
கடிபொழில்சூழ்தென்னானைக்காவுண்மேய
வண்ணாநின்பொற்பாதமடையப்பெற்றா
லல்லல்கண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (௯)

கொடியேயும்வெள்ளேற்றாய்கூளிபாடக்
குறட்பூதங்கூத்தாடநீயுமாடி
வடிவேயுமங்கைதனைவைத்தமைந்தா
மதிலானைக்காவுளாய்மாகாளத்தாய்
படியேயுங்கடலிலங்கைக்கோமான்றன்னைப்
பருமுடியுந்திரடோளுமடர்த்துகந்த
வடியேவந்தடைந்தடிமையாகப்பெற்றா
லல்லல்கண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

கலையானைப்பரசுதரபாணியானைக்
கனவயிரத்திரளானைமணிமாணிக்க
மலையானையென்றலையினுச்சியானை
வார்தருபுன்சடையானைமயானமன்னு
நிலையானைவரியரவுநாணாக்கோத்து
நினையாதார்புரமெரியவளைத்தமேருச்
சிலையானைத்திருவானைக்காவுளானைச்
செழுநீர்த்திரளைச்சென்றாடினேனே. (௬)

ஆதியனையெறிமணியினோசையானை
யண்டத்தார்க்கறிவொண்ணாதப்பான்மிக்க
சோதியனைத்தூமறையின்பொருளானானைச்
சுரும்பமருமலர்க்கொன்றைதொன்னூல்பூண்ட
வேதியனையறமுரைத்தபட்டன்றன்னை
விளங்குமலரயன்சிரங்களொன்றைச்
சேதியனைத்திருவானைக்காவுளானைச்
செழுநீர்த்திரளைச்சென்றாடினேனே. (௭)

மகிழ்ந்தானைக்கச்சியேகம்பன்றன்னை
மறவாதுகழனினைந்துவாழ்த்தியேத்திப்
புகழ்ந்தாரைப்பொன்னுலகமாள்விப்பானைப்
பூதகணப்படையானைப்புறங்காட்டாட
லுகந்தானைப்பிச்சையேயிச்சிப்பானை
யொண்பவளத்திரளையென்னுள்ளத்துள்ளே
திகழ்ந்தானைத்திருவானைக்காவுளானைச்
செழுநீர்த்திரளைச்சென்றாடினேனே (௮)

நசையானைநால்வேதத்தப்பாலானை
நல்குரவுதீப்பிணிநோய்காப்பான்றன்னை
யிசையானையெண்ணிறந்தகுணத்தான்றன்னை
யிடைமருதுமீங்கோயுநீங்காதேற்றின்
மிசையானைவிரிகடலுமண்ணும்விண்ணு
மிகுதீயும்புனலெறிகாற்றுமாகியெட்டுத்
திசையானைத்திருவானைக்காவுளானைச்
செழுநீர்த்திரளைச்சென்றாடினேனே. (௯)

பார்த்தானைக்காமனுடல்பொடியாய்வீழப்
பண்டயன்மாலிருவர்க்குமறியாவண்ணஞ்
சீர்த்தானைச்செந்தழல்போலுருவினானைத்
தேவர்கடம்பெருமானைத்திறமுன்றே
யார்த்தோடிமலையெடுத்தவிலங்கைவேந்தன்
றோண்மையெலாங்கெடுத்தவன்றனிடரப்போதே
தீர்த்தானைத்திருவானைக்காவுளானைச்
செழுநீர்த்திரளைச்சென்றாடினேனே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

மறைகளாயினநான்குமற்றுளபொருள்களுமெல்லாந்
துறையுந்தோத்திரத்திறையுந்தொன்மையுநன்மையுமாய
வறையும்பூம்புனலானைக்காவுடையாதியைநாளு
மிறைவனென்றடிசேர்வாரெமையுமாளுடையாரே (௧)

வங்கமேவியவேலைநஞ்செழவஞ்சர்கள்கூடித்
தங்கண்மேலடராமையுண்ணெனவுண்டிருள்கண்ட
னங்கமோதியவானைக்காவுடையாதியைநாளு
மெங்களீசனென்பார்களெம்மையுமாளுடையாரே. (௨)

நீலவண்டறைகொன்றைநேரிழைமங்கையோர்திங்கள்
சாலவாளரவங்கடங்கியசெஞ்சடையெந்தை
யாலநீழலுளானைக்காவுடையாதியைநாளு
மேலுமாறுவல்லார்களெம்மையுமாளுடையாரே. (௩)

தந்தைதாயுலகுக்கோர்தத்துவன்மெய்த்தவத்தோர்க்குப்
பந்தமாயினபெருமான்பரிசுடையவர்திருவடிக
ளந்தண்பூம்புனலானைக்காவுடையாதியைநாளு
மெந்தையென்றடிசேர்வாரெம்மையுமாளுடையாரே (௪)

கணைசெந்தீயரவந்நாண்கல்வளையுஞ்சிலையாகத்
துணைசெய்மும்மதின்மூன்றுஞ்சுட்டவனேயுலகுய்ய
வணையும்பூம்புனலானைக்காவுடையாதியைநாளு
மிணைகொள்சேவடிசேர்வாரெம்மையுமாளுடையாரே. (௫)

விண்ணின்மாமதிசூடிவிலையிலிகலனணிவிமலன்
பண்ணினேர்மொழிமங்கைபங்கினன்பசுவுகந்தேறி
யண்ணலாகியவானைக்காவுடையாதியைநாளு
மெண்ணுமாறுவல்லார்களெம்மையுமாளுடையாரே. (௬)

தாரமாகியபொன்னித்தண்டுறையாடிவிழுந்து
நீரினின்றடிபோற்றிநின்மலகொள்ளெனவாங்கே
யாரங்கொண்டவெம்மானைக்காவுடையாதியைநாளு
மீரமுள்ளவர்நாளுமெம்மையுமாளுடையாரே (௭)

உரவமுள்ளதொருழையினுரிபுலியதளுடையானை
விரைகொள்கொன்றையினானைவிரிசடைமேற்பிறையானை
யரவம்வீக்கியவானைக்காவுடையாதியைநாளு
மிரவொடெல்லியும்பகலுமேத்துவாரெமையுடையாரே. (௮)

வலங்கொள்வாரவர்தங்கள்வல்வினைதீர்க்குமருந்து
கலங்கக்காலனைக்காலாற்காமனைக்கண்சிவப்பானை
யலங்கனீர்பொருமானைக்காவுடையாதியைநாளு
மிலங்குசேவடிசேர்வாரெம்மையுமாளுடையாரே. (௯)

ஆழியாற்கருளானைக்காவுடையாதிபொன்னடியி
னீழலேசரணாகநின்றருள்கூரநினைந்து
வாழவல்லவன்றொண்டன்வண்டமிழ்மாலைவல்லார்போ
யேழுமாபிறப்பற்றுவெம்மையுமாளுடையாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

சுந்தரமூர்த்திநாயனார், திருமழபாடியினின்று நீங்கி, காவேரிநதியின் இருபக்கத்திலுமுள்ள ஸ்தலங்களை வணங்கி, மேற்குத்திக்குக்கு யாத்திரை செய்ய நினைந்து, திருவானைக்காவுக்குப் போய், சிவபெருமானை வணங்கி "மறைகளாயின நான்கும்" என்னுந் திருப்பதிகம் பாடி, பழந்திருப்பாட்டிலே, உறையூர்ச் சோழமகாராஜா பதக்கஞ்சாத்திக்கொண்டு காவேரியிலே ஸ்நானஞ் செய்தலும், அது வழுவிப்போக, அவர் "சிவபெருமானே கொண்டருளும்" என்று பிரார்த்திக்க, அது திருமஞ்சனக்குடத்துள்ளே புக, அபிஷேகஞ் செய்யப்படும்பொழுது அதனைச் சிவபெருமான் அணிந்து அவருக்கு அருள்புரிந்த தன்மையைச் சிறப்பித்தருளினார்

---

திருவானைக்காத் திருப்பதிகம் - எ.

---

சுவாமிதிருநாமம - ஜம்புகேசுவரர்.
தேவி திருநாமம - அகிலாண்டநாயகி.

---

ஆகத் திருப்பதிகம் - ௨௩௨.

---

## ௬௧. திருப்பைஞ்ஞீலி.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

---

பண் - காந்தாரபஞ்சமம

---

திருச்சிற்றம்பலம்

ஆரிடம்பாடிலரடிகள்காடலா
லோரிடங்குறைவிலருடையர்கோவண
நீரிடஞ்சடைவிடையூர்திநித்தலும
பாரிடம்பணிசெயும்பயில்பைஞ்ஞீலியே. (௧)

மருவிலார்திரிபுரமெரியமால்வரை
பருவிலாக்குனித்தபைஞ்ஞீலிமேவலா
னுருவிலானபெருமையையுளங்கொளாதவத்
திருவிலாரவர்களைத்தெருட்டலாகுமே. (௨)

அஞ்சுரும்பணிமலரமுதமாந்திததேன
பஞ்சுரம்பாடியிற்றுமபைஞ்ஞீலிமேவலான
வெஞ்சுரந்தனிலுமைவெருவவந்ததோர
குஞ்சரம்பட்டவுரிபோர்த்தகொள்கையே. (௩)

மத்தமாமலர்சூடியமைந்தனா
சித்தராய்த்திரிவார்வினைதீர்ப்பரால்
பத்தர்தாந்தொழுதேத்துபைஞ்ஞீலியெம்
மத்தனைத்தொழவல்லவர்நல்லரே. (௨)

விழுதுசூலத்தன்வெண்மழுவாட்படை
கழுதுதுஞ்சிருட்காட்டகத்தாடலான்
பழுதொன்றின்றிபைஞ்ஞீலிப்பரமனைத்
தொழுதுசெல்பவர்தம்வினைதூளியே. (௩)

ஒன்றிமாலும்பிரமனுந்தம்மிலே
நின்றசூழலறிவரியானிடம்
என்றுபாரிடமேத்துபைஞ்ஞீலியு
ளொன்றுமேவியிருந்தவடிகளே. (௪)

வேழத்தினுரிபோர்த்தவிகிர்தனார்
தாழச்செஞ்சடைமேற்பிறைவைத்தவர்
தாழைத்தண்பொழில்சூழ்ந்தபைஞ்ஞீலியார்
யாழின்பாட்டையுகந்தவடிகளே. (௫)

குண்டுபட்டுக்குறியறியாச்சமண்
மிண்டரோடுபடுத்துய்யப்போந்துநான்
வண்டுகாவயல்சூழ்ந்தபைஞ்ஞீலியெம்
அண்டவாணனடியடைந்துய்ந்தனே (௬)

வரிப்பையாட்டரவாட்டிமத்தகரி
யுரிப்பட்டமுடியவுத்தமனுறை
திருப்பைஞ்ஞீலிதிசைதொழுவார்களபோ
யிருப்பர்வானவரோடினிதாகவே. (௭)

கோடல்கோங்கம்புறவணிமுல்லைமேற்
பாடல்வண்டிசைகேட்கும்பைஞ்ஞீலியார்
பேடுமாணும்பிறரறியாததோர்
நாடுநாகமசைத்தவடிகளே. (௮)

காருலாமலர்க்கொன்றையந்தாரினன்
வாருலாமுலைமங்கையொர்பங்கினன்
தேருலாம்பொழில்சூழ்ந்தபைஞ்ஞீலியெம்
மாரிலாவமுதையடைந்துய்ம்மினே. (௯)

நெருக்கிச்சென்றுதடவரைபற்றலு
நெருக்கியூன்றினைந்துசிவனையே
யரக்கன்பாடவருளுமெம்மானிடம்
திருக்கைஞ்ஞீலியென்பார்க்கிடரில்லையே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

திருநாவுக்கரசுநாயனார், பழையாறை வடதளியினின்றும் நீங்கி, திருவாவலைக்கா முதலியஸ்தலங்களை வணங்கிக்கொண்டு, திருப்பைஞ்ஞீலியை நோக்கிச் சென்றார். செல்லும் வழியிலே, பசியினாலும் தாகத்தினாலும் மிகவருந்தி இளைத்தார் இளைத்தும் சித்தமலையாமல் நடக்க, சிவபிரான் அவருடைய வருத்தத்தை நீக்கும்பொருட்டு வழியிலே ஒருசோலையையும் குளத்தையும் உண்டாக்கி, ஒருபிராமணவடிவங்கொண்டு கட்டமுது வைத்துக்கொண்டிருந்தார். ஸ்ரீவாகீசமூர்த்தி தமக்குச் சமீபத்தில் வந்தவுடனே, ஐயர் அவரைநோக்கி, "நீர் வழிநடந்து மிக இளைத்துப்போனீர் என்னிடத்தில கட்டமுது இருக்கின்றது. புசித்து இந்தக் குளத்திலே ஜலபானம் பண்ணி இளைப்பு நீங்கிக் கொண்டு போம்" என்று சொல்லி, கட்டமுதைக் கொடுத்தார். அப்பமூர்த்தி அதை வாங்கிப் புசித்துச் சலபானம் பண்ணிக்கொண்டு, இளைப்பு நீங்கி இருந்தார். சுவாமி அவரை நோக்கி, "நீர் எங்கே போகின்றீர்" என்று கேட்க; வாகீசர் "நான் திருப்பைஞ்ஞீலிக்குப் போகின்றேன்" என்று சொல்லிப் போனார் சிவபிரான் "நானும் அங்கேதான் போகின்றேன்" என்று சொலலி, அவருடனே கூடிச் சென்று, திருப்பைஞ்ஞீலியைச் சமீபித்தவுடனே மறைந்தருளினார் அப்பமூர்த்தி அதுகண்டு திருவருளை வியந்து, கண்ணீர் பொழிந்தழுது, விழுந்து நமஸ்கரித்து எழுந்து, ஆலயத்திற் சென்று சுவாமியை வணங்கித் திருப்பதிகம்பாடி, கைத்தொண்டு செய்து கொண்டிருந்தார் கட்டமுது கொடுத்த அற்புதத்தை விளக்கிய திருப்பதிகம் திருலமானவற்றிற் சேர்ந்தது

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண - கொலலி.

திருச்சிற்றம்பலம்

காருலாவியநஞ்சையுண்டிருள்கண்டவெண்டலையோடுகொண்
டூரெலாந்திரிந்தென்செய்வீர்பலியோரிடத்திலேகொள்ளுநீர்
பாரெலாம்பணிந்தும்மையேபரவிப்பணியும்பைஞ்ஞீலியீ
ராரமாவதுநாகமோசொலுமாரணீயவிடங்கரே. (க)

சிலைத்துநோக்குமவெள்ளேறுசெந்தழலவாயபாம்பதுமூசெனும
பலிக்குநீர்வருமபோதுநுங்கையிறபாம்புவேண்டாபிரானிரே
மலைத்தசந்தொடுவேங்கைகோங்கமுமன்னுகாரகிலசண்பக
மலைக்குமபைம்புனல்சூழ்பைஞ்ஞீலியிலாரணீயவிடங்கரே. (உ)

தூயவாகண்ணும்வாயுமேனியுந்துன்னவாடைசுடலையிற
பேயொடாடலைத்தவிருநீரொருபித்தரோவெம்பிரானிரே
பாயுநீர்க்கிடங்காரகமலமுமபைந்தண்மாதவிபுன்னையு
மாயபைம்பொழிலசூழபைஞ்ஞீலியிலாரணீயவிடங்கரே. (௩)

செந்தமிழ்த்திறம்வல்லிரோசெங்கணரவமுன்கையிலாடவே
வந்துநிற்குமிதென்கொலோபலிமாற்றமாட்டோமிடகிலோம
பைந்தண்மாமலருந்துசோலைகள்கந்தநாறுபைஞ்ஞீலியீ
ரந்திவானமுமேனியோசொலலுமாரணீயவிடங்கரே. (௪)

நீறுநுந்திருமேனிநித்திலநீணெடுங்கண்ணினாளொடுங்
கூறராயவருதிர்திரிதிர்கொண்டதிடகிலோம்பலிநடமிடே
பாறுவெண்டலைகையிலேந்திப்பைஞ்ஞீலியேனென்றீரழக
ராறுதாங்கியசடையரோசொல்லுமாரணீயவிடங்கரே (௫)

குரவநாறியகுழலினார்வளைகொளவதேதொழிலாகிநீ
ரிரவுமிம்மனையறிதிரோவிங்கேநடந்துபோகவுமவல்லிரோ
பரவிநாடொறும்பாடுவார்வினைபற்றறுக்கும்பைஞ்ஞீலியீ
ரரவமாட்டவும்வல்லிரோசொல்லுமாரணீயவிடங்கரே. (௬)

ஏடுலாமலர்க்கொன்றைசூடுதிரென்பெலாமணிந்தென்செய்வீர்
காடுநும்பதியோடுகையதுகாதல்செய்பவர்பெறுவதென்
பாடல்வண்டிசையாலுஞ்சோலைப்பைஞ்ஞீலியேனென்றுநிற்றிரா
லாடல்பாடலுமவல்லிரோசொல்லுமாரணீயவிடங்கரே. (௭)

மத்தமாமலர்க்கொன்றைவன்னியுங்கங்கையாளொடுதிங்களு
மொய்த்தவெண்டலைகொக்கிறகொடுவெள்ளெருக்கமுஞ்சடையதாம்
பத்தர்சித்தர்கள்பாடியாடும்பைஞ்ஞீலியேனென்றுநிற்றிரா
லத்தியீருரிபோர்த்திரோசொல்லுமாரணீயவிடங்கரே. (௮)

தக்கைதண்ணுமைதாளம்வீணைதகுணிச்சங்கிணைசல்லரி
கொக்கரைகுடமுழவினோடிசைகூடிப்பாடிநின்றாடுவீர்
பக்கமேகுயில்பாடுஞ்சோலைப்பைஞ்ஞீலியேனென்றுநிற்றிரா
லக்குமாமையும்பூண்டிரோசொல்லுமாரணீயவிடங்கரே. (௯)

கையொர்பாம்பரையார்த்தொர்பாம்புகழுத்தொர்பாம்பவைபின்புதாழ்
மெய்யெலாம்பொடிக்கொண்டுபூசுதிர்வேதமோதுதிர்கீதமும்
பையவேவிடங்காகநின்றுபைஞ்ஞீலியேனென்றீரடிகளீ
ரையமேற்குமிதென்கொலோசொல்லுமாரணீயவிடங்கரே (௧௦)

அன்னஞ்சேர்வயல்சூழ்பைஞ்ஞீலியிலாரணீயவிடங்கரை
மின்னுநுண்ணிடைமங்கைமார்பலர்வேண்டிக்காதன்மொழிந்தசொன்
மன்னுதொல்புகழ்நாவலூரன்வன்றொண்டன்வாய்மொழிபாடல்பத்
துன்னியின்னிசைபாடுவாருமைகேள்வன்சேவடிசேர்வரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

திருப்பைஞ்ஞீலித்திருப்பதிகம் - ௩.

---

சுவாமிதிருநாமம் - நீலகண்டர்

தேவிதிருநாமம் - விசாலாக்ஷி.

---

ஆக திருப்பதிகம் - ௨௩௫.

# ௯௨. திருப்பாச்சிலாச்சிராமம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

துணிவளர்திங்கடுளங்கிவிளங்கச்சுடர்ச்சடைசுற்றிமுடித்துப்
பணிவளர்கொள்கையர்பாரிடஞ்சூழவாரிடமும்பலிதேர்வ
ரணிவளர்கோலமெலாஞ்செய்துபாச்சிலாச்சிராமத்துறைகின்ற
மணிவளர்கண்டரோமங்கையைவாடமயல்செய்வதோவிவர்மாண்பே. (௧)

கலைபுனைமானுரிதோலுடையாடைகனல்சுடராலிவர்கண்க
டலையணிசென்னியர்தாரணிமார்பர்தம்மடிகளிவரென்ன
வலைபுனல்பூம்பொழில்சூழ்ந்தமர்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
விலைபுனைவேலரோவேழையைவாடவிடர்செய்வதோவிவரீடே. (௨)

வெஞ்சுடராடுவர்துஞ்சிருண்மாலைவேண்டுவர்பூண்பதுவெண்ணூ
னஞ்சடைகண்டர்நெஞ்சிடமாகநண்ணுவர்நம்மைநயந்து
மஞ்சடைமாளிகைசூழ்தருபாச்சிலாச்சிராமத்துறைகின்ற
செஞ்சுடர்வண்ணரோபைந்தொடிவாடச்சிதைசெய்வதோவிவர்சீரே. (௩)

கனமலர்க்கொன்றையலங்கலிலங்கக்கனறருதூமதிக்கண்ணி
புனமலர்மாலையணிந்தழகாயபுனிதர்கொலாமிவரென்ன
வனமலிவண்பொழில்சூழ்தருபாச்சிலாச்சிராமத்துறைகின்ற
மனமலிமைந்தரோமங்கையைவாடமயல்செய்வதோவிவர்மாண்பே. (௪)

மாந்தர்தம்பானறுநெய்மகிழ்ந்தாடிவளர்சடைமேற்புனல்வைத்து
மோந்தைமுழாக்குழறாளமோர்வீணைமுதிரவோர்வாய்மூரிபாடி
யாந்தைவிழிச்சிறுபூதத்தர்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
சாந்தணிமார்பரோதையலைவாடச்சதுர்செய்வதோவிவர்சார்வே. (௫)

நீறுமெய்பூசிநிறைசடைதாழநெற்றிக்கண்ணாலுற்றுநோக்கி
யாறதுசூடியாடரவாட்டியைவிரற்கோவணவாடை
பாறருமேனியர்பூதத்தர்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
வேறதுவேறியரேழையைவாடவிடர்செய்வதோவிவரீடே. (௬)

பொங்கிளநாகமோரேகவடத்தோடாமைவெண்ணூல்புனைகொன்றை
கொங்கிளமாலைபுனைந்தழகாயகுழகர்கொலாமிவரென்ன
வங்கிளமங்கையோர்பங்கினர்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
சங்கொளிவண்ணரோதாழ்குழல்வாடச்சதிர்செய்வதோவிவர்சார்வே. (௭)

ஏவலத்தால்விசயற்கருள்செய்துவிராவணனையீடழித்து
மூவரிலும்முதலாய்நடுவாயமூர்த்தியையன்றிமொழியாள்
யாவர்களும்பரவும்மெழிற்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
தேவர்கடேவரோசேயிழைவாடச்சிதைசெய்வதோவிவர்சேர்வே. (௮)

மேலதுநான்முகனெய்தியதில்லைகீழதுசேவடிதன்னை
நீலதுவண்ணனுமெய்தியதில்லையெனவிவர்நின்றதுமல்லா
லாலதுமாமதிதோய்பொழிற்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
பாலதுவண்ணரோபைந்தொடிவாடப்பழிசெய்வதோவிவர்மாண்பே (௯)

நாணொடுகூடியசாயினரேனுநகுவரவரிருபோது
மூணொடுகூடியவுட்குநகையாலுரைகளவைகொள்ளவேண்டா
வாணொடுபேணவடிவாயினர்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
பூணெடுமார்பரோபூங்கொடிவாடப்புனைசெய்வதோவிவர்பொற்பே. (௧௦)

அகமலியன்பொடுதொண்டர்வணங்கவாச்சிராமத்துறைகின்ற
புகைமலிமாலைபுனைந்தழகாயபுனிதர்கொலாமிவரென்ன
நகைமலிதண்பொழில்சூழ்தருகாழிநற்றமிழ்ஞானசம்பந்தன்
றகைமலிதண்டமிழ்கொண்டிவையேத்தச்சாரகிலாவினைதானே (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார், மழநாட்டிலே காவேரி வடகரையே சென்று, திருப்பாச்சிலாச்சிராமத்துக்குச் சமீபிக்குமுன்; அந்நகரத்திலே கொல்லிமழவன், தன்னுடைய புத்திரி முயலகனென்னும் நோயினால் வருந்துதலைக் கண்டு, கவலையுற்று, வேறொரு பரிசினாலும் நீங்காமை கண்டு, தான் சைவ பரம்பரையோனாதலால் அவளைத்திருக்கோயிலினுள்ளே கொண்டுபோய், சுவாமி சந்நிதானத்திலே இட்டுவைத்தான் ஆளுடையபிள்ளையார் அந்நகரத்திற்குச்சமீபிக்கும்பொழுது, “திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் எழுந்தருளிவந்தார்” என்று ஊதுகின்ற திருச்சின்னத்தின் ஓசையைக் கேட்டு, கொல்லி மழவன் புத்திரியை விட்டு விரைந்து சென்று, அந்நகரத்தை மிக அலங்கரிப்பித்து, பிள்ளையாரை எதிர்கொண்டு, ஆனந்தபாஷபருசொரிய, முத்துச்சிவிகைக்கு முன்னே அடியற்ற மரம்போல விழுந்தான அதுகண்டு, பிள்ளையார “எழுக” என்று அருளிச் செய்ய; கொல்லி மழவன் எழுந்து மனமகிழ்ந்து, சிரசின்மேலே கைகுவித்துக் கொண்டு பிள்ளையாருடன் செல்ருன். பிள்ளையார் திருக்கோயிற்கோபுரத்துக்குச் சமீபித்தவுடனே, முத்துச்சிவிகையினின்றும் இறங்கி, உள்ளே பிரவேசித்து, வலஞ்செய்துகொண்டு, சந்நிதானத்திலேபோனார் போனபொழுது, அறிவு கெட்டு நிலத்திலே கிடக்கின்ற கன்னியைக்கண்டு, “இஃதென்னை” என்று வினவ; மழவன் வணங்கிநின்று, “இவள் அடியேனுடைய புத்திரி. இவள் முயலகனென்னும் நோயினால் மிக வருந்துகின்றமையால் இவளைச் சுவாமிசந்நிதானத்திலே கொணர்வித்தேன்” என்று விண்ணப்பஞ் செய்தான் ஸ்ரீஞானசம்பந்த சுவாமிகள் அதைக்கேட்டு அருள் சுரந்து, அவ்விடத்தில் நின்றே சுவாமியை நமஸ்கரித்து, அவளுடைய நோயை நீக்கும் பொருட்டு, “துணிவளர் திங்கள்” என்றெடுத்து, “மணிவளர் கண்டரோ மங்கையைவாட மயல்செய்வதோவிவர் மாண்பே” என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினார். அப்பொழுது அந்தக் கன்னி நோய் நீங்கி, எழுந்து ஒலகி வந்து, தந்தையின் பக்கத்தை அடைந்தாள். அதுகண்ட மழவன் மிகுந்த மகிழ்ச்சிகொண்டு, அவளோடும் பிள்ளையாரை விழுந்து நமஸ்கரித்தான். பிள்ளையார் அங்கே சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு, சில நாள் எழுந்தருளியிருந்தார்

# சுந்தரமூர்த்திநாயனார்.

## பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்

வைத்தனன்றனக்கேதலையுமென்னாவுநெஞ்சமும்வஞ்சமொன்றின்றி
யுய்த்தனன்றனக்கேதிருவடிக்கடிமையுரைத்தக்காலுவமனேயொக்கும்
பைத்தபாம்பார்த்தோர்கோவணத்தோடுபாச்சிலாச்சிராமத்தெம்பரமா
பித்தரேயொத்தோர்நச்சிலராகிலிவரலாதில்லையோபிரானார் (௧)

அன்னையேயென்னேனத்தனேயென்னேனடிகளேயமையுமென்றிருந்தே
னென்னையுமொருவனுளனென்றுகருதியிறையிறைதிருவருள்காட்டா
யன்னமாம்பொய்கைசூழ்தருபாச்சிலாச்சிராமத்துறையடிகள்
பின்னையேயடியார்க்கருள்செய்வதாகிலிவரலாதில்லையோபிரானார். (௨)

உற்றபோதல்லாலுறுதியையுணரேனுள்ளமேயமையுமென்றிருந்தேன்
செற்றவர்புரமூன்றெரியெழச்செற்றசெஞ்சடைநஞ்சடைகண்ட
ரற்றவர்க்கருள்செய்பாச்சிலாச்சிராமத்தடிகடாமியாதுசொன்னாலும்
பெற்றபோதுகந்துபெறாவிடிலிகழிலிவரலாதில்லையோபிரானார் (௩)

நாச்சிலபேசிநமர்பிறரென்றுநன்றுந்தீதென்கிலார்மற்றோர்
பூச்சிலைநெஞ்சேபொன்விளைகழனிப்புள்ளினஞ்சிலம்புமாம்பொய்கைப்
பாச்சிலாச்சிராமத்தடிகளென்றிவர்தாம்பலரையுமாட்கொள்வர்பரிந்தோர்
பேச்சிலோரொன்றைத்தரவிலராகிலிவரலாதில்லையோபிரானார் (௪)

வரிந்தவெஞ்சிலையாலந்தரத்தெயிலைவாட்டியவகையினரேனும்
புரிந்தவர்நாளேபுகழ்தக்கவடிமைபோகுநாள்வீழ்நாளாகிப்
பரிந்தவர்க்கருள்செய்பாச்சிலாச்சிராமத்தடிகடாமியாதுசொன்னாலும்
பிரிந்திறைப்போதிற்போவதேயாகிலிவரலாதில்லையோபிரானார். (௫)

செடித்தவஞ்செய்வார்சென்றுழிச்செல்லேன்றீவினைசெற்றிடுமென்று
வடித்தவமல்லாலாரையுமறியேனவதுமறியவொம்மடிகள்
படைத்தலைச்சூலம்பற்றியகையாபாச்சிலாச்சிராமத்தெம்பரமா
பிடித்தவெண்ணீறேபூசுவதானாலிவரலாதில்லையோபிரானார். (௬)

கையதுகபாலங்காடுறைவாழ்க்கைகட்டங்கமேந்தியகையா
மெய்யதுபுரிநூன்மிளிரும்புன்சடைமேல்வெண்டிங்கள்சூடியவிகிர்தா
பையரவல்குற்பாவையராடும்பாச்சிலாச்சிராமத்தெம்பரமா
மெய்யரேயொத்தோர்பொய்செய்வதாகிலிவரலாதில்லையோபிரானார். (௭)

நிணம்படுமுடலைநிலைமையென்றோரேனெஞ்சமேதஞ்சமென்றிருந்தேன்
கணம்படிந்தேத்திக்கங்குலும்பகலுங்கருத்தினாற்கைதொழுதெழுவேன்
பணம்படுமரவம்பற்றியகையர்பாச்சிலாச்சிராமத்தெம்பரமா
பிணம்படுகாட்டிலாடுவதாகிலிவரலாதில்லையோபிரானார். (௮)

குழைத்துவந்தோடிக்கூடுதிநெஞ்சேகுற்றேவலொடாறுஞ்செய்வா
னிழைத்தநாள்கடவாரன்பிலரேனுமெம்பெருமானென்றெப்போது
மழைத்தவர்க்கருள்செய்பாச்சிலாச்சிராமத்தடிகடாமியாதுசொன்னாலும்
பிழைத்ததுபொறுத்தொன்றீகிலராகிலிவரலாதில்லையோபிரானார். (௯)

துணிப்படுமுடையுஞ்சுண்ணவெண்ணீறுகதோற்றமுஞ்சிந்தித்துக்காணின
மணிபபடிகண்டனைவாயினுற்கூறிமனததிறைறெருண்டனேனினிவேன்
பணிப்படுமரவம்பற்றியகையாபாசசிலாசசிராமததெமபரமா
பிணிப்படவாண்டுபணிப்பிலராகிலிவரலாதிலலேயோபிரானுா. (கo)

ஒருமையேயலலேனெழுமையுமடியேனடியவாக்கடியனுமானே
னுரிமையாலுரியேனுள்ளமுமுருகுமொணமலாசசேவடிகாட்டா
யருமையாம்புகழாா்ககருளசெயுமபாசசிலாசசிராமததெமமடிகள
பெருமைகளபேசிச்சிறுமைகளசெயயிலிவரலாதிலலேயோபிரானுா். (கக)

ஏசினவலலவிகழநதனவலலவெம்பெருமானெனறெபபோதும
பாயினபுகழானபாசசிலாசசிராமததடிகளையடிதொழபபனுனள
வாயினுறகூறிமனததினுனினைவான்வளவயறுவலாருரன்
பேசினபேசசைபபொறுக்கிலராகிலிவரலாதிலலேயோபிரானுா. (கஉ)

திருச்சிற்றம்பலம்

சுந்தரமூர்த்திநாயனுர், திருவானைக்காவினின்றும் புறப்பட்டு, திருப்பாச்சிலாச்சிராமத்தை அடைந்து, சிவபெருமானை வணங்கி, அவர் தமக்குப் பொன்னளித்தருளாமையினலே திருவுளம் புழுங்கி, "வைத்தனன்றனக்கே தலேயுமென்னுவும்" என்று திருப்பதிகம எடுத்து, திருப்பாட்டின் இறுதிதோறும் "இவரலாதில்லேயோ பிரானுர்" எனறு பாடிப் பொற்குவை பெற்று, சிலநாள் அங்கிருந்தார்

திருபபாசசிலாசசிராமந் திருபபதிகம - உ.

சுவாமிதிருநாமம - மாறறறிவரதா.
தேவிதிருநாமம - வாலசுநதாி

ஆ திருப்பதிகம - உகூள

## சுஙு. ஈங்கோய்மலை.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர்.

பண - தககேசி.

திருச்சிற்றம்பலம்

வானததுயர்தணமதிதோய்சடைமேன்மத்தமலாசூடித
தேனொத்தன்மெனமொழிமான்விழியாடேவிபாகமாக
கானத்திரவிலெரிகொணடாடுங்கடவுளுலகேத்த
வேனததிரளவநதிழியுஞ்சாரலீங்கோய்மலேயாரே. (க)

சூலப்படையொன்றேநதியிரவிற்சுடுகாடிடமாகக்
கோலசசடைகடாழககுழல்யாழமொநதைகொட்டவே
பாலொத்தனையமொழியாள்காணவாடும்பரமனு
ரோலத்தொடுகலலிலவுகைமழுமீஙகோய்மலேயாரே. (உ)

கண்கொணுதலார்கறைகொண்மிடற்றார்கரியினுரிதோலார்
விண்கொண்மதிசேர்சடையார்விடையார்கொடியார்வெண்ணீறு
பெண்கொடிருமார்பதனிற்பூசும்பெம்மானெமையாள்வா
ரொண்குமரியுந்திரியுஞ்சாரலீங்கோய்மலையாரே. (௩)

மறையின்னிசையார்நெறிமென்கூந்தன்மலையான்மகளோடுங்
குறைவெண்பிறையும்புனலுந்நிலவுங்குளிர்புன்சடைதாழப்
பறையுங்குழலுங்கழலுமார்ப்பப்படுகாட்டெரியாடு
மிறைவர்சிறைவண்டறைபூஞ்சாரலீங்கோய்மலையாரே. (௪)

நொந்தசுடலைப்பொடிநீறணிவார்நுதலோர்கண்ணினார்
கந்தமலர்கள்பலவுநிலவுகமழ்புன்சடைதாழப்
பந்தொண்விரலாள்பாகமாகப்படுகாட்டெரியாடு
மெந்தமடிகள்கடிகொள்சாரலீங்கோய்மலையாரே. (௫)

நீறாரகலமுடையார்நிரையார்கொன்றையரவோடு
மாறார்சடையாரயில்வெங்கணையாலவுணர்புரமூன்று
சீறாவெரிசெய்தேவர்பெருமான்செங்கண்டலைவெள்ளை
யேறார்கொடியாருமையாளோடீங்கோய்மலையாரே (௬)

வினையாயினதீர்த்தருளேபுரியும்விகிர்தன்விரிகொன்றை
நனையார்முடிமேன்மதியஞ்சூடுநம்பானலமல்கு
தனையார்கமலமலர்மேலுறைவான்றலையோடனலேந்து
மெனையாளுடையானுமையாளோடீங்கோய்மலையாரே (௭)

பரக்கும்பெருமையிலங்கையென்னும்பதியிற்பொலிவாய
வரக்கர்க்கிறைவன்முடியுந்தோளுமணியார்விரலொன்றா
னெருக்கியடர்த்துநின்மலர்போற்றிநின்றுநினைந்தேத்த
விரக்கம்புரிந்தாருமையாளோடீங்கோய்மலையாரே. (௮)

வரியார்புலியினுரிதோலுடையான்மலையான்மகளோடும்
பிரியாதுடனாயாடல்பேணும்பெம்மான்றிருமேனி
யரியோடயனுமறியாவண்ணமளவில்பெருமையோ
டெரியாய்நிமிர்ந்தவெங்கள்பெருமானீங்கோய்மலையாரே. (௯)

பிண்டியென்றுபெயராநிற்கும்பிணங்குசமணரும்
மண்டைகலனாக்கொண்டுதிரியுமதியிறேரரு
முண்டிவயிற்றுரைகள்கொள்ளாதுமையோடுடனாகி
யிண்டைச்சடையானிமையோர்பெருமானீங்கோய்மலையாரே. (௧௦)

விழவாரொலியுமுழவுமோவாவேணுபுரந்தன்னு
ளழலாவண்ணத்தடிகளருள்சேரணிகொள்சம்பந்த
னெழிலார்சுனையும்பொழிலும்புடைசூழீங்கோய்மலையீசன்
கழல்சேர்பாடல்பத்தும்வல்லார்கவலைகளைவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

சுவாமிதிருநாமம் - மரகதாசலர்.
தேவிதிருநாமம் - மரகதாம்பிகை.

---

ஆ திருப்பதிகம் - ௨௩௮.

காவேரித் தென்கரையில் உள்ள ஸ்தலங்கள்.

# ௩. வாட்போக்கி.

## திருநாவுக்கரசு நாயனார்

### திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

காலபாசம்பிடித்தெழுதூதுவர்
பாலகர்விருத்தர்பழையாரொடு
ராலநீழலமர்ந்தவாட்போக்கியார்
சீலமார்ந்தவர்செம்மையுணிற்பரோ. (௧)

விடுத்ததூதுவர்வந்துவினைக்குழிப்
படுத்தபோதுபயனில்லைபாவிகா
ளடுத்தவின்னரங்கேட்கும்வாட்போக்கியை
யெடுத்துமேத்தியுமின்புறுமின்களே. (௨)

வந்திவ்வாறுவளைத்தெழுதூதுவ
ருந்தியோடிநரகத்திடாமுன்ன
மந்தியின்னொளிதாங்கும்வாட்போக்கியார்
சிந்தியாவெழுவார்வினைதீர்ப்பரோ. (௩)

கூற்றமவந்துகுமைத்திடும்போதினற
றேற்றமவந்துதெளிவுறலாகுமே
யாற்றவும்மருள்செய்யும்வாட்போக்கியா
லேற்றுமின்விளக்கையிருணீங்கவே. (௪)

மாறுகொண்டுவளைத்தெழுதூதுவர்
வெறுவேறுபடுப்பதன்முன்னமே
யாறுசெஞ்சடைவைத்தவாட்போக்கியார்
கூறியூறியுருகுமென்னுள்ளமே. (௫)

கானமோடிக்கடிதெழுதூதுவர்
தானமோடுதலைப்பிடியாமுன்னம்
மானஞ்சாடியுகந்தவாட்போக்கியார்
ஞனமில்லவர்க்குண்மையினிற்பரோ (௬)

பார்த்துப்பாசம்பிடித்தெழுதூதுவர்
கூர்த்தவேலாற்குமைப்பதன்முன்னமே
யார்த்தகங்கையடக்கும்வாட்போக்கியார்
சீர்த்திமைகள்கிளர்ந்துரைமின்களே. (௭)

நாடிவந்துநமன்றமர்நல்லிருட்
கூடிவந்துகுமைப்பதன்முன்னமே
யாடல்பாடலுகந்தவாட்போக்கியை
வாடியேத்தநம்வாட்டந்தவிருமே. (௮)

* வாட்போக்கி என்பது இரத்தினகிரி.

கட்டறுத்துக்கடிதெழுதூதுவா
பொட்டறாகிப்புறப்படாமுன்னமே ।
யட்டமாமலர்சூடுமெய்வாட்போக்கியார் ।
இட்டமாகியிணையடியேத்துமே (௯)

இரக்கமுன்னறியாதெழுதூதுவ ।
பரக்கழித்தவர்பற்றுதன்முன்னமே ।
யரக்கனுக்கருள்செய்தவாட்போக்கியார்
கரப்பதுங்கரப்பாரவர்தங்கட்கே । (௰)

திருச்சிற்றம்பலம்

---

சுவாமிதிருநாமம் - இரத்நகிரிநாதர்.
தேவிதிருநாமம் - சுரும்பார்குழலி.

---

## உ. கடம்பந்துறை.

### திருநாவுக்கரசுநாயனார்

---

திருக்குறுந்தொகை

---

திருச்சிற்றம்பலம்

முற்றிலாமுலையாளிவளாகிலு ।
மற்றநதீர்க்குமறிவிலளாகிலுங்
கற்றைச்செஞ்சடையான்கடம்பந்துறை ।
பெற்றமூர்தியென்றாளெங்கள்பேதையே. (௧)

தனக்கிருந்ததொர்தன்மையராகிலு ।
முனக்குதீர்ந்ததொழுதெழுமின்களோ
கனகப்புனச்சடையான்கடம்பந்துறை
நினையவல்லவர்நீள்விசும்பாள்வரே. (௨)

ஆரியந்தமிழோடிசையானவன்
கூரியகுணத்தார்குறிநின்றவன்
காரிகையுடையான்கடம்பந்துறைச்
சீரியபத்தர்சென்றடைமின்களே. (௩)

பண்ணினின்மொழிகேட்கும்பரமனை ।
வண்ணநன்மலரான்பலதேவருங்
கண்ணனுமறியான்கடம்பந்துறை
நண்ணநம்வினையாயினநாசமே. (௪)

மறைகொண்டமனத்தானைமனத்துளே
நிறைகொண்டநெஞ்சினுள்ளூறவைம்மினோ
கறைகொண்டானுறையுங்கடம்பந்துறை
[illegible] (௫)

வேதாவேதமெலாமுறையாலவிரித்
தோதநின்றவொருவனா
பாதிபெண்ணுருவாயபராய்த்துறை
யாதியாயவடிகளே. (௩)

தோலுந்துமமரையாடைசுடாவிழ
நூலுந்தாமணிமார்பினா
பாலுநெய்பயின்றுபராய்த்துறை
யாலநீழலடிகளே. (௪)

விரவிநீறுமெய்பூசுவாமேனிமே
லிரவினின்றெரியாடுவா
பரவினாரவாவேதம்பராய்த்துறை
யரவமார்த்தவடிகளே. (௫)

மறையுமோதுவாமான்மறிக்கையினா
கறைகொள்கண்டமுடையவா
பறையுஞ்சங்குமொலிசெய்பராய்த்துறை
யறையநின்றவடிகளே. (௬)

விடையுமேறுவாவெண்பொடிப்பூசுவா
சடையிற்கங்கைதரித்தவா
படைகொளவெண்மழுவாளாபராய்த்துறை
யடையநின்றவடிகளே. (௭)

தருக்கின்மிக்கதசக்கிரிவன்றனை
நெருக்கினாவிரலொன்றினா
பருக்கினாரவாபோலும்பராய்த்துறை
யருக்கன்றனையடிகளே. (௮)

நாற்றமாமலராளுடமாலுமாய்த
தோற்றமுமறியாதவா
பாற்றினார்வினையானபராய்த்துறை
யாற்றன்மிக்கவடிகளே. (௯)

திருவிலிச்சிலதேரமணாதக
ளுருவிலாவுரைகொள்ளேலும
பருவிலாலெயிலெய்துபராய்த்துறை
மருவினன்றனைவாழ்த்துமே. (௧௦)

செல்வமல்கியசெல்வர்பராய்த்துறைச்
செல்வன்மேற்சிதையாதன
செல்வன்ஞானசம்பந்தனசெந்தமிழ்
செல்வமாமிவைசெப்பவே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

# தேவாரம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

கரப்பர்காலமடைந்தவர்தம்வினை
சுருக்குமாறுவல்லார்கங்கைசெஞ்சடைப்
பரப்புநீர்வருகாவிரித்தென்கரைத்
திருப்பராய்த்துறைமேவியசெல்வரே. (௧)

முடிறாடளியானையினீருரி
பாடினார்மறைநான்கினோடாறங்கஞ்
மீட்டனார்தென்பராய்த்துறைச்செல்வனைத்
தேடிக் கொண்டடியேன்சென்றுகாண்பனே. (௨)

பட்டநெற்றியர்பானமதிக்கீற்றினர்
நட்டமாடுவர்நள்ளிருளேமமுஞ்
சிட்டனார்தென்பராய்த்துறைச்செல்வனா
ரிட்டமாயிருப்பாரையறிவரோ. (௩)

முன்பெலாஞ்சில்மோழைமைபேசுவ
மொன்பெலாம்பலபூண்டயகுழிதாவா
நன்பராய்த்துறைமேவியசெல்வனா
ரன்பராயிருப்பாரையறிவரோ. (௪)

போதுதாதொடுகொண்டுபுனைந்துடன்
றூதுவிட்டடைச்சங்கரன்பாகத்துள்
வாதைநீக்கவெண்ணீறதிப்பராய்த்துறைச்
சோதியானைத்தொழுதெழுந்துய்ம்மினே. (௫)

நல்லநான்மறையோதியநம்பனைப்
பல்லில்வெண்டலையிற்பலிகொள்வனைத்
தில்லையானைத்தென்பராய்த்துறைச்செல்வனை
வல்லையாய்வணங்கித்தொழுவாய்மையே. (௬)

நெருப்பினிற்குவித்தாலொக்குநீள்சடைப்
பருப்பதமதயானையுரித்தவன்
திருப்பராய்த்துறையார்திருமார்பினூல்
பொருப்பராவியிழிபுனல்போன்றதே. (௭)

எட்டவிட்டவிடுமனலெக்காமேற
பட்டநுண்டுளிபாயும்பராய்த்துறைச்
சிட்டன்சேவடிசென்றடைகிற்றிரேல்
விட்டுநம்வினையுள்ளனவீடுமே. (௮)

நெருப்பராய்சிமிர்ந்தாலொக்குநீள்சடை
மருப்பராவனைத்தாலொக்கும்வாணமதி
திருப்பராய்த்துறைமேவியசெல்வனா
விருப்பராயிருப்பாரையறிவரோ. (௯)

தொண்டுபாடியுந்தூமலர்தூவியு
மிண்டைகட்டியிணையடியேத்தியும்
பண்டரங்கர்பராய்த்துறைப்பாங்கரா
கண்டுகொண்டடியேனுய்ந்துபோவனே. (௧0)

அரக்கன்றன்றலழித்தவழகனைப்
பரக்குநீட்பொன்னிமன்னுபராய்த்துறை
யிருக்கைமேவியவீசனையேத்துமின்
பொருக்கக்கன்மவினைபோயறுங்காணுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

திருப்பராய்த்துறைத்திருப்பதிகம் - உ

சுவாமிதிருநாமம் - பராய்த்துறைநாதர்.
தேவிதிருநாமம் - பொன்மயிலம்மை

ஆ திருப்பதிகம் - ௪.

## ௪. கற்குடி.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

பண் - தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

வடந்திகழ்மென்முலையாளைப்பாகமதாகமதித்துத்
தடந்திரைசேர்புனன்மாதைத்தாழ்சடைவைத்தசதுர
ரிடந்திகழ்முப்புரிநூலர்துன்பமொடின்பமதெல்லாங்
கடந்தவர்காதலில்வாழுங்கற்குடிமாமலையாரே (௧)

அங்கமொராறுடைவேள்வியானவருமறைநான்கும்
பங்கமில்பாடலோடாடல்பாணியியன்றபழநா
சங்கமதார்குறமாதர்தங்கையின்மைந்தர்கடாவிக்
கங்குலின்மாமதிபற்றுங்கற்குடிமாமலையாரே. (௨)

நீரகலந்தருசென்னிநீடியமத்தமும்வைத்துத்
தாரகையின்னொளிசூழ்ந்ததண்மதிசூடியசைவர்
போரகலந்தருவேடர்புனத்திடையிட்டவிறகிற்
காரகிலின்புகைவிம்முங்கற்குடிமாமலையாரே. (௩)

ஒருங்களிநீயிறைவாவென்றும்பர்களோலமிடக்கண்
டிருங்களமாரவிடத்தையின்னமுதுண்ணியவீசர்
மருங்களியார்பிடிவாயில்வாழ்வெதிரின்முளைவாரிக்
கருங்களியானைகொடுக்குங்கற்குடிமாமலையாரே. (௪)

போர்மலிதிண் சிலைகொண்டுபூதகணம்புடைசூழப்
பாரமலிவேடுருவாகிப்பண்டொருவற்கருள்செய்தா
ரோர்மலிகேழலகினைத்தவின்னொளிமாமணியெங்குங்
காரமலிவேடர்குவிக்குங்கற்குடிமாமலையாரே. (ரு)

உலந்தவர்தனெபுதணிந்தேயூரிடுபிச்சையராகி
விலங்கல்விலவெங்கனலாலேழ்வெயிலவேவமுனிந்தார்
நலந்தருசிந்தையராகிநாமலிமாலையினாலே
கலந்தவர்காதலிலவாழுங்கற்குடிமாமலையாரே. (சு)

மாணிடமாதருகையர்மாமழுவாரும்வலத்தா
ரூணிடையாதலையோடடிலுண்கலனாகவுகந்தார்
தேணிடையாதருசந்திற்றிணைசிறையாறறினைவித்திக்
கானிடைவேடாவினைக்குங்கற்குடிமாமலையாரே. (எ)

வாளமர்வீரநினைந்தவிராவணன்மாமலையின்கீழ்த்
தோளமாவனறலைகுன்றதொல்விரலூன்றுதுணைவா
தாளமாவேயதலைபறித்ததாழகரிவிட்டவிசைபோய்க்
காளமதாறுங்கில்கிறுங்கற்குடிமாமலையாரே. (அ)

தண்டமாதாமரையானுந்தாவியமணணையளந்து
கொண்டவனுமறிவொணக்கொள்கையர்வெள்விடையூர்வா
வண்டிசையாயினபாடீடியவார்பொழினீழற
கண்டமாமாமயிலாடுங்கற்குடிமாமலையாரே. (கூ)

முத்துவராடையினாருமூசுகடுப்பொடியாரு
நாத்துவர்பொய்யமமொழியார்கணயமிலராமதிவைத்தா
ரேத்துயாபத்தாகன்சிந்தரிறைஞ்சவவரிடரொல்லாங்
காத்தவர்காமருசோலைக்கற்குடிமாமலையாரே. (கூ0)

காமருவார்பொழில்சூழுங்கற்குடிமாமலையானை
நாமருவணைபுகழ்க்காழிநலந்திகழ்ஞானசம்பந்தன்
பாமருசெந்தமிழ்மாலைபத்திவைபாடவலலார்கள்
பூமலிவானவரோடும்பொன்னுலகிற்பொலிவாரே. (கூக)

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்.

மூத்தவனைவானவர்க்குமூவாமேனி
முதல்வனைத்திருவரையின்மூக்கப்பாம்பொன்
றார்த்தவனையக்கரவமாரமாக
வணிந்தவனைப்பணிந்தடியாரடைந்தவன்போ
டேத்தவனையிறுவரையிற்றேனையேனோர்
கின்னமுதமளித்தவனையிடரையெல்லாங்
காத்தவனைக்கற்குடியில்விழுமியானைக்
கற்பகத்தைக்கண்ணாரக்கண்டேனானே. (க)

செய்யானைவெளியானைக்கரியான்றன்னைத்
திசைமுகனைத்திசையெட்டுஞ்செறிந்தான்றன்னை
யையானைநொய்யானைச்சீரியானை
யணியானைச்சேயானையானஞ்சாடு
மெய்யானைப்பொய்யாதுமில்லான்றன்னை
விடையானைச்சடையானைவெறித்தமானைக்
கையானைக்கற்குடியில்விழுமியானைக்
கற்பகத்தைக்கண்ணாரக்கண்டேனானே. (௨)

மண்ணதனிலைந்தைமாநீரினான்கை
வயங்கெரியின்மூன்றைமாருதத்திரண்டை
விண்ணதனிலொன்றைவிரிகதிரைத்
தண்மதியைத்தாரகைகடம்மின்மிக்க
வெண்ணதனிலெழுத்தையேழிசையைக்காம
னெழிலழியவெரியுமிழ்ந்தவிமையாநெற்றிக்
கண்ணவனைக்கற்குடியில்விழுமியானைக்
கற்பகத்தைக்கண்ணாரக்கண்டேனானே (௩)

நற்றவனைப்புற்றரவநாணினானை
நாணாதுநகுதலையூணுகந்தான்றன்னை
முற்றவனைமூவாதமேனியானை
முந்நீரினஞ்சமுகந்துண்டான்றன்னைப்
பற்றவனைப்பற்றார்தம்பதிகள்செற்ற
படையானையடைவார்தம்பாவம்போக்கக்
கற்றவனைக்கற்குடியில்விழுமியானைக்
கற்பகத்தைக்கண்ணாரக்கண்டேனானே. (௪)

சங்கைதனைத்தவிர்த்தாண்டதலைவன்றன்னைச்
சங்கரனைத்தழலுறுதாண்மழுவாடாங்கு
மங்கையனையங்கமணியாகத்தானை
யாகத்தோர்பாகத்தேயமரவைத்த
மங்கையனைமதியொடுமாசுணமுந்தம்மின்
மருவவிரிசடைமுடிமேல்வைத்தவானீர்க்
கங்கையனைக்கற்குடியில்விழுமியானைக்
கற்பகத்தைக்கண்ணாரக்கண்டேனானே. (௫)

பெண்ணவனையாணவனைப்பேடானானைப்
பிறப்பிலியையிறப்பிலியைப்பேராவாணி
* விண்ணவனைவிண்ணவர்க்குமேலானானை
வேதியனைவேதத்தின்கீதம்பாடும்
பண்ணவனைப்பண்ணில்வருபயனானானைப்
பாரவனைப்பாரில்வாழுயிர்கட்கெல்லாங்
கண்ணவனைக்கற்குடியில்விழுமியானைக்
கற்பகத்தைக்கண்ணாரக்கண்டேனானே. (௬)

பண்டானைப்பரந்தானைக்குவிந்தான்றனைப்
பாரானைவிண்ணாயிவ்வுலகமெல்லா

உண்டானை யுமிழ்ந்தானை யுடையான் றன்னை
யொருவருந்தன் பெருமைதனை யறியவொண்ணா
விண்டானை விண்டார்தம் புரங்கண் மூன்றும்
வெவ்வழலில் வெந்துபொடி யாகி வீழக்
கண்டானைக் கற்குடியில் விழுமியானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேனே. (௭)

வானவனை வானவர்க்கு மேலானானை
வணங்குமடி யார்மனத்துண் மருவிப் புக்க
தேனவனைத் தேவர்தொழு கழலான் றன்னைச்
செய்யகுணங்கள் பலவாகி நின்ற வென்றிக்
கோனவனைக் கொல்லைவிடை யேறினானைக்
குழுவுமுழ வமியம்பக் கூத்தாட வல்ல
கானவனைக் கற்குடியில் விழுமியானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேனே. (௮)

கொலையானை யுரிபோர்த்த கொள்கையானைக்
கோளரியைக் கூரம்பா வரைமேற் கோத்த
சிலையானைச் செம்மைதரு பொருளான் றன்னைத்
திரிபுரத்தோர் மூவர்க்குச் செம்மை செய்த
தலையானைத் தத்துவங்க ளானான் றன்னைத்
தையலோர் பங்கினனைத் தன்கையேந்து
கலையானைக் கற்குடியில் விழுமியானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேனே. (௯)

பொழிலானைப் பொழிலாரும் புன்கூரானைப்
புறம்பயனை யறம்புரிந்த புகலூரானை
யெழிலானை யிடைமருதி னிடங்கொண்டானை
யீங்கோய்நீங் காதுறையு மிறைவன் றன்னை
யழலாடு மேனியனை யன்று சென்று
குன்றெடுத்த வரக்கன்றோ ணெரியவூன்றுங்
கழலானைக் கற்குடியில் விழுமியானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

## சுந்தரமூர்த்திநாயனார்

### பண் — நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

விடையாருங் கொடியாய் வெறியார்மலர்க் கொன்றையினாய்
படையார்வெண் மழுவா பரமாய பரம்பரனே
கடியார்பூம் பொழில்சூழ் திருக்கற்குடி மன்னிநின்ற
வடிகேளெம் பெருமானடி யேனையு மஞ்சலென்னே. (௧)

மறையோர்வானவருந்தொழுதேத்திவணங்கநின்ற
விறைவாவெம்பெருமானெனக்கின்னமுதாயவனே
கறையார்சோலைகள்சூழ்திருக்கற்குடிமன்னிநின்ற
வறவாவங்கணனேயடியேனையுமஞ்சலென்னே. (௨)

சிலையான்முப்புரங்கள்பொடியாகச்சிதைத்தவனே
மலைமேன்மாமருந்தேமடமாதிடங்கொண்டவனே
கலைசேர்கையினனேதிருக்கற்குடிமன்னிநின்ற
வலைசேர்செஞ்சடையாயடியேனையுமஞ்சலென்னே. (௩)

செய்யார்மேனியனேதிருநீலமிடற்றினனே
மையார்கண்ணிபங்காமதயானையுரித்தவனே
கையார்சூலத்தினாய்திருக்கற்குடிமன்னிநின்ற
வையாவெம்பெருமானடியேனையுமஞ்சலென்னே. (௪)

சந்தார்வெண்குழையாய்சரிகோவணவாடையனே
பந்தார்மெல்விரலாளொருபாகமமர்ந்தவனே
கந்தார்சோலைகள்சூழ்திருக்கற்குடிமன்னிநின்ற
வெந்தாயெம்பெருமானடியேனையுமென்றுகொளே (௫)

அரையார்கீளொடுகோவணமுமரவுமசைத்து
விரையார்கொன்றையுடன்விளங்கும்பிறைமேலுடையாய்
கரையாரும்வயல்சூழ்திருக்கற்குடிமன்னிநின்ற
வரையாவெம்பெருமானடியேனையுமஞ்சலென்னே. (௬)

பாரோர்விண்ணவரும்பரவிப்பணிந்தேத்தநின்ற
சீரார்மேனியனேதிகழ்நீலமிடற்றினனே
காரார்பூம்பொழில்சூழ்திருக்கற்குடிமன்னிநின்ற
வாராவின்னமுதேயடியேனையுமஞ்சலென்னே (௭)

நிலனேநீர்வளிதீநெடுவானகமாகிநின்ற
புலனேபுண்டரிகத்தயன்மாலவன்போற்றிசெய்யுங்
கனலேகற்பகமேதிருக்கற்குடிமன்னிநின்ற
வனல்சேர்கையினனேயடியேனையுமஞ்சலென்னே (௮)

வருங்காலனுயிரைமடியத்திருமெல்விரலாற்
பெரும்பாலன்றனக்காய்ப்பிரிவித்தபெருந்தகையே
கரும்பாரும்வயல்சூழ்திருக்கற்குடிமன்னிநின்ற
விரும்பாவெம்பெருமானடியேனையும்வேண்டுதியே. (௯)

அலையார்தண்புனல்சூழ்ந்தழகாகிவிழவமரும்
கலையார்மாதவர்சேர்திருக்கற்குடிக்கற்பகத்தைச்
சிலையாவாணுதலாணல்லசிங்கடியப்பனுரை
விலையாமாலைவல்லாவியன்மூவுலகாள்பவரே. (௰)

திருச்சிற்றம்பலம்

---

கற்குடித் திருப்பதிகம் - ௩.

---

சுவாமிதிருநாமம் — உச்சீவநாயகர்.
தேவிதிருநாமம் — அஞ்சனாக்ஷி.

---

ஆ திருப்பதிகம் - ௭.

# ௫. மூக்கீச்சரம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

### பண் - செவ்வழி.

திருச்சிற்றம்பலம்

சாந்தம்வெண்ணீறெனப்பூசிவெள்ளஞ்சடைவைத்தவர்
காந்தளாரும்விரலேழையொடாடியகாரண
மாய்ந்துகொண்டாங்கறியநிறைந்தாரவரார்கொலோ
வேந்தன்மூக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோர்மெய்ம்மையே. (௧)

வெண்டலையோர்கலனாப்பலிதேர்ந்துவிரிசடைக்
கொண்டலாரும்புனல்சேர்த்துமையாளொடுங்கூட்டமா
விண்டவர்தம்மதிலெய்தபின்வேனிலவேள்வெந்தெழக்
கண்டவர்மூக்கீச்சரத்தெம்மடிகள்செய்கன்மமே. (௨)

மருவலார்தம்மதிலெய்ததுவும்மமானமதலையை
யுருவிலாரவ்வெரியூட்டியதும்முலகுண்டதாற
செருவிலாரும்புலிச்செங்கயலாணையினான்செய்த
பொருவின்மூக்கீச்சரத்தெம்மடிகள்செயும்பூசலே. (௩)

அன்னமன்னநடைச்சாயலாளோடழகெய்தவே
மின்னையன்னசடைக்கங்கையாள்மேவியகாரணந்
தென்னன்கோழியெழில்வஞ்சியுமோங்குசெங்கோலினான்
மன்னன்மூக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோர்மாயமே (௪)

விடமுனாரவழலவாயதோர்பாம்பரைவீக்கியே
நடமுனாரவழலாடுவர்பேயொடுநள்ளிருள்
வடமனீடுபுகழ்ப்பூழியன்றென்னவன்கோழிமன்
னடன்மன்மூக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோர்சசமே. (௫)

வெந்தநீறுமெய்யிற்பூசுவராடுவர்வீங்கிருள்
வந்தெனாவ்வளைகொள்வதுமிங்கொருமாயமா
மந்தணமாமானதன்னேரியன்செம்பியனாக்கிய
வெந்தைமூக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோரேதமே. (௬)

அரையிலாருங்கலையில்லவனாணொடுபெண்ணுமா
யுரையிலாரவ்வழலாடுவொன்றலர்காண்மினோ
விரவலார்தம்மதின்மூன்றுடன்வெவ்வழலாக்கினா
னரையன்மூக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோரச்சமே. (௭)

ராக்குநீர்ச்செஞ்சடைக்கேற்றதுங்கூற்றையுதைத்ததுங்
கூர்க்குநன்மூவிலைவேலவலனேந்தியகொள்கையு
மார்க்குமவ்வாயானரக்கனுரத்தைநெரித்தவவடன்
மூர்க்கன்மூக்கீச்சரத்தடிகள்செய்யாநின்றமொய்ம்பதே. (௮)

---

* மூக்கீச்சரம் என்பது உறையூர்.

நீருளாருமலர்மேலுறைவானெடுமாலுமாய்ச்
சீருளாருங்கழற்றேடமெய்த்தீத்திரளாயினான்
சீரினாலங்கொளிர்தென்னவன்செம்பியன்வில்லவன்
சேருமூக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோர்செம்மையே. (௯)

வெண்புலான்மார்பிடுதுகிலினர்வெற்றரையுழல்வா
ருண்பினாலேயுரைப்பார்மொழியூனமதாக்கொளே
லொண்புலால்வேன்மிகவல்லவனோங்கெழிற்கிள்ளிசேர்
பண்பின்மூக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோர்பைம்மையே. (௧௦)

மல்லையாருமமுடிமன்னனார்மூக்கீச்சரத்தடிகளைச்
செல்வராகநினையும்படிசேர்த்தியசெந்தமிழ்
நல்லராயவர்வாழ்பவர்காழியுண்ஞானசம்பந்தன
சொல்லவல்லாரவர்வானுலகாளவும்வல்லரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

சுவாமிதிருநாமம் - பஞ்சவர்ணநாதர்.
தேவிதிருநாமம் - காந்திமதியம்மை.

ஆ திருப்பதிகம் - அ.

# சா. திருச்சிராப்பள்ளி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

நன்றுடையானைத்தீயதிலானைநரைவெள்ளே
றொன்றுடையானையுமையொருபாகமுடையானைச்
சென்றடையாததிருவுடையானைச்சிராப்பள்ளிக்
குன்றுடையானைக்கூறவென்னுள்ளங்குளிருமே. (௧)

கைம்மகவேந்திக்கடுவனொடூடிக்கழைபாய்வான்
செம்முகமந்திகருவரையேறுஞ்சிராப்பள்ளி
வெம்முகவேழத்தீருரிபோர்த்தவிகிர்தாநீ
பைம்முகநாகமதியுடன்வைத்தல்பழியன்றே. (௨)

மந்தம்முழவம்மழலைததும்பவரைநீழற்
செந்தண்புனமுஞ்சுனையுஞ்சூழ்ந்தசிராப்பள்ளிச்
சந்தம்மலர்கள்சடைமேலுடையார்விடையூரு
மெந்தம்மடிகளடியார்க்கல்லலில்லையே. (௩)

துறைமல்குசாரற்சுனைமல்குநீலத்திடைவைகிச்
சிறைமல்குவண்டுந்தும்பியும்பாடுஞ்சிராப்பள்ளிக்
கறைமல்குகண்டன்கனலெரியாடுங்கடவுளெம்
பிறைமல்குசென்னியுடையவனெங்கள்பெருமானே. (௪)

கொலைவரையாதகொள்கையர்தங்கண்மதின்மூன்றுஞ்
சிலைவரையாகச்செற்றனரேனுஞ்சிராப்பள்ளித்
தலைவரைநாளுந்தலைவரல்லாமையுரைப்பீர்கா
ணிலவரைநீலமுண்டதும்வெள்ளைநிறமாமே. (௫)

வெய்யதண்சாரல்விரிநிறவேங்கைத்தண்போது
செய்யபொன்சேருஞ்சிராப்பள்ளிமேவியசெல்வனா
ர்தையலொர்பாகமகிழ்வர்நஞ்சுண்பர்தலையோட்டி
லையமுங்கொள்வராரிவர்செய்கையறிவாரே. (௬)

வேயுயர்சாரற்கருவிரலூகம்விளையாடுஞ்
சேயுயர்கோயிற்சிராப்பள்ளிமேவியசெல்வனார்
பேயுயர்கொள்ளிகைவிளக்காகப்பெருமானார்
தீயுகந்தாடறிருக்குறிப்பாயிற்றாகாதே. (௭)

மலைமல்குதோளன்வலிகெடவூன்றிமலரோன்றன்
றலைகலனாகப்பலிதிரிந்துண்பர்பழியோரார்
சொலவலவேதஞ்சொலவலகீதஞ்சொல்லுங்கால்
சிலவலபோலுஞ்சிராப்பள்ளிச்சேடர்செய்கையே. (௮)

அரப்பள்ளியானுமலருறைவானுமறியாமைக்
கரப்புள்ளிநாடிக்கண்டிலரேனுங்கல்சூழ்ந்த
சிரப்பள்ளிமேயவார்சடைச்செல்வர்மனைதோறு
மிரப்புள்ளீருமமையேதிலர்கண்டாலிகழாரே. (௯)

நாணாதுடைநீத்தோர்களுங்கஞ்சிநாட்காலை
யூணாப்பகலுண்டோதுவார்களுமுரைக்குஞ்சொற்
பேணாதுறுசீர்பெறுதுமென்னீர்பெம்மானார்
சேணார்கோயிற்சிராப்பள்ளிசென்றுசேர்மினே. (௧௦)

தேனயம்பாடுஞ்சிராப்பள்ளியானைத்திரைசூழ்ந்த
கானலஞ்சங்கேறுங்கழுமலவூரிற்கவுணியன்
ஞானசம்பந்தனலமிகுபாடலிவைவல்லா
ர்வானசம்பந்தத்தவரொடுமன்னிவாழ்வாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

மட்டுவார்குழலாளொடுமால்விடை
யிட்டமாவுகந்தேறுமிறைவனா
ர்கட்டுநீத்தவர்க்கின்னருள்செய்யுஞ்
சிட்டர்போலுஞ்சிராப்பள்ளிச்செல்வரே. (௧)

அரியயன்றலைவெட்டிவட்டாடினா
னரியயன்றொழுதேத்துமருமபொருள்
பெரியவன்சிராப்பள்ளியைப்பேணுவா
ரரியயன்றொழவங்கிருப்பார்களே. (௯)

அரிச்சிராப்பகலைவராலாட்டுண்டு
சுரிச்சிராதுநெஞ்சேயொன்றுசொல்லக்கே
டிருச்சிராப்பள்ளியென்றலுந்தீவினை
நரிச்சிராதுநடக்குநடக்குமே. (௰)

தாயுமாயெனக்கேதலைக்கண்ணுமாய்ப்
பேயனேனையுமாண்டபெருந்தகை
தேயநாதன்சிராப்பள்ளிமேவிய
நாயனாரென்னநம்வினைநாசமே. (௪,௫,௬,௭,௮,௯,௰)

திருச்சிற்றம்பலம்

---

திருச்சிராப்பள்ளித் திருப்பதிகம் - ௨.

---

சுவாமிதிருநாமம் - தாயுமானவர்.
தேவிதிருநாமம் - மட்டுவார்குழலி.

---

ஆ திருப்பதிகம் - ௰.

---

# ௭. திருவெறும்பியூர்.

## திருநாவுக்கரசுநாயனார்.

---

திருக்குறுந்தொகை.

---

திருச்சிற்றம்பலம்

விரும்பியூறுவிடேன்மடநெஞ்சமே
கரும்பினூறல்கண்டாய்கலந்தார்க்கவ
னிரும்பினூறலறாததோர்வெண்டலை
யெறும்பியூர்மலையானெங்களீசனே. (௧)

பிறங்குசெஞ்சடைப்பிஞ்ஞகன்பேணுசீர்க்
கறங்குபூதக்கணமுடைக்கண்ணுத
னறுங்குழன்மடவாளொடுநாடொறு
மெறும்பியூர்மலையானெங்களீசனே. (௨)

மருந்துவானவர்தானவர்க்கின்சுவை
புரிந்தபுன்சடைப்புண்ணியன்கண்ணுதல்
பொருந்துபூண்முலைமங்கைநல்லாளொடு
மெறும்பியூர்மலையானெங்களீசனே. (௩)

நிறங்கொள்கண்டத்துநின்மலனெம்மிறை
மறங்கொள்வேற்கண்ணிவாணுதல்பாகமா
வறம்புரிந்தருள்செய்தவெம்மங்கண
னெறும்பியூர்மலையானெங்களீசனே. (௪)

நறும்பொனுண்மலர்க்கொன்றையுநாகமுந்
துறும்புசெஞ்சடைத்தூமதிவைத்தவா
னுறும்பொன்மால்வரைப்பேதையொரோதொறு
மெறும்பியூர்மலையானெங்களீசனே. (௫)

கறும்பியூரவனைவைந்துளாகாயத்திற்
றிறம்பியூரவனமற்றும்பலவுள
குறும்பியூரவர்தோர்கூட்டகத்திட்டெனை
யெறும்பியூரரன்செய்தவியற்கையே. (௬)

மறந்துமற்றிதுபேரிடர்நாடொறுந்
திறம்பிநீநினையேன்மடநெஞ்சமே
புறஞ்செய்கோலக்குரம்பையிலிட்டெனை
யெறும்பியூரரன்செய்தவியற்கையே. (௭)

இன்பமும்பிறப்புமிறப்பினொடு
துன்பமுமுடனேவைத்தசோதியா
னன்பனேயரனேயென்றரற்றுவார்க்
கின்பனாகுமெறும்பியூரீசனே. (௮)

கண்ணிறைந்தகனபவளத்திரள்
விண்ணிறைந்தவிரிசுடர்ச்சோதியா
னுண்ணிறைந்துருவாயுயிராயவ
னெண்ணிறைந்தவெறும்பியூரீசனே. (௯)

நிறங்கொண்மால்வரையூன்றியெடுத்தலு
நறுங்குழன்மடவாணடுக்கெய்திட
மறங்கொளவாளரக்கன்வலிவாட்டினா
னெறும்பியூர்மலையெம்மிறைகாண்மினே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

பன்னியசெந்தமிழறியேன்கவியேன்மாட்டே
னெண்ணோடுபண்ணிறைந்தகலைகளாய
தன்னையுந்தன்றிறத்தறியாப்பொறியிலேனைத்
தன்றிறமுமறிவித்துநெறியுங்காட்டி
யன்னையையுமத்தனையும்போலவன்பா
யடைந்தேனைத்தொடர்ந்தென்னையாளாக்கொண்ட
தென்னெறும்பியூர்மலைமேன்மாணிக்கத்தைச்
செழுஞ்சுடரைச்சென்றடையப்பெற்றேனே. (௧)

பளிங்கினிழலுட்பதித்தசோதியானைப்
பசுபதியைப்பாசுபதவேடத்தானை
விளிந்தெழுந்தசலந்தரனைவீட்டினானை
வேதியனைவித்தகனைமேவிவைய
மளந்தவனைநானமுகனையல்லறீர்க்கு
மருமருந்தையாமாற்றிந[illegible]ர்ளந
தெளிந்தெறும்பியூர்மலைமே[illegible]மாணிக்கத்தைச்
செழுஞ்சுடரைச்சென்றடையப்பெற்றேனானே. (௨)

கருவையென்றன்மனத்திருந்தகருத்தைஞானக்
கடுஞ்சுடரைப்படிந்துகிடந்தமரரோத்து
முருவையண்டத்தொருமுதலையோதவேலி
யுலகினிறைதொழிலிறுதிடுவாய்நின்ற
மருவைவென்றகுழன்மடவாள்பாகம்வைத்த
மயானத்துமாசிலாமணியைவாசத்
திருவெறும்பியூர்மலைமேன்மாணிக்கத்தைச்
செழுஞ்சுடரைச்சென்றடையப்பெற்றேனானே. (௩)

பகழிபொழிந்தடலரக்காபுரங்கண்மூன்றும்
பாழ்படுத்தபாருசுடரைப்பரிந்துதன்னைப்
புகழுமன்பாக்கினைப்பமருமமுதைத்தேனைப்
புண்ணியனைப்புவனியதுமுழுதும்போத
வுமிழுமம்பொற்குன்றத்தைமுத்தின்றானை
யுமையவடம்பெருமானையிமையோரேத்துந்
திகழெறும்பியூர்மலைமேன்மாணிக்கத்தைச்
செழுஞ்சுடரைச்சென்றடையப்பெற்றேனானே. (௪)

பாரிடங்களுடன்பாடப்பயின்றாட்டம்
பயில்வானையயில்வாயசூலமேந்தி
நேரிடும்போர்மிகவல்லநிமலன்றன்னை
நினமலனையமமலர்கொண்டயனுமாலும்
பாரிடந்துமேலுயர்ந்துங்காணவண்ணம்
பரந்தானைநிமிர்ந்துமுனிகணங்களேத்துஞ்
சீரெறும்பியூர்மலைமேன்மாணிக்கத்தைச்
செழுஞ்சுடரைச்சென்றடையப்பெற்றேனானே. (௫)

காமுகிலாய்ப்பொழிவானைப்பொழிந்தமுந்நீர்
கரப்பானைக்கடியநடைவிடையொன்றேறி
யூர்பலவுந்திரிவானையூர்தாக
வொற்றியூருடையனாய்முற்றுமாண்டு
பேரொழுத்தொன்றுடையானைப்பிரமன்றானு
மாலவனுமிந்திரனுமந்திரத்தாலேத்துஞ்
சீரெறும்பியூர்மலைமேன்மாணிக்கத்தைச்
செழுஞ்சுடரைச்சென்றடையப்பெற்றேனானே. (௬)

நீணிலனுமந்தீயுநீருமற்றை
நெறியிலங்குமிருகாலுமாகாசமும

வானிலவுதாரகையுமண்ணும்விண்ணு
மன்னுயிருமென்னுயிருந்தானுஞ்செம்பொ
னணியென்றுமஞ்சனமாமலையேயென்று
மம்பவளத்திரளென்றுமறிந்தோரோத்துஞ்
சேணெறும்பியூர்மலைமேன்மாணிக்கத்தைச்
செழுஞ்சுடரைச்சென்றடையப்பெற்றேனானே. (எ)

அறந்தெரியாவூத்தைவாயறிவில்சிந்தை
யாரம்பக்குண்டரோடியாத்துநாளு
மறந்துமரன்றிருவடிகணிணையமாட்டா
மதியிலியேன்வாழ்வெலாமவாளாமண்மேற்
பிறந்தநாளெல்லவாளாவீசன்
போயிதறிசீரடிமைத்திறத்துளன்பு
செறிந்தெறும்பியூர்மலைமேன்மாணிக்கத்தைச்
செழுஞ்சுடரைச்சென்றடையப்பெற்றேனானே. (அ)

அறிவிலங்குமனத்தானையறிவார்க்கன்றி
யறியாதார்தந்திறத்தொன்றறியாதானைப்
பொறியிலங்குவாளரவம்புனைந்துபூண்ட
புண்ணியனைப்பொருதிரைவாய்நஞ்சமுண்ட
குறியிலங்குமிடற்றானைமடற்றேன்கொன்றைச்
சடையானைமடைதோறுங்கமலமென்பூச்
செறியெறும்பியூர்மலைமேன்மாணிக்கத்தைச்
செழுஞ்சுடரைச்சென்றடையப்பெற்றேனானே. (கூ)

அருந்தவத்தின்பெருவலியாலறிவதன்றி
யடலரக்கன்றடவரையையெடுத்தான்றிண்டோண்
முரிந்துநெரிந்தழிந்துபாதாளமுற்று
முனைகெடரம்பினையெடுத்துக்கீதம்பாட
விருந்தவனையேழுலகுமாகினானை
யெம்மானைக்கைம்மாவினுரிவைபோர்த்த
திருந்தெறும்பியூர்மலைமேன்மாணிக்கத்தைச்
செழுஞ்சுடரைச்சென்றடையப்பெற்றேனானே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

திருவெறும்பியூர்த்திருப்பதிகம் - உ.

---

சுவாமிதிருநாமம் - எறும்பீசர்.

தேவிதிருநாமம் - நறுங்குழனாயகி.

---

ஆ திருப்பதிகம் - ௧௨.

# அ. திருநெடுங்களம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - பழந்தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

மறையுடையாய்தோலுடையாய்வார்சடைமேல்வளரும்
பிறையுடையாய்பிஞ்ஞகனேயென்றுன்னைப்பேசினல்லாற்
குறையுடையார்குற்றமோராய்கொள்கையினாலுயர்ந்த
நிறையுடையாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (௧)

கனைத்தெழுந்தவெண்டிரைசூழ்கடலிடைநஞ்சுதன்னைத்
தினைத்தனையாமிடற்றில்வைத்ததிருந்தியதேவநின்னை
மனத்தகத்தோர்பாடலாடல்பேணியிராப்பகலும்
நினைத்தெழுவாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (௨)

நின்னடியேவழிபடுவானிமலாநினைக்கருத
வென்னடியானுயிரைவவ்வேலென்றடற்கூற்றுதைத்த
பொன்னடியேபரவிநாளும்பூவொடுநீர்சுமக்கு
நின்னடியாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (௩)

மலைபுரிந்தமன்னவன்றன்மகளையோர்பாகமகிழ்ந்தா
யலைபுரிந்தகங்கைதங்குமவிர்சடையாரூரா
தலைபுரிந்தபலிமகிழ்வாய்தலைவநின்றாணிழற்கீழ்
நிலைபுரிந்தாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (௪)

பாங்கினல்லார்படிமஞ்செய்வார்பாரிடமும்பலிசேர்
தூங்கிநல்லார்பாடலோடுதொழுகழலேவணங்கித்
தாங்கிநில்லாவன்பினோடுந்தலைவநின்றாணிழற்கீழ்
நீங்கிநில்லாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (௫)

விருத்தனாகிப்பாலனாகிவேதமோர்நான்குணர்ந்து
கருத்தனாகிக்கங்கையாளைக்கமழ்சடைமேற்கரந்தா
யருத்தனாயவாதிதேவனடியிணையேபரவு
நிருத்தர்கீதரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (௬)

கூறுகொண்டாய்மூன்றுமொன்றாக்கூட்டியோர்வெங்கணையா
மாறுகொண்டார்புரமெரித்தமன்னவனேகொடிமே
லேறுகொண்டாய்சாந்தமீதென்றெம்பெருமானணிந்த
நீறுகொண்டாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (௭)

குன்றினுச்சிமேல்விளங்குங்கொடிமதில்சூழிலங்கை
யன்றிநின்றவரக்கர்கோனையருவரைக்கீழடர்த்தா
யென்றுநல்லவாய்மொழியாலேத்தியிராப்பகலு
நின்றுநைவாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (௮)

வேழவெண்கொம்பொசித்தமாலும்விளங்கியநான்முகனுஞ்
சூழவெங்குநேடவாங்கோர்சோதியுளாகிநின்றாய்
கேழல்வெண்கொம்பணிந்தபெம்மான்கேடிலாப்பொன்னடியி
னீழல்வாழ்வாரிடர்களையாயநெடுங்களமேயவனே. (௯)

வெஞ்சொற்றஞ்சொலாக்கிநின்றவேடமிலாச்சமணுந்
தஞ்சமிலாச்சாக்கியருந்தத்துவமொன்றறியா
துஞ்சலில்லாவாய்மொழியாற்றோத்திரநின்னடியே
நெஞ்சில்வைப்பாரிடர்களையாயநெடுங்களமேயவனே. (௧௦)

நீடவல்லவார்சடையான்மேயநெடுங்களத்தைச்
சேடர்வாழுமாமறுகிற்சிரபுரக்கோனலத்தா
னாடவல்லபனுவன்மாலைஞானசம்பந்தன்சொன்ன
பாடல்பத்தும்பாடவல்லார்பாவம்பறையுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

சுவாமிதிருநாமம் - நித்தியசுந்தரர்.
தேவிதிருநாமம் - ஒப்பிலாநாயகி

---

ஆ திருப்பதிகம் - ௧௩

## ௯. மேலைக்காட்டுப்பள்ளி.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்

வாருமன்னுமமுலைமங்கையோர்பங்கின
னூருமன்னும்பலியுண்பதும்வெண்டலை
காருமன்னும்பொழில்சூழ்ந்தகாட்டுப்பள்ளி
நீருமன்னுஞ்சடைநிமலர்தநீர்மையே. (௧)

நிருத்தனார்நீள்சடைமதியொடுபாம்பணி
கருத்தனார்கடிபொழில்சூழ்ந்தகாட்டுப்பள்ளி
யருத்தனாரழகமாமங்கையோர்பாகமாப்
பொருத்தினார்கழலிணைபோற்றுதல்பொருளதே. (௨)

பண்ணினாரருமறைபாடினார்நெற்றியோர்
கண்ணினார்கடிபொழில்சூழ்ந்தகாட்டுப்பள்ளி
விண்ணினார்விரிபுனன்மேவினார்சடைமுடி
யண்ணலாரெம்மையாளுடையவெம்மடிகளே. (௩)

பணங்கொளுகமமணைக்கார்பபதுபலபலி
யுணங்கலோடுணைகலனுறைவதுகாட்டிடை
கணங்களகூடித்தொழுதேத்துகாட்டுப்பள்ளி
நிணங்கொள்சூலப்படைநிமலாதநீர்மையே. (௪)

வரையுலாஞ்சுக்கொடுவந்திழிகாவிரி
கரையுலாமிடுமணல்சூழ்ந்தகாட்டுப்பள்ளி
திரையுலாங்கங்கையுந்திங்களுஞ்சூடியங்
கரையுலாங்கோவணத்தடிகள்வேடங்களே (௫)

வேதனைவெண்மழுவேந்தினானங்கமுன்
னோதினானுமையொருகூறனொண்ணுதலிக
காதினாகடிபொழில்சூழ்ந்தகாட்டுப்பள்ளி
நாதனாதிருவடிநாளுநின்றேத்துமே (௬)

மையினார்மிடறனார்மான்மழுவேந்திய
கையினார்கடிபொழில்சூழ்ந்தகாட்டுப்பள்ளி
தையலோர்பாகமாத்தன்மதிசூடிய
வையனாரடிதொழவல்லலொன்றில்லையே. (௭)

சிலைதனுன்முப்புரஞ்செற்றவனசீர்மருவி
மலைதனுலவல்லரக்கனவலியாட்டிருள
கலைதனார்புறவணிபலகுகாட்டுப்பள்ளி
தலைதனாலவணங்கிடத்தவமதுவாகுமே (௮)

செங்கண்மாறிகழ்தருமலருறைதிசைமுகன்
றங்கையாற்றொழுதெழத்தழலுருவாயினன
கங்கையார்சடையினன்கருதுகாட்டுப்பள்ளி
யங்கையாற்றொழுமவர்க்கல்லலொன்றில்லையே (௯)

போதியாரிண்டியாரென்றவர்பொய்யுரை
வாதினாலுரையவைமெய்யலவைகலுங்
காரினார்கடிபொழில்சூழ்ந்தகாட்டுப்பள்ளி
யேரினாற்றொழுதெழவினையடர்வந்தெய்துமே. (௰)

பொருபுனல்புடையணிபுறவநன்னகர்மன
னருமறையவைவல்லவணிகொள்சம்பந்தனசொற்
கருமணிமிடற்றினன்கருதுகாட்டுப்பள்ளி
பரவியதமிழ்சொலப்பறையுமெய்ப்பாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

மாட்டுப்பள்ளிமகிழ்ந்துறைவீர்கெலாங்
கேட்டுப்பள்ளிகண்டீர்கெடுவீரிது
வோட்டுப்பள்ளிவிட்டோட்டலுமுன்னங்
காட்டுப்பள்ளியுளான்கழல்சேர்மினே. (௧)

மாடடைத்தேடிமகிழ்ந்துநீர்நும்முளே
நாடடுப்பொய்யெலாமபேசிடுநாணிலீா
கூட்டைவிட்டுயிரபோவதன்முன்னமே
காட்டுப்பள்ளியுளான்கழலசேர்மினே. (௨)

தேனைவென்றசொல்லாளொடுசெல்வமு
மூனைவிடடுயிரபோவதனமுன்னமே
கானவேடாகருதுஙகாடடுபபள்ளி
ஞானநாயகனைசசென்றுநண்ணுமே. (௩)

அருநதமும்மனையாளொடுமக்களும
பொருநதமிலலைபொலலாததுபோக்கிடுங
கருததனைகணணுதலணைஙல்காடடுப்பள்ளித
திருத்தன்சேவடியைசசென்றுசோமினே. (௪)

சுறறமுநதுணையுமமனைவாழ்க்கையு
மற்றபோதணையாரவரொன்றென்றே
கற்றவாகள்கருதுஙகாட்டுபபள்ளிப்
பெற்றமேறுமபிரானடிசோமினே. (௫)

அடடமபுஙகொனறையுமவனனியுமததமுந
துமபலசெய்சடைததூமணிசசோதியான
கடடமபன்றுதைகருதுஙகாடடுபபளளி
யுட்டமபிரனாகடோருறுதுணையாகுமே. (௬)

மெய்யின்மாசுடையாருடன்மூடுவாா
பொய்யைமெயயென்றுபுகருடன்வீழன்மின்
கையின்மானுடையான்காடடுப்பளளியெம
மையன்றனனடியேயடைாதுயமமினே. (௭)

வேலைவென்றகணணாளைவிருமபிநீ
சீலஙகெடடுததிகையனமின்பேதைகாள
காலையேதொழுஙகாட டுப்பள்ளியுறை
நீலகண்டனைசித்தனினைமினே. (௮)

இன்றுளாாநாளையிலலையெனுமபொரு
ளொன்றுமோராதுழிதருமூமாகா
என்றுவானவாககாகவிடமுணட
கணடனாகாடடுப்பள்ளிகணடுயமமினே. (௯)

எணணிலாவரக்கனமலையேநதிட
வெணணிநீணமுடிபத்துமிறுத்தவன்
கண்ணுளாாகருதுஙகாடடுபபளளியை
நண்ணுவாரவா்தமவினைநாசமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

மேலைககாடடுப்பள்ளித் திருபபதிகம - ௨.

சுவாமிதிருநாமம் - தீயாடிநாதர்.
தேவி திருநாமம - வார்கொண்டமுலையாள்.

ஆடு திருபபதிகம் - ௧௫.

# ௧௦. ஆலம்பொழில்.

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

கருவாகிக்கண்ணுதலாய்நின்றான்றன்னைக்
கமலத்தோன்றலையரிந்தகபாலியை
யுருவாகிமலைமகளோர்பாகத்தானை
யுணர்வெலாமானானையோசையாகி
வருவானைவலஞ்சுழியெம்பெருமான்றன்னை
மறைக்காமொயமுதன்முறையுமேய
திருவானைத்தென்பரம்பைக்குடியின்மேய
திருவாலம்பொழிலானைச்சிந்திநெஞ்சே (௧)

உரித்தானைக்களிறதன்றோல்போர்வையாக
வுடையானையுடைபுலியினதளேயாகத்
தரித்தானைச்சடையதன்மேற்கங்கையங்கைத்
தழலுருவைவிடமமுதாவுண்டிதெல்லாம்
பரித்தானைப்பவளமால்வரையன்றானைப்
பாம்பணியான்றனக்கன்றங்காழிநல்கிச்
சிரித்தானைத்தென்பரம்பைக்குடியின்மேய
திருவாலம்பொழிலானைச்சிந்திநெஞ்சே. (௨)

உருமூன்றாயுணர்வின்கண்ணொன்றானை
யோங்காரமெய்ப்பொருளையுடம்பினுள்ளாற்
கருவினறவெங்களைப்பறியான்றன்னைக்
காலனைத்தன்கழலடியாற்காய்ந்துமாணிக்
கருளினறவாரமுதையமரர்கோனை
யளநறியெம்பெருமானென்பார்க்கென்றுந்
திருவீன்றதென்பரம்பைக்குடியின்மேய
திருவாலம்பொழிலானைச்சிந்திநெஞ்சே. (௩)

பாரமுழுதாயவிசும்பாகிப்பாதாளமாம்
பரம்பரனைச்சுரும்பமருங்குழலாள்பாகத்
தாரமுதாமணிதில்லைக்கூத்தன்றன்னை
வாட்போக்கியம்மானையெம்மானென்று
வாரமதாமடியார்க்குவாரமாகி
வஞ்சனைசெய்வார்க்கென்றும்வஞ்சனாகுஞ்
சீரரசைத்தென்பரம்பைக்குடியின்மேய
திருவாலம்பொழிலானைச்சிந்திநெஞ்சே. (௪)

வரையார்ந்தமடமங்கைபங்கன்றன்னை
வானவர்க்கும்வானவனைமணியைமுத்தை

வெறியார்மலர்க்கொன்றைசூடினானை
வெள்ளானைவந்திறைஞ்சும்வெண்காட்டானை
யறியாதடிநாயேனகப்பட்டேனை
யல்லற்கடனின்றுமேறவாங்கி
நெறிதானிதுவென்றுகாட்டினானை
நிச்சனலிபிணிகடீர்ப்பான்றன்னைப்
பொறியாடரவார்த்தபுனிதன்றன்னைப்
பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனானே. (௪)

மிக்கானைவெண்ணீறுசண்ணித்தானை
விண்டார்புரமூன்றும்வேவநோக்கி
நக்கானைநான்மறைகள்பாடினானை
நல்லார்கள்பேணிப்பரவநின்ற
தக்கானைத்தண்டாமரைமேலண்ண
றலைகொண்டுமாத்திரைக்கணுலகமெல்லாம்
புக்கானைப்புண்ணியனைப்புனிதன்றன்னைப்
பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனானே. (௫)

ஆர்த்தானைவாசுகியையரைக்குக்கச்சா
வசைத்தானையழகாயபொன்னார்மேனிப்
பூத்தானத்தான்முடியைப்பொருந்தாவண்ணம்
புணர்ந்தானைப்பூங்கணையானுடலம்வேவப்
பார்த்தானைப்பரிந்தானைப்பனிநீர்க்கங்கை
படர்சடைமேற்பயின்றானைப்பதைப்பயானை
போர்த்தானைப்புண்ணியனைப்புனிதன்றன்னைப்
பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனானே. (௬)

எரித்தானையெண்ணார்புரங்கண்மூன்று
மிமைப்பளவிற்பொடியாகவெழிலார்கையா
லுரித்தானைமதகரியையுற்றுப்பற்றி
யுமையதனைக்கண்டஞ்சிநடுங்கக்கண்டு
சிரித்தானைச்சீரார்ந்தபூதஞ்சூழத்
திருச்சடைமேற்றிங்களும்பாம்பும்நீரும்
புரித்தானைப்புண்ணியனைப்புனிதன்றன்னைப்
பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனானே. (௭)

வைத்தானைவானோருலகமெல்லாம்
இறைஞ்சிமலர்கொண்டுநின்றுபோற்றும்
வித்தானைவேண்டிற்றொன்றீவான்றன்னை
விண்ணவர்தம்பெருமானைவினைகள்போக
வுய்த்தானையொலிகங்கைசடைமேற்றாங்கி
யொளித்தானையொருபாகத்துமையோடாங்கே
பொய்த்தானைப்புண்ணியனைப்புனிதன்றன்னைப்
பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனானே. (௮)

ஆண்டானைவானோருலகமெல்லா
மந்நாளறியாததக்கன்வேள்வி

மீண்டானைவானவர்களோடுங்கூடி
விரைமலர்மேனான்முகனுமாலுந்தேர
நீண்டானைநெருப்புருவமானான்றன்னை
நிலையிலாமும்மதிலுமவேவவில்லைப்
பூண்டானைப்புண்ணியனைப்புனிதன்றன்னைப்
பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனானே. (௯)

மறுத்தானைமலைகோத்தங்கெடுத்தான்றன்னை
மணிமுடியோடிருபதுதோணெரியக்காலா
லிறுத்தானையெழுநரம்பினிசைகேட்டானை
யெண்டிசைக்குங்கண்ணானைச்சிரமேலொன்றை
யறுத்தானையமரர்களுக்கமுதீந்தானை
யாவர்க்குந்தாங்கொணாநஞ்சமுண்டு
பொறுத்தானைப்புண்ணியனைப்புனிதன்றன்னைப்
பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

திருப்பூந்துருத்தித்திருப்பதிகம் - ௫.

சுவாமிதிருநாமம் - புஷ்பவனநாதர்.
தேவிதிருநாமம் - அழகார்ந்தநாயகி.

ஆ திருப்பதிகம் - ௧௧

# ௧௨. திருக்கண்டியூர்வீரட்டம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

வினவினேனறியாமையிலுரைசெய்மினீரருள்வேண்டுவீர்
கனைவிலார்புனற்காவிரிக்கரைமேயகண்டியூர்வீரட்டன்
றனமுனேதனக்கின்மையோதமராயினாரண்டமாளத்தான்
வனனிலவாழ்க்கைகொண்டாடிப்பாடியிவ்வையமாப்பலிதேர்ந்ததே. (௧)

உள்ளவாறெனக்குரைசெய்மினுயர்வாயமாதவம்பேணுவீர்
கள்ளவிழ்ப்பொழில்சூழுங்கண்டியூர்வீரட்டத்துறைகாதலான்
பிள்ளைவான்பிறைசெஞ்சடைம்மிசைவைத்ததும்பெருநீரொலி
வெள்ளந்தாங்கியதென்கொலோமிகுமங்கையாளுடனாகவே. (௨)

மண்டிமலையையெடுத்துமத்தாகவியவ்வாசுகியைத்
தண்டியமரர்கடைந்தகடலவிடநதனைட்ருளி
யுண்டபிரானருசொளிததபிரானஞ்சியோடிநன்னக்
கண்டபிரானல்லனோகண்டியூரண்டவானவனே. (௧0)

திருச்சிற்றம்பலம்

திருக்கண்டியூர்த் திருபபதிகம் - உ.

சுவாமிதிருநாமம் - வீரட்டேசா.
தேவிதிருநாமம - மங்களநாயகி.

ஆ திருப்பதிகம - உக

## ௧௩. சோற்றுத்துறை.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - தக்கராகம.

திருச்சிற்றம்பலம்

செப்பநெஞ்சேநெறிகொல்சிற்றின்பந்
துப்பனென்னாதருளேதுணையாக
வொப்பரொப்பர்பெருமானொளிவெண்ணீற்
றப்பர்சோற்றுத்துறைசென்றடைவோமே. (௧)

பாலுநெய்யுநயிருமபயின்றாடித
தோலுநூலுந்துதைந்தவரைமார்பர்
மாலுஞ்சோலைபுடைசூழ்மடமஞ்ஞை
யாலுஞ்சோற்றுத்துறைசென்றடைவோமே. (உ)

செய்யர்செய்யசடையர்விடையூர்வர்
கைகொள்வேலர்கழலர்கரிகாடர்
தையலாளோர்பாகமாயவெம
மையர்சோற்றுத்துறைசென்றடைவோமே. (௩)

பிணிகொளாக்கையொழியப்பிறப்புளீர்
துணிகொள்போரார்துளங்குமழுவாளர்
மணிகொள்கண்டர்மேயவார்பொழி
லணிகொள்சோற்றுத்துறைசென்றடைவோமே. (௪)

பிறையுமரவும்புனலுஞ்சடைவைத்து
மறையுமோதிமயானமிடமாக
வுறையுஞ்செல்வமுடையார்காவிரி
யறையுஞ்சோற்றுத்துறைசென்றடைவோமே. (௫)

துடிகளோடுமுழவம்விம்மவே
பொடிகள்பூசிப்புறங்காட்டரங்காகப்
படிகொள்பாணிபாடல்பயின்றாடும்
மடிகள்சோற்றுத்துறைசென்றடைவோமே. (௬)

சாடிக்காலன்மாளத்தலைமாலை
சூடிமிக்குச்சுவண்டாயவுருவார்தாம்
பாடியாடிப்பரவுவாருள்ளத்
தாடிசோற்றுத்துறைசென்றடைவோமே (௭)

பெண்ணோர்பாகமுடையார்பிறைச்சென்னிக்
கண்ணோர்பாகங்கலந்தநுதலினா
ரெண்ணாதரக்கனெடுக்கவூன்றிய
வண்ணர்சோற்றுத்துறைசென்றடைவோமே. (௮)

தொழுவாரிருவர்துயர்நீங்கவே
யழலாயோங்கியருள்கள்செய்தவன்
விழவார்மறுகில்விதியான்மிக்கவே
மெழிலார்சோற்றுத்துறைசென்றடைவோமே. (௯)

போதுசாற்றித்திரிவாரமண்குண்ட
ரோதுமோத்தையுணராதெழுநெஞ்சே
நீதிநின்றுநினைவார்வேடமாம்
மாதிசோற்றுத்துறைசென்றடைவோமே (௧௦)

அந்தண்சோற்றுத்துறையெம்மாதியைச்
சிந்தைசெய்ம்மினடியராயினீர்
சந்தம்பரவுஞானசம்பந்தன்
வந்தவாறேபுனைதலயழிபாடே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருநாவுக்கரசுநாயனார்

### திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

கொல்லையேற்றினர்கோளரவத்தினர்
தில்லைச்சிற்றம்பலத்துறைசெல்வனார்
தொல்லையூழியர்சோற்றுத்துறையர்க்கே
வல்லையாய்ப்பணிசெய்மடநெஞ்சமே. (௧)

முத்தியாகவொருதவஞ்செய்திலை
யத்தியாலடியார்க்கொன்றளித்திலை
தொத்துநின்றலர்சோற்றுத்துறையர்க்கே
பத்தியாற்பணிசெய்மடநெஞ்சமே. (௨)

மறறுநீமனமவையாதேமறுமையைக்கழிககவேண்டிற
பெற்றதோருபாயநதன்னாற்பிரானையேபிதற்றுமின்கள
சுறறுவநதரக்கனோடிககயிலாயமலையெடுககச
செறறுகநதருளிசசெய்தாாதிருசசோற்றுத்துறையனாரே. (௧௦)

திருச்சிற்றமபலம

---

## திருவிருததம.

திருச்சிற்றமபலம

காலையெழுநதுகடிமலாதூயனதாரகொணாநது
மேலையமராவிருமபுமிடமவிரையான்மலிநத
சோலைமணங்கமழசோற்றுததுறையுறைவாாசடைமேன
மாலைமதியமன்றேயெமபிரானுககழகியதே. (௧)

வண்டணைகொன்றையுமவன்னியுமததமுமவாளரவுங
கொண்டவோதேறுமுடியுடையான்குளிர்சோகழறகே
தொண்டணைநதாடியசோறறுததுறையுறைவாாசடைமேல
வெண்டலைமாலையன்றேயெமபிரானுககழகியதே (௨)

அளக்குநெறியினனன்பாகடமமனததாயநதுகொள்வான
விளக்குமடியவாமேலவினைதீாததிடுமவிண்ணவாகோன
றுளக்குங்குழையணிசோறறுததுறையுறைவாாசடைமேற
றிளைக்குமதியமன்றேயெம்பிரானுககழகியதே (௩)

ஆயநதகைவாளரவததொடுமால்விடையேறியெங்கும
போநதகைமான்டமாடுவாழ்பினுசடையிடையே
சேர்நதகைமமாமலாதூணியசோறறுததுறையுறைவா
ரேநதுகைசசூலமழுவெமபிரானுககழகியதே (௪)

கூற்றைககடநதுங்கோளரவாாததுங்கோளுழுவை
நீறறிறறதைநதுதிரியுமபரிசதுநாமறியோ
மாறறிறகிடநதுககலைபபவலைபபுணடலசாததொாகுஞ
சோற்றுததுறையுறைவாாசடைமேலதொாதுமதியே. (௫)

வல்லாடிநின்றுவலிபேசுவாாகோளாவலலசுரா
கொல்லாடிநினறுகுமைசகிலுமவானவாவநதிறைஞசச
சொல்லாடிநினறுபயிலகினறசோறறுததுறையுறைவா
விலலாடிநினறநிலையெமபிரானுக்கழகியதே. (௬)

ஆயமுடையதுநாமறியோமரணத்தவரைக்
காயக்கணைசிலைவாங்கியுமெயததுநதுயககறுததான்
றூயவெண்ணீறறினன்சோற்றுத்துறையுறைவாாசடைமேற்
பாயுமவெண்ணீாததிரைக்கங்கையெமமானுக்கழகியதே. (௭)

அண்டரமராகடைநதெழுநதோடியநஞசததனை
யுணடுமதனையொடுக்கவல்லான்மிககவுமபாகள்கோன்
றொணடுபயிலகினறசோறறுத்துறையுறைவாாசடைமே
லிண்டைமதியமன்றேயெமபிரானுககழகியதே. (௮)

மையனையகண்டத்தாய்மாலுமறையோ
வானவருமறியாதவண்ணச்சுடர்க்
கையவனேகடியிலங்கைக்கோனையன்று
கால்விரலாற்கதிர்முடியுந்தோளுநெரிய
மெய்யவனேயடியார்கள்வேண்டிற்றீயும்
விண்ணவனேவிண்ணப்பங்கேட்டுநல்குஞ்
செய்யவனேதிருச்சோற்றுத்துறையுளானே
திகழொளியேசிவனேயுன்னபயநானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்

அழனீரொழுகியனையசடையு
முழையீருரியுமுடையானிடமாங்
கழைநீர்முத்துங்கனகக்குவையுஞ்
சுழனீர்பொன்னிச்சோற்றுத்துறையே. (௧)

பண்டைவினைகள்பறியநின்ற
வண்டமுதல்வனமர்ந்திடமாம்
மிண்டைகொண்டனபிறையுருந்த
தொண்டர்பரவுஞ்சோற்றுத்துறையே (௨)

கோலவரவுங்கொக்கினிறகு
மாலைமதியும்வைத்தானிடமா
மாலுமயிலுமாடலளியுஞ்
சோலைதருநீர்ச்சோற்றுத்துறையே. (௩)

பளிக்குத்தாரைபவளவெற்பிற்
குளிக்கும்போலுங்கோமாற்கிடமா
மளிக்குமமாதவியலலான்மதுவந்
துளிக்குஞ்சோலைச்சோற்றுத்துறையே (௪)

உதையுங்கூற்றுக்கொல்காவிதிக்கு
வதையுஞ்செய்தமைந்தனிடமாந்
திதையுந்தாதுந்தேனுந்துமிறுந்
துதையும்பொன்னிச்சோற்றுத்துறையே. (௫)

ஓதக்கடனஞ்சினையுண்டிட்ட
பேதைப்பெருமான்பேணும்பதியாஞ்
சீதப்புனலுண்டெரியைக்காலுஞ்
சூதப்பொழில்சூழ்சோற்றுத்துறையே. (௬)

இறந்தாரென்புமெருக்குஞ்சூடிப்
புறங்காட்டாடும்புனிதன்கோயில்
சிறந்தார்சுற்றந்திருவென்றின்ன
துறந்தார்சேருஞ்சோற்றுத்துறையே. (௭)

காமன்பொடியாக்கண்ணொன்றிமைத்த
சேமக்கடலாருகந்தவிடமாந்
தேமென்குழலார்சேக்கைபுகைத்த
தாமமவிசும்பார்சோற்றுத்துறையே. (௮)

இலையாலன்பாலேத்துமவர்க்கு
நிலையாவாழ்வைநீத்தாரிடமாந்
தலையாற்றொழுந்தவத்தோர்களென்றுந்
தொலையாச்செல்வச்சோற்றுத்துறையே. (௯)

சுற்றார்தருசீர்ச்சோற்றுத்துறையுள்
முற்றாமதிசேர்முதல்வன்பாதத்
பற்றாரடியாரடிநாடூரன்
சொற்றானிவைசொற்றுணையாமே. (௧0)

திருச்சிற்றம்பலம்

சோற்றுத்துறைத் திருப்பதிகம் ௬.

சுவாமிதிருநாமம் - தொலையாச்செல்வர்
தேவிதிருநாமம் - ஒப்பிலாவம்மை.

ஆ திருப்பதிகம் - ௨௭.

## ௧௪. திருவேதிகுடி.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

நீறுவரியாடரவொடாமைமனவென்புநிரைபூண்பரிடப
மேறுவரியாவருமிறைஞ்சுகழலாதிபரிருந்தவிடமாந்
தாறுவிரிபூகமலிவாழைவிரைநாறவிணைவாளைமடுவில்
வேறுபிரியாதுவிளையாடவளமாருமவயல்வேதிகுடியே (௧)

சொற்பிரிவிலாதமறைபாடிநடமாடுவர்தொலாவனையுரிவை
மற்புரிபுயத்தினிதுமேவுவரெந்நாளுமவளாவானவர்தொழுத
துற்புரியநஞ்சமுதமாகமுனயின்றவரியன்றதொகுசீர்
வெற்பரையன்மங்கையொருபங்கர்நகரென்பதிருவேதிகுடியே (௨)

போழுமதிபூணரவுகொன்றைமலர்துன்றுசடைவென்றிபுகமேல்
வாழுநதிதாழுமருளாளரிருளாரிடறாமாதரிமையோர்
சூழுமிரவாளர்திருமார்பிலவிரிநூலர்வரிதோலருடைமேல்
வேழவுரிபோர்வையினர்மேவுபதியென்பதிருவேதிகுடியே. (௩)

நாரணன்றன்னொடுநான்முகன்றானுமாய்க்
காரணன்னடிமுடிகாணவொண்ணாவிடம்
மாரணங்கொண்டுபூசுரர்கள்வந்தடிதொழச்
சீரணங்கும்புகழ்த்தென்குடித்திட்டையே. (௯)

குண்டிகைக்கையுடைக்குண்டரும்புத்தரும்
பண்டுரைத்தேயிடும்பற்றுவிட்டார்தொழும்
வண்டிரைக்கும்பொழிற்றண்டலைக்கொண்டலார்
தெண்டிரைத்தண்புனற்றென்குடித்திட்டையே. (௧0)

தேனலார்சோலைசூழ்தென்குடித்திட்டையைக்
கானலார்கடிபொழில்சூழ்தருங்காழியுள்
ஞானமார்ஞானசம்பந்தன்செந்தமிழ்
பானலார்மொழிவலார்க்கில்லையாம்பாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

சுவாமிதிருநாமம் — பசுபதி
தேவிதிருநாமம் — உலகநாயகி.

ஆக திருப்பதிகம் ௩0.

## ௧௬. திருப்புள்ளமங்கை.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் — நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்

பாலுந்துறுதிரளாயினன்பரமன்பிரமன்றான்
போலுந்திறலவர்வாழ்தருபொழில்சூழ்புள்ளமங்கைக்
காலன்றிறலறச்சாடியகடவுள்ளிடங்கருதி
லாலந்துறைதொழுவார்தமையடையாவினைதானே. (௧)

மலையான்மகள்கணவன்மலிகடல்சூழ்தருதன்மைப்
புலையாயினகளைவானிடம்பொழில்சூழ்புள்ளமங்கைக்
கலையான்மலிமறையோரவர்கருதித்தொழுதேத்த
வலையார்புனல்வருகாவிரியாலந்துறையதுவே. (௨)

கறையார்மிடறுடையான்கமழ்கொன்றைச்சடைமுடிமேற்
பொறையார்தருகங்கைப்புனலுடையான்புள்ளமங்கைச்
சிறையார்தருகளிவண்டறைபொழில்சூழ்திருவாலந்
துறையானவனறையார்கழறொழுமின்றுதிசெய்தே. (௩)

தணியார்மதியரவின்னொடுவைத்தானிடமொய்த்தெம்
பணியாயவனடியார்தொழுதேத்தும்புள்ளமங்கை
மணியார்தருகனகம்மவைவயிரத்திரளோடு
மணியார்மணலணைகாவிரியாலந்துறையதுவே. (௪)

மெய்த்தன்னுறும்வினைதீர்வகைதொழுமின்செழுமலரின்
கொத்தின்னொடுசந்தாரகில்கொணர்காவிரிக்கரைமேற்
பொத்தின்னிடையாந்தைபலபாடும்புளமங்கை
யத்தன்னமையாளவானிடமாலந்துறையதுவே. (௫)

மன்னானவனுலகிற்கொருமழையானவன்பிழையில
பொன்னானவன்முதலானவன்பொழில்சூழ்புளமங்கை
யென்னானவனிசையானவனிளஞாயிறின்சோதி
யன்னானவனுறையுமிடமாலந்துறையதுவே. (௬)

முடியார்தருசடைமேன்முளையிளவெண்மதிசூடிய
பொடியாடியதிருமேனியர்பொழில்சூழ்புளமங்கைக்
கடியார்மலர்புனல்கொண்டுதன்கழலேதொழுதேத்து
மடியார்தமக்கினியானிடமாலந்துறையதுவே.

இலங்கைம்மன்னனமுடிதோளிறவெழிலார்திருவிரலா
லிலங்கல்லிடையடர்த்தானிடம்வேதம்பயின்றேத்திப
புலன்கடமைவென்றார்புகழவர்வாழ்புளமங்கை
யலங்கன்மலிசடையானிடமாலந்துறையதுவே. (௮)

செறியார்தருவெள்ளைத்திருநீற்றின்றிருமுண்டப
பொறியார்தருபுரிநூல்வரைமார்பன்புளமங்கை
வெறியார்தருகமலத்தயன்மாலுந்தனைநாடி
யறியாவகைநின்றானிடமாலந்துறையதுவே. (௯)

நீதியறியாதாரமணகையரொடுமண்டைப்
போதியவரோதுமுரைகொள்ளார்புளமங்கை
யாதியவர்கோயிறிருவாலந்துறைதொழுமின்
சாதிமிகுவானோர்தொழுதன்மைபெறலாமே. (௧௦)

பொந்தின்னிடைத்தேனூறியபொழில்சூழ்புளமங்கை
யந்தண்புனல்வருகாவிரியாலந்துறையானைக்
கந்தம்மலிகமழ்காழியுட்கலைஞானசம்பந்தன்
சந்தம்மலிபாடல்சொலியாடத்தவமாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிதிருநாமம் - பசுபதி.
தேவிதிருநாமம் - பல்வளைநாயகி.

௯௨ திருப்பதிகம் - ௩௧

# ௧௭. சக்கரப்பள்ளி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

படையினார்வெண்மழுப்பாயபுலித்தோலரை
யுடையினாருமையொருகூறனூர்வதோரா
விடையினார்வெண்பொடிப்பூசியாவிரிபுனற
சடையினாருறைவிடஞ்சக்கரப்பள்ளியே (௧)

பாடினாருமறைபனிமதிசடைமிசைச
சூடினாபடுதலைதுன்னெருக்கத்தொடு
நாடினாரிடுபலிநண்ணியோர்காலனைச
சாடினார்வளநகர்சக்கரப்பள்ளியே. (௨)

மின்னினார்சடைமிசைவிரிகதிர்மதியமும
பொன்னினார்கொன்றையும்பொறிகிளரரவமுந
துன்னினாருலகெலாந்தொழுதெழநான்மறை
தன்னினார்வளநகர்சக்கரப்பள்ளியே. (௩)

நலமலிகொள்கையார்நான்மறைபாடலா
வலமலிமழுவினார்மகிழுமூர்வண்டறை
மலர்மலிசலமொடுவந்திழிகாவிரி
சலசலமணிகொழிசக்கரப்பள்ளியே. (௪)

வெந்தவெண்பொடியணிவேதியாவிரிபுன
லந்தமிலணிமலைமங்கையோடமருமூர்
கந்தமாமலரொடுகாரகிலபன்மணி
சந்திரோடணைபுனற்சக்கரப்பள்ளியே. (௫)

பாங்கினான்முப்புரம்பாழ்படவெஞ்சிலை
வாங்கினார்வானவர்தானவர்வணங்கிட
வோங்கினாருமையொருகூறொடுமொலிபுன
றாங்கினாருறைவிடஞ்சக்கரப்பள்ளியே. (௬)

பாரினார்தொழுதெழுபரவுபல்லாயிரம
பேரினார்பெண்ணொருகூறனார்பேரொலி
நீரினார்சடைமுடிநிறைமலர்க்கொன்றையந
தாரினார்வளநகர்சக்கரப்பள்ளியே. (௭)

முதிரிலாவெண்பிறைசூடினார்முன்னநா
ளெதிரிலாமுப்புரமெரிசெய்தாரவர்தமை
யதிரிலாவல்லரக்கன்வலிவாட்டிய
சதுரனார்வளநகர்சக்கரப்பள்ளியே. (௮)

துணிபடுகோவணஞ்சுண்ணவெண்பொடியினர்
பணிபடுமார்பினர்பனிமதிச்சடையினர்
மணிவணனவனொடுமலர்மிசையானையுந்
துணிவினர்வளநகர்சக்கரப்பள்ளியே. (௯)

உடம்புபோர்சீவரருண்டொழிற்சமணர்கள்
விடம்படுமுரையவைமெய்யலவிரிபுனல்
வடம்படுமலர்கொடுவணங்குமின்வைகலுந்
தடம்புனல்சூழ்தருசக்கரப்பள்ளியே. (௧௦)

தண்வயல்புடையணிசக்கரப்பள்ளியெங்
கண்ணுதலவனடிகழுமலவளநகர்
நண்ணியசெந்தமிழ்ஞானசம்பந்தன்சொற்
பண்ணியவிவைசொலப்பறையுமெய்ப்பாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

சுவாமிதிருநாமம் – ஆலந்துறையார்.
தேவிதிருநாமம் – அல்லியங்கோதை.

ஆக திருப்பதிகம் - ௩௨.

# ௧௮. திருக்கருகாவூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் – கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்

முத்திலங்குமுறுவல்லுமையஞ்சவே
மத்தயானைமறுகவ்வுரிவாங்கியக்
கத்தைபோர்த்தகடவுள்கருகாவூரெம்
மத்தர்வண்ணமழலுமழல்வண்ணமே. (௧)

விழுதுவல்லசடையான்வினையுள்குவார்க்
கழுதநீழலகலாததோர்செல்வமாங்
கழுதமுல்லைகமழ்கின்றகருகாவூ
ரமுதர்வண்ணமழலுமழல்வண்ணமே. (௨)

பழகவல்லசிறுத்தொண்டர்பாவினிசை
குழகனென்றுகுழையாவழையாவருங்
கழல்கொள்பாடலுடையார்கருகாவூரெம்
மழகர்வண்ணமழலுமழல்வண்ணமே. (௩)

பொடிமெய்பூசிமலர்கொய்துபுணர்ந்துடன்
செடியரல்லாவுள்ளநலஙியசெல்வத்தர்
கடிகொணமுலலைகமழுஙகருகாவூரெம்
மடிகள்வன்னம்மழலுமமழலவண்ணமே (ச)

மையலின்றிமலர்கொயதுவணங்கிடச
செய்யவுள்ளமமிகநலஙியசெலவத்தர்
கைதன்முலலைகமழுஙகருகாவூரெம
மையாவண்ணமமழலும்மழல்வணணமே. (ரு)

மாசிறுண்டாமலாகொணடுவணஙகிட
வாசையாரவருணலஙியசெலவததா
காய்சினத்தவிடையாாகருகாவூரெம்
பீசர்வண்ணம்மெரியுமமெரிவணணமே. (சா)

வெநதநீறுமெயபூசியவேதியன்
சிநதைநின்றருணலஙியசெல்வத்தன்
கநதமவவலகமழுங்கருகாவூரெம்
மெநதைவண்ணமமெரியும்மெரிவணணமே. (எ,அ)

பண்ணினோமொழியாளையொாபாகனுர்
மண்ணுகோலம்முடையம்மலராறெடுங
கணணனோடவரியாாகருகாவூரெம
மண்ணலவண்ணமமழலும்மழலவன்னமே. (கூ)

போாததமெய்யினாபோதுழல்வாாகள்சொற்
றீாத்தமென்றுதெளிவீாதெளியேன்மின
காாததண்முலலைகமழுங்கருகாவூரெம
மாாததாவணணமமழலுமமழலவணணமே. (க௦)

கலவமஞ்ஞையுலவுங்கருகாவூா
நிலவுபாடலுடையானறன்னீள்கழல்
குலவுஞானசம்பநதனசெநதமிழ
சொலவலலாரவாதொலவினைதீருமே. (கக)

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசுநாயனர்.

### திருததாணடகம

திருச்சிற்றம்பலம்

குருகாம்வயிரமாங்கூறுநாளாங
கொளளுங்கிழமையாங்கோளேதானும
பருகாவமிர்தமாமபாலினெய்யாம்
பழததினிரதமாமபாட்டிற்பண்ணு
மொருகாலுமையாளோாபாகனுமா
முன்னின்றநாவிறகுரையாடியாங்
கருவாயுலகுகமுனனேதோன்றுங
கண்ணுங்கருகாவூரெந்தைதானே. (க)

வித்தாமுளையாகுமவேரோதானும்
வேண்டுருவமாம்விரும்பிநின்ற
பத்தாமடியார்க்கோர்பாங்கனுமாய்
பானிறமாம்பரஞ்சோதிதானேயாகும்
தொத்தாமமரர்கணஞ்சூழ்ந்துபோற்றத்
தோன்றாதென்னுள்ளத்தினுள்ளேநின்ற
கத்தாமடியேற்குக்காணுங்காட்டுங்
கண்ணாங்கருகாவூரெந்தைதானே. (௨)

பூத்தானும்பூவினிறத்தானுமாம
பூக்குளால்வாசமாய்மன்னிநின்ற
கோத்தானுங்கோல்வளையாள்கூறனுங்
கொண்டசமயத்தார்தேவனுகி
யேத்தாதார்க்கென்றுமிடர்துன்ப
மீவானுமென்னெஞ்சத்துள்ளேநின்று
காத்தானுங்காலனடையாவண்ணங்
கண்ணாங்கருகாவூரெந்தைதானே (௩)

இரவனுமெல்லினுடமாடியா
மெண்டிசைக்குந்தேவனுமென்னுள்ளானு
மரவனுமல்லலறுப்பானுமா
மாகாயமூர்த்தியாமானேறேறுங்
குரவனுங்கூற்றையுதைத்தானுனுங்
கூறுதவஞ்சக்குயலார்க்கென்றுங்
கரவனுங்காட்சிக்கெளியானுமாங்
கண்ணாங்கருகாவூரெந்தைதானே. (௪)

படைத்தானும்பாரையிடந்தானுக்குப்
பரிசொன்றறியாமைநின்றானு
முடைத்தானுமொன்னார்புரங்கண்மூன்று
மொள்ளழலாலமூட்டியொருக்கிநின்று
வடைத்தானுஞ்சூலமழுவோடாக
மசைத்தானுமானேறுஞ்சேர்ந்தானுங்
கடைத்தானுங்கள்ளமறிவாரெஞ்சிற்
கண்ணாங்கருகாவூரெந்தைதானே. (௫)

மூலனுமூர்த்தியாமுன்னேதானு
மூவாதமேனிமுக்கண்ணினானுஞ்
சீலனுஞ்சேர்ந்தாரிடர்காக்குஞ்
செல்வனுஞ்செஞ்சுடர்க்கோர்சோதிதானு
மாலனுமங்கையோர்பங்கனுக்கு
மன்றாடியாம்வானோர்தங்கட்கெல்லாங்
காலனுங்காலனைக்காய்ந்தானுங்
கண்ணாங்கருகாவூரெந்தைதானே. (௬)

அளைசேரரவனுமாலத்தானு
மாதிரைநாளானுமண்டவானோ
திரைசேர்திருமுடித்திங்களானுந்
தீவினைநாசனென்சிந்தையானு

முனைசேருலகத்தாருள்ளானுமா
முமையாளோர்பாகனுமோதவேலிக்
கனைசேர்கடனஞ்சையுண்டானுங்
கண்ணுங்கருகாவூரெந்தைதானே. (எ)

துடியாந்துடியின்முழக்கந்தானுஞ்
சொல்லுவார்சொல்லெல்லாஞ்சோதிப்பானும்
படிதானும்பாவமறுப்பானும்
பானீற்றனும்பரஞ்சோதிதானுங்
கொடியானுங்கூற்றையுதைத்தானுங்
கூறுதவஞ்சகக்குயலாக்கென்றுங்
கடியானுங்காட்சிக்கரியானுங்
கண்ணுங்கருகாவூரெந்தைதானே. (அ)

விட்டுருவங்கிளர்கின்றசோதியானும்
விண்ணவர்க்குமறியாதசூழலானும்
பட்டுருவமால்யானைத்தோல்கீண்டானும்
பலபலவும்பாணிபயின்றான்றானு
மெட்டுருவமூர்த்தியாமெண்டோளானு
மென்னுச்சிமேலானுமெம்பிரானுங்
கட்டுருவங்கடியானைக்காய்ந்தானுங்
கண்ணுங்கருகாவூரெந்தைதானே. (௯)

பொறுத்திருந்தபுள்ளூர்வானுள்ளானுகி
யுள்ளிருந்தங்குணர்த்துங்கருவானான்றானுய்ச்
செறுத்திருந்தமும்மதிலகண்மூன்றும்வேவச்
சிலைகுனியத்தீமடுத்ததிண்மைதானு
மறுத்திருந்தகையானுமந்தாரல்லி
யிருந்தானையொருதலையைத்தெரியநோக்கிக்
கறுத்திருந்தகண்டமுடையான்போலுங்
கண்ணுங்கருகாவூரெந்தைதானே. (௧௦)

ஒறுத்தானுமொன்னார்புரங்கண்மூன்று
மொள்ளழலைமாட்டியுடனேவைத்து
விறுத்தானுமெண்ணன்முடிகள்பத்து
மிசைந்தானுமின்னிசைகள்கேட்டானுங்
மறுத்தானுமஞ்சுமடக்கியங்கை
யாகாயமந்திரமுமானானுங்
கறுத்தானுங்காலனைக்காலால்வீழக்
கண்ணுங்கருகாவூரெந்தைதானே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கருகாவூர்த்திருப்பதிகம் - ௨.

---

சுவாமிதிருநாமம் - முல்லைவனநாதர்.
தேவிதிருநாமம் - கரும்பனையாள்.

---

ஆ திருப்பதிகம் - ௩௪.

---

# ௧௬. திருப்பாலைத்துறை.

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

நீலமாமணிகண்டத்தரீர்சடைக்
கோலமாமதிகங்கையுங்கூட்டினார்
சூலமான்மழுவேந்திச்சுடர்முடிப்
பானெய்யாடுவர்பாலைத்துறையரே. (௧)

கவளமாகளிற்றின்னுரிபோர்த்தவர்
தவளவெண்ணகைமங்கையோர்பங்கினர்
திவளவானவர்போற்றித்திசைதொழும்
பவளமேனியர்பாலைத்துறையரே. (௨)

மின்னினுண்ணிடைக்கன்னியர்மிக்கெங்கும்
பொன்னிநீர்மூழ்கிப்போற்றியடிதொழ
மன்னிநான்மறையோடுபல்கீதமும்
பன்னினாரவர்பாலைத்துறையரே. (௩)

நீடுகாடிடமாய்நின்றபேய்க்கணங்
கூடுபூதங்குழுமிநின்றார்க்கவே
யாடினாரழகாகியநான்மறை
பாடினாரவர்பாலைத்துறையரே. (௪)

சித்தர்கன்னியர்தேவர்கடானவர்
பித்தர்நான்மறைவேதியர்பேணிய
வத்தனேநமையாளுடையாயெனும்
பத்தர்கட்கன்பர்பாலைத்துறையரே. (௫)

விண்ணினார்பணிந்தேத்தவியப்புறு
மண்ணினார்மறவாதுசிவாயவென்
றெண்ணினார்க்கிடமாவெழில்வானகம்
பண்ணினாரவர்பாலைத்துறையரே. (௬)

குரவனார்கொடுகொட்டியுங்கொக்கரை
விரவினார்பண்கெழுமியவீணையு
மருவுநாண்மலர்மல்லிகைசெண்பகம்
பரவுநீர்ப்பொன்னிப்பாலைத்துறையரே. (௭)

தொடருந்தொண்டரைத்துக்கந்தொடர்ந்துவந்
தடரும்போதரனாயருள்செய்பவர்
கடலினஞ்சணிகண்டர்கடிபுனற்
படருஞ்செஞ்சடைப்பாலைத்துறையரே. (௮)

மேகந்தோய்பிறைசூடுவார்மேகலை
நாகந்தோய்ந்தவரையினர்நல்லியற்
போகந்தோய்ந்தபுணர்முலைமங்கையோர்
பாகந்தோய்ந்தவர்பாலைத்துறையரே. (௯)

வெங்கண்வாளரவாட்டிவெருட்டுவ
ரங்கணாரடியார்க்கருணல்குவார்
செங்கண்மாலயன்றேடற்கரியவர்
பைங்கணேறுடையார்பாலைத்துறையரே. (௧௦)

உரத்தினாலரக்கன்னுயர்மாமலை
நெருக்கினானைநெரித்தவன்பாடலு
மிரக்கமாவருள்செய்தபாலைத்துறை
கரத்தினாற்றொழுவார்வினையோயுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

சுவாமிதிருநாமம் - பாலைவனநாதர்
தேவிதிருநாமம் - தவளவெண்ணகையாள்.

ஆ திருப்பதிகம் - ௩௫.

# ௨௦. திருநல்லூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

கொட்டும்பறைசீராற்குழுமவனலேந்தி
நட்டம்பயின்றாடுநல்லூர்ப்பெருமானை
முட்டின்றிருபோதுமுனியாதெழுந்தன்பு
பட்டமனத்தார்களறியார்பாவமே. (௧)

ஏறில்லெருதேறுமெழிலாயிழையோடும்
வேறும்முடனுமாம்விகிர்தரவரென்ன
நாறும்மலர்ப்பொய்கைநல்லூர்ப்பெருமானைக்
கூறும்மடியார்கட்கடையாகுற்றமே. (௨)

சூடுமிளந்திங்கள்சுடர்பொற்சடைதாழ
வோடுண்கலனாகவூரூரிடுபிச்சை
நாடுநெறியானைநல்லூர்ப்பெருமானைப்
பாடும்மடியார்கட்கடையாபாவமே. (௩)

நீத்தநெறியானைநீங்காத்தவத்தானை
நோக்கநெறியானைநல்லூர்ப்பெருமானைக்
காத்தநெறியானைக்கைகூப்பித்தொழு
தேத்துமடியார்கட்கில்லையிடர்தானே. (௪)

ஆகத்துமைகேள்வனரவச்சடைதாழ
நாகமசைத்தானைநல்லூர்ப்பெருமானைத்
தாகம்புகுந்தண்மித்தாள்கடொழுந்தொண்டர்
போகமனத்தராய்ப்புகழத்திரிவாரே. (௫)

கொல்லுங்களியானையுரிபோர்த்துமையஞ்ச
நல்லநெறியானைநல்லூர்ப்பெருமானைச்
செல்லுநெறியானைச்சேர்ந்தாரிடர்தீரச்
சொல்லுமடியார்களறியார்துக்கமே (௬)

எங்கள்பெருமானையிமையோர்தொழுதேத்து
நங்கள்பெருமானைநல்லூர்ப்பிரியில்லா
தங்கைதலைக்கேற்றியாரென்றடிநீழற்
றங்குமனத்தார்கடமொற்றறுப்பாரே. (௭)

காமனெழில்வாட்டிக்கடல்சூழிலங்கைக்கோ
றாமமிறுத்தானைநல்லூர்ப்பெருமானை
யேமமனத்தராயிகழாதெழுந்தொண்டர்
தீபமனத்தார்களறியார்தீயவே. (௮)

வண்ணமலரானுமவையாளந்தானு
நண்ணலரியானைநல்லூர்ப்பெருமானைத்
தண்ணமலர்தூவித்தாள்கடொழுதேத்து
வெண்ணுமடியார்கட்கில்லையிடுக்கணே. (௯)

பிச்சக்குடைநீழற்சமணர்சாக்கியர்
நிச்சமலர்தூற்றநின்றபெருமானை
நச்சுமிடற்றானைநல்லூர்ப்பெருமானை
யெச்சுமடியார்கட்கில்லையிடர்தானே (௧௦)

தண்ணம்புனற்காழிஞானசம்பந்த
னண்ணும்புனல்வேலிநல்லூர்ப்பெருமானை
வண்ணம்புனைமாலைவைகலேத்துவார்
விண்ணுநிலனுமாயவிளங்கும்புகழாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பெண்ணமருந்திருமேனியுடையீர்பிறங்குசடைதாழப்
பண்ணமருநான்மறையேபாடியாடல்பயில்கின்றீர்
திண்ணமருமபைம்பொழிலும்வயலுஞ்சூழ்ந்ததிருநல்லூர்
மண்ணமருங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௧)

அலைமல்குதண்புனலும்பிறையுஞ்சூடியங்கையிற்
கொலைமல்குவெண்மழுவுமனலுமேந்துங்கொள்கையீர்
சிலைமல்குவெங்கணையாற்புரமூன்றெரித்தீர்திருநல்லூர்
மலைமல்குகோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௨)

குறைநிரம்பாவெண்மதியஞ்சூடிக்குளிர்புன்சடைதாழப்
பறைநவின்றபாடலோடாடல்பேணிப்பயில்கின்றீர்
சிறைநவின்றதண்புனலும்வயலுஞ்சூழ்ந்ததிருநல்லூர்
மறைநவின்றகோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௩)

கூனமரும்வெண்பிறையும்புனலுஞ்சூடுங்கொள்கையீர்
மானமரும்மென்விழியாள்பாகமாகுமாண்பினீர்
தேனமரும்பைம்பொழிலின்வண்டுபாடுந்திருநல்லூர்
வானமருங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௪)

நிணங்கவருமூவிலையுமனலுமேந்திநெறிகுழலா
ளணங்கமரும்பாடலோடாடன்மேவுமழகினீர்
இணங்கவருமாடரவும்பிறையுஞ்சூடித்திருநல்லூர்
மணங்கமழுங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௫)

காரமருவுபூங்கொன்றைசூடிக்கமழ்புன்சடைதாழ
வாரமருவுமென்முலையாள்பாகமாகுமாண்பினீர்
தேரமருவுநெடுவீதிக்கொடிகளாடுந்திருநல்லூர்
ஏரமருவுகோயிலேகோயிலாகவிருந்தீரே (௬)

ஊனேறும்வெண்மழுவுமனலுமேந்தியுமைகாண
மீனேறுந்திசைநிறையவோங்கியாடும்வேடத்தீர்
தேனேறும்பைம்பொழிலின்வண்டுபாடுந்திருநல்லூர்
வானேறுங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௭)

காதமரும்வெண்குழையீர்கறுத்தவரக்கன்மலையெடுப்ப
மாதமருமென்மொழியாண்மறுகும்வண்ணங்கண்டுகந்தீர்
தீதமராவந்தணர்கள்பரவியேத்துந்திருநல்லூர்
மாதமருங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௮)

போதின்மேலயன்றிருமால்போற்றியும்மைக்காணாது
நாதனேயிவனென்றுநயந்தேத்தமகிழ்ந்தளித்தீர்
தீதிலாவந்தணர்கடீமூன்றோம்புந்திருநல்லூர்
மாதராளவளோடுமன்னுகோயின்மகிழ்ந்தீரே. (௯)

பொல்லாதசமணரொடுபுறங்கூறுஞ்சாக்கியரொன்
றல்லாதாரறவுரைவிட்டடியார்கள்போற்றவே
நல்லார்களந்தணர்களுமேத்துந்திருநல்லூர்
மல்லார்ந்தகோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௰)

கொந்தணவும்பொழில்புடைசூழ்கொச்சைமேவுகுலவேந்தன்
செந்தமிழின்சம்பந்தன்சிறைவண்புனல்சூழ்திருநல்லூர்ப்
பந்தணவுமெல்விரலாள்பங்கன்றன்னைப்பயில்பாடல்
சிந்தனையாலுரைசெய்வார்சிவலோகஞ்சேர்ந்திருப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

## திருவிராகம்

### பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

வண்டிரியவிண்டமலர்மல்குசடைதாழவிடையேறிப்
பண்டெரிகைகொண்டபரமன்பதியதென்பரயலே
நண்டிரியநாரையிரைதேரவரைமேலருவிமுத்தந்
தெண்டிரைகண்மோதவிரிபோதுகமழுந்திருநல்லூரே. (க)

பல்வளருநாகமரையார்த்துவரைமங்கையொருபாக
மல்லவொருபுயநகிலணிவித்துமகிழும்பரமனிடமாஞ்
சொல்வளரிசைக்கிளவிபாடிமடவார்நடமதாடச்
செல்வமறையோர்கண்முறையேத்தவளருந்திருநல்லூரே. (உ)

நீடுவரைமேருவிலதாகநிகழ்நாகமழலம்பாற்
கூடலர்கண்மூவெயிலெரித்தகுழகன்குலவுசடைமே
லேடுலவுகொன்றைபுனைநின்றுநிகழுநிமலனிடமாஞ்
சேடுலவுதாமரைகணீடுவயலார்திருநல்லூரே. (ங)

கருகுபுரிமிடறர்கரிகாடரெரிகைப்பதனிலேந்தி
யருகுவருகரியையுரியதளர்படவரவரிடம்வினவின்
முருகுவிரிபொழிலின்மணநாறமயிலாலமரமேறித்
திருகுசினமந்திகனிசிந்தமதுவார்திருநல்லூரே. (ச)

பொடிகொடிருமார்பர்புரிநூலர்புனல்பொங்கரவுதங்கு
முடிகொள்சடைதாழவிடையேறுமுதலாளரவரிடமா
மிடிகொண்முழவோசையெழிலார்செய்தொழிலாளர்விழமல்கச்
செடிகொள்வினையகலமனமேவியவர்சேர்திருநல்லூரே. (ரு)

புற்றரவர்நெற்றியொர்கணொற்றைவிடையூர்வரடையாளஞ்
சுற்றமிருள்பற்றியபல்பூதமிசைபாடநசையாலே
கற்றமறையுற்றுணர்வர்பற்றலர்கண்முற்றுமெயின்மாளச்
செற்றவரிருப்பிடநெருக்குபுனலார்திருநல்லூரே. (சா)

பொங்கரவரங்கமுடன்மேலணிவர்ஞாலமிடுபிச்சை
தங்கரவமாகவுழிதந்துமெய்துலங்கியவெண்ணீற்றர்
கங்கையரவம்விரவுதிங்கள்சடையடிகளிடம்வினவிற்
செங்கயலவதிக்குதிகொளும்புனலதார்திருநல்லூரே. (எ)

ஏறுபுகழ்பெற்றதெனிலங்கையவர்கோனையருவரையிற்
சீறியவனுக்கருளுமெங்கள்சிவலோகனிடமாகுங்
கூறுமடியார்களிசைபாடிவலம்வந்தயருமருவிச்
சேறுகமழானவழியச்சதிகழ்தருந்திருநல்லூரே. (அ)

மாலுமலர்மேலயனுநேடியறியாமையெரியாய
கோலமுடையானுணர்வுகோதில்புகழானிடமதாகு
நாலுமறையங்கமுதலாறுமெரிமூன்றுதழலோம்புஞ்
சீலமுடையார்கணெடுமாடம்வளருந்திருநல்லூரே. (கூ)

சீறுமுடைகோவணமிலாமையிலோவியதவத்தா
பாறுமுடன்மூடுதுவராடையாகள்வேடமவைபாரோ
லேறுமடவாளொடினிதேறிமுனிருநதவிடமெனபா
தேறுமனவாரமுடையாாகுடிசெயுநதிருநலூரே (௧௦)

திரைசளிருகரையும்வருபொன்னிநிலவுநதிருநலூரமேற்
பரசுதருபாணியைநலந்திகழ்செய்தோணிபுரநாத
னுரைசெய்தமிழ்ஞானசமபநதனிசைமாலைமொழிவார்போய
விரைசெயமலாதூவவிதிபேணுகதிபேறுபெறுவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருவிருததம.

திருச்சிற்றம்பலம்

அடடுமினில்பலியென் றென்றகநகடைதோறுமவந்து
மடடவிழுஙகுழலாாவளைகொள்ளும்வகையென்கொலோ
கொடடியபாணியெடுத்திடடபாதமுநசோளரவு
நட்டநின்றுடியநாதாநலலூாிடங்கொணடவரே. (௧)

பெண்ணிடடமபண்டையதனறிவைபெயபலிக்கெனறுழலவா
நணணிட்டுவநதுமனைபுகுநதாருநல்லூரகததே
பண்ணிடடபாடலராடலராயபபற்றிநோககிநின்று
கணணிட்டுப்போயிறறுக்காரணமுணடுகறைக்கண்டரே. (௨)

படவேரரவல்குற்பாவைநல்லீாபகலேயொருவ
ரிடுவாரிடைப்பலிகொளபவாபோலவநதிலபுகுநது
நடவாரடிகணடம்பயினறுடியகூத்தாகொலோ
வடபாறகயிலையுநதென்பாலநலூருநதமவாழபதியே. (௩)

செஞசுடாசசோதிபபவளத்திரடிகழ்முததனைய
நஞசணிகண்டனல்லூருறைநமபனைநானொருகாற
றுஞசிடைக்கணடுகனவின்றலைத்தொழுதேற்கவன்று
னெஞ்சிடைநின்றகலான்பலகாலமுநினறனனே. (௪)

வெணமதிசூடிவிளஙகநின்றானைவிணணோாகடொழ
நணணிலயத்தொடுபாடலறாதநலலூரகததே
திணணிலயங்கொடுநின்றான்றிரிபுரமூனறெரித்தான
கண்ணுளுநெஞசத்தகத்துமுளகழறசேவடியே. (௫)

தேற்றப்படத்திருநலலூரகததேசிவனிருநதாற்
றோற்றப்படசசெனறுகண்டுகொளளாாதொணடாதுன்மதியா
லாறறிறகெடுத்துக்குளத்தினிற்றேடியவாதனைபபோற்
காற்றிறகடுததுலகெலலாநதிரிதாவர்காண்பதற்கே. (௬)

நாட்கொண்டதாமரைப்பூத்தடஞ்சூழ்ந்தநல்லூரகத்தே
கீட்கொண்டகோவணங்காவென்றுசொல்லிக்கிறிபடத்தான்
வாட்கொண்டநோக்கிமனைவியொடுமங்கோர்வாணிகனை
யாட்கொண்டவார்த்தையுரைக்குமன்றோவிவ்வகலிடமே.

அறைமல்குபைங்கழலார்க்கநின்றாடியவார்சடைமே
னறைமல்குகொன்றையந்தாருடையானல்லூரகத்தே
பறைமல்குபாடலனாடிப்பரிசழித்தானவனைப்
பிறைமல்குசெஞ்சடைதாழநின்றாடியபிஞ்ஞகனே. (அ)

மன்னியமாமறையோர்மகிழ்ந்தேத்தமருவியெங்குந்
துன்னியதொண்டரின்னிசைபாடித்தொழுதுநல்லூர்
கன்னியர்தாமுங்கனவினை யுன்னியகாதலரை
மன்னிபரற்றவராங்கணையேயருணல்செய்பரோ. (௯)

திருவமர்தாமரைசீர்வளர்செங்கழுநீர்கொண்ணெய்தல்
குருவமர்கோங்கங்குராமகிழ்சண்பகங்கொன்றைவன்னி
மருவமர்நீள்கொடிமாடமலிமறையோர்கணல்லூர்
ருருவமர்பாகத்துமையவளாகவேயுள்குதுமே (௧௦)

செல்லேர்கொடியன்சிவன்பெருங்கோயில்சிவபுரத்தார்
வல்லேற்புகவுமதில்சூழிலங்கையர்காவலனைக்
கல்லார்முடியொடுதோணிரைசென்றுகமலடியா
னல்லூரிருந்தபிரானல்லனோநமையாளவனே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

## திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

நினைந்துருகுமடியாரைநையவைத்தார்
நில்லாமேதீவினைகணீங்கவைத்தார்
சினந்திருகுகளிற்றுரிவைபோர்க்கவைத்தார்
செழுமதியின்றளிர்வைத்தார்சிறந்துவானோ
ரினந்துருவிமணிமகுடத்தேறத்துற்ற
வினமலர்கள்போதவிழ்ந்துமதுவாய்ப்பில்கி
நனைந்தனையதிருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே (௧)

பொன்னலத்தநறுங்கொன்றைசடைமேல்வைத்தார்
புலியுரியினதள்வைத்தார்புனலும்வைத்தார்
மன்னலத்ததிரடோண்மேன்மழுவாள்வைத்தார்
வார்காதிற்குழைவைத்தார்மதியம்வைத்தார்
மின்னலத்தநுண்ணிடையாள்பாகம்வைத்தார்
வேழத்தினுரிவைத்தார்வெண்ணூல்வைத்தார்
நன்னலத்ததிருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (௨)

# ௨௧. திருவாரூர்ப்பசுபதீச்சரம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

புண்ணியர்பூதியர்பூதநாதர்புடைபடுவார்தம்மனத்தார்திங்கட்
கண்ணியரென்றென்றுகாதலாளர்கைதொழுதேத்தவிருந்தவூராம்
விண்ணுயர்மாளிகைமாடவீதிவிரைகமழ்சோலைசுலாவியெங்கும்
பண்ணியல்பாடலறாதவாரூர்ப்பசுபதியீச்சரம்பாடுநாவே. (௧)

முத்தியர்மூப்பிலராப்பினுள்ளார்முக்கணர்தக்கனன்வேள்விசாடு
மத்தியரென்றென்றடியரேத்துமையனணங்கொடிருந்தவூராந்
தொத்தியலும்பொழின்மாடுவண்டுதுதைந்தெங்குந்தூமதுப்பாயக்கோயிற்
பத்திமைப்பாடலறாதவாரூர்ப்பசுபதியீச்சரம்பாடுநாவே. (௨)

பொங்கிவரும்புனற்சென்னிவைத்தார்போம்வழிவந்திழிவேற்றமானா
ரிங்குயர்ஞானத்தர்வானோரேத்துமிறையவரென்றுமிருந்தவூராந்
தெங்குயர்சோலைசேராலைசாலித்திளைக்கும்விளைவயல்சேரும்பொய்கைப்
பங்கயமங்கைவிரும்புமாரூர்ப்பசுபதியீச்சரம்பாடுநாவே. (௩)

தேவியொர்கூறினரேறதேறுஞ்செல்வினர்நல்குரவென்னைநீக்கு
மாவியரந்தணரல்லறீர்க்குமப்பனரங்கேயமர்ந்தவூராம்
பூவியலும்பொழில்வாசம்வீசப்புரிகுழலார்சுவடொற்றிமுற்றப்
பாவியல்பாடலறாதவாரூர்ப்பசுபதியீச்சரம்பாடுநாவே. (௪)

இந்தணையுஞ்சடையார்விடையார்ப்பிறப்பென்னையறுக்கவல்லார்
வந்தணைந்தின்னிசைபாடுவார்பான்மன்னினர்மன்னியிருந்தவூராங்
கொந்தணையுங்குழலார்விழவிற்கூட்டமிடையிடைசேரும்வீதிப்
பந்தணையும்விரலார்தமாரூர்ப்பசுபதியீச்சரம்பாடுநாவே. (௫)

குற்றமறுத்தார்குணத்தினுள்ளார்கும்பிடுவார்தமக்கன்புசெய்வா
ரொற்றைவிடையினர்நெற்றிக்கண்ணருறைபதியாகுஞ்செறிகொண்மாடஞ்
சுற்றியவாசலின்மாதர்விழாச்சொற்கவிபாடநிதானநல்கப்
பற்றியகையினர்வாழுமாரூர்ப்பசுபதியீச்சரம்பாடுநாவே. (௬)

நீறுடையார்நெடுமால்வணங்குநிமிர்சடையார்நினைவார்தமுள்ளங்
கூறுடையாருடைக்கோவணத்தார்குவலயமேத்தவிருந்தவூராந்
தாறுடைவாழையிற்கூழைமந்திதங்குகனியுண்டுமிண்டிட்டினத்தைப்
பாறிடப்பாய்ந்துபயிலுமாரூர்ப்பசுபதியீச்சரம்பாடுநாவே. (௭)

வெண்டலைமாலைவிரவிப்பூண்டமெய்யுடையார்விறலாரரக்கன்
வண்டமர்பூமுடிசெற்றுகந்தமைந்தரிடம்வளமோங்கியெங்குங்
கண்டவர்சிந்தைக்கருத்தின்மிக்கார்கதியருளென்றுகையாரக்கூப்பிப்
பண்டலர்கொண்டுபயிலுமாரூர்ப்பசுபதியீச்சரம்பாடுநாவே. (௮)

மாலுமயனும்வணங்கிநேடமற்றவருக்கெரியாகிநீண்ட
சீலமறிவரிதாகிநின்றசெம்மையினாரவர்சேருமூராங்
கோலவிழாவினரங்கதேறிக்கொடியிடைமாதர்கண்மைந்தரோடும்
பாலெனவேமொழிந்தேத்துமாவூர்ப்பசுபதியீச்சரம்பாடுநாவே. (௯)

பின்னியதாழ்சடையார்பிதற்றும்பேதையராஞ்சமண்சாக்கியர்க
டன்னியலும்முரைகொள்ளகில்லாச்சைவரிடந்தளவேறுசோலைத்
துன்னியமாதருமைந்தர்தாமுஞ்சுனையிடைமூழ்கித்தொடர்ந்தசிந்தைப்
பன்னியபாடல்பயிலுமாவூர்ப்பசுபதியீச்சரம்பாடுநாமே. (௧௦)

எண்டிசையாரும்வணங்கியேத்துமெம்பெருமானையெழில்கொளாவூர்ப்
பண்டுரியார்சிலர்தொண்டர்போற்றும்பசுபதியீச்சரத்தாதிதன்மேற்
கண்டல்கண்மிண்டியகானற்காழிக்கவுணியன்ஞானசம்பந்தன்சொன்ன
கொண்டினிதாவிசைபாடியாடிக்கூடுமவருடையார்கள்வானே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

சுவாமிதிருநாமம் - பசுபதீசர்.
தேவிதிருநாமம் - மங்களநாயகி

ஆ திருப்பதிகம் ௬௧.

# உஉ. திருச்சத்திமுற்றம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கோவாய்முடுகியடுதிறற்கூற்றங்குமைப்பதன்முன்
பூவாரடிச்சுவடென்மேற்பொறித்துவைபோகவிடின்
மூவாமுழுப்பழிமூடுங்கண்டாய்முழங்குதழற்கைத்
தேவாதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௧)

காய்ந்தாயனங்கனுடலம்பொடிபடக்காலனைமுன்
பாய்ந்தாயுயிர்செகப்பாதம்பணிவார்தம்பல்பிறவி
யாய்ந்தாய்ந்தறுப்பாயடியேற்கருளாயுனன்பர்சிந்தை
சேர்ந்தாய்திருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௨)

பொத்தார்குரம்பைபுகுந்தைவர்நாளும்புகலழிப்ப
மத்தார்தயிர்போன்மறுகுமென்சிந்தைமறுக்கொழிவி
யத்தாவடியேனடைக்கலங்கண்டாயமரர்கடஞ்
சித்தாதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௩)

நில்லாக்குரம்பைநிலையாக்கருதியிந்நீணிலத்தொன்
றல்லாக்குழிவீழ்ந்தயர்வுறுவேனைவந்தாண்டுகொண்டாய்
வில்லேர்புருவத்துமையாள்கணவாவிடிற்கெடுவேன்
செல்வாதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௪)

கருவுற்றிருந்துன்கழலேநினைந்தேன்கருப்புவியிற்
றெருவிற்புகுந்தேன்றிகைத்தடியேனைத்திகைப்பொழிவி
யுருவிற்றிகழுமுமையாள்கணவாவிடிற்கெடுவேன்
றிருவிற்பொலிசத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௫)

வெம்மைநமன்றமர்மிக்குவிரவிவிழுப்பதன்முன்
னிம்மையுன்றாளென்றனெஞ்சத்தெழுதிவையீங்கிகழி
லம்மையடியேற்கருளுதியென்பதிங்காரறிவார்
செம்மைதருசத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே (௬)

விட்டார்புரங்களொருநொடிவேவவொர்வெங்கணையாற்
சுட்டாயென்பாசந்தொடர்பறுத்தாண்டுகொண்டெம்பிரம்பு
மட்டார்குழலிமலைமகள்பூசைமகிழ்ந்தருளுஞ்
சிட்டாதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௭)

இகழ்ந்தவன்வேள்வியழித்திட்டிமையோர்பொறையிரப்ப
நிகழ்ந்திடவன்றேவிசயமுங்கொண்டதுநீலகண்டா
புகழ்ந்தவடியேன்றன்புன்மைகடீரப்புரிந்துநல்காய்
திகழ்ந்ததிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௮)

தக்கார்வமெய்திச்சமண்டவிர்ந்துன்றன்சரண்புகுந்தே
னெக்காதலெப்பயனுன்றிறமல்லாலெனக்குளதே
மிக்கார்தில்லையுள்விருப்பாமிகவடமேருவென்னுந்
திக்காதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௯)

பொறித்தேரரக்கன்பொருப்பெடுப்புற்றவன்பொன்முடிதோ
ளிறத்தாளொருவிரலூன்றிட்டலறவிரங்கியொள்வாள்
குறித்தேகொடுத்தாய்கொடியேன்செய்குற்றக்கொடுவினைநோய்
செறுத்தாய்திருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

திருநாவுக்கரசுநாயனார் பல தலங்களையும் பணிந்து பாடி, திருச்சத்திமுற் றத்தை அடைந்தார் அங்கே சுவாமிதரிசனஞ்செய்து "கோவாய் முடுகி யடு திறற் கூற்றங் குமைப்பதன்முன் - பூவா ரடிச்சுவ டென்மேற் பொறித்துவை" என்னுந் திருப்பதிகம் பாடவும், சிவபிரான் "நல்லூருக்கு வா" என்று அருளிச் செய்தார்.

சுவாமிதிருநாமம் - சிவக்கொழுந்துநாதர்.

தேவி திருநாமம் - பெரியநாயகி.

---

ஆ திருப்பதிகம் - ௪௨.

# உ௩. திருப்பட்டீச்சரம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

### திருவிராகம்.

பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்

பாடன்மறைசூடன்மதிபல்வளையொர்பாகமதின்மூன்றொர்கணையாற்
கூடவெரியூட்டியெழில்காட்டிநிழல்கூட்டுபொழில்சூழ்பழசையுள்
மாடமழபாடியுறைபட்டிசரமேயகடிகட்டரவினார்
வேடநிலைகொண்டவரைவீடுநெறிகாட்டிவினைவீடுமவரே. (௧)

நீரின்மலிபுன்சடையர்நீளரவுகச்சையதுநச்சிலையதோர்
கூரின்மலிசூலமதுவேந்தியுடைகோவணமுமானினுரிதோல்
காரின்மலிகொன்றைவிரிதார்கடவுள்காதல்செய்துமேயநகர்தான்
பாரின்மலிசீர்பழசைபட்டிசரமேத்தவினைபற்றழியுமே (௨)

காலைமடவார்கள்புனலாடுவதுகவ்வைகடியார்மறுகெலா
மாலைமணநாறுபழையாறைமழபாடியழகாயமலிசீர்ப்
பாலையனநீறுபுனைமார்பனுறைபட்டிசரமேபரவுவார்
மேலையொருமால்கடல்கள்போல்பெருகிவிண்ணுலகமாளுமவரே. (௩)

கண்ணின்மிசைநண்ணியிழிவிப்பமுகமேந்துகமழ்செஞ்சடையினான்
பண்ணின்மிசைநின்றுபலபாணிபடவாடவல்லபான்மதியினான்
மண்ணின்மிசைநேரின்மழபாடிமலிபட்டிசரமேமருவுவார்
விண்ணின்மிசைவாழுமிமையோரொடுடனாதலதுமேவலெளிதே. (௪)

மருவமுழவதிரமழபாடிமலிமத்தவிழவார்க்கவரையார்
பருவமழைபண்கவர்செய்பட்டிசரமேயபடர்புன்சடையினான்
வெருவமதயானையுரிபோர்த்துமையையஞ்சவருவெள்விடையினா
னுருவமெரிகழல்கடொழவுள்ளமுடையாரையடையாவினைகளே. (௫)

மறையினொலிகீதமொடுபாடுவனபூதமடிமருவிவிரவார்
பறையினொலிபெருகநிகழ்நட்டமமர்பட்டிசரமேயபனிகூர்
பிறையினொடுமருவியதொர்சடையினிடையேற்றபுனற்றோற்றநிலையா
மிறைவனடிமுறைமுறையினேத்துமவர்தீத்தொழில்களில்லர்மிகவே. (௬)

பிறவிபிணிமூப்பினொடுநீங்கியிமையோருலகுபேணலுறுவார்
துறவியெனுமுள்ளமுடையார்கள்கொடிவீதியழகாயதொருசீ
ரிறைவனுறைபட்டிசரமேத்தியெழுவார்கள்வினையேதுமிலவாய்
நறவவிரையாலுமொழியாலும்வழிபாடுமறவாதவவரே. (௭)

நேசமிகுதோள்வலவனாகியிறைவன்மலையைநீக்கியிடலுந
நீசன்விறல்வாட்டிவரையுற்றதுணராதநிரம்பாமதியினா
னீசனுறைபட்டிசரமேத்தியெழுவார்கள்வினையேதுமிலவாய்
நாசமறவேண்டுதலினண்ணலெளிதாமமரர்விண்ணுலகமே. (௮)

தூயமலரானுநெடியானுமறியாரவனதோற்றநிலையி
னேயவகையானதனையாரதறிவாரணிகொள்மாபினகலம்
பாயநலநீறதணிவானுமைதனோடுமுறைபடடிசரமே
மேயவனதீரடியுமேத்தவெளிதாகுநலமேனுலகமே. (௯)

தடுக்கினையிடுக்கிமடவார்களிடுபிண்டமதுவுண்டுழறருங
கடுப்பொடியுடற்கவசாகததுமொழிகாதல்செயதிடாதுகமழ்சேர்
மடைக்கயலவயற்கொண்மழபாடிநகாநீடுபழையாறையதனுட
படைக்கொருகரத்தனமிகுபடடிசரமேததவினைபற்றறுதலே. (௧௦)

மநதமலிசோலைமழபாடிநகாநீடுபழையாறையதனிற்
பநதமுயாவீடுநலபடடிசரமேயபடாபுன்சடையனை
யநதண்மறையோரினிதுவாழுபுகலிஞானசம்பநதனணியார்
செநதமிழுகள்கொணடினிதுசெயபவலதொணடாவினைசிறபதிலவே. (௧௧)

திருசசிற்றமபலம.

திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவலஞ்சுழியை அடைந்து, சுவாமிதரிசனஞ் செயதுகொணடிருக்குநாள்லே, முதிர்வேனிற் காலம வந்தது அம்முதிர்வேனிற்காலத்திலே பிள்ளையார் திருவலஞசுழியினின்றும நீங்கி, திருப்பழையாறைக்குப் போதற்கு அடியார்கள் உடன் செலலச் சென்றருளி, திருவாறைமேற்றளியை அடைந்து வணங்கி, திருசசத்திமுற்றத்திற் சென்று, சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு, திருப்பட்டீச்சரத்திற்குப்போகப் புறப்பட்டார் அப்பொழுது வெய்யில் வெப்பத்தைத் தணிக்கும்பொருட்டு, பிள்ளையாருடைய திருமுடியின்மேலே, சிவபூதம் முத்துப்பந்தரை எடுத்து, "பட்டீசர் எம்மை விடுத்தருளினர்" என்று சொல்லிற்று அந்தசசொலலும் முத்துப்பந்தரும் ஆகாயத்திலே தோன்ற, பிள்ளையார் திருவருளைத் துதித்து, பூமியிலே விழுந்து நமஸகரித்தார். பிள்ளையாருடைய பரிசனங்கள் அநத முத்துப்பந்தரைக் காம்பிலே பிடித்தார்கள். பிள்ளையார் அந்த முத்துப்பந்தர் நிழற்றச்சென்று திருப்பட்டீச்சரத்தை அடைந்து, சுவாமிதரிசனஞ் செய்தார்

சுவாமிதிருநாமம் - படடீசுவரர்
தேவிதிருநாமம - பலவளைநாயகி.

ஆ திருபபதிகம் - ௪௩.

## உ௪. திருப்பழையாறைவடதளி.

### திருநாவுக்கரசுநாயனர்.

திருககுறுநதொகை.

திருச்சிற்றம்பலம்.

தலையெலாம்பறிக்குஞ்சமண்கையரு
ளிலையினுன்மறைததான்மறைககொணனுமே
யலையினுாபொழிலாறைவடதளி
நிலையினனடியேநினைநதுய்ம்மினே. (௧)

மூக்கினான்முரன்றோதியக்குண்டிகை
தூக்கினார்குலந்தூரறுத்தேதனைக்
காக்கினானணியாறைவடதளி
நோக்கினார்க்கில்லையாலருநோய்களே. (௨)

குண்டரைக்குணமில்லரைக்கூறையின்
மிண்டரைத்துரந்தவிமலன்றனை
யண்டனைப்பழையாறைவடதளிக்
கண்டனைத்தொழுதுய்ந்தனைக்கமே. (௩)

முடையரைத்தலைமுண்டிக்குமொட்டரைக்
கடையரைக்கடிந்தார்கனல்வெண்மழுப்
படையனைப்பழையாறைவடதளி
யுடையனைக்குளிர்ந்துள்குமென்னுள்ளமே. (௪)

ஒள்ளரிக்கணார்முன்னமணின்றுணுங்
கள்ளரைக்கடிந்தகருப்பூறலை
யள்ளலம்புனலாறைவடதளி
வள்ளலைப்புகழத்துயராவயுமே. (௫)

நீதியைக்கெடநின்றமணேயுணுங்
சாதியைக்கெடுமாசெய்தசங்கர
னாதியைப்பழையாறைவடதளிச்
சோதியைத்தொழுவார்துயர்தீருமே. (௬)

திரட்டரைக்கவளந்திணிக்குஞ்சமண்
பிரட்டரைப்பிரித்தபெருமான்றனை
யிரட்டிறத்தணியாறைவடதளித்
தெருட்டனைத்தொழத்தீவினைதீருமே. (௭)

ஒதினத்தெழுத்தஞ்சுணராச்சமண்
வேதினைப்படுத்தானைவெங்கூற்றுதை
பாதனைப்பழையாறைவடதளி
நாதனைத்தொழநம்வினைநாசமே. (௮)

வாயிருந்தமிழேபடித்தாளுறு
வாயிரஞ்சமணும்மழிவாக்கினான்
பாயிரும்புனலாறைவடதளி
மேயவன்னெனவல்வினைவீடுமே. (௯)

செருத்தனைச்செயுஞ்சேணரக்கன்னுட
லெருத்திறவிரலாலிறையூன்றிய
வருத்தனைப்பழையாறைவடதளித்
திருத்தனைத்தொழுவார்வினைதேயுமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

திருநாவுக்கரசுநாயனார் பழையாறையிற்சென்று, அங்கே வடதளி என்னும் ஆலயத்தில் எழுந்தருளியிருக்கின்ற சிவலிங்கப்பெருமானைச் சமணர்கள் மறைத்திருத்தலைக் கேள்வியுற்று, சமீபமாகிய ஓரிடத்திற்சென்று, திருவமுது செய்யாமல் சுவாமியைத் தியானித்து, "சுவாமீ, அடியேன் தேவரீருடைய

திருவுருவைக்கண்டு வணங்கியன்றிப்போகேன். அந்தத் திருவுருவை மறைத்த க்ஷபணர்களுடைய செய்கையைக் கெடுத்தருளும்" என்று சொல்லிக்கொண்டிருந்தார். சிவபெருமான் அரசனுக்குச் சொப்பனத்திலேதோன்றி, "நாம் சமணர்களால் மறைக்கப்பட்டிருக்கின்றோம். நாவுக்கரசன் நம்மை வெளிப்படக்கண்டு வணங்கவேண்டும் என்று சிந்தித்துக்கொண்டிருக்கின்றான். நீ அந்த க்ஷபணர்களை அழித்து நமக்கு ஆலயம் செய்யவேண்டும்" என்று அருளிச்செய்து, தாம் இருக்கின்ற இடத்தின் அடையாளங்களைத் தெரிவித்து, மறைந்தருளினார். அரசன் விழித்தெழுந்து ஆச்சரியமடைந்து, மந்திரிமாரோடும் விரைவிலே திருக்கோயிலிற்சென்று, சுவாமி அருளிச்செய்த அடையாளத்தின் வழிகண்டு, சமணாகள் செய்தவஞ்சனையை உணர்ந்து, ஸ்ரீ வாகீசமூர்த்தியை வணங்கி, அந்தச் சமணர்களை யானைகளாலே மிதிப்பித்துக் கொன்று, சிவபெருமானுக்கு விமானஞ்செய்து, நிபந்தங்கள் அமைத்தான். அப்பமூர்த்தி உள்ளேபுகுந்து, சுவாமியைத் தரிசித்து, "தலையெலாம்பறிக் குஞ்சமண்கையரு, ணிலையினான்மறைத் தான்மறைக் கொண்ணுமே, யலையினார்பொழிலாறை வடதளி, நிலையினானடி யேநினைந் துய்ம்மினே" என்னுந் திருப்பதிகம் பாடி அங்கிருந்தார்.

---

சுவாமிதிருநாமம் – சோமநாதர் வடதளிநாதர்.
தேவிதிருநாமம் – சோமகலாநாயகி. கௌரியம்மை.

---

ஆ திருப்பதிகம் – ௪௪

---

# உரு. திருவலஞ்சுழி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண – இந்தளம.

---

திருச்சிற்றம்பலம்.

விண்டெலாமலரவ்விரைநாறுதண்டேனவிம்மி
வண்டெலாநசையாலிசைபாடுமவலஞ்சுழித்
தொண்டெலாமபரவுஞ்சுடாபோலொளியீாசொலீர்
பண்டெலாமபலிதேர்நதொலிபாடல்பயின்றதே. (௧)

பாரலவெணகுருகுமபகுவாயனநாரையும்
வாரல்வெண்டிரைவாயிரைதேருமவலஞ்சுழி
மூரல்வெணமுறுவனநகுமொய்யொளியீாசொலீ
ரூரலவெண்டலைகொணடுலகொக்கவுழனறதே. (௨)

கிண்ணவண்ணமலருங்கிளாதாமரைத்தாதளாய்
வண்ணநுணமணன்மேலனனம்வைகுமவலஞ்சுழிச
சுண்ணவெண்பொடிக்கொண்டுமெய்பூசவலலீாசொலீா
விண்ணவாதொழவெண்டலையிற்பலிகொண்டதே. (௩)

கோடெலா நிறையக்குவளைம்மலருங்குழி
மாடெலாமலிநீர்மணநாறும்வலஞ்சுழிச்
சேடெலாமுடையீர்சிறுமான்மறியீர்சொலீர்
நாடெலாமறியத்தலையின்னறவேற்றதே. (௪)

கொல்லைவென்றபுனத்திற்குருமாமணிகொண்டுபோய்
வல்லைநுண்மணன்மேலனம்வைகும்வலஞ்சுழி
முல்லைவெண்முறுவன்னகையாளொளியீர்சொலீர்
சில்லைவெண்டலையிற்பலிகொண்டுழல்செல்வமே. (௫)

பூசநீர்பொழியும்புனற்பொன்னியிற்பன்மலர்
வாசநீர்குடைவாரிடர்தீர்க்கும்வலஞ்சுழித்
தேசநீர்திருநீர்சிறுமான்மறியீர்சொலீர்
ஏசவெண்டலையிற்பலிகொள்வதிலாமையே. (௬)

கந்தமாமலர்ச்சந்தொடுகாரகிலுந்தழீஇ
வந்தநீர்குடைவாரிடர்தீர்க்கும்வலஞ்சுழி
எந்தநீர்முதனீர்நடுவாமடிகேள்சொலீர்
பந்தநீர்கருதாதுலகிற்பலிகொள்வதே. (௭)

தேனுற்றநறுமாமலர்ச்சோலையில்வண்டினம்
வானுற்றநசையாலிசைபாடும்வலஞ்சுழிக்
கானுற்றகளிற்றின்னுரிபோர்க்கக்கவல்லீர்சொலீர்
ஊனுற்றதலைகொண்டுலகொக்கவுழன்றதே. (௮)

தீர்த்தநீர்வந்திழிபுனற்பொன்னியிற்பன்மலர்
வார்த்தநீர்குடைவாரிடர்தீர்க்கும்வலஞ்சுழி
ஆர்த்துவந்தவரக்கனையன்றடர்த்தீர்சொலீர்
சீர்த்தவெண்டலையிற்பலிகொள்வதுஞ்சீர்மையே. (௯)

உரமனுஞ்சடையீர்விடையீருமதின்னருள்
வரமனும்பெறலாவதுமெந்தைவலஞ்சுழிப்
பிரமனுந்திருமாலுமளப்பரியீர்சொலீர்
சிரமெனுங்கலனிற்பலிவேண்டியசெல்வமே. (௧௦)

வீடுஞானமும்வேண்டுதிரேல்விரதங்களால்
வாடிஞானமென்னாவதுமெந்தைவலஞ்சுழி
நாடிஞானசம்பந்தனசெந்தமிழ்கொண்டிசை
பாடுஞானம்வல்லாரடிசேர்வதுஞானமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்



பண் - நட்டராகம்.



திருச்சிற்றம்பலம்.

என்னபுண்ணியஞ்செய்தனைநெஞ்சமேயிருங்கடல்வையத்து
முன்னைநீபுரிநல்வினைப்பயனிடைமுழுமணித்தரளங்கள்
மன்னுகாவிரிசூழ்திருவலஞ்சுழிவாணனைவாயாரப்
பன்னியாதரித்தேத்தியும்பாடியும்வழிபடுமதனாலே. (௧)

விண்டொழிந்தனநம்முடைவல்வினைவிரிகடலவருநஞ்ச
முண்டிறைஞ்சுவானவர்தமைத்தாங்கியவிறைவனையுலகத்தில
வண்டுவார்குழன்மங்கையோர்பங்கனைவலஞ்சுழியிடமாகக்
கொண்டநாதன்மெய்த்தொழில்புரிதொண்டரோடினிதிருந்தமையாலே. ()

திருந்தலார்புரந்தீயெழச்செறுவனவிறலின்கணடியாரைப்
பரிந்துகாப்பனபத்தியிலவருவனமத்தமாமபிணிநோய்க்கு
மருந்துமாவனமந்திரமாவனவலஞ்சுழியிடமாக
விருந்தநாயகனிமையவரேத்தியவிணையடித்தலந்தானே. (௩)

கறைகொள்கண்டத்தர்காய்கதிர்நிறத்தினரறத்திறமுனிவர்க்கன்
றிறைவராலிடைநீழலிலிருந்துகந்தினிதருளபெருமானார்
மறைகளோதுவார்வருபுனலவலஞ்சுழியிடமகிழ்ந்தருங்கானத்
தறைகழல்சிலம்பார்க்கநின்றாடியவற்புதமறியோமே. (௪)

மண்ணர்நீராவிண்காற்றினராற்றலாமெரியுருவொருபாகம்
பெண்ணராணெனத்தெரிவருவடிவினர்பெருங்கடற்பவளம்போல்
வண்ணராகிலும்வலஞ்சுழிபிரிகிலார்பரிபவர்மனம்புக்க
வெண்ணராகிலுமெனைப்பலவியம்புவரிணையடிதொழுவாரே. (௫)

ஒருவராலுவமிப்பதையரியதோர்மேனியர்மடமாத
ரிருவராதரிப்பார்பல்பூதமும்பேய்களுமடையாள
மருவராததோர்வெண்டலைகைப்பிடித்தகந்தொறும்பலிக்கென்று
வருவரேலவர்வலஞ்சுழியடிகளேவரிவளைகவர்ந்தாரே. (௬)

குன்றியூர்குடமூக்கிடம்வலம்புரங்குலவியநெய்த்தான
மென்றிவ்வூர்களிலோமென்றுமியம்புவரிமையவர்பணிகேட்பா
ரன்றியூர்தமக்குள்ளனவறிகிலோம்வலஞ்சுழியரனார்பாற்
சென்றவூர்தனிற்றலைப்படலாமென்றுசேயிழைதளர்வாமே. (௭)

குயிலினேர்மொழிக்கொடியிடைவெருவுறக்குலவரைப்*பரப்பாய
கயிலையைப்பிடித்தெடுத்தவன்கதிர்முடிதோளிருபதுமூன்றி
மயிலினேரனசாயலோடமர்ந்தவனவலஞ்சுழியெம்மானைப
பயிலவல்லவர்பரகதிகாண்பவரல்லவர்காணாரே. (௮)

அழலதோம்பியவலர்மிசையண்ணலுமரவணைத்துயின்றானுங்
கழலுஞ்சென்னியுங்காண்பரிதாயவர்மாண்பமர்தடக்கையின
மழலைவீணையர்மகிழ்திருவலஞ்சுழிவலங்கொடுபாதத்தால்
சுழலுமார்தங்கடொல்வினையதனொடுதுன்பங்கள்களைவாரே. (௯)

அறிவிலாதவன்சமணர்கள்சாக்கியர்தவம்புரிந்தவஞ்செய்வார்
நெறியலாதனகூறுவர்மற்றவைதேறன்மின்மாறாநீர்
மறியுலாந்திரைக்காவிரிவலஞ்சுழிமருவியபெருமானைப
பிறிவிலாதவர்பெறுகதிபேசிடிலளவறுப்பொண்ணாதே. (௧௦)

மாதொர்கூறனைவலஞ்சுழிமருவியமருந்தினைவயற்காழி
நாதன்வேதியன்ஞானசம்பந்தன்வாய்நவிற்றியதமிழ்மாலை
யாதரித்திசைகற்றுவல்லார்சொலக்கேட்டுகந்தவர்தம்மை
வாதியாவினைமறுமைக்குமிம்மைக்கும்வருத்தம்வந்தடையாவே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

* "பரப்பாய" என்றும் பாடம்.

பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்

பள்ளமதாய்படர்சடைமேற்பயிலுந்திரைக்கங்கை
வெள்ளமதாரவிரும்பிநின்றவிகிர்தனவிடையேறும
வள்ளலவலஞ்சுழிவாணனென்றுமருவிநினைந்தேத்தி
யுள்ளமுருகவுணருமின்களுறுநோயடையாவே (௧)

காரணிவெள்ளைமதியஞ்சூடிக்கமழ்புன்சடைதன்மேற்
றாரணிகொன்றையுந்தண்ணெருக்குந்தழையுந்துதைவித்து
வாரணிகொங்கைநல்லாடனோடும்வலஞ்சுழிமேவியவ
ரூரணிபெய்பலிகொண்டுகந்தவுவகையறியோமே. (௨)

பொன்னியலுந்திருமேனிதன்மேற்புரிநூல்பொலிவெய்து
மின்னியலுஞ்சடைதாழவேழவுரிபோர்த்தரவாட
மன்னியமாமறையோர்கள்போற்றும்வலஞ்சுழிவாணர்தம்மே
லுன்னியசிந்தையினீங்ககில்லாவுயர்வாம்பிணிபோமே (௩)

விடையொருபாலொருபால்விரும்புமெல்லியல்புல்கியதோர்
சடையொருபாலொருபாலிடங்கொடாழ்குழல்போற்றிசைப்ப
நடையொருபாலொருபால்சிலம்புநாளுமவலஞ்சுழிசே
ரடையொருபாலடையாதசெய்யுஞ்செய்கையறியோமே (௪)

கையமரும்மழுநாகம்வீணைகலைமான்மறியேந்தி
மெய்யமரும்பொடிப்பூசிவீசுகுழையார்தருதோடும
பையமரும்மரவாடவாடும்படர்சடையார்க்கிடமா
மையமரும்பொழில்சூழ்மவேலிவலஞ்சுழிமாநகரே. (௫)

தண்டொடுசூலந்தழையவேந்திதையலொருபாகங்
கண்டிடுபெய்பலிபேணிநாணாகரியினுரிதோலா
வண்டிடுமொய்பொழில்சூழ்ந்தமாடவலஞ்சுழிமன்னியவர்
தொண்டொடுகூடித்துதைந்துநின்றதொடர்பைத்தொடர்வோமே. (௬)

கலலியலும்மலையங்கைநீங்கவளைத்துவளையாதார்
சொலலியலுமமதின்மூன்றுஞ்செற்றசுடரானிடர்நீங்க
மலலியலுந்திரடோளெம்மாதிவலஞ்சுழிமாநகரே
புலகியவேதனைப்புலகியேத்தியிருப்பவர்புண்ணியரே. (௭)

வெஞ்சினவாளரக்கன்வரையைவிறலாலெடுத்தானறோ
ளஞ்சுமொராறிருநான்குமொன்றுமடர்த்தாரழகாய
நஞ்சிருள்கண்டத்துநாதரொன்றுநணுகுமிடம்போலு
மஞ்சுலவும்பொழில்வண்டுகெண்டுமவலஞ்சுழிமாநகரே. (௮)

ஏடியலன்முகனசீர்நெடுமாலெனநின்றவர்காணா
கூடியகூரெரியாயநிமிர்ந்தகுழகருலகேத்த
வாடியவெண்டலைகையிலேந்திவலஞ்சுழிமேயவெம்மானை
பாடியநான்மறையாளர்செய்யுஞ்சரிதைபலபலவே. (௯)

2477

குண்டரும்புத்தருங்கூறையின்றிக்குழுவாருரைநீத்துத்
தொண்டருந்தன்னெழில்பேணநின்றகழலானழலாடி
வண்டமரும்பொழின்மல்குபொன்னிவலஞ்சுழிவாணனெம்மான
பண்டொருவேள்விமுனிந்துசெற்றபரிசேபகர்வோமே. (௧௦)

வாழியெம்மானெனக்கெந்தைமேயவலஞ்சுழிமாநகர்மேற்
காழியுண்ஞானசம்பந்தன்சொன்னகருத்தினறமிழ்மாலை
யாழியிவையகத்தேத்தவல்லாரவர்கட்குந்தமர்கட்கு
மூழியொருபெருமின்பமோர்க்குமுருவுமுயர்வாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

ஓதமார்கடலின்விடமுண்டவர்
பூதநாயகர்பொற்கயிலைக்கிறை
மாதொர்பாகன்வலஞ்சுழியீசனை
பாதமேத்தப்பறையுநம்பாவமே. (௧)

கயிலைநாதன்கறுத்தவர்முப்புர
மெயில்கடீயெழவெல்லவல்வித்தகன
மயில்களாலும்வலஞ்சுழியீசனைப்
பயில்கிலார்சிலர்பாவித்தொழும்பரே. (௨)

இளையகாலமெம்மானையடைகிலாத்
துளையிலாச்செவித்தொண்டர்காணும்முடல
வளையுங்காலம்வலஞ்சுழியீசனைக்
களைகணாகக்கருதிநீருய்ம்மினே. (௩)

நறைகொள்பூம்புனல்கொண்டெழுமாணிக்காய்க்
குறைவிலாக்கொடுங்கூற்றுதைத்திட்டவன்
மறைகொளுவனவலஞ்சுழிமேவிய
விறைவனையினியென்றுகொல்காண்பதே. (௪)

விண்டவர்புரமூன்றுமெரிகொளத்
திண்டிறற்சிலையாலெரிசெய்தவன்
வண்டுபண்முரலுந்தணவலஞ்சுழி
யண்டனுக்கடிமைத்திறத்தாவனே. (௫)

படங்கொள்பாம்பொடுபான்மதியஞ்சடை
யடங்கவாழவல்லானும்பர்தம்பிரான்
மடந்தைபாகன்வலஞ்சுழியானடி
யடைந்தவாக்கடிமைத்திறத்தாவனே. (௬)

நாக்கொண்டுபரவும்மடியார்வினை
போக்கவல்லபுரிசடைப்புண்ணியன்
மாக்கொள்சோலைவலஞ்சுழியீசன்ற
னோக்கொளப்புரமூன்றெரியானவே. (௭)

தேடுவாபிரமன்றிருமாலவ
ராடுபாதமவருமறிகிலா
மாடவீதிவலஞ்சுழியீசனைத்
தேடுவானுறுகின்றதென்சிந்தையே. (௯)

கண்பணிகருங்கைக்கூடபுங்கண்மூன்றுடை
நண்பனுக்கெனைநானகொடுப்பேனெனுடைய
வண்பொனித்தென்வலஞ்சுழிமேவிய
பண்பனிப்பொனைச்செய்தபரிசிதே. (௧0)

இலங்கைவேந்தனிருபதுதோளிற
நலங்கொள்பாதத்தொருவிரலூன்றிரு
மலங்குபாய்வயல்சூழ்ந்தவலஞ்சுழி
வலங்கொளவாரடியெனதலைமேலவே (௧௦)

திருச்சிற்றம்பலம

---

# திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம

அலையார்புனற்கங்கைநங்கைகாணவம்பலத்திலருநடமாடி வேடந் தொலையாதவென்றியார்நின்றியூருநெடுங்களமும்மேவிவிடையைமேலகொண் டிலையார்படைகையிலேந்தியெங்குமிமையவருமுமையவளுமிறைஞ்சியேத்த மலையார்திரளருவிப்பொன்னிசூழ்ந்தவலஞ்சுழியேபுக்கிடமாமன்னினாரே. (௧)

திருச்சிற்றம்பலம

திருவலஞ்சுழித்திருப்பதிகம் - ௫.

சுவாமிதிருநாமம - கபர்த்தீசர்.
தேவிதிருநாமம - பெரியநாயகி.

ஆ திருப்பதிகம - ௪௯

---

# உ௬. குடமூக்கு.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - பஞ்சமம.

திருச்சிற்றம்பலம்

அரவிரிகோடனீடலணிகாவிரியாற்றயலே
மரவிரிபோதுமௌவனமணமல்லிகைகள்ளவிழுங்
குரவிரிசோலைசூழ்ந்தகுழகன்குடமூக்கிடமா
விரவிரிதிங்கள்சூடியிருந்தானவனெம்மிறையே. (௧)

---

குடமூக்கு என்பது கும்பகோணம்.

ஓத்தரவங்களொடுமொலிகாவிரியாற்றயலே
பூத்தரவங்களொடும்புகைகொண்டடிபோற்றிநல்ல
கூத்தரவங்களோவாக்குழகன்குடமூக்கிடமா
வேத்தரவங்கள்செய்யவிருந்தானவனெம்மிறையே. (௨)

மயிலபெடைபுல்கியாலமணன்மேன்மடவன்னமலரும்
பயிலபெடைவண்டுபண்செய்பழங்காவிரிபைம்பொழில்வாய்க்
குயிலபெடையோடுபாடலுடையான்குடமூக்கிடமா
வியலொடுவானமேத்தவிருந்தானவனெம்மிறையே. (௩)

மிக்கறைதாழவேங்கையுரியார்த்துமையாள்வெருவ
வக்கரவாமையேனமருப்போடவைபூண்டழகார்
கொக்கரையோடுபாடலுடையான்குடமூக்கிடமா
வெக்கறையாருமேத்தவிருந்தானவனெம்மிறையே. (௪)

வடிவுடைவாட்டடங்கண்ணுமையஞ்சவோர்வாரணத்தைப்
பொடியணிமேனிமூடவுரிகொண்டவன்புன்சடையான்
கொடிநெடுமாடமோங்குங்குழகன்குடமூக்கிடமா
விடிபடுவானமேத்தவிருந்தானவனெம்மிறையே. (௫)

கழைவளர்கவ்வைமுத்தங்கமழ்காவிரியாற்றயலே
தழைவளர்மாவினல்லபலவின்கனிகடயங்கு
குழைவளர்சோலைசூழ்ந்தகுழகன்குடமூக்கிடமா
விழைவளர்மங்கையோடுமிருந்தானவனெம்மிறையே. (௬)

மலைமலிமங்கைபாகம்மகிழ்ந்தானெழில்வையமுய்யச்
சிலைமலிவெங்கணையாற்சிதைத்தான்புரமூன்றினையும்
குலைமலிதண்பலவின்பழம்வீழ்குடமூக்கிடமா
விலைமலிசூலமேந்தியிருந்தானவனெம்மிறையே (௭)

நெடுமுடிபத்துடையநிகழ்வாளரக்கனுடலைப்
படுமிடர்கண்டயரப்பருமால்வரைக்கீழடர்த்தான்
கொடுமடற்றங்குதெங்குபழம்வீழ்குடமூக்கிடமா
விடுமணலெக்கர்சூழவிருந்தானவனெம்மிறையே. (௮)

ஆரெரியாழியானுமலரானுமளப்பரிய
நீரிரிபுன்சடைமேனிரம்பாமதிசூடிநல்ல
கூரெரியாகிநீண்டகுழகன்குடமூக்கிடமா
வீரிருங்கோவணத்தோடிருந்தானவனெம்மிறையே. (௯)

மூடியசீவரத்தார்முதுமட்டையர்மோட்டமணர்
நாடியதேவரெல்லாநயந்தேத்தியநன்னலத்தான்
கூடியகுன்றமெல்லாமுடையான்குடமூக்கிடமா
வேடலர்கொன்றைசூடியிருந்தானவனெம்மிறையே. (௧0)

வெண்கொடிமாடமோங்குவிறல்வெங்குருநன்னகரா
னண்பொடுநின்றசீரானற்றமிழ்ஞானசம்பந்தனல்ல
தண்குடமூக்கமர்ந்தானடிசேர்தமிழ்பத்தும்வல்லார்
விண்புடைமேலுலகம்வியப்பெய்துவர்வீடெளிதே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

# திருநாவுக்கரசுநாயனார்.

## திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

பூவணத்தவன்புண்ணியனண்ணியங்
காவணத்துடையானடியார்களைத்
தீவணத்திருநீறுமெய்ப்பூசியோர்
கோவணத்துடையான்குடமூக்கிலே. (௧)

பூத்தாடிக்கழியாதேநீர்பூமியீர்
தீர்த்தாடித்திறஞ்சிந்தையுள்வைம்மினோ
வேர்த்தாடுங்காளிதன்விசைதீர்கென்று
கூத்தாடியுறையுங்குடமூக்கிலே. (௨)

நங்கையாளுமையாளுறைநாதனு
ரங்கையாளொடறுபதந்தாழ்சடைக்
கங்கையாளவள்கன்னியெனப்படுங்
கொங்கையாளுறையுங்குடமூக்கிலே (௩)

ஓதாநாவனைத்திறத்தையுரைத்திரோ
லேதானுமினிதாகுமியமுனைச்
சேதாவேறுடையானமர்ந்தவிடங்
கோதாவிரியுறையுங்குடமூக்கிலே (௪)

நக்கரையனைநாடொறுநன்னெஞ்சே
வக்கரையுறைவானைவணங்குநீ
யக்கரையோடரவரையார்த்தவன்
கொக்கரையுடையான்குடமூக்கிலே. (௫)

துறவிநெஞ்சினராகியதொண்டர்காள்
பிறவிநீங்கப்பிதற்றுமின்பித்தராய்
மறவனாயப்பார்த்தன்மேற்கணைதொட்டவெங்
குறவனாருறையுங்குடமூக்கிலே (௬)

தொண்டராகித்தொழுதுபணிமினோ
பண்டைவல்வினைபற்றறவேண்டுவீர்
விண்டவர்புரமூன்றொருமாத்திரைக்
கொண்டவனுறையுங்குடமூக்கிலே. (௭)

காழியஞ்செய்துகாலங்கழியாதே
யோமியஞ்செய்தங்குள்ளத்துணர்மினோ
சாமியோடுசரச்சுவதியவள்
கோமியுமமுறையுங்குடமூக்கிலே. (௮)

சிரமஞ்செய்துசிவனுக்குப்பத்தராய்ப்
பரமனைப்பலநாளும்பயிற்றுமின்
பிரமன்மாலொடுமற்றொழிந்தார்க்கெலாங்
குரவனாருறையுங்குடமூக்கிலே. (௯)

அன்றுதானரக்கன்கயிலாயத்தைச
சென்றுதானெடுக்கவுமையஞ்சலு
நன்றுதானகக்குநலவிரலூன்றிபபின்
கொன்றுகீதங்கேட்டான்குடமூக்கிலே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

குடமூக்குத் திருப்பதிகம் - ௨.

சுவாமிதிருநாமம் - கும்பேசர்.
தேவிதிருநாமம - மங்களநாயகி.

ஆ. திருப்பதிகம - ௫௧.

# ௨௭. திருக்குடந்தைக்கீழ்க்கோட்டம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

சொன்மலிந்தமறைநானகாறங்கமாகிச
சொற்பொருளுங்கடந்தசுடர்ச்சோதிபோலுங
கன்மலிந்தகயிலைமலைவாணாபோலுங
கடனஞ்சமுண்டிருண்டகண்டாபோலு
மன்மலிந்தமணிவரைத்திண்டோளாபோலு
மலையரையன்மடப்பாவைமணாளாபோலுங்
கொன்மலிந்தமூவிலைவேறகுழகாபோலுங
குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (௧)

கானவிளங்கலிமறவனாகிப்பார்த்தன்
கருத்தளவுசெருத்தொகுதிகண்டார்போலு
மானவிளங்கடுவிடையொன்றேறியண்டத்
தப்பாலுமப்பலிதிரியுமழகாபோலுந்
தேனவிளந்துவலைமலிதென்றனமூனறிற்
செழும்பொழிறபூம்பாளைவிரிதேறனாறுங
கூனவிளம்பிறைதடவுகொடிகொண்மாடக்
குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (௨)

நீறலைத்ததிருவுருவுநெற்றிக்கண்ணு
நிலாவலைத்தபாம்பினொடுசிறைநீர்க்கங்கை
யாறலைத்தசடைமுடியுமழகுபொற்றாளு
மடியவர்க்குக்காட்டியருள்புரிவார்போலு
மேறலைத்தசிமிர்கொடியொன்றுடையார்போலு
மேழுலகுந்தொழுகழலெம்மீசர்போலுங

கூறலைத்தமலைமடநதைகொழுநாபோலுங்
குடநதைக்கீழக்கோட்டதெதஙகூத்தனுரே. (௩)

தக்கனதுபெருவேள்விதகாததாாபோலுஞ
சந்திரனைககலைகவாநதுதரித்தாாபோலுஞ
செககரொளிபவளவொளிமின்னின்சோதி
செழுஞசுடர்த்திஞாயிறெனசசெய்யாபோலு
மிக்கதிறனமறையவராலவிளஙகுவேள்வி
மிகுபுகைபோயவிண்பொழியக்கழனியெலலாங
கொக்கினியகனிசிதறிதேறலபாயுங
குடநதைகக்கீழக்கோடடதெதஙகூததனுரே. (௪)

காலனவலிதொலைததகழற்காலாபோலுங
காமனெழிலழலவிழுஙககககணடாாபோலு
மாலதனிலறநாலவாககளித்தார்போலு
மாணுடுபெணணவியலலராணுபோலு
நீலவுருவயிரநிரைபசசைசெமபொ
னெடுமபளிஙகென்றறிவரியரிறத்தாாபோலுங
கோலமணிகொழிததிழியுமபொனனிநன்னீாக்
குடநதைக்கீழ்க்கோடடதெதஙகூததனுரே. (௫)

முடிகொணடவளாமதியுமூன்றுயத்தோன்று
மூனேஞாயிறனமலாக்கணகண்மூன்று
மடிகொணடசிலம்பொலியுமருளாாசோதி
யணிமுறுவற்செவ்வாயுமழகாயத்தோனறத
துடிகொணடவிடைமடவாளபாகஙகொணடு
சுடாசசோதிக்கடறசெமபொன்மலைபோலிநநாட்
குடிகொண்டென்மனத்தகத்தேபுகுநதாாபோலுங்
குடநதைகக்கீழக்கோட்டத்தெஙகூததனுரே. (௬)

காரிலஙகுதிருவுருவத்தவற்குமறறைக்
கமலததிறகாரணறகுங்காடசியொண்ணுச
சீரிலங்குதழறபிழம்பிற்சிவநதாாபோலுஞ
சிலைவளைவிததவுணாபுரஞசிதைத்தாாபோலும
பாரிலஙகுபுனலனலகாலபரமாகாசம்
பரிதிமதிசுருதியுமாயப்பரநதாாபோலுங
கூரிலங்குவேற்குமரன்றதைபோலுங்
குடநதைகக்கீழக்கோடடத்தெங்கூத்தனுரே. (௭)

பூசசூழ்நதபொழிறழுவுபுகலூருளளாா
புறமபயத்தாாறம்புரிபூநதுருத்திபுககு
மாசசூழநதபழனததாாநெய்த்தானததாா
மாதவத்துவளாசோறறுத்துறையார்நலல
தீசசூழ்நததிகிரிதிருமாலுக்கீந்து
திருவானைககாவிலோர்சிலநதிக்கநாட
கோசசோழாகுலததரசுகொடுததார்போலுங்
குடநதைக்கீழ்ககோடடத்தெங்கூத்தனுரே. (௮)

பொஙகரவாபுலித்தோலாபுராணாமார்பிற்
பொறிகிளாவெண் பூணநூற்புநிதாபோலுஞ
சஙகரவக்கடன்முகடுதட்டவிட்டுச
சதுரநடமாடுகேந்தசைவாபோலு
மஙகரவததிருவடிக்காடபிழைபடத்தநதை
யநதணனையறவெறிநதாாக்கருளப்போதே
கொஙகரவசசடைக்கொன்றைகொடுததார்போலுங
குடந்தைக்கீழ்க்கோடடத்தெஙகூததனூே. (கூ)

ஏவியிடாக்கடலிடைப்படிகளகின்றேனை
யிப்பிறவியறுத்தேறவாஙகியாஙகே
கூவியமருல்கனைத்துமுருவிப்போகக்
குறியிலறுகுணத்தாணடுகொணடாாபோலுந
தாவிமுதறகாவிரிநலயமுனைகஙகை
சரசுவதிபொறறுமரைபுடகரணிதெண்ணீாக
கோவியொடுகுமரிவருதீாத்தஞசூழ்நத
குடநதைககீழ்க்கோடடதெஙகூத்தனூே. (கo)

செறிகொண்டசிநதைதனுட் டெளிநதுதேறித
தித்திக்குஞசிவபுவனததமுதம்போலு
நெறிகொண்டகுழலியுமைபாகமாக
நிறைநதமராகணமவணஙகநினறாபோலு
மறிகொண்டகரதலத்தெம்மைநதாபோலு
மதிலிலஙகைககோனமலஙகவரைககீழிட்டுக்
குறிகொணடவின்னிசைகேடடுகநதாாபோலுங
குடநதைககீழ்ககோடடத்தெஙகூத்தனூே. (கக)

திருசசிற்றம்பலம்.

சுவாமிதிருநாமம - மடநதைபாகர்.
தேவிதிருநாமம - பெரியநாயகி

ஆ திருப்பதிகம - ருஉ.

# உஅ. திருக்குடந்தைக்காரோணம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனூர்.

பண் - தககேசி.

திருச்சிற்றம்பலம்.

வாராாகொஙகைமாதோாபாகமாகவாாசடை
நீராாகஙகைதிஙகள்சூடிநெற்றியொறறைக்கண்
கூராாமழுவொன்றேநதியநதணகுழகன்குடமூக்கிற
காராாகணடத்தெணடோளெநதைகாரோணத்தாரே. (க)

முடியார்மன்னர்மடமான்விழியார்மூவுலகும்மேத்தும்
படியார்பவளவாயார்பலரும்பரவிப்பணிந்தேத்தக்
கொடியார்விடையார்மாடவீதிக்குடந்தைக்குழகாரும்
கடியார்சோலைக்கலவமயிலார்காரோணத்தாரே. (உ)

மலையார்மங்கைபங்கரங்கையனலார்மடலாரும்
குலையார்தெங்குக்குளிர்கொள்வாழையழகார்குடமூக்கில்
முலையாரணிபொன்முளைவெண்ணகையார்மூவாமதியினார்
கலையார்மொழியார்காதல்செய்யுங்காரோணத்தாரே. (௩)

போதார்புனல்சேர்கந்தமுந்திப்பொலியவழகாரும்
தாதார்பொழில்சூழ்ந்தெழிலார்புறவிற்றண்குடமூக்கின்
மாதாரமங்கைபாகமாகமனைகள்பலிதேர்வார்
காதார்குழையார்காளகண்டர்காரோணத்தாரே (௪)

பூவார்பொய்கையலர்தாமரைசெங்கழுநீர்புறமெல்லாம்
தேவார்சிந்தையந்தணாளர்சீராலடிபோற்றக்
கூவார்குயில்களாலுமயில்களின்சொற்கிளிப்பிள்ளை
காவார்பொழில்சூழ்ந்தழகார்குடந்தைக்காரோணத்தாரே. (௫)

மூப்பூர்நலியநெதியார்விதியாய்முன்னேயனல்வாளி
கோப்பார்பார்த்தனிலைகண்டருளுங்குழகர்குடமூக்கில்
தீர்ப்பார்உடலிலடுநோய்அவலம்வினைகள்நலியாமைக்
காப்பார்காலனடையாவண்ணங்காரோணத்தாரே. (௬)

ஊனார்தலைகையேந்தியுலகம்பலிதேர்ந்துழல்வாழ்க்கை
மானார்தோலார்புலியினுடையார்கரியினுரிபோர்வை
தேனார்மொழியார்திளைத்தங்காடித்திகழுங்குடமூக்கிற்
கானார்நட்டமுடையார்செல்வக்காரோணத்தாரே. (௭)

வரையார்திரடோண்மதவாளரக்கனெடும்பன்மலைசேரும்
விரையார்பாதநுதியாலூன்றநெரிந்துசிரம்பத்தும்
முறையால்கீதம்பாடக்கேட்டங்கொளிவாள்கொடுத்தாரும்
கரையார்பொன்னிசூழ்தண்குடந்தைக்காரோணத்தாரே. (௮)

கரியமாலுஞ்செய்யபூமேலயனுங்கழறிப்போ
யரியவண்டந்தேடிப்புக்குமளக்கவொண்ணிலார்
தெரியவரியதேவர்செல்வந்திகழுங்குடமூக்கிற்
கரியகண்டர்காலகாலர்காரோணத்தாரே. (௯)

நாணாரமணர்நல்லதறியார்நாளுங்குரத்திகள்
பேணார்தூய்மைமாசுகழியார்பேசேலவரோடொரு
சேணார்மதிதோய்மாடமல்குசெல்வநெடுவீதிக்
கோணாகரமொன்றுடையார்குடந்தைக்காரோணத்தாரே. (௧0)

கருவார்பொழில்சூழ்ந்தழகார்செல்வக்காரோணத்தாரைத்
திருவார்செல்வமலிசண்பைத்திகழுஞ்சம்பந்த
னுருவார்செஞ்சொன்மாலையிவைபத்துமுரைப்பாருலகத்துக்
கருவாரிடும்பைப்பிறப்பறுத்துக்கவலைகழிவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

சுவாமிதிருநாமம் - சோமநாதர்.
தேவிதிருநாமம் - தேனார்மொழியாள்.

ஆ திருப்பதிகம் - ௫௩.

# ௨௯. திருநாகேச்சுரம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

பொன்னேர்தருமேனியனேபுரியு
மின்னேர்சடையாய்விரைகாவிரியி
னன்னீர்வயனாகேச்சரநகரின்
மன்னேயெனவல்வினைமாய்ந்தறுமே. (௧)

சிறவார்புரமூன்றெரியச்சிலையி
லுறவார்கணையுய்த்தவனேயுயரு
நறவார்பொழினாகேச்சரநகரு
ளறவாவெனவல்வினையாசறுமே. (௨)

கல்லானிழன்மேயவனேகரும்பின்
வில்லானெழில்வேவவிழித்தவனே
நல்லார்தொழுநாகேச்சரநகரிற்
செல்வாவெனவல்வினைதேய்ந்தறுமே. (௩)

நகுவான்மதியோடரவும்புனலுந்
தகுவார்சடையின்முடியாய்தளவ
நகுவார்பொழினாகேச்சரநகருட்
பகவாவெனவல்வினைபற்றறுமே. (௪)

கலைமான்மறியுங்கனலும்மழுவு
நிலையாகியகையினனேநிகழு
நலமாகியநாகேச்சரநகருட்
டலைவாவெனவல்வினைதானறுமே. (௫)

குரையார்கழலாட்டநடங்குலவி
வரையான்மகள்காணமகிழ்ந்தவனே
நரையார்விடையேறுநாகேச்சரத்தெ
மரைசேயெனநீங்குமருந்துயரே. (௬)

முடையார்தருவெண்டலைகொண்டுலகெங்கு
முடையாப்பலிகொண்டுழல்காரணனே
நடையார்திருநாகேச்சுரத்தருட்
சடையாவெனவல்வினைதானறுமே. (௭)

ஓயாதவரக்கனொடிந்தலற
நீயாரருள்செய்துநிகழ்ந்தவனே
வாயாரவழுத்துவர்நாகேச்சுரத்
தாயேயெனவல்வினைதானறுமே (௮)

நெடியானொடுநான்முகனுந்தொடர
சுடுமாலெரியாயநிமிர்சோதியனே
நடுமாவயனாகேச்சுரத்தே
யிடமாவுறைவாயெனவினையறுமே. (௯)

மலம்பாவியகையொடுமண்டையதுண்
கலம்பாவியர்கட்டுரைவிட்டுலகி
னலம்பாவியநாகேச்சுரத்துறை
சிலம்பாவெனத்தீவினைதேய்ந்தறுமே. (௧௦)

கலமார்கடல்சூழ்தருகாழியர்கோன்
றலமார்தருசெந்தமிழின்விரகன்
னலமார்தருநாகேச்சுரத்தானைச்
சொன்மாலைகள்சொல்லநில்லாவினையே (௧௧)

திருச்சிற்றம்பலம்

பண் - செவ்வழி.

திருச்சிற்றம்பலம்

தழைகொள்சந்துமகிலும்மயிற்பீலியுஞ்சாதியின்
பழமுமுந்திப்புனல்பாய்பழங்காவிரித்தென்கரை
நழுவில்வானோர்தொழநல்குசீர்மல்குநாகேச்சுரத்
தழகர்பாதந்தொழுதேத்தவல்லார்க்கழகாகுமே

பெண்ணொர்பாகம்மடையச்சடையிற்புனல்பேணிய
வண்ணமானபெருமானமருமிடமண்ணுளார்
நண்ணிநாளுந்தொழுதேத்திநன்கெய்துநாகேச்சுரங்
கண்ணினாற்காணவல்லாரவர்கண்ணுடையார்களே (௨)

குறவர்கொல்லைப்புனங்கொள்ளைகொண்டுமணிகுலவுநீர்
பறவையாலப்பரக்கும்பழங்காவிரித்தென்கரை
நறவநாறும்பொழில்சூழ்ந்தழகாயநாகேச்சுரத்
திறைவர்பாதந்தொழுதேத்தவல்லார்க்கிடரில்லையே. (௩)

கூசநோக்காதுமுன்சொன்னபொய்கொடுவினைக்குற்றமும்
நாசமாக்கும்மனத்தார்கள்வந்தாடுநாகேச்சுரந்
தேசமாக்குந்திருக்கோயிலாக்கொண்டசெல்வன்கழ
னேசமாக்குந்திறத்தாரறத்தார்நெறிப்பாலரோ. (௪)

கோனாரணனங்கந்தோள்மேற்கொண்டு
கொழுமலரான்றன்சிரத்தைக்கையிலேந்திக்
கானார்களிற்றுரிவைப்போர்வைமூடிக்
கங்காளவேடராயெங்குஞ்செல்வீர்
நானாருமக்கோர்வினைக்கேடனே
னல்வினையுந்தீவினையுமெல்லாமுன்னே
யானாயடியேனையஞ்சேலென்று
யாவடுதண்டுறையுறையுமமரரேறே. (௬)

உழையுரித்தமானுரித்தோலாடையானே
யுமையவடம்பெருமானேயிமையோரேறே
கழையிறுத்தகருங்கடனஞ்சுண்டகண்டா
கயிலாயமலையானேயுன்பாலன்பா
பிழைபொறுத்தியென்பதுவும்பெரியோய்நின்றன்
கடனன்றேபேரருளுன்பாலதன்றே
யழையுறுத்துமாமயில்களாலுஞ்சோலை
யாவடுதண்டுறையுறையுமமரரேறே. (௭)

உலந்தார்தலைகலனொன்றேந்தியூரூ
ருலகம்பலிதிரிவாயுன்பாலன்பு
கலந்தார்மனங்கவருங்காதலானே
கனலாடுங்கையவனேயையாமெய்யே
மலந்தாங்குயிர்ப்பிறவிமாயக்காய
மயக்குளேவிழுந்தழுந்திநாளுநாளு
மலந்தேனடியேனையஞ்சேலென்று
யாவடுதண்டுறையுறையுமமரரேறே. (௮)

பல்லார்ந்தவெண்டலைகையிலேந்திப்
பசுவேறியூரூரன்பலிகொள்வானே
கல்லார்ந்தமலைமகளுநீறுமெல்லாங்
கரிகாட்டிலாட்டுகந்தீர்கருதீராகி
லெல்லாருமென்றன்னையிகழ்வார்போலு
மேழையமண்குண்டர்சாக்கியர்களொன்றுக்
கல்லாதார்திறத்தொழிந்தேனஞ்சேலென்று
யாவடுதண்டுறையுறையுமமரரேறே. (௯)

துறந்தார்தந்தூநெறிக்கட்சென்றேனல்லேன்
றுணைமாலைசூட்டநான்றூயேனல்லேன
பிறந்தேனின்றிருவருளேபேசினல்லாற்
பேசாதநாளெல்லாம்பிறவாநாளே
செறிந்தார்மதிலிலங்கைக்கோமான்றன்னைச்
செறுவரைக்கீழடர்த்தருளிச்செய்கையெல்லா
மறிந்தேனடியேனையஞ்சேலென்று
யாவடுதண்டுறையுறையுமமரரேறே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

# தேவாரம்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

### பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்

மறையவனொருமாணிவந்தடைய
வாரமாயவனருயிர்நிறுத்தக
கறைகொளவேலுடைக்காலனைக்காலாற்
கடிந்தகாரணங்கண்டுகண்டடியே
னிறைவனெம்பெருமானென்றெப்போது
மேத்தியேத்திநின்றஞ்சலிசெய்து
சிறைகொள்சேவடிக்கன்பொடுமடைந்தே
னாவடுதுறையாதியெம்மானே. (௧)

தெருண்டவாயிடைநூல்கொண்டுசிலந்தி
சித்திரப்பந்தர்சிக்கெனவியற்றச
சுருண்டசெஞ்சடையாயதுதன்னைச
சோழனாக்கியதொடர்ச்சிகண்டடியேன்
புரண்டுவீழ்ந்துநின்பொன்மலர்ப்பாதம்
போற்றிபோற்றியென்றன்பொடுபுலம்பி
யருண்டென்மேல்வினைக்கஞ்சிவந்தடைந்தே
னாவடுதுறையாதியெம்மானே. (௨)

திகழுமாலவனாயிரமலரா
லேத்துவானொருநீண்மலர்குறையப்
புகழினாலவன்கண்ணிடந்திடலும்
புரிந்துசக்கரங்கொடுத்தல்கண்டடியேன்
றிகழுநின்றிருப்பாதங்கள்பரவித்
தேவதேவநின்றிறம்பலபிதற்றி
யகழும்வல்வினைக்கஞ்சிவந்தடைந்தே
னாவடுதுறையாதியெம்மானே. (௩)

வீரத்தாலொருவேடுவனாகி
விசைத்தோர்கேழலைத்துரந்துசென்றணைந்து
போரைத்தானவிசயன்றனக்கன்பாய்ப்
புரிந்துவான்படைகொடுத்தல்கண்டடியேன்
வாரத்தாலுன்னாமங்கள்பரவி
வழிபட்டுன்றிறமேநினைந்துருகி
யார்வத்தோடுவந்தடியிணையடைந்தே
னாவடுதுறையாதியெம்மானே. (௪)

ஒக்கமுப்புரமோங்கெரிதூவ
வுன்னைமுன்னியமூவர்நின்சரணம்
புக்குமற்றவர்பொன்னுலகாளப்
புகழினாலருளீந்தமையறிந்து

மிக்கநின்கழலேதொழுதரற்றி
வேதியாதிமூர்த்திநின்னரையி
லக்கணிந்தவெம்மானுனையடைந்தே
னாவடுதுறையாதியெம்மானே.

திருச்சிற்றம்பலம்

---

பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்

கங்கைவார்சடையாய்கணநாதா
காலகாலனேகாமனுக்கனலே
பொங்குமாகடல்விடமிடற்றானே
பூதநாதனேபுண்ணியாபுனிதா
செங்கண்மால்விடையாய்தெளிதேனே
தீர்த்தனேதிருவாவடுதுறையு
ளெங்களெம்மையஞ்சலென்றருளா
யாரெனக்குறவமரர்களேறே. (௧)

மண்ணின்மேன்மயங்கிக்கிடப்பேனை
வலியவந்தென்னையாண்டுகொண்டானே
கண்ணிலேனுடம்பில்லடுநோயாற்
கருத்தழிந்துனக்கேபொறையானேன்
தெண்ணிலாவெறிக்குஞ்சடையானே
தேவனேதிருவாவடுதுறையு
ளண்ணலேயெனையஞ்சலென்றருளா
யாரெனக்குறவமரர்களேறே. (௨)

ஒப்பிலாமுலையாளொருபாகா
வுத்தமாமத்தமார்தருசடையாய்
முப்புரங்களைத்தீயெழத்தங்கே
மூவருக்கருள்செய்யவல்லானே
செப்பவானிழற்கீழிருந்தருளுஞ்
செல்வனேதிருவாவடுதுறையு
ளெப்பனேயெனையஞ்சலென்றருளா
யாரெனக்குறவமரர்களேறே. (௩)

கொதியினால்வருகாளிதன்கோபங்
குறையவாடியகூத்துடையானே
மதியிலேனுடம்பில்லடுநோயான்
மயங்கினேன்மணியேமணவாளா
விதியினாலிமையோர்தொழுதேத்தும்
விகிர்தனேதிருவாவடுதுறையு
ளதிபனேயெனையஞ்சலென்றருளா
யாரெனக்குறவமரர்களேறே. (௪)

# திருநாவுக்கரசுநாயனார்.

## திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

பொருத்தியகுரம்பைதன்னைப்பொருளெனக்கருதவேண்டா
விருத்திபெற்றோதுநெஞ்சுளிறைவனையேத்துமின்க
ளொருத்தியைப்பாகம்வைத்தங்கொருத்தியைச்சடையுள்வைத்த
துருத்தியஞ்சுடரினானைத்தொண்டனேன்கண்டவாறே. (க)

சவைதனைச்செய்துவாழ்வான்சலத்துளேயழுந்துகின்ற
விவையொருபொருளுமல்லவிறைவனையேத்துமின்னோ
வவைபுரமூன்றுமெய்துவடியவர்க்கருள்கள்செய்த
சுவையினைத்துருத்தியானைத்தொண்டனேன்கண்டவாறே. (உ)

உன்னியெப்போதுநெஞ்சுளொருவனையேத்துமின்னோ
கன்னியையொருபால்வைத்துக்கங்கையைச்சடையில்வைத்துப்
பொன்னியினடுவுதன்னுட்பூம்புனல்பொலிந்துதோன்றுந்
துன்னியதுருத்தியானைத்தொண்டனேன்கண்டவாறே. (ங)

ஊன்றலைவலியனாகியுலகத்துளுயிர்கட்கெல்லாந்
நான்றலைப்பட்டுநின்றுசார்கனலகத்துவீழ
வான்றலைத்தேவர்கூடிவானவர்க்கிறைவாவென்னத்
தோன்றலைத்துருத்தியானைத்தொண்டனேன்கண்டவாறே. (ச)

உடறனைக்கழிக்கலுற்றவுலகத்துளுயிர்கட்கெல்லா
மிடர்தனைக்கழிக்கவேண்டிலிறைவனையேத்துமின்னோ
கடறனினஞ்சமுண்டுகாண்பரிதாகிநின்ற
சுடர்தனைத்துருத்தியானைத்தொண்டனேன்கண்டவாறே. (ரு)

அள்ளலைக்கடக்கவேண்டிலரனையேநினைமினீங்கள்
பொள்ளலிக்காயந்தன்னுட்புண்டரீகத்திருந்த
வள்ளலைவானவர்க்குங்காண்பரிதாகிநின்ற
துள்ளலைத்துருத்தியானைத்தொண்டனேன்கண்டவாறே. (சா)

பாதியிலுமையாடன்னைப்பாகமாவைத்தபண்பன்
வேதியனென்றுசொல்லிவிண்ணவர்விரும்பியேத்தச்
சாதியாஞ்சதுமுகனுஞ்சக்கரத்தானுங்காணாச்
சோதியைத்துருத்தியானைத்தொண்டனேன்கண்டவாறே. (எ)

சாமனைவாழ்க்கையானசலத்தினுளழுந்தவேண்டா
தூமலரிலங்காட்டித்தொழுதடிவணங்குமின்னோ
சோமனைச்சடையுள்வைத்துத்தொன்னெறிபலவுங்காட்டுந்
தூமணற்றுருத்தியானைத்தொண்டனேன்கண்டவாறே. (அ)

குண்டரோசமணர்புத்தர்குறியறியாதுநின்று
கண்டதேகருதுவார்கள்கருத்தெணாதொழுமினீங்கள்
விண்டவர்புரங்களெய்துவிண்ணவர்க்கருள்கள்செய்த
தொண்டர்கட்டுணையினானைத்துருத்திநான்கண்டவாறே. (கூ)

யெறியுமாகாவிரிததுருத்தியாரவேள்விக
குடியுளாரடிகளைசசெடியனேனுயே
னறியுமாறறிகிலேனெமபெருமானை
யருவினையுள்ளனவாசஅறுததானே. (௪)

பொழிநதிழிமும்மதக்களிற்றினமருபபும
பொன்மலாவேங்கையினன்மலருநதி
யிழிநதிழிநதருவிகள்கடுமபுனலீண்டி
யெணடிசையோாகளுமாடவாநதிநகே
சுழிநதிழிகாவிரித்துருத்தியாாவேள்விக
குடியுளாரடிகளைசசெடியனேனுயே
னுழிநதிலேனபிறற்றுமாறமெபெருமானை
யுற்றநோயிற்றையேயுறவொழிததானே. (௫)

புகழுமாசநதனதுணடமொடகிலும்
பொழின்மணிவரனறியுநனமலருநதி
யகழுமாவருஙகரைவளம்பாடப்பெருகி
யாடுவாாடாவந்தாததஞ்சனமலமபித்
திகழுமாகாவிரிததுருத்தியாரவேளவிக
குடியுளாரடிகளைசசெடியனேனுயே
னிசழுமாறறிகிலேனெம்பெருமானை
யிழிததநோயிமமையேயொழிககவலலானை (௬)

வரையின்மாஙகனியொடுவாழையின்கனியும
வருடியுமவணகியுமராமரம்பொருது
கரையுமாகருஙகடல்காணபதேசருதநாயக
காம்பீலிசுமநதொளிாநிததிலஙகைபோய்
விரையுமாகாவிரித்துருத்தியாாவேளவிக
குடியுளாரடிகளைசசெடியனேனுயே
னுரையுமாறறிகிலேனெமபெருமானை
யுலகறியழவினையுறவொழித்தானே. (௭)

ஊருமாதேசமேமனமுகநதுளளிய
புளளினம்பலபடிநதொன்கரையுகளக
காருமாகருஙகடலகாணபதேகருததாய்க
கவரிமாமயிாசுமநதொண்பளிஙகிடறித
தேருமாகாவிரிததுருத்தியாாவேள்விக
குடியுளாரடிகளைசசெடியனேனுயே
னாருமாறறிகிலேனெமபெருமானை
யம்மைநோயிம்மையேயாசஅறுத்தானே. (௮)

புலங்களைவளம்படப்போககறப்பெருகிப்
பொன்களேசுமநதெஙகுமபூசலசெய்தாாப்ப
விலஙகுமாமுததிஞேடினமணியிடறி
யிருகரைப்பெருமரமபீழநதுகொணடெற்றிக்
கலங்குமாகாவிரிததுருத்தியாாவேளவிக
குடியுளாரடிகளைசசெடியனேனுயேன

விலங்குமாறறிகிலேனெம்பெருமானை
மேலைக்கோயிமமைமையேவீழ்வித்தானை. (௯)

மங்கையோர் கூறுகந்தேறுகந்தேறி
மாதவர் திரிபுரந்தீயெழச்செற்ற
வங்கையான்கழலடியன்றிமற்றறியா
...ழபமைாக்கடியவன்றொழுவனூரன்
...செங்கையாற்கவிரித்துருத்தியாழ்வளவிக்
ஏழுபுள்ளாரடிகளைச்சோதியைப்பாட
நங்கையாற்றமெருழுதுதககாவிப்பேற்சொளவார்
...பெறிமென்றமருலகயாள்வாரே (௧௦)

திருச்சிற்றம்பலம்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாவடுதுறையை அகன்று, திருத்துருத்திக்குப் போய்ச் சுவாமியை வணங்கி, "அடியேனுடைய சரீரத்தின்மேலே பொருந்திய நோயைநீக்கியருளல் வேண்டும்" என்று பிரார்த்தித்தார். அதற்குக் கடவுள் "நீ இக்கோயிலுக்கு வடபுறத்தில் இருக்கின்ற குளத்திலே ஸ்நானம் பண்ணுவாயாகில், இந்நோய் நீங்கிவிடும்" என்று திருவாய்மலர்ந்தருளினார். அதுகேட்டுச் சுந்தரமூர்த்திநாயனார் கைதொழுது புறப்பட்டு, அந்தத் தீர்த்தத்தை அடைந்து, சுவாமியை வணங்கிக்கொண்டு, அவருடைய திருவடிகளிலே அன்போடு பதிந்த இருதயத்துடனே அத்தீர்த்தத்திலே ஸ்நானம்பண்ணினார். உடனே அவருடைய திருமேனி நோய் நீங்கிப் பிரகாசித்தது. அவர் கண்டவர்கள் அதிசயிக்கும்படி கரையேறி, வஸ்திரந் தரித்துக்கொண்டு, திருக்கோயிலிலேபோய், சுவாமியை வணங்கி, "மின்னுமாமேகங்கள்" என்னுந் திருப்பதிகம் பாடியருளினார்.

திருத்துருத்தித்திருப்பதிகம் - ௩.

சுவாமிதிருநாமம் - உத்தரவேதீசுவரர்.
தேவிதிருநாமம் - அமிருதமுகிழாம்பிகை

ஆ திருப்பதிகம் - ௯௦.

## ௩அ. திருவழுந்தூர்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

தொழுமாறுவல்லார்துயர்தீரநினைந்
தெழுமாறுவல்லாரிசைபாடவிம்மி
யழுமாறுவல்லாரழுந்தைமறையோர்
வழிபாடுசெய்மாடமன்னினையே. (௧)

கடலேறியநஞ்சமுதுண்டவனே
யுடலேயுயிரேயுணர்வேயெழிலே
யடலேறுடையாயழுந்தைமறையோர்
விடலேதொழமாமடமேவினையே. (௨)

கழிகாடலனேகனலாடலினாய்
பழிபாடிலனேயவையேபயிலும்
மொழிபாடலராயழுந்தைமறையோர்
வழிபாடுசெய்மாமடமன்னினையே. (௩)

வானேமலையேயெனமன்னுயிரே
தானேதொழுவார்தொழுதாண்மணியே
யானேசிவனேயழுந்தையவரெம்
மானேயெனமாமடமன்னினையே. (௪)

அலையார்புனல்சூழழுந்தைப்பெருமா
னிலையார்மதியுந்நிறைவெண்மழுவும்
மிலையார்படையும்மிவையேந்துசெல்வ
நிலையாவதுகொள்கெனநீநினையே. (௫)

நறவார்தலையினயவாவுலகிற்
பிறவாதவனேபிணியில்லவனே
யறையார்கழலாயழுந்தைமறையோர்
மறவாதெழுமாமடமன்னினையே. (௬)

தடுமாறுவல்லாய்தலைவாமதியஞ்
சுடுமாறுவல்லாய்சுடரார்சடையில்
லடுமாறுவல்லாயழுந்தைமறையோர்
நெடுமாநகர்கைதொழநின்றனையே. (௭)

பெரியாய்சிறியாய்பிறையாய்மிடறு
கரியாய்கரிகாடுயர்வீடுடையா
யரியாயெளியாயழுந்தைமறையோர்
வெரியார்தொழுமாமடமேவினையே (௮)

மணிநீண்முடியான்மலையையரக்கன்
றணியாதெடுத்தானுடல்நெரித்த
வணியார்விரலாயழுந்தைமறையோர்
மணிமாமடமன்னியிருந்தனையே. (௯)

முடியார்சடையாய்முனநாளிருவா
நெடியான்மலரானிகழ்வாலிவர்க
ளடிமேலறியாரழுந்தைமறையோர்
படியாற்றொழுமாமடமற்றினையே. (௧௦)

அருஞானமவல்லாரழுநதைமறையோா
பெருஞானமுடைப்பெருமானவனைத்
திருஞானசம்பநதனசெந்தமிழ்க
ஒருஞானமுண்டாமுணாநதாாதமக்கே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

சுவாமிதிருநாமம - வேதபுரிநாதா.
தேவிதிருநாமம - சௌநதரநாயகி.

ஆ திருப்பதிகம - ௯௧.

## ௩௯. திருமயிலாடுதுறை*

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்.

பண் - தக்கராகம.

திருச்சிற்றம்பலம்

கரவினறிநன்மாமலாகொணடு
இரவும்பகலுநதொழுவாாகள
சிரமொன்றியசெஞசடையான்வாழ
வரமாமயிலாடுதுறையே. (௧)

உரவெங்கரியினனுரிபோாதத
பரமன்னுறையுமபதியெனபா
குரவஞசுரபுனனையுமவனனி
மருவுமமயிலாடுதுறையே. (௨)

ஊனததிருணீயகிடவேண்டின
ஞானப்பொருள்கொணடடிபேணுந
தேனொததினியானமருஞ்சோ
வானமமயிலாடுதுறையே. (௩)

அருசொணபுலனுமமவைசெறற
மருசனமயிலாடுதுறையை
நெருசொன்றிநினைநதெழுவாாமேற்
றருசும்பிணியாயினதானே. (௪)

தணியாாமதிசெஞசடையான்ற
னணியாாநதவருககருளெனறும
பிணியாயினதீாததருள்செய்யு
மணியானமயிலாடுதுறையே. (௫)

தொணடரிசைபாடியுங்கூடிக
கணடுதுதிசெயதவனூராம
பணடும்பலவேதியரோத
வண்டாாமயிலாடுதுறையே. (௬)

* திருமயிலாடுதுறை என்பது மாயூரம்.

அணங்கோடொருபாகமமர்ந்து
திணங்கியருள்செய்தவனூர்
நுணங்குமபுரிநூலர்கள்கூடி
வணங்குமயிலாடுதுறையே. (எ)

சிரங்கையினிலேந்தியிரந்த
பரங்கொள்பரமேட்டிவரையா
லரங்கவவரக்கன்வலிசெற்ற
வரங்கொண்மயிலாடுதுறையே. (அ)

ஞாலத்தைநுகர்ந்தவன்றானுங்
கோலத்தயனுமறியாத
சீலத்தவனூர்சிலர்கூடி
மாலைத்தீர்மயிலாடுதுறையே. (கூ)

நின்றுண்சமணுநெடுந்தேர
ரொன்றும்மறியாமையுயர்ந்த
வென்றியருளானவனூர்
மன்றன்மயிலாடுதுறையே (க0)

நயர்காழியுண்ஞானசம்பந்தன்
மயர்தீர்மயிலாடுதுறைமேற்
செயலாலுரைசெய்தனபத்து
முயர்வாமிவையுற்றுணர்வார்க்கே. (கக)

திருச்சிற்றம்பலம்

திருவிராகம்.

பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்

ஏனவெயிறாடரவொடென்புவரியாமையிவைபூண்டிளைஞராய்க்
கானவரிநீடுழுவையதளுடையபடர்சடையர்காணியெனலாம்
மானபுகழ்வேதியர்களாகுதியின்மீதுபுகைபோகியழகார்
வானமுறுசோலைமிசைமாசுபடமூசுமயிலாடுதுறையே. (க)

அந்தணமதிசெஞ்சடையரங்கணெழில்கொன்றையொடணிந்தழகரா
மெந்தமடிகட்கினியதானமதுவேண்டிலெழிலார்பதியதாங்
கந்தமலிசந்தினொடுகாரகிலும்வாரிவருகாவிரியுளால்
வந்ததிரையுந்தியெதிர்மந்திமலர்சிந்துமயிலாடுதுறையே. (உ)

தோளின்மிசைவரியரவநஞ்சழலவீக்கிமிகநோக்கரியராய்
மூளைபடுவெண்டலையிலுண்டுமுதுகாடுறையுமுதல்வரிடமாம்
பாளைபடுபைங்கமுகுசெங்கனியுதிர்த்திடநிரந்துகமழ்பூ
வாளைகுதிகொள்ளமடல்விரியமணநாறுமயிலாடுதுறையே. (ங)

ஏதமிலரரியமறைமலையர்மகளாகியவிலங்குநுதலொண்
பேதைதடமார்பதிடமாகவுறைகின்றபெருமானதிடமாங்
காதன்மிகுகவ்வையொடுமெய்வலைவைகூடிவருகாவிரியுளான்
மாதர்மறிதிரைகள்புகவெறியவெறிகமழுமயிலாடுதுறையே. (ச)

அண்டர்வாழ்வுமமரரிருக்கையுங்
கண்டுவீற்றிருக்குங்கருத்தொன்றிலோம
வண்டுசேர்மயிலாடுதுறையரன்
றொண்டர்பாதங்கள்சூடித்துதையிலே. (ங)

வெஞ்சினக்கடுங்காலன்விரைகிலா
னஞ்சிறப்பும்பிறப்புமறுக்கலா
மஞ்சன்மாமயிலாடுதுறையுறை
யஞ்சொலாளுமைபங்கனருளிலே. (ச)

குறைவிலோங்கொடுமாநுடவாழ்க்கையாற்
கறைநிலாவியகண்டனெண்டோளினன்
மறைவலான்மயிலாடுதுறையுறை
யிறைவனீள்கழலேத்தியிருக்கிலே. (ரு)

நிலைமைசொல்லுநெஞ்சேதவமென்செய்தாய்
கலைகளாயவல்லான்கயிலாயனன்
மலையன்மாமயிலாடுதுறையனந்
தலையின்மேலுமனத்துளுந்தங்கவே. (சு)

நீற்றினானிமிர்புன்சடையானிடை
யேற்றினானுமையாளுடையான்புலன்
மாற்றினான்மயிலாடுதுறையென்று
போற்றுவார்க்குமுண்டோபுவிவாழ்க்கையே. (எ)

கோலும்புல்லுமொருகையிற்கூர்ச்சமுந்
தோலும்பூண்டுதுயரமுற்றென்பய
னீலமாமயிலாடுதுறையனே
நூலும்வேண்டுமோநுண்ணுணர்ந்தோர்கட்கே. (அ)

பணங்கொளாடரவல்குற்பகீரதி
மணங்கொள்சசடைவைத்தமறையவன்
வணங்குமாமயிலாடுதுறையர
னணங்கொர்பாலகொண்டகோலமழகிதே. (கூ)

நீணிலாவரவச்சடைநேசனைப்
பேணிலாதவர்பேதுறவோட்டினோம்
வாணிலாமயிலாடுதுறைதனைக்
காணிலார்க்குங்கடுந்துயரில்லையே. (க0)

பருத்ததோளுமுடியும்பொடிபட
விருத்தினானவனின்னிசைகேட்டலும்
வரத்தினான்மயிலாடுதுறைதொழுங்
கரத்தினார்வினைகட்டறுங்காண்மினே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருமயிலாடுதுறைத்திருப்பதிகம் - ங.

---

சுவாமிதிருநாமம் - மாயூரநாதர்.
தேவிதிருநாமம் - அஞ்சநாயகி.

---

ஆ திருப்பதிகம் - கூச.

# ௪௦. திருவிளநகர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் -- காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

ஒளிரிளம்பிறைசென்னிமேலுடையர்கோவணவாடையர்
குளிரிளமழைதவழ்பொழிற்கோலநீர்மல்குகாவிரி
நளிரிளம்புனல்வார்துறைநங்கைகங்கையைநண்ணினார்
மிளிரிளம்பொறியரவினார்மேயதுவிளநகரதே. (௧)

அக்கரவ்வணிகலனெனவதனொடார்த்ததோராமைபூண்
டுக்கவர்சுடுநீறணிந்தொளிமல்குபுனற்காவிரிப்
புக்கவர்துயர்கெடுகெனப்பூசுவெண்பொடிமேவிய
மிக்கவர்வழிபாடுசெய்விளநகரவர்மேயதே. (௨)

வாளிசேரடங்கார்மதிற்றொலையநூறியவம்பின்வேய்த்
தோளிபாகமமர்ந்தவருயர்ந்ததொல்கடனஞ்சுடன்
காளமல்கியகண்டத்தர்கதிர்விரிசுடர்முடியினார்
மீளியேறுகந்தேறினார்மேயதுவிளநகரதே. (௩)

கால்விளங்கெரிகழலினார்கையிலங்கியவேலினார்
நூல்விளங்கியமார்பினார்நோயிலார்பிறப்புமிலார்
மால்விளங்கொளிமல்கியமாசிலாமணிமிடற்றினார்
மேல்விளங்குவெண்பிறையினார்மேயதுவிளநகரதே. (௪)

பன்னினார்மறைபாடினார்பாயசீர்ப்பழங்காவிரித்
துன்னுதண்டுறைமுன்னினார்தூநெறிபெறுவானெனச்
சென்னிதிங்களைப்பொங்கராக்கங்கையோடுடன்சேர்த்தினார்
மின்னுபொன்புரிநூலினார்மேயதுவிளநகரதே. (௫)

தேவருமமரர்களுந்திசைகண்மேலுளதெய்வமும்
யாவருமறியாததோரமைதியாற்றழலுருவினார்
மூவருமவரென்னவுமுதல்வருமவரென்னவு
மேவரும்பொருளாயினார்மேயதுவிளநகரதே. (௬)

சொற்றருமறைபாடினார்சுடர்விடுஞ்சடைமுடியினார்
கற்றருவடங்கையினார்காவிரித்துறைகாட்டினார்
மற்றருந்திரடோளினார்மாசில்வெண்பொடிப்பூசினார்
விற்றருமணிமிடற்றினார்மேயதுவிளநகரதே. (௭)

படர்தருஞ்சடைமுடியினார்பைங்கழலடிபரவுவா
ரடர்தரும்பிணிகெடுகெனவருளுவாரரவரையினார்
விடைதரும்மணிமிடற்றினார்மின்னுபொன்புரிநூலினார்
மிடறரும்படைமழுவினார்மேயதுவிளநகரதே. (௮)

கையிலங்கியவேலினர்தோலினர்கரிகாலினா
டையிலங்கரவல்குலாள்பாகமாகியபரமனார்
மையிலங்கொளிமலியமாசிலாமணிமிடறினா
மெய்யிலங்குவெண்ணீற்றினார்மேயதுவிளநகரதே. (௯)

உள்ளதன்றனைக்காண்டனகிழேன்றமாமணிவண்ணனு
முள்ளதன்றனைக்காணபன்மையெனறமாமலரண்ணனு
முள்ளதன்றனைக்கண்டிலாவொளியார்தருஞ்சடைமுடியினமே
லுள்ளதன்றனைக்கண்டிலாவொளியார்விளநகாமேயதே. (௧௦)

மென்சிறைவண்டியாழ்முரலவிளநகாததுறைமேவிய
நன்பிறைநுதலண்ணலைச்சணைபைஞானசம்பநதன்சீ
ரின்புறுதமிழாறசொன்னவேந்துவாரவினைநீங்கிப்போய்
துன்புறுதுயரமமிலாதநெறிபெறுவாாகளே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

சுவாமிதிருநாமம் - துறைகாட்டுமவள்ளல்.
தேவிதிருநாமம் - தோழிநாயகி.

---

ஆ. திருப்பதிகம் - ௯௫

---

# ௪௧. திருப்பறியலூர்வீரட்டம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - மேகராககுறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

கருந்தன்கடவுள்கனலேந்தியாடு
திருத்தனசடைமேனிரம்பாமதியன
திருத்தமுடையார்திருப்பறியலூரில
விருத்தனெனததகுமவீரட்டத்தானே. (௧)

மருந்தனமுதன்மயானததுண்மைநதன
பெருந்தணபுனறசென்னிவைநதபெருமான
திருந்துமறையோர்திருப்பறியலூரில
விரிநதமலர்ச்சோலைவீரட்டத்தானே. (௨)

குளிர்நதாாசடையன்கொடுஞ்சிலைவிறகாமன்
விளிநதானடங்கவிழிநதெய்தசெற்றான்
றெளிநதார்மறையோர்திருப்பறியலூரின்
மிளிர்நதார்மலர்ச்சோலைவீரட்டத்தானே. (௩)

பிறப்பாதியில்லான்பிறப்பார்பிறப்புச்
செறப்பாதியந்தஞ்செலச்செய்யுந்தேசன்
சிறப்பாடுடையார்திருப்பறியலூரில
விறற்பாரிடஞ்சூழ்ந்தவீரட்டத்தானே. (௪)

கரிந்தாரிகோட்டிலாடுகபாலி
புரிந்தார்படுதம்புறங்காட்டிலாடுந்
தெரிந்தார்மறையோர்திருப்பதியனூரில்
விரிந்தார்மலர்ச்சோலைவீரட்டத்தானே. (௫)

அரவுற்றநாணுவனலம்பதாகச்
செருவுற்றவர்புரந்தீயெழச்செற்றான்
றெருவிற்கொடிசூழ்திருப்பதியனூரில்
வெருவுற்றவர்தொழும்வீரட்டத்தானே. (௬)

நரையார்விடையானலங்கொள்பெருமா
னரையாரரவமமழகாவசைத்தான்
றிரையார்புனல்சூழ்திருப்பதியனூரில்
விரையார்மலர்ச்சோலைவீரட்டத்தானே. (௭)

வளைக்குமெயிற்றினரக்கனவரைக்கீழ்
த்ளைக்கும்படிதானிருந்தேழையன்னந்
திளைக்குமபடுகற்றிருப்பதியனூரில்
விளைக்குமவயல்சூழ்ந்தவீரட்டத்தானே. (௮)

வளங்கொண்மலர்மேலயனோடவண்ணன்
றுளங்குமனந்தாரதொழுந்தழலாயினான்
றிளங்கொமபனோடிணைந்துப்பிணைந்தும்
விளங்குந்திருப்பதியவீரட்டத்தானே. (௯)

சடையன்பிறையன்சமணர்சாக்கியரோ
டடையானபிலாதானடியார்பெருமா
னுடையன்புலியினுரிதோலரைமேல
விடையன்றிருப்பதியவீரட்டத்தானே (௧௦)

நறுநீருகுங்காழிஞானசம்பந்தன்
வெறிநீத்திருப்பதியவீரட்டத்தானைப்
பொறிகொட்டரவன்புனைபாடல்வல்லார்க
கறுநீடவல்லமறுமபிறப்புத்தானே (௧௧)

திருச்சிற்றம்பலம்

சுவாமிதிருநாமம் - வீரட்டநாதர்.
தேவிதிருநாமம் - இளங்கொம்பனையாள்.

ஆ௨ திருப்பதிகம் - ௬௬.

# ௪௨. திருச்செம்பொன்பள்ளி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

மருவார்குழலிமாதோர்பாகமாய்த்
திருவார்செம்பொன்பள்ளிமேவிய
கருவார்கண்டத்தீசன்கழல்களை
மருவாதவர்மேன்மன்னும்பாவமே. (௧)

வாரார்கொங்கைமாதோர்பாகமாய்ச்
சீரார்செம்பொன்பள்ளிமேவிய
ஏரார்புரிபுன்சடையெம்மீசனைச்
சேராதவர்மேற்சேரும்வினைகளே. (௨)

வரையார்சந்தோடகிலும்வருபொன்னித்
திரையார்செம்பொன்பள்ளிமேவிய
நரையார்விடையொன்றூருநம்பனை
யுரையாதவர்மேலொழியாவூனமே. (௩)

மழுவாளேந்திமாதோர்பாகமாய்ச்
செழுவார்செம்பொன்பள்ளிமேவிய
வெழிலார்புரிபுன்சடையெம்மிறைவனைத்
தொழுவார்தம்மேற்றுயரமில்லையே. (௪)

மலையான்மகளோடுடனாய்மதிலெய்த
சிலையார்செம்பொன்பள்ளியானையே
யிலையார்மலர்கொண்டெல்லிநண்பக
னிலையாவணங்கநில்லாவினைகளே. (௫)

அறையார்புனலோடகிலும்வருபொன்னிச்
சிறையார்செம்பொன்பள்ளிமேவிய
கறையார்கண்டத்தீசன்கழல்களை
நிறையால்வணங்கநில்லாவினைகளே. (௬)

பையாரரவேரல்குலாளொடு
செய்யார்செம்பொன்பள்ளிமேவிய
கையார்சூலமேந்துகடவுளை
மெய்யால்வணங்கமேவாவினைகளே. (௭)

வானார்திங்கள்வாளார்புன்சடை வைத்துத்
தேனார்செம்பொன்பள்ளிமேவிய
ஊனார்தலையிற்பலிகொண்டுழல்வாழ்க்கை
யானார்கழலேயடைந்துவாழ்மினே. (௮)

ஞாலமுமறியவேண்டினன்றெனவாழுநெஞ்சீர்
காலமுங்கழியவானகள்ளத்தையொழியகில்லீர்
சாலமுமவேண்டாவாவாசெற்றங்கள்குரோதநீக்கில்
ஏலமுநோன்புமாவார்திருச்செம்பொன்பள்ளியாரே. (சு)

பரிசாலேநேசஞ்செய்யவிருந்தபுண்டரீகத்தாரு
மெரிசாலேமூன்றுமாகியிமையவர்தொழநின்றாரு
நெரிகாலேமூன்றுசந்தியானித்துவணங்கநின்று
திரிகாலங்கண்டவெந்தைதிருச்செம்பொன்பள்ளியாரே (எ)

ஆருடைக்கொன்றைமாலைக்கதிர்மதியரவினோடு
நீருடைச்சடையுள்வைத்தநீதியார்நீதியுள்ளார்
பாரொடுவிண்ணுமண்ணும்பதினெட்டுக்கணங்களேத்தச்
சீரொடுபாடலாளர்திருச்செம்பொன்பள்ளியாரே (அ)

ஓவாதமறைவல்லானுமோதநீர்வண்ணன்காணு
மூவாதபிறப்பிலாருமுனிகளானார்களேத்தும்
பூவாணமூன்றுமூன்றுநூற்றறுபதுமாகுமெந்தை
தேவாதிதேவரென்றுந்திருச்செம்பொன்பள்ளியாரே. (கூ)

அங்கங்களாறுநான்குமாதனைக்கருளிச்செய்து
சங்கங்களபாடவார்க்குச்சங்கரன்மலையெடுத்தா
னங்கங்களுதிரந்தோரவலறிடவடர்த்துநின்று
செங்கண்வெள்ளேற்றேறுந்திருச்செம்பொன்பள்ளியாரே (க0)

திருச்சிற்றம்பலம்

திருச்செம்பொன்பள்ளித் திருப்பதிகம் - ங.

சுவாமிதிருநாமம் - சுவர்ணபுரிநாதர்
தேவிதிருநாமம் - சுகந்தவனநாயகி

ஆக திருப்பதிகம் - கூக.

---

## சங. திருநனிபள்ளி.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

காரைகள்கூகைமுல்லைகளவாகைபீகைபடர்தொடரிகள்ளிகவினிச்
சூரைகள்பம்மிவிம்முகடுகாடமர்ந்தசிவன்மேவுசோலைநகர்தான்
றேரைகளாரைசாயமிதிகொள்ளவாளைகுதிகொள்ளவள்ளைதுவள
நாரைகளாரல்வாரவயன்மேதிவைகுநனிபள்ளிபோலுநமர்காள். (க)

சடையிடைபுக்கொடுங்கியுள தங்குவெள்ளம்வளர்திங்கள்கண்ணியயலே
யிடையிடைவைத்ததொக்கமலர்தொத்துமாலையிறைவன்னிடங்கொள்பதிதான்
மடையிடைவாளைபாயமுகிழ்வாயநெரிந்துமணநாறுநீலமலருந்
நடையுடையன்னம்வைகுபுனல்மடப்பைநனிபள்ளிபோலுநமர்காள். (உ)

பெறுமலர்கொண்டுதொண்டர்வழிபாடுசெய்யவொழிபாடிலாதபெருமான்
கறுமலர்கண்டமாகவிடமுண்டகாளையிடமாயகாதனகர்தான்
வெறுமலர்தொட்டுவிட்டவிசைபோனகொம்பின்விடுபோதலர்ந்தவிரைசேர்
நறுமலரல்லிபல்லியொலிவண்டுறங்குநனிபள்ளிபோலுநமர்காள். (௩)

குளிர்தருகங்கைதங்குசடைமாடிலங்குதலைமாலையோடுகுலவி
யொளிதருதிங்கள்சூடியுமைபாகமாகவுடையானுகந்தநகர்தான்
குளிர்தருகொம்பிலோடுகுயில்பாடல்கேட்டபெடைவண்டுதானுமுரல
நளிர்தருசோலைமாலைநரைகுருகுவைகுநனிபள்ளிபோலுநமர்காள் (௪)

தோடொருகாதனுங்கியொருகாதிலங்குசரிசங்கினோடுபுரளக்
காடிடமாகநின்றுகனலாடுமெந்தையிடமாயகாதனகர்தான்
வீடுடனெய்துவார்கள்விதியென்றுசென்றுவெறிநீர்தெளிப்பவிரலா
னாடுடனாடுசெம்மையொலிவெள்ளமாருநனிபள்ளிபோலுநமர்காள் (௫)

மேகமொடோடுதிங்கள்மலராவணிந்துமலையான்மடந்தைமணிபொ
ன்னாகமொர்பாகமாகவனலாடுமெந்தைபெருமானமர்ந்தநகர்தா
னூகமொடாடுமந்தியுகளுஞ்சிலம்பவகிலுந்தியொண்பொன்னிடறி
நாகமொடாரம்வாருபுனல்வந்தலைக்குநனிபள்ளிபோலுநமர்காள் (௬)

தகைமலிதண்டுசூலமனலுமிழுநாகங்கொடுகொட்டிவீணைமுரல
வகைமலிவன்னிகொன்றைமதமத்தம்வைத்தபெருமானுகந்தநகர்தான்
புகைமலிகந்தமாலைபுனைவார்கள்பூசல்பணிவார்கள்பாடல்பெருகி
நகைமலிமுத்திலங்குமணல்சூழ்கிடங்குநனிபள்ளிபோலுநமர்காள் (௭)

வலமிகுவாளன்வேலன்வளைவாளெயிறுமதியாவரக்கன்வலியோ
டுலமிகுதோள்களொல்கவிரலாலடர்ந்தபெருமானுகந்தநகர்தா
னிலமிகுகீழுமேலுநிகராதுமில்லையெனநின்றநீதியதனை
நலமிகுதொண்டர்நாளுமடிபரவல்செய்யுநனிபள்ளிபோலுநமர்காள் (௮)

நிறவுருவொன்றுதோன்றியெரியொன்றிநின்றதொருநீர்மைசீர்மைநினையா
ரறவுருவேதநாவனயனோடுமாலுமறியாதவண்ணனநகர்தான்
புறவுரிமுல்லைமௌவல்குளிர்பிண்டிபுன்னைபுனைகொன்றைதுன்றுபொதுளி
நறவிரிபோதுதாதுபுதுவாசநாறுநனிபள்ளிபோலுநமர்காள். (௯)

அனமிகுசெல்குசோறுகொணர்கென்றுகையிலிடவுண்டுபட்டவமணும
மனமிகுகஞ்சிமண்டையதிலுண்டுதொண்டர்குணமின்றிநின்றவடிவும
வினைமிகுவேதநான்குமவிரிவித்தநாவின்விடையானுகந்தநகர்தா
னனமிகுதொண்டர்நாளுமடிபரவல்செய்யுநனிபள்ளிபோலுநமர்காள். (௧௦)

கடல்வரையோதமல்குகழிகானல்பானல்கமழ்காழியென்றுகருதப்
படுபொருளாறுநாலுமுளதாகவைத்தபதியானஞானமுனிவ
னிடுமறையொன்றவத்தர்பியன்மேலிருந்திசையாலுரைத்தபனுவ
னடுவிருளாடுமெந்தைநனிபள்ளியுள்கவினைகெடுதலாணைநமதே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பல தலங்களையும் பணிந்துகொண்டு, திருநனிபள்ளியைச் சமீபிக்கும்போது, அது பாலைநிலமாக விருந்தபடியால், அங்குள்ள அடியார்கள் வேண்டுகோளின்படி, நெய்தனிலமாகும் வண்ணம் "காரைகள் கூகைமுல்லை" என்னுந் திருப்பதிகம் பாடியருளினார்.

3517 காலமுநாழிகையுநனிபள்ளிமனத்தினுள்கிக்
கோலமதாயவனைக்குளிர்நாவலூரன்சொன்ன
ஞாலமதித்துரைப்பார்மணமறநதுவானோருலகிற்
சாலநல்லினபமெயதிததவலோகததிருபபவரே. (௧0)

திருச்சிற்றமபலம்

திருநனிபள்ளித்திருப்பதிகம் - ௩.

சுவாமிதிருநாமம - நற்றுணையப்பர்.
தேவிதிருநாமம - பருவதராஜபுத்திரி.

ஆ திருப்பதிகம் - ௪0௨.

## ௪௪. திருவலம்புரம்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண - பழமபஞசுரம.

திருச்சிற்றம்பலம்

3518 கொடியுடைமும்மதிலூடுருவக்குனிவெஞ்சிலைதாங்கி
யிடிபடவெய்தவமரர்பிரானடியாரிசைந்தேத்தத்
துடியிடையாளையொர்பாகமாகத்துதைந்தாரிடம்போலும்
வடிவுடைமேதிவயல்படியும்வலம்புரநன்னகரே (௧)

3519 கோத்தகல்லாடையுங்கோவணமுங்கொடுகொட்டிகொண்டொருகைத்
தேய்த்தன்றநங்கனைத்தேசழித்துத்திசையார்தொழுதேத்தக்
காய்த்தகல்லாலதன்கீழிருந்தகடவுளிடம்போலும்
வாய்த்தநன்முத்தீத்தொழிலுடைமறையோர்வலம்புரநன்னகரே. (௨)

3520 நொய்யதொர்மான்மறிகைவிரலினுனைமேனிலையாகி
மெய்யெரிமேனிவெண்ணீறுபூசிவிரிபுன்சடைதாழ
மையிருஞ்சோலைமணங்கமழவிருந்தாரிடம்போலும்
வைகலுமாமுழவம்மதிருமவலம்புரநன்னகரே. (௩)

3521 ஊனமராக்கையுடம்புதன்னையுணரிற்பொருளன்று
தேனமர்கொன்றையினானடிக்கேசிறுகாலையேத்துமினோ
வானமர்ந்தங்கொண்டாடுகந்தவடிகளிடம்போலும்
வானவர்நாடொறும்வந்திறைஞ்சும்வலம்புரநன்னகரே. (௪)

3522 செற்றெறியுந்திரையார்கலுழிச்செழுநீர்கள்செஞ்சடைமே
லுற்றறியாதனலாடநட்டமணியார்தடங்கண்ணி
பெற்றறிவாரொருதேறவல்லபெருமானிடம்போலும்
வற்றறியாப்புனல்வாய்ப்புடையவலம்புரநன்னகரே. ௬0 (௫)

3523 உண்ணவண்ணத்தொளிநஞ்சமுண்டுவுமையோடுடனாகிச்
சுண்ணவெண்ணீறுபொடிமேனிபூசிச்சுடர்ச்சோதிநின்றிலங்கப்
பண்ணவண்ணத்தனபாணிசெய்யப்பயின்றாரிடம்போலும்
வண்ணவண்ணப்பறைபாணியறாவலம்புரநன்னகரே. (௬)

புரிதருபுன்சடைபொன்றயங்கப்புரிநூல்புரண்டிலங்க 3524
விரைதருவேழத்தினீருரிதோன்மேன்மூடிவேய்புரைதோ
ளரைதருபூந்துகிலாரணங்கையமர்ந்தாரிடம்போலும்
வரைதருதொல்புகழ்வாழ்க்கைமல்குவலம்புரநன்னகரே. (௭)

தண்டணைதோளிருபத்தினொடுந்தலைபத்துடையானை 3525
யொண்டணைமாதுமைதானடுங்கவொருகால்விரலூன்றி
மிண்டதுதீர்த்தருள்செய்யவல்லவிகிர்தர்க்கிடம்போலும்
வண்டுணைதன்னொடுவைகுபொழில்வலம்புரநன்னகரே (௮)

தாருறுதாமரைமேலயனுந்தரணியளந்தானுந் 3526
தேர்வறியாவகையாலிகலித்திகைத்துத்திரிந்தேத்தப்
பேர்வறியாவகையானிமிர்ந்தபெருமானிடம்போலும்
வாருறுசோலைமணங்கமழும்வலம்புரநன்னகரே (௯)

காவியநற்றுவராடையினார்கடுநோன்புமேற்கொள்ளும் 3527
பாவிகள்சொல்லைப்பயின்றறியாப்பழந்தொண்டருள்ளுருக
வாவியுணின்றருள்செய்யவல்லவழகரிடம்போலும்
வாவியினீர்வயல்வாய்ப்புடையவலம்புரநன்னகரே. (௧0)

நல்லியனான்மறையோர்புகலித்தமிழ்ஞானசம்பந்தன்
வல்லியந்தோலுடையாடையினான்வலம்புரநன்னகரைச்
சொல்லியபாடல்கள்பத்துஞ்சொல்லவல்லார்தொல்வினைபோய்ச்
செல்வன்சேவடிசென்றணுகிச்சிவலோகஞ்சேர்வாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

# திருநாவுக்கரசுநாயனார்.

## திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

தெண்டிரைதேங்கியோதஞ்சென்றடிவீழுங்காலைத்
தொண்டிரைத்தண்டர்கோனைத்தொழுதடிவணங்கியெங்கும்
வண்டுகண்மதுக்கண்மாந்தும்வலம்புரத்தடிகடம்மைக்
கொண்டுநற்கீதம்பாடக்குழகர்தாமிருந்தவாறே. (௧)

மடுக்களில்வாளைபாயவண்டினமிரிந்தபொய்கைப்
பிடிக்களிறென்னத்தம்மிற்பிணைபயின்றணைவரால்கள்
தொடுத்தநன்மாலையேந்தித்தொண்டர்கள்பரவியேத்த
வடித்தடங்கண்ணிபாகர்வலம்புரத்திருந்தவாறே. (௨)

தேனுடைமலர்கள்கொண்டுதிருந்தடிபொருந்தச்சேர்த்தி 3531
யானிடையஞ்சுங்கொண்டேயன்பினாலமரவாட்டி
வானிடைமதியஞ்சூடும்வலம்புரத்தடிகடம்மை
நானடைந்தேத்தப்பெற்றுநல்வினைப்பயனுற்றேனே. (௩)

முளையெயிற்றிளநல்லேனம்பூண்டுமெய்ச்சடைகடாழ
வளையெயிற்றிளையநாகம்வலித்தரையிசையவீக்கிப்
புளைகயப்போர்வைபோர்த்துப்புனலொடுமதியஞ்சூடி
வளைபயிலிளையரேத்தும்வலம்புரத்தடிகடாமே. (௪)

3533 சுருளுறுவரையின்மேலாற்றுளங்கிளம்பளிங்குசிந்த
விருளுறுகதிர்நுழைந்தவிளங்கதிர்ப்பசலைதிங்க
ளருளுறுமடியரெல்லாமங்கையின்மலர்களேந்த
மருளுறுகீதங்கேட்டாரவலம்புரத்தடிகளாரே. (௫)

நீளநினைக்கின்றேனெஞ்சுதன்னுணீண்டபுன்சடையினானே
யனைத்துடன்கொண்டுவந்தங்கன்பினாலமையவாட்டிப்
புனைகின்றேன்பொய்ம்மைதன்னைமெய்ம்மையைப்புணரமாட்டே
னினைக்குநான்செய்வதென்னேயினிவலம்புரவனீரே. (௬)

செங்கயல்சேல்கள்பாய்ந்துசேமப்பூமியநாடித்
தங்கயந்துறந்துபோந்துதடம்பொய்கையடைந்துநின்று
சொங்கைபாகுடையுங்காலைக்கொழுங்கனியழுங்கினாரம்
மங்கலமனையின்மிக்காரவலம்புரத்தடிகளாரே. (௭)

அருமலர்க்குவளைசெந்நெல்கழிலையாமடனையத்
தெருவெலாந்தெங்குமாவும்பழம்விழுமடப்பையெல்லாங்
குருகினங்கூடியாங்கேகுழுமலித்திறகுலர்த்தி
மருவலாமிடங்கள்காட்டும்வலம்புரத்தடிகளாரே. (௮)

கருவரையனையமேனிக்கடல்வண்ணனவனுங்காணான்
றிருவரையனையபூமேற்றிசைமுகனவனுங்காணா
னொருவரையுச்சியேறியோங்கினாரோங்கிவந்து
வருமையில்லொளிமையாராவலம்புரவனாரே. (௯)

வாளெயிற்றிலங்கைக்கோனைக்கயிலாயந்தன்னை
யாள்வலிகருதிச்சென்றவரக்கனைவரைக்கீழன்று
தோளொடுபத்துவாயுந்தொலைந்துடனழுந்தவூன்றி
யாண்மையும்வலியுந்தீர்ப்பாரவலம்புரவனாரே (௧௦)

திருச்சிற்றம்பலம்

## திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

3539 மண்ணளந்தமணிவண்ணர்தாமுமற்றை
மறையவருமவரானவருஞ்சூழ்நின்று
கண்மலிந்ததிருநெற்றியுடையாரொற்றைக்
கதநாகங்கையுடையார்காணீரன்றே
பண்மலிந்தமொழியவருமியானுமெல்லாம்
பணிந்திறைஞ்சித்தம்முடையபின்பின்செல்ல
மண்மலிந்தவயல்புடைசூழ்மாடவீதி
வலம்புரமேபுக்கங்கேமன்னினாரே. (௧)

3540 சிலைநவின்றதொருகணையாற்புரமூன்றெய்த
தீவண்ணர்சிறந்திமையோரிறைஞ்சியேத்தக்
கொலைநவின்றகளியானையுரிவைபோர்த்துக்
கூத்தாடித்திரிதருமக்கூத்தரல்ல

உலைவின்றமறையவர்கள்காணக்காணக்
கடுவிடைமேற்பாரிடங்கள்சூழக்காதன்
மலைமகளுங்கங்கையுந்தாமுமெல்லாம்
வலம்புரமேபுக்கங்கேமன்னினாரே. (௨)

தீக்கூருந்திருமேனியொருபான்மற்றை 3541
யொருபாலுமரியுருவந்திகழ்ந்தசெல்வ
ராக்கூரிற்றான்றோன்றிபுகுவார்போல
வருவினையேன்செல்வதுமேயப்பாலெங்கு
நோக்காதொருவிடத்துநூலுந்தோலுந்
துதைந்திலங்குந்திருமேனிவெண்ணீறாடி
வாக்கானமறைவிரித்துமாயம்பேசி
வலம்புரமேபுக்கங்கேமன்னினாரே. (௩)

மூவாதமூக்கப்பாம்படையிற்சாத்தி
மூவுருவாயமுதல்வரிந்நாட்
கோவாதவெரிகணையைச்சிலைமேற்கோத்த
குழகனார்குளிர்கொன்றைசூடியிங்கே
போவாரைக்கண்டடியேன்பின்பின்செல்லப்
புறக்கணித்துத்தம்முடையபூதஞ்சூழ
வாவாவெனவுரைத்துமாயம்பேசி
வலம்புரமேபுக்கங்கேமன்னினாரே (௪)

அனலொருகையதுவேந்தியதளினோடே 3543
யைந்தலையமாநாகமரையிற்சாத்திப்
புனல்பொதிந்தசடைக்கற்றைப்பொன்போன்மேனிப்
புனிதனார்புரிந்தமரரிறைஞ்சியேத்தச்
சினவிடையைமேற்கொண்டுதிருவாரூருஞ்
சிரபுரமுமிடைமருதுஞ்சேர்வார்போல
மனமுருகவளைகழலமாயம்பேசி
வலம்புரமேபுக்கங்கேமன்னினாரே. (௫)

கறுத்ததொருகண்டத்தர்காலன்வீழக்
காலினாற்காய்ந்துகந்தகாபாலியார்
முறித்ததொருதோலுடுத்துமுண்டஞ்சாத்தி
முனிகணங்கள்புடைசூழமுற்றந்தோறுந்
தெறித்ததொருவீணையராய்ச்செல்வார்தம்வாய்ச்
சிறுமுறுவல்வந்தெனதுசிந்தைவெளவ
மறித்ததொருகண்ணோக்காதேமாயம்பேசி
வலம்புரமேபுக்கங்கேமன்னினாரே. (௬)

பட்டுடுத்துப்பவளம்போன்மேனியெல்லாம் 3545
பசுஞ்சாந்தங்கொண்டணிந்துபாதநோவ
விட்டெடுத்துநடமாடியிங்கேவந்தார்க்
கெவ்வூரீரெம்பெருமானென்றேனாவி
விட்டிடுமாறதுசெய்துவிரைந்துநோக்கி
வேறோர்பதிபுகப்போவார்போல

வட்டணைகளபடகடநதுமாயம்பேசி
வலம்புரமேபுக்கஙகேமன்னிஞரே. (எ)

3546 டலலாபயிலபழனப்பாகூொன்றும்
பழனமபதிடமுமைசொலலிநின்றா
நல்லாரணிபள்ளியின்றுவைகி
னாளைப்போய்நள்ளாறுசேர்துமென்றா
சொலலாமொருவிடமாததோள்கைவீசிச
சுநதரராய்வெநதநீறுடியெகரு
மல்லாவயலபுடைசூழமாடவீதி
வலமபுரமேபுககஙகேமனனிஞரே. (அ)

பொஙகாடரவொன்றுகையிற்கொண்டு
போரவெண்மழுவேநதிபபோகாநிறபா
தஙகாரொருவிட ததுநதமமேலார்வந
தவிாதகருளாாதததுவததேநின்றேனெனப
ஙாஙகேயிவர்செய்கையொனறெனறுவவா
வெணகணணினிைறகலாவேடஙகாட்டி
மஙகுனமதிதவழுமாடவீதி
வலம்புரமேபுக்கஙகேமன்னிஞரே. (கூ)

3547 செஙகண்மாலசிலைபிடிநதுசசேனையோடுஞ
சேதுபநதனஞசெயதுசெனறுபுக்குப்
டொஙகுபோாபலசெய்துபுகலாலவென்ற
போரரக்கனெடுமுடிகளபொடியாய்வீழ
வஙகொருதன்றிருவிரலாலிறையேயூன்றி
யடாததறகேயருளபுரிநதயடிகளிநாள
வஙகமலிகடலபுடைசூழமாடவீதி
வலமபுரமேபுககயகேமனனிஞரே. (௧0)

திருசசிறறம்பலம்

## சுந்தரமூர்த்திநாயனார்.

### பண - காந்தாரம்.

திருசசிற்றம்பலம்.

எனககினித்தினைத்தனைப்புகலிடமறிநதேன்
பனைககனிப்பழமபடுபரவையின்கரைமே
லெனககினியவனறமாக்கினியவனெழுமையு
மனககினியவன்றனதிடம்வலமபுரமே. (௧)

3550 புரமவையெரிதரவளைநதவிலலினனவன
மரவுரிபுலியதளரைமிசைமருவின
னரவுரியிரநதவனிரநதுணவிருமபிநின்
றிரவெரியாடித்னிடமவலம்புரமே. (௨)

நீறணிமேனியனருப்புமிழரவினன்
கூறணிகொடிமழுவேந்தியொருகையின
னாறணியவிர்சடையழல்வளர்மழலைவெள்
ளேறணியடிகடமிடம்வலம்புரமே. (௩)

கொங்கணைசுரும்புணநெருங்கியகுளிரிள
ந்தெங்கொடுபனைபழம்படுமிடந்தேவர்க
டங்கிடுமிடந்தடங்கடற்றிரைபுடைதர
வெங்களதடிகணல்லிடம்வலம்புரமே. (௪)

கொடுமழுவிரகினன்கொலைமலிசிலையின
னெடுமதில்சிறுமையினிரவவல்லவனிடம
படுமணிமுத்தமும்பவளமும்மிகச்சுமந
திடுமணலடைகரையிடம்வலம்புரமே. (௫)

கருங்கடக்களிற்றுரிக்கடவுளதிடங்கய
னெருங்கியநெடும்பெணையடும்பொடுவிரவிய
மருங்கொடுவலம்புரிசலஞ்சலமணைபுணர்ந
திருங்கடலடைகரையிடம்வலம்புரமே (௬)

நரிபுரிகாடரங்காநடமாடுவா
வரிபுரிபாடநின்றாடுமெம்மானிடம
புரிசுரிவரிகுழலரிவையொர்பாகமாமகிழந
தெரியெரியாடிதனிடம்வலம்புரமே. (௭)

பாறணிமுடைதலைகலனெனமருவிய
நீறணிசிமிர்சடைமுடியினனிலவிய
மாறணிவருதிரைவயலணிபொழிலது
வேறுடையடிகடமிடம்வலம்புரமே. (௮)

சடசடவிடுபெணைபழம்படுமிடவகை
படவடகத்தொடுபலிகலந்துலவிய
கடைகடைபலிதிரிகபாலிதனிடமது
விடிகரைமணலடையிடம்வலம்புரமே. (௯)

குண்டிகைப்படப்பினில்விடக்கினையொழித்தவர்
கண்டவர்கண்டடிவீழ்ந்தவர்கனைகழ
றண்டுடைத்தண்டிதனினமுடையரவுட
னெண்டிசைக்கொருசுடரிடம்வலம்புரமே. (௧௦)

வருங்கலமும்பலபேணுதல்கருங்கட
லிருங்குலப்பிறப்பர்தமிடம்வலம்புரத்தினை
யருங்குலத்தருந்தமிழூரன்வன்றொண்டன்சொற்
பெருங்குலத்தவரொடுபிதற்றுதல்பெருமையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

திருவலம்புரத் திருப்பதிகம் - ௪.

சுவாமிதிருநாமம் - வலம்புரநாதர்
தேவிதிருநாமம் - வடுவகிர்க்கண்ணி.

ஆக திருப்பதிகம் - ௧௦௬.

# சரு. தலைச்சங்காடு.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

3560 நலச்சங்கவெண்குழையுமோர்காதிற்பெய்தோர்நால்வேதஞ்
சொலச்சங்கையில்லாதீர்சுடுகாடல்லாற்கருதீர்
குலைச்செங்காய்ப்பைங்கமுகின்குளிர்கொள்சோலைக்குயிலாலுந்
தலைச்சங்கைக்கோயிலேகோயிலாகத்தாழ்ந்தீரே. (க)

துணிமல்குகோவணமுந்தோலுங்காட்டித்தொண்டாண்டீர்
மணிமல்குகண்டத்தீரண்டர்க்கெல்லாமாண்பானீர்
பிணிமல்குநூன்மார்பர்பெரியோர்வாழுந்தலைச்சங்கை
யணிமல்குகோயிலேகோயிலாகவமர்ந்தீரே. (உ)

3562 சீர்கொண்டபாடலீர்செங்கண்வெள்ளேறூர்தியீர்
நீர்கொண்டும்பூக்கொண்டுநீங்காத்தொண்டர்நின்றேத்தத்
தார்கொண்டநூன்மார்பர்தக்கோர்வாழுந்தலைச்சங்கை
யேர்கொண்டகோயிலேகோயிலாகவிருந்தீரே. (ங)

3563 வேடஞ்சூழ்கொள்கையீர்வேண்டிநீண்டவெண்டிங்க
ளோடஞ்சூழ்கங்கையுஞ்சென்னிவைத்தீர்தலைச்சங்கை
கூடஞ்சூழ்மண்டபமுங்குலாயவாசற்கொடித்தோன்று
மாடஞ்சூழ்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (ச)

சூலஞ்சேர்கையினீர்சுண்ணவெண்ணீறாடலீர்
நீலஞ்சேர்கண்டத்தீர்நீண்டசடைமேனீரேற்றீர்
ஞாலஞ்சேர்தண்கானலன்னமன்னுந்தலைச்சங்கைக்
கோலஞ்சேர்கோயிலேகோயிலாகக்கொண்டீரே. (ரு)

நிலநீரொடாகாசமனல்காலாகிநின்றைந்து
புலநீர்மைபுறங்கண்டார்பொக்கஞ்செய்யார்போற்றோவார்
சலநீதரல்லார்தக்கோர்வாழுந்தலைச்சங்கை
நலநீரகோயிலேகோயிலாகநயந்தீரே. (சு)

அடிபுல்குபைங்கழல்களார்ப்பப்பேயார்ந்தோரனலேந்திக்
கொடிபுல்குமென்சாயலுமையோர்பாகங்கூடினீர்
பொடிபுல்குநூன்மார்பர்புரிநூலாளர்தலைச்சங்கைக்
கடிபுல்குகோயிலேகோயிலாகக்கலந்தீரே. (எ)

3567 திரையார்ந்தமாகடல்சூழ்தென்னிலங்கைக்கோமானை
வரையார்ந்ததோளடரவிரலாலூன்றுமாண்பினீர்
அரையார்ந்தமேகலையீரந்தணாளர்தலைச்சங்கை
நிரையார்ந்தகோயிலேகோயிலாகநின்றீரே. (அ)

பாயோங்குபாம்பணைமேலானும்பைந்தாமரையானும 3508
போயோங்கிக்காண்கிலாபுறநின்றோராபோற்றேவா
தீயோங்குமறையாளாதிகழுஞ்செல்வத்தலைச்சங்கைச்
சேயோங்குகோயிலேகோயிலாகச்சோந்தீரே. (க)

அலைபாரும்புனறுறந்தவமணாகுணடாசாக்கியா
தொலையாதங்கலாதூற்றததோறறஙகாட்டியாடகொண்மா
தலையானநால்வேதந்தரிததாாவாழுந்தலைச்சங்கை
நிலையார்ந்தகோயிலேகோயிலாகநினைதீரோ (க0)

களிருமபுனற்காழிநலலஞானசமபந்தன
குளிருந்தலைச்சங்கையோங்குகோயின்மேயானை
யொளிரும்பிறையானையுரைத்தபாடலிவைவல்லாா
மிளிருந்திரைசூழுந்தவையத்தாககுமேலாரே. (கக)

திருச்சிற்றம்பலம

சுவாமிதிருநாமம - சங்கருணாதா
தேவிதிருநாமம - சௌந்தரநாயகி.

ஆ திருப்பதிகம - க0எ

---

## சகூ. திருவாக்கூர்த்தான்றோன்றிமாடம்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண - சீகாமரம.

திருச்சிற்றம்பலம

அக்கிருந்தவாரமுமாடரவுமாமையுந 3571
தொக்கிருந்தமாாபினனோனுடையானவெண்ணீற்றோன
புக்கிருந்ததொலகோயிலபொய்யிலாமெய்யநெறிக்கே
தக்கிருந்தாராககூாிற்றான்றோன்றிமாடமே. (க)

நீரரவார்சடையானீறுடையானேறுடையான 3572
காராாபூங்கொன்றையினனகாதலித்ததொலகோயில
கூராரல்வாயநிறையககொணடயலேகோட்டகத்திற
றூராமல்காககூாிற்றான்றோன்றிமாடமே. (உ)

வாளாாகணசெந்துவர்வாயமாமலையானநமடநதை 3573
தோளாாகமபாகமாப்புல்கினனறொலகோயில
வேளாளரென்றவாகள்வள்ளனமையானமிக்கிருக்கு
தாளாளராககூாிற்றான்றோன்றிமாடமே. (ந)

கொங்குசோாந்தணகொன்றைமாலையினன்கூறறடாப் 3574
பொங்கினன்பொங்கொளிசோவெண்ணீற்றன்பூஙகோயி
லங்கமாறோடுமருமறைகளைவேள்வி
தங்கினாாககூாிற்றான்றோன்றிமாடமே (ச)

3575 வீக்கினானரவம்வீந்தழிந்தார்வெண்டலையென்
பாக்கினான்பலகலன்களாதரித்துப்பாகம்பெ
ண்ணாக்கினான்றொல்கோயிலாம்பலம்பூம்பொய்கைபுடை
தாக்கினாராக்கூரிற்றான்றோன்றிமாடமே. (ரு)

பண்ணொளிசேர்நான்மறையான்பாடலினோடாடலினான்
கண்ணொளிசேர்நெற்றியினான்காதலித்ததொல்கோயில்
விண்ணொளிசேர்மாமதியந்தீண்டியக்கால்வெண்மாடந்
தண்ணொளிசேராக்கூரிற்றான்றோன்றிமாடமே. (சு)

வீங்கினார்மும்மதிலும்வில்வரையால்வெந்தவிய
வாங்கினார்வானவர்கள்வந்திறைஞ்சுந்தொல்கோயில்
பாங்கினானான்மறையோடாறங்கம்பலகலைக
டாங்கினாராக்கூரிற்றான்றோன்றிமாடமே. (எ)

கன்னெடியகுன்றெடுத்தான்றோளடரக்காலூன்றி
யின்னருளாலாட்கொண்டவெம்பெருமான்றொல்கோயில்
பொன்னடிக்கேநாடோறும்பூவோடுநீர்சுமக்குந்
தன்னடியாராக்கூரிற்றான்றோன்றிமாடமே. (அ)

நன்மையானாரணனுநான்முகனுங்காண்பரிய
தொன்மையான்றோற்றங்கேடில்லாதான்றொல்கோயி
லின்மையாற்சென்றிரந்தார்க்கில்லையென்னாதீந்துவக்குந்
தன்மையாராக்கூரிற்றான்றோன்றிமாடமே (கூ)

நாமருவுபுன்மைநவிற்றசமண்டேரர்
பூமருவுகொன்றையினான்புக்கமருந்தொல்கோயில்
சேன்மருவுபங்கயத்துச்செங்கழுநீர்பைங்குவளை
தாமருவுமாக்கூரிற்றான்றோன்றிமாடமே. (க0)

ஆடலமர்ந்தானையாக்கூரிற்றான்றோன்றி
மாடமமர்ந்தானைமாடஞ்சேர்தண்காழி
நாடற்கரியசீர்ஞானசம்பந்தன்சொற்
பாடலிவைவல்லார்க்கில்லையாம்பாவமே. (கக)

திருச்சிற்றம்பலம்

---

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

முடித்தாமரையணிந்தமூர்த்திபோலு
மூவுலகுந்தாமாகிநின்றார்போலுங்
கடித்தாமரையேயந்தகண்ணார்போலுங்
கல்லலகுபாணிபயின்றார்போலுங்
கொடித்தாமரைக்காடேநாடுந்தொண்டர்
குற்றேவன்மகிழ்ந்தகுழகர்போலு
மடித்தாமரைமலர்மேல்வைத்தார்போலு
மாக்கூரிற்றான்றோன்றியப்பனாரே. (க)

ஓதிற்றொருநூலுமில்லைபோலு 3583
மொருவர்ப்படாததொன்றில்லைபோலுங்
காதிற்குழையிலங்கப்பெய்தார்போலுங்
கவலைபிறப்பிடுமைகாப்பார்போலும்
வேதத்தோடாறங்கஞ்சொன்னார்போலும்
விடஞ்சூழ்ந்திருண்டமிடற்றார்போலு
மாதிக்களவாகிநின்றார்போலு
மாக்கூர்த்தான்றோன்றியப்பனாரே. (உ)

மையாரமலர்க்கண்ணாளையாகர்போலு 3584
மணிநீலகண்டமுடையார்போலு
நெய்யாரதிரிசூலங்கையார்போலு
நீறேறுதோளெட்டுடையார்போலும்
வையாரமழுவாட்படையார்போலும்
வளர்ஞாயிறன்னவொளியார்போலு
மைவாயரவமொன்றார்த்தார்போலு
மாக்கூர்த்தான்றோன்றியப்பனாரே (ங)

வடிவிளங்குவெண்மழுவாள்வல்லார்போலும் 3585
வஞ்சகக்கருங்கடனஞ்சுண்டார்போலும்
பொடிவிளங்குமுந்நூல்சேர்மார்பர்போலும்
பூங்கங்கைதோய்ந்தசடையார்போலுங்
கடிவிளங்குகொன்றையந்தாரார்போலுங்
கட்டங்கமேந்தியகையார்போலு
மடிவிளங்குசெம்பொற்கழலார்போலு
மாக்கூர்த்தான்றோன்றியப்பனாரே. (ச)

ஏகாசமாமபுலித்தோல்பாம்புதாழ
விடுவெண்டலைகலனாவேந்திநாளு
மேகாசங்கட்டழித்தவெள்ளிமாலை
புனலார்சடைமுடிமேற்புனைந்தார்போலு
மாகாசமாயவெண்ணீருந்தீயு
மதியுமதிபிறந்தவிண்ணுமண்ணு
மாகாசமென்றிவையுமானார்போலு
மாக்கூர்த்தான்றோன்றியப்பனாரே. (ரு)

மாதாருமவாணெடுங்கண்செவ்வாயமென்றோண் 3587
மலைமகளைமார்பத்தணைத்தார்போலு
மூதாருமுதுதிரைகளானார்போலு
முதலுமிறுதியுமில்லார்போலுந்
தீதாருநல்வினையாய்நின்றார்போலுந்
திசையெட்டுந்தாமேயாஞ்செல்வர்போலு
மாதிரைநாளாயமாந்தார்போலு
மாக்கூர்த்தான்றோன்றியப்பனாரே. (சு)

மாலயானைமத்தகத்தைக்கீண்டார்போலு 3588
மான்றோலுடையாமகிழ்ந்தார்போலுங்

சோலானைக்கோளுழலாறகாய்ந்தாரபோலுங்
குழவிப்பிறைசடைமேலவைத்தாரபோலுங்
காலனைககாலாறகடிந்தாரபோலுங்
கயிலாயர்தம்மிடமாக்கொண்டாரபோலு
மாலானைநதாடலுகப்பாரபோலு
மாககூரிறறுனறொன்றியப்பனாரே. (எ)

3589 கண்ணாநதெறறியுடையாரபோலுங
காமனையுங்கண்ணழலாறகாயநதாரபோலு
முன்னவருநஞ்சமுண்டாரபோலு
மூழித்தீயன்னவொளியாரபோலு
மெண்ணாயிரங்கோடிபேராரபோலு
மேறேறிச்செல்லுமிறைவாரபோலு
மண்ணுவுமாரூருமேயாரபோலு
மாககூரிறறுனறொன்றியப்பனாரே (அ)

3590 கடியாநதளிரகலநதகொன்றைமாலை
சதிபோதுதாதணிந்தகண்ணிபோலு
நெடியானுஞ்சதுமுகனுநதேடிநின்ற
நீலநறகண்டத்திறையாரபோலும்
படியேலழல்வண்ணஞ்செம்பொனமேனி
மணிவண்ணநதமவண்ணமாவாரபோலு
மடியாரபுகலிடமதானாரபோலு
மாக்கூரிறறுனறொன்றியப்பனாரே (௯)

3591 திரையானுஞ்செநதாமரைமேலானுந
தேரநதவாகடாநதேடிக்காணாநாணும
புரையானெனப்படுவாரதாமேபோலும
போரேறுதாமேறிச்செல்வாரபோலுங
கரையாவரைவில்லேநாகநாணாக்
காலத்தீயன்னகனலாரபோலும்
வரையாரமதிலெய்தவண்ணாரபோலு
மாககூரிறறுனறொன்றியப்பனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

திருவாககூர திருப்பதிகம் - ௨.

---

சுவாமிதிருநாமம - சுயம்புநாதர்.
தேவிதிருநாமம - கட்கநேத்திரி.

---

ஆ திருப்பதிகம - ௧௦௯.

# ௪எ. திருக்கடவூர்வீரட்டம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்

சடையுடையானுநெய்யாடலானுஞ்சரிகோவண
வுடையுடையானுமையார்ந்தவொண்கண்ணுமைகேள்வனுங்
கடையுடைநன்னெடுமாடமோங்குங்கடவூர்தனுள்
விடையுடையண்ணலும்வீரட்டானத்தரனல்லனே (௧)

எரிதருவார்சடையானும்வெள்ளையெருதேறியும்
புரிதருமாமலர்க்கொன்றைமாலைபுனைந்தேத்தவே
கரிதருகாலனைச்சாடினானுங்கடவூர்தனுள்
விரிதருதொல்புகழ்வீரட்டானத்தரனல்லனே. (௨)

நாதனுநள்ளிருளாடினானுநளிர்போதின்கட்
பாதனுமாய்ப்புலித்தோலினானும்பசுவேறியுங்
காதலார்தங்கடவூரினானுங்கலந்தேத்தவே
வேதமோதியும்வீரட்டானத்தரனல்லனே. (௩)

மழுவமர்செல்வனுமாசிலாதபலபூதமுன்
முழவொலியாழ்குழன்மொந்தைகொட்டமுதுகாட்டிடைக்
கழல்வளர்காலற்குஞ்சினத்தாடினானுங்கடவூர்தனுள்
விழவொலிமல்கியவீரட்டானத்தரனல்லனே. (௪)

சுடாமணிச்சுண்ணவெண்ணீற்றினானுஞ்சுழல்வாயதோர்
படமணிநாகமரைக்கசைத்தபரமேட்டியுங்
கடமணிமாவுரித்தோலினானுங்கடவூர்தனுள்
விடமணிகண்டனும்வீரட்டானத்தரனல்லனே (௫)

பண்பொலிநான்மறைபாடியாடிப்பலவூர்கள்போ
யுண்பலிகொண்டுழல்வானும்வானினொளிமல்கிய
கண்பொலிநெற்றிவெண்டிங்களானுங்கடவூர்தனுள்
வெண்பொடிப்பூசியும்வீரட்டானத்தரனல்லனே. (௬)

செவ்வழலாய்நிலனாகிநின்றசிவமூர்த்தியு
முவ்வழலுநான்மறையைந்துமாயமுனிகேள்வனுங்
கவ்வழலவாய்க்கதநாகமார்த்தான்கடவூர்தனுள்
வெவ்வழலேந்துகைவீரட்டானத்தரனல்லனே. (௭)

அடியிரண்டோருடம்பைஞ்ஞான்கிருபதுதோட்ச
முடியுடைவேந்தனைமூக்கழித்தமுதன்மூர்த்தியுங்
கடிகமழும்பொழில்சூழுமந்தண்கடவூர்தனுள்
வெடிதலையேந்தியும்வீரட்டானத்தரனல்லனே. (௮)

3600 வரைகுடையாமழைதாங்கினானும்வளர்போதின்கட
புரைகடிந்தோங்கியநான்முகத்தான்புரிந்தேத்தவே
கரைகடல்சூழ்வையங்காக்கின்றானுங்கடவூர்தனுள்
விரைகமழும்பொழில்வீரட்டானத்தரனல்லனே. (௯)

3601 தேரருமாசுகொண்மேனியாருந்தெளியாததோ
ராரருஞ்சொற்பொருளாகிநின்றவெமதாதியான்
காரிளங்கொன்றைவெண்டிங்களானுங்கடவூர்தனுள்
வீரமுஞ்சேர்கழல்வீரட்டானத்தரனல்லனே. (௧௦)

3602 வெந்தவெண்ணீறணிவீரட்டானத்துறைவேந்தனை
யந்தணாருங்கடவூருளானையணிகாழியான
சந்தமெல்லாமடிச்சாத்தவல்லமறைஞானசம
பந்தன்செந்தமிழ்பாடியாடக்கெடும்பாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

3603 மலைக்கொளானைமயக்கியவல்வினை
நிலைக்கொளானைநினைப்புறுநெஞ்சமே
கொலைக்கையானையுங்கொன்றிடுமாதலா
லலைக்கையானைகண்டீர்கடவூரரே. (௧)

3604 வெள்ளிமால்வரைபோல்வதோரானையா
ருள்ளவாறெனையுள்புகுமானையார
கொள்ளமாகியகோயிலுளானையார
கள்ளவானைகண்டீர்கடவூரரே. (௨)

3605 ஞானமாகியநன்குணரானையா
ரூனைவேவவுருக்கியவானையார
வேனலானையுரித்துமையஞ்சவே
கானலானைகண்டீர்கடவூரரே. (௩)

3606 ஆலமுண்டழகாயதோரானையார
நீலமேனிநெடும்பளிங்கானையார
கோலமாயகொழுஞ்சுடரானையார
காலவானைகண்டீர்கடவூரரே. (௪)

3607 அளித்தவானஞ்சுமாடியவானையார
வெளுத்ததீர்கொடியேறுடையானையா
ரொளித்தவேழத்தையெள்குவித்தானையார
களித்தவானைகண்டீர்கடவூரரே. (௫)

விடுத்தமூர்வ்வளைவில்லுறை வானையார்
தொடுத்தமால்வரைதூயதோரானையார்
கடுத்தகாலனைக்காய்ந்ததோரானையார்
கடுத்தவானைகண்டாகடவூரரே (௬)

மண்ணுளாரைமயக்குறுமானையா
ரெண்ணுளாரபலரோத்திடுமானையார்
விண்ணுளாரபலரும்மறியானையார்
கண்ணுளானைகண்டாகடவூரரே (௭)

சினக்குஞ்செமடவளத்திரளானையார்
மனக்குமவல்வினைதீர்த்திடுமானையார்
ரனைக்குமன்புடையாரமனத்தானையார்
கனைக்குமானைகண்டாகடவூரரே. (௮)

வேதமாகியவெஞ்சுடரானையார்
நீதியானிலனுகியவானையார்
சோதியூழிதெரிந்துணரானையார்
காதலானைகண்டாகடவூரரே. (௯)

நீண்டமாலொடுநான்முகனேறுமாயக
காணடுமெனறுபுககாரகளிருவரு
மாணடவாரழலாகியவானையார்
காணடலானைகண்டாகடவூரரே (௧௦)

அடுத்துவந்தவிலங்கையாமன்னனை
யெடுத்ததோளகளிறநெரித்தானையார்
கடுத்தகாலனைககாயந்ததோரானையார்
கடுக்கையானைகண்டாகடவூரரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

# திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

பொள்ளத்தகாயமாயம்பொருளினைபபோகமாதர்
வெள்ளத்தைககழிககவேண்டிலவிரும்புமின்விளக்குத்தூப
முள்ளொத்ததிரியொனறேறறியுணருமாறுணரவலலார
களளத்தைக்கழிப்பாரபோலுங்கடவூர்வீரட்டனாரே. (௧)

மண்ணிடைக்குரமபைதன்னைமதித்துநீமையலெய்தில
விண்ணிடைத்தருமராசன்வேண்டிஞலவிலக்குவாரார்
பண்ணிடைசசுவைகள்பாடியாடுமபத்தாகளெனறுங
கண்ணிடைமணியார்போலுங்கடவூர்வீரட்டனாரே. (௨)

பொருத்தியகுரம்பைதன்னுடபொய்ந்நடைசெலுத்துகின்றீ
ரொருத்தனையுணரமாட்டீருள்ளத்திற்கொடுமைநீக்கீர்
வருத்தினகளிறுதனனைவருத்துமாவருத்தவலலார்
கருத்தினிலிருப்பாரபோலுங்கடவூர்வீரட்டனாரே. (௩)

கரபபுறுசிந்தையாகரனைப்புக்கரிடவன்காமன்று
செருட்புமிழகண்ணினனீளபுனற்கஙகையமெ ாஙகரவும்
டரபபியசெஞசடைப்பாலவணன்காலனைடபடவொருகா
லுரப்பியசேவடியான்கடவூருறையுததமனே. (ஙு)

மறிததிகழுகையினன்வானவாகோனைமனமகிழ்ந்து
குறிததெழுமாணிதனுருயிரகொள்வானகொதிததெழுந்து
கறுததெழுமூவிலைவேலுடைககாலனைதகாலற
வுறுககியசேவடியானகடவூருறையுததமனே. (ச)

குழைதகிகழ்காதினனவானவர்கோனைக்குளிாநதெழுந்து
பழக்கமொடாசசிததமாணிதனுருயிரகொளளவந்த
தழறபொதிமூவிலைவேலுடைககாலனைததானலற
வுழக்கியசேவடியானகடவூருறையுததமனே. (ரு)

பாலனுக்காவன்றுடறகடலீநதுடனோந்தெழுநத
வாலினிறகீறிருநதாரணமோதிபருமூரிநகாச
சூலமுமாசமுஙகொண்டுதொடாநதுடைந்தோடிவந்த
காலனைககாடநதபிரானகடவூருறையுததமனே. (சா)

படாசடைக்கொன்றையுமடமாகமாலைபணிகயிற
வுடைதலைக்கோததுழனமேனியனுணாபிகெகொழுநலவோர்
சுடாபொதிமூவிலைவேலுடைககாலனைததுணைடமதா
வுடறியசேவடியான்கடவூருறையுததமனே. (எ)

வெண்டலைமாலையுஙகஙகைககோடிவிரிசடைமேற
பெணடணிநாயகனபேயுகநதாடுமபெருநதகையான
கணடணிநெறறியனகாலனைககாயநதுகடலவிட
முணடருளசெயதபிரான்கடவூருறையுததமனே. (அ)

கேழலதாகிககிளறியகேசவன்காண்பரிதாய
வாழிநனமாமலாககணணிடநதிடடவமமாலவறகன
ருழியுமீநதுவடுதிறறகாலனையனறடாதது
ஆழியுமாயபிரானகடவூருறையுததமனே. (கூ)

தேனறிகழ்கொனறையுஙகூவிளமாலைதிருமுடிமே
லானறிகழைந்துகநதாடும்பிரானமலையாநதெடுதத
கூன்றிகழ்வாளரககனமுடிபததுமகுலைநதுவிழ
வூனறியசேவடியானகடவூருறையுததமனே (கூ0)

திருசசிறறமபலம

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண - நடடராகம.

திருச்சிற்றம்பலம்.

பொடியாாமேனியனேபுரிநூலொருபாறபொருநத
வடியார்மூவிலைவேலவளாகஙகையினமஙகையொடு
கடியாாகொன்றையனேகடவூாதனுளவீரடடததெம
மடிகேளெனனமுதேயெனக்காாதுணைநீயலதே. (க)

3635 பிறையாருஞ்சடையாய்பிரமனறலையிற்பலிகொண்
மறையாரவானவனேமறையினபொருளானவனே
கறையாருமமிடறாயகடவூாதனுளவீரட்டத்தெம
மிறைவாவெனனமுதேயெனக்காாதுணைநீயலதே. (௨)

3636 அன்றாலின்னிழறகீழறநால்வாக்கருள்புரிநது
கொன்றாயகாலனுயிாகொடுத்தாயமறையோனுக்குமான்
கன்றாருஙகரவாகடவூாத்திருவீரட்டத்துள்
ளென்றாதைபெருமானெனககாாதுணைநீயலதே. (௩)

3637 போராருஙகரியினனுரிபோாத்துப்பொன்மேனியினமேல்
வாராருமமுலையாளொருபாகமகிழ்நதவனே
காராருமமிடறாயகடவூாதனுளவீரடடானத்
தாராவென்னமுதேயெனககாாதுணைநீயலதே. (௪)

3638 மையாாகணடததினையமதமாவுரிபோாத்தவனே
பொயயாாதெனனுயிருட்புகுநதாயினனமபோநதறியாய
கையாராடரவாகடவூாதனுளவீரடடத்தெம
மையாவென்னமுதேயெனககாாதுணைநீயலதே. (௫)

3639 மணணீாதீவெளிகால்வருபூதஙகளாகிமறறுமா
பெணணோடாணலியாயபிறவாவுருவானவனே
கண்ணாருமமணியேகடவூாதனுளவீரடடத்தெம
மணணாவெனனமுதேயெனககாாதுணைநீயலதே (௬)

3640 எரியாாபுனசடைமேலபுனநாகமணிநதவனே
நரியாருஞ்சுடலைநகுவெணடலைகொணடவனே
கரியாாீருரியாய்கடவூாதனுளவீரடடத்தெம
மரியாயென்னமுதேயெனககாாதுணைநீயலதே. (௭)

3641 வேறாவுனனடியேன்விளஙகுநகுழைககாதுடையாய்
தேறேனுன்னையலலாறசிவனேயென்செழுஞ்சுடரே
காறாாவெண்மருபபாகடவூாததிருவீரடடததுள
ளாறாசெஞசடையாயெனககாாதுணைநீயலதே. (௮)

3642 அயனோடனறரியுமமடியுமமுடிகாண்பரிய
பயனேயெம்பரனேபரமாயபரஞ்சுடரே
கயமாருஞ்சடையாய்கடவூாததிருவீரடடததுள்
ளயனேயெனனமுதேயெனககாாதுணைநீயலதே. (௯)

3643 காராருமபொழில்சூழ்கடவூாததிருவீரட்டததுள
ளேராருமமிறையைததுணையாவெழிலவலாகோ
ணூரனனடியானடிததொணடனுரைத்ததமிழ
பாரோரேத்தவல்லாாபரலோகததிருப்பாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

திருககடவூாத்திருபபதிகம் - ௫

சுவாமிதிருநாமம - அமிாதகடேசர்.
தேவிதிருநாமம - அபிராமியம்மை.

ஆ திருபபதிகம் - ௧௧௪.

# சஅ. திருக்கடவூர்மயானம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

வரியமறையார்பிறையார்மலையோர்சிலையாவணங்கி
யெரியமதில்களெய்தாரெறியுமுசலமுடையார்
கரியமிடறுடையார்கடவூர்மயானமமர்ந்தார்
பெரியவிடைமேல்வருவாரவரெம்பெருமானடிகளே (க)

மங்கைமணந்தமார்பர்மழுவாள்வலனொன்றேந்திக்
கங்கைசடையிற்கரந்தார்கடவூர்மயானமமர்ந்தார்
செங்கண்வெள்ளேறேறிச்செல்வஞ்செய்யாவருவா
ரங்கையேறியமறியாரவரெம்பெருமானடிகளே. (உ)

ஈடலிடபமிசையவேறிமழுவொன்றேந்திக்
காடதிடமாவுடையார்கடவூர்மயானமமர்ந்தார்
பாடலிசைகொள்கருவிபடுதம்பலவும்பயில்வா
ராடலரவமுடையாரவரெம்பெருமானடிகளே. (௩)

இறைநின்றிலங்குவளையாளிளையாளொருபாலுடையார்
மறைநின்றிலங்குமொழியார்மலையார்மனத்தின்மிசையார்
கறைநின்றிலங்குபொழில்சூழ்கடவூர்மயானமமர்ந்தார்
பிறைநின்றிலங்குசடையாரவரெம்பெருமானடிகளே (ச)

வெள்ளையெருத்தின்மிசையார்விரிதோடொருகாதிலங்கத்
துள்ளுமிளமான்மறியார்சுடர்பொற்சடைகடுளங்கக்
கள்ளநகுவெண்டலையார்கடவூர்மயானமமர்ந்தார்
பிள்ளைமதியமுடையாரவரெம்பெருமானடிகளே (ரு)

பொன்றாதுதிருமணங்கொளப்புனைபூங்கொன்றைபுனைந்தா
ரொன்றாவெள்ளேறுயர்த்ததுடையாரதுவேயூர்வார்
கன்றாவினஞ்சூழ்புறவிற்கடவூர்மயானமமர்ந்தார்
பின்றாழ்சடையாரொருவரவரெம்பெருமானடிகளே (சா)

பாசமானகளைவார்பரிவார்க்கமுதமனையா
ராசைதீரக்கொடுப்பாரலங்கல்விடைமேல்வருவார்
காசைமலர்போன்மிடற்றார்கடவூர்மயானமமர்ந்தார்
பேசவருவாரொருவரவரெம்பெருமானடிகளே. (எ)

செற்றவரக்கனலறத்திகழ்சேவடிமெல்விரலாற்
கற்குன்றடர்த்தபெருமான்கடவூர்மயானமமர்ந்தார்
மற்றொன்றிணையில்வலியமாசில்வெள்ளிமலைபோற்
பெற்றொன்றேறிவருவாரவரெம்பெருமானடிகளே. (அ)

உருமாகரியினுரியாரவளர்புன்சடையார்விடையார
கருமானுரிதோலுடையார்கடவூர்மயானமமர்ந்தார்
திருமாலொடுநான்முகனுந்தேர்ந்துங்காணமுன்னொணாப்
பெருமானெனவும்வருவாரவரெம்பெருமானடிகளே. (கூ)

தூயவிடைமேல்வருவார்துன்னாருடையமதில்கள்
மாயவேவசெற்றார்கடவூர்மயானமமர்ந்தார்
தீயகருமஞ்சொல்லுஞ்சிறுபுன்றேரரமணர்
பேயபேயென்னவருவாரவரெம்பெருமானடிகளே. (க0)

மரவம்பொழில்சூழ்கடவூர்மன்னுமயானமமர்ந்த
வரவமசைத்தபெருமானகலமறியலாகப்
பரவுமுறையேபயிலும்பந்தன்செஞ்சொன்மாலை
யிரவும்பகலும்பரவிநினைவார்வினைகளிலரே. (கக)

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசுநாயனார்

### திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

குழைகொள்காதினர்கோவணவாடைய
ருழையர்தாங்கடவூரின்மயானத்தார்
பழையதம்மடியார்செய்யும்பாவமும்
பிழையுந்தீர்ப்பர்பெருமானடிகளே (க)

உன்னிவானவரோதியசிந்தையி
றன்னரேனகடவூரின்மயானத்தார்
தன்னைநோக்கித்தொழுதெழுவார்க்கெலாம்
பின்னையென்னார்பெருமானடிகளே. (உ)

சூலமேந்துவர்தோலுடையாடைய
ராலமுண்டமுதேமிகத்தேக்குவர்
காலகாலர்கடவூரின்மயானத்தார்
மாலைமார்பர்பெருமானடிகளே. (ங)

இறைவனாரிமையோர்தொழுபைங்கழன்
மறவனார்கடவூரின்மயானத்தார்
அறவனாரடியாரடியார்தங்கள்
பிறவிதீர்ப்பர்பெருமானடிகளே (ச)

கத்துகாளிகதந்தணிவித்தவர்
மத்தர்தாங்கடவூரின்மயானத்தார்
சொத்தெழுவார்தனசெய்துழல்வாரொரு
பித்தர்காணும்பெருமானடிகளே. (ரு)

எரிகொண்மேனியிளம்பிறைவைத்தவர்
கரியர்தாங்கடவூரின்மயானத்தார்
அரியரண்டத்துள்ளோரயன்மாலுக்கும
பெரியர்காணும்பெருமானடிகளே. (சு)

வாடாமுலையாடனனோடுமகிழ்ந்துகாணில்வேலைவனாய்க்
கோடார்கேழற்பின்சென்றுகுறுகிவிசயன்றவமழித்து
நாடாவணனனருசெருசசெய்துவாவநாழிநிலையருளசெய்
பீடாாசடையாாமயானததுப்பெரியபெருமானடிகளே. (அ)

வேழமுரிப்பாமழுவாளாவேள்வியழிபபாசிரமறுப்ப
ராழியளிபபாரிதனைக்குவானனுசுகப்பாறமுனைாப்ப
ரேழைதலைவாகட ஊரின்மறைவாசிறுமானமறிகையா
பேழைசசடையாமயானத்துப்பெரியபெருமானடிகளே. (கூ)

மாடமலகுகட ஊரின்மறையோரேத்துமயானத்துப்
பீடைதீரவடியாருககருளுமபெருமானடிகள்சீா
நாடிநாவலாரூரனமபிசொன்னநற்றமிழ்களை
பாடுமடியாாகேட்பாாமேறபாவமானபறையுமே (க0)

திருச்சிற்றம்பலம்

திருக்கடவூர்மயானததிருபபதிகம - ரு.

சுவாமிதிருநாமம - பிரமபுரியீசா.
தேவிதிருநாமம - அமலகுயமினனமமை.

ஆ. திருபபதிகம் - ககஎ.

## சகூ. திருவேட்டக்குடி.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனா

பணை - பஞ்சமம.

திருசசிறறமபலம்

வணடிரைககுமலாககொன்றைவிரிசடைமேல்வரியரவநு
கண்டிரைகருமபிறைசசெனனிககாபாலிகனைகழலக
டொணடிரைததுததொழுதிறைஞசததுளஙகொளிநீாசுடாடபவளாந
தெண்டிரைககணகொணாநதெறியுநதிருவேடடகருடியாரோ. (க)

பாயதிமிலாவலையோடுமீனவாரிபபயினறெஙகுந
காசினியிறகொணாநதட டுஙகைதல்சூழகழிக்கானற்
போயிரவிறபேயோடும்புறங்காட்டிடமபுரிநதழகாா
தீயெரிகைமகிழநதாருநதிருவேட்டக்குடியாரோ. (உ)

தோததிரமாமணலிலிஙகநதொடஙகியவானிரையிற்பால
பாததிரமாவாட்டுதலுமபரஞசோதிபரிநதருளி
யாததமெனமறைநாலவாக்சுறமபுரிநூலன்றுரைதத
தீாததமலகுசடையாருநதிருவேடடக்குடியாரோ. (ங)

கலவஞசோகழிககானலகதிாமுத்தங்கலநதெஙகு
மலவனசேரணைவாரிக்கொணாநதெறியுமகனறுறைவாய்
நிலவஞசோாநுணணிடையயேரிழையாளவளோடுந
திலகஞசோநெறறியினாதிருவேட டக்குடியாரோ. (ச)

பஙகமாகடலலறப்பருவரையோடரவுழலச
செங்கணமால்கடையவெழுநஞசருநதுசிவமூாத்தி
யஙகநான்மறைநாலவர்ககறமபொருளின்பயனளித்த
திஙகள்சோசடையாருநதிருவேட்டககுடியாரே. (௫)

நாவாயபிறைசசென்னிநலநதிகழுமிலங்கிபயி
கோவாதநிததிலங்களகொணாநதெறியுஙகுளிாகான
லேவாருமவெஞசிலையாலெயின்மூன்றுமெரிசெயத
தேவாதிதேவனூாதிருவேட்டககுடியாரே. (௬)

பானிலவுமபஙகயத்துப்பைஙகானலவெணகுருகு
கானிலவுமலாப்பொயகைகைதல்சூழ்கழிக்கானன்
மானின்விழிமலைமகளோடொருபாகமபிரிவரியாா
தேனிலவுமலாசசோலைதிருவேட்டககுடியாரே. (௭)

துறையுலவுகடலோதஞசுரிசஙகமிடறிப்போய
நறையுலவுமபொழிறபுனனைநனனீழறகீழமரு
மிறைபயிலுமிராவணன்றனறலைபததுமிருபதுதோ
டிறலழியவடாததாருநதிருவேட்டக்குடியாரே. (௮)

அருமறைநானமுகததானுமகலிடநீரேறமருனு
மிருவருமாயளபபரியவெரியுருவாயநீணடபிரான
வருபுனலினமணியுநதிமறிதிரையாாசுடாயபவளத
திருவுருவிலவெணணீறறாாதிருவேட்டககுடியாரே. (௯)

இகழ்நதுரைக்குஞசமணாகளுமிடுமபோாவைசசாககியருமை
புகழநதுரையாப்பாவிகள்சொறகொளளேனமினபொருளெனன
நிகழ்நதிலஙகுவெணமணலினிறைததுணடபபிறைககறறை
திகழநதிலஙகுசெஞசடையாாதிருவேடடககுடியாரே. (௧0)

தெண்டிரைசோவயலுடுத்ததிருவேட்டககுடியாரைத
தணடலைசூழகலிககாழிததமிழஞானசமபநத
னெணடமிழநூலிவைபத்துமுணாநதேததவலலாாபோ
யுணடுபேயிலவானவரோடுயாவானததிருப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

சுவாமிதிருநாமம - திருமேனியழகா.
தேவிதிருநாமம - சாந்தநாயகி

---

ஆ திருபபதிகம - ௧௧௮

---

# ருo. திருத்தெளிச்சேரி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்.

### பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

பூவலர்ந்தனகொண்டுமுப்போதுமும்பொற்கழ
றேவர்வந்துவணங்குமிகுதெளிச்சேரியீர்
மேவருந்தொழிலாளொடுகேழற்பின்வேடனாம்
பாவகங்கொடுநின்றதுபோலுநும்பான்மையே. (க)

விளைக்கும்பத்திக்குவிண்ணவர்மண்ணவரேத்தவே
திளைக்குந்தீர்த்தமறாத்திகழ்தெளிச்சேரியீர்
வளைக்குந்திண்சிலைமேலைந்துபாணமுந்தானெய்து
களிக்குங்காமனையெங்ஙனநீர்கண்ணிறகாய்ந்ததே. (உ)

வம்படுத்தமலர்ப்பொழில்சூழமதிதவழ
செம்படுத்தசெழும்புரிசைத்தெளிச்சேரியீர்
கொம்படுத்ததொர்கோலவிடைமிசைக்கூர்மையோ
டம்படுத்தகண்ணாளொடுமேவலழகிதே. (ங)

காருலாங்கடலிப்பிகண்முத்தங்கரைப்பெயுந்
தேருலாநெடுவீதியதார்தெளிச்சேரியீ
ரோருலாம்பலிக்கேகிடவைப்பிடமின்றியே
வாருலாமுலையாளையொர்பாகத்துவைத்ததே. (ச)

பக்கநுந்தமைப்பார்ப்பதியேதிமுன்பாவிக்குஞ்
செக்கர்மாமதிசேர்மதில்சூழ்தெளிச்சேரியீர்
மைக்கொள்கண்ணியர்கைவளைமாலசெய்துவெளவவே
நக்கராயுலகெங்கும்பலிக்குநடப்பதே (ரு)

தவளவெண்பிறைதோய்தருதாழ்பொழில்சூழ்நற
றிவளமாமணிமாடந்திகழ்தெளிச்சேரியீர்
குவளைபோறகண்ணிதுன்னவந்துகுறுகிய
கவளமால்கரியெங்ஙனநீர்கையிறகாய்ந்ததே. (சா)

கோடடுத்தபொழிலினமிசைக்குயில்கூவிடுஞ்
சேடடுத்ததொழிலினமிகுதெளிச்சேரியீர்
மாடடுத்தமலர்க்கண்ணினாள்கங்கைநங்கையைத்
தோடடுத்தமலர்ச்சடையென்கொனீர்சூடிற்றே. (எ)

கொத்திரைத்தமலர்க்குழலாளகுயிலகோலஞ்சேர்
சித்திரக்கொடிமாளிகைசூழ்தெளிச்சேரியீர்
வித்தகப்படைவல்லவரக்கன்விறறலை
பத்திரட்டிகரநெரித்திட்டதும்பாதமே. (அ)

காலெடுத்ததிரைகளைக்கெறிகானல்சூழ்
சேலெடுத்தவயற்பழனத்தெளிச்சேரியீர்
மாலடித்தலுமாமலரானமுடிதேடியே
யோலமிட்டிடவெங்ஙனமோருருக்கொண்டதே. (க)

மந்திரந்தருமாமறையோர்கடவத்தவா
செந்திலங்குமொழியவர்சேர்தெளிச்சேரியீர்
வெந்தலாகியசாக்கியரோடுசமணர்கள்
டந்திறத்தனநீக்குவித்தீரோர்சதிரரே (௰)

திக்குலாம்பொழில்சூழ்தெளிச்சேரியெஞ்செல்வனை
மிக்ககாழியுண்ஞானசம்பந்தனவிளம்பிய
தக்கபாடல்கள்பத்துமவல்லார்கட்டமுடித
தொக்கவானவர்சூழவிருப்பவர்சொல்லிலே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிதிருநாமம - பார்வதியீசர்.
தேவிதிருநாமம் - சத்தியம்மை.

ஆ திருப்பதிகம் - கககூ.

# ருக. தருமபுரம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண - யாழ்மூரி.

திருச்சிற்றம்பலம்

மாதர்ம டப்பிடியு மட வன்னமு மன்னதோர்
நடை யுடைம மலை மக ளுணையெ னமகிழ்வா
பூதவி னப்படைநின றிசை பாடவு மாடுவ
ரவர் படர் சடை நெடு முடிய தோர்புனலர்
வேதமொ டேழிசைபா டுவ ராழ்கடல் வெண்டிரை
யிரை நுரை கரை பொருது விம்மி நின்றயலே
தாதவிழ் புன்னைதயங்கு ம லர்ச்சிறை வண்டறை
யெழில் பொழில் குயில பயி றருமபு ரமபதியே. (க)

பொங்குந டைப்புகலில் விடை யாமவ ரூர்திவெண்
பொடி யணி தடங்கொண மார்பு பூண நூலபுரள
மங்குலி டைத்தவழு மதி சூடுவ ராடுவர்
வளர் இள புன லரவம் வைகி யசடையர்
சங்குக டற்றிரையா லுதை யுண்டுசே ரிந்திரிந்
தொசிந் தசைந் திசைந்து சேரும் வெண்ம ணற்குவைமேற்
றங்குக திர்மணிநித் தில மெல்லிரு ளொலகநின
றிலங் கொளிநலங் கெழிற றருமபு ரமபதியே.

3697 விண்ணுறு மால்வரைபோல் விடை யேறுவ ராறுசூ
டுவர் ரிரி சுரி யொளிகொ டோடு நின்றிலங்க
கண்ணுற நின்றொளிருங் கதிர் வெண்மதிக் கண்ணியர்
கழிந் தவ ரழிந் திடு முடைத் தலைகலனுப
பெண்ணுற நின்றவர்தம் முரு வம்மயன் மாறொழு
வரி வையைப் பிணைந் திணைந் தணைந்த தம்பிரியர்
தண்ணணித ழமுலையோ டெண ணிதம் மவ்வன் மருங்கலர்
கருங் கழிந் நெருங் குந்த ற்றருமபு ரம்பதியே. (௩)

3698 வாருறு மென்முலைநன் னுதலேழையோ டாடுவர்
வளங்கிளர் விளங் குதிங்கள் வைகிய சடையர்
காருற நின்றலரும் மலர்க் கொன்றை யங்கண்ணியர்
கடு விடை கொடி வெடிகொள் காடுறை பதியர்
பாருற விண்ணுலகம் பரவப்படு வோரவர்
படு தலைப் பலி கொளல் பரிபவ நினையார்
தாருறு நல்லரவம் மலர் துன்னிய தாதுதிர்
தழை பொழின் மழைந் நுழை தருமபு ரம்பதியே. (௪)

3699 நேருமவ ரக்குணர்ப் புகி லிலலைநெ டுஞ்சடைக்
கங்கை புனல் படர்ந் திடப் படுவ தோர்நிலையர்
பேருமவர்க் கெனையர் யிர முனைப்பயி றப்பிறப்
பிலர் தவ ருடற் றடர்த்த பெற்றி யாரறிவர்
ஆரமவர்க் ககழ்வர் யதோர் நாகம் முஃகுற
வெழுஃ கொழு மலர் கொள்பொன் னிதழி நலலலங்க
லூரமவர்க் கிமவான் மக ளூர்வது போர்விடை
கடி படு செடி பொழிற் றருமபு ரம்பதியே. (௫)

3700 கூழையங் கோதைகுலா யவ டம்பிணை புல்கமல்
குமென முலைப்பொறி கொள்பொற கொடியி டைதுவர்வாய
மாழையொண் கணமடவா ளையோர் பாகம கிழ்ந்தவர்
வலம் மலி படை விடை கொடிகொ டுமழுவாள்
யாழையு மெள்கிடவே ழிசை வண்டுமு ரன்றினந்
துவன் றிமென் சிறஃ கறை யுறநற வுரியுந்
தாழையு ஞாழலுநீ டிய கானலி னள்ளிசைப்
புள ளினந் துயில பயி றருமபு ரம்பதியே (௬)

3701 தேமரு வார்குழ லன்ன நடைப்பெடை மான்விழித்
திருந் திழை பொருந்து மேனி செங்க திர்விரிய
தூமரு செஞ்சடையிற் றுதை வெண்மதி துன்றுகொன்றை
தொல புனல் சிரங் கரந் துரித்த தோலுடையர்
காமரு தண்கழிநீ டிய கானல கண்டகங்
கடல் லடை கழி யிழிய முண்ட கத்தயலே
தாமரை சோருவளைங் படு இறகமு நீர்மலர்
வெறி கமழ் செறி வயற் றருமபு ரம்பதியே. (௭)

தூவண நீறகலம் பொலி யவ்விளை புல்சம் 3702
குமென் மலர் வளை புனை திரள்பு யமமணிவா
கோவண மும்முழையின் னத ளும்முடை யாடையா
கொலை மலி படையொர் சூல மேந்தி யகுழகர்
பாவண மாவலறத் தலை பத்துடை யவ்வரக்க
னவ் வலியோர் கவ்வை செய தருளபு ரிந்தவ
தாவண வேறுடையெம் மடி கடிகட மவ்வுறைய
கடல் விடுந் தடங் கரைத் தருமபு ரமபதியே. (அ)

வாமலி மென்முலைமா தொரு பாகம தாகுவர் 3703
வளங் கிளா மதி யரவம வைகி யசடையா
கூமலி சூலமும்மவெண் மழு வும்மவா வெல்படை
குனி சிலை தனி மலைய தேந்தி யகுழக
ராமலி யாழிகொள்செல் வனு மலரிசொ டாமரைமே
மிசை யவ னடிம முடி யளவு தாமறியார்
தாமலி கொன்றையலங் கலு கந்தவா தங்கிடந்
தடங் கடல விடுந் திரைத் தருமபு ரமபதியே (௯)

புத்தர்க ளொத்தவர்மொய்த் துறி புல்கிய கையரொடு 3704
மொழிந்த தழிவில் பெருமி யுறற நறற வர்புலவோர்
பத்தர்க ளத்தவமெய்யப் பய னுசவு கந்தவா
நிகழ்ந் தவர் சேவந் தவா சுடலைப் பொடியணிவா
முத்தன வெண்ணகையொண் மலை மாதுமை பொன்னகனி
புணா முலை யிணை துணை யணைவ துமபிரியார்
தத்துரு வித்திரளுந் திய மாலகட லோதமவந்
தடார் இடுந் தடம பொழிற் றருமபு ரம்பதியே. (௰)

பொனனெடு நனமணிமா ளிகை சூழ்விழ வம்மலி 3705
பொரு புன திரு வமா புகலி யெனறுலகெ
றனனொடு நேர்பிறவில் பதி ஞானசம் பந்தனஞ்
சூசெந் தமிழ்த் தடங் கடற் றருமபு ரமபதியைப்
பின்னெடு வார்சடையிற் பிறை யும்மர வும்முடை
யவன் பிணை துணை கழல்கள் பேணு தலுரியா
ரினனெடு நனனுலகெய் துவ ரெய்திய போகமு
முறு வர்க ளிடர் பிணி துயர அணைவிலரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவாவடுதுறையை அகன்று, திருக்கோழம்பம்முதலிய ஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டு, தருமபுரத்தை அடைந்தார் அந்தத்தருமபுரம் திருநீலகண்டப்பெரும்பாணருடைய தாயார் பிறந்த தலமாதலால், அங்குள்ள அவருடைய சுற்றத்தார்கள் வந்து எதிர்கொண்டு வணங்கித் துதித்தார்கள் அது கண்டு, திருநீலகண்டப்பெரும்பாணர் பிள்ளையார் அருளிச்செய்த அருமையாகிய திருப்பதிகங்களின் இசையைத் தாம் யாழில் இட்டு வாசிக்கப்பெற்ற பெரும்பேற்றை அவர்களுக்கு அருளிச்செய்தார் அவர்கள் அதைக் கேட்டு, "நீர் திருப்பதிகவிசையை அளவுபெற யாழிலே அமைத்து வாசித்தலினாலே உலகமுழுதிலும் இசை விளங்குக" என்றார்கள

உடனே பெரும்பாணர் மன நடுங்கி, பிள்ளையாருடைய திருவடிகளை வணங்கி நின்று, "சுவாமீ, திருப்பதிகவிசை அளவுபடாத தன்மையை இவர்களேயன்றி உலகத்திலுள்ள மற்றை யாவரும் அறிந்து உண்மையை உணர்ந்து உய்யும்பொருட்டுத் தேவரீர் ஒரு திருப்பதிகம் பாடியருளுவீராகில், அடியேன் அதனிசை யாழிலே அடங்காமையைக் காட்டப்பெறுவேன்" என்றார். அப்பொழுது பிள்ளையார் சிவபிரானை வணங்கிக்கொண்டு, திருப்பதிகத்தின் உண்மை பூமியிலுள்ளோருடைய கண்டத்திலும் யாழிலும் இசைநூலிற்கூறப்பட்ட இசைசுருதிகளினால் அடங்காமையைக் காட்டும்பொருட்டு, "மாதர்மடப்பிடி" என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினார். திருநீலகண்டப்பெரும்பாணர் அத்திருப்பதிகவிசையைத் தம்முடைய யாழ்நரம்பிலே முன்போல இட்டு வாசிக்கப் புக; அது அதனிடத்தே அடங்கிற்றில்லை அப்பொழுது திருநீலகண்டப்பெரும்பாணர் அதனை விட்டு அச்சங்கொண்டு பிள்ளையாருடைய திருவடிகளிலே விழுந்து நமஸ்கரித்து எழுந்து, "சுவாமி அருளிச்செய்த திருப்பதிகததினிசையை யாழிலே ஏற்பேன் என்று சொல்லப் பண்ணியது இந்த யாழன்றோ" என்று அதனை உடைக்கும்படி ஓங்கினார். உடனே பிள்ளையார் தடுத்தருளி, "ஐயரே, இந்தயாழைத்தாரும" எனறு வாங்கிக்கொண்டு, "ஐயரே நீர் இந்த யாழை முரிப்பது என்னை! சிவபெருமானும் உமாதேவியாரும் அருளிச்செய்த திருவருளின் பெருமையெல்லாம் இந்தக்கருவியில் அளவுபடுமா! மனசினாலும் அளவுபடாத இசைப்பெருமை செய்கையினால் அளவுபடுமோ! அளவுபடாதே நீர் இந்த யாழைக்கொண்டே சுவாமியுடைய திருப்பதிகவிசையை இயன்றமட்டும் இதில் அமைத்து வாசியும்" என்று சொலலி, திருநீலகண்டப்பெரும்பாணர்கையிலே யாழைக்கொடுத்தருளினார் பெரும்பாணர் பிள்ளையாரைததொழுது, யாழை வாங்கி, சிரமேற்கொண்டார.

சுவாமிதிருநாமம - யாழ்மூரிநாதர்
தேவிதிருநாமம - மதுரமின்னமமை.

ஆ திருபபதிகம - ௩௨௦

# ௩௨. திருநள்ளாறுந்திருவாலவாயும்.

வி ன வு ரை.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனா

பண் - நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

3706 பாடகமெல்லடிப்பாவையோடுமபடுபிணககாடிடமபற்றிநினறு
நாடகமாடுநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லாய்
சூடகமுன்கைமடநதைமாாகடுணைவரொடுநதொழுதேத்திவாழதது
வாடகமாடநெருஙகுகூடலாலவாயின்கணமாநதவாறே. (க)

3707 திஙகளம்போதுஞ்செழும்புனலுஞ்செஞ்சடைமாடடயல்வைத்துகநது
நஙகணமகிழுநள்ளாறுடையநமபெருமானிதுவென்கொல்சொலலாய்
பொஙகிளமென்முலையார்களோடுமபுனமயிலாடநிலாமுளைக்கு
மஙகழகசசுதைமாடககூடலாலவாயினகணமாநதவாறே. (உ)

தண்ணறுமத்தமுங்கூவிளமும்வெண்டலைமாலையுந்தாங்கியார்க்கு
நண்ணலரியநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லாய்
புண்ணியவாணருமாதவரும்புகுந்துடனேத்தடப்புனையிழையா
ரண்ணலின்பாடலெடுக்குங்கூடலாலவாயின்கணமர்ந்தவாறே (௩)

பூவினில்வாசம்புனலிற்பொற்புப்புதுவிரைச்சாந்தினினீறுதோய்
நாவினிற்பாடனள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லாய்
தேவர்கடானவர்சித்தர்விச்சாதரர்கணத்தோடுஞ்சிறந்துபொங்கி
யாவினிலைந்துகந்தாடுங்கூடலாலவாயின்கணமர்ந்தவாறே (௪)

செம்பொன்செய்மாலையும்வாசிகையுந்திருந்துபுகையுமவியும்பாட்டு
நம்பும்பெருமைநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லா
யும்பருநாகருலகந்தானுமொலிகடல்சூழ்ந்தவுலகத்தோரு
மம்புதன்மாலைகளானீடுங்கூடலாலவாயின்கணமர்ந்தவாறே. (௫)

பாகமுந்தேவியைவைத்துக்கொண்டுபைவிரிதுத்தியரவேழ்வாய
நாகமும்பூண்டநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லாய்
போகமுமின்னமனத்துவைத்துப்புண்ணியர்நண்ணும்புணர்வுபூண்ட
வாகமுடையவர்சேருங்கூடலாலவாயின்கணமர்ந்தவாறே. (௬)

கோவணவாடையுநீற்றுப்பூச்சுங்கொடுமழுவேந்தலுஞ்செஞ்சடையு
நாவணப்பாட்டுநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லாய்
பூவணமேனியிளையமாதர்பொன்னுமணியுங்கொழித்தெடுத்து
வாவணவீதியிலாடுங்கூடலாலவாயின்கணமர்ந்தவாறே. (௭)

இலங்கையிராவணன்வெற்பெடுக்கவெழில்விரலூன்றியிசைவிரும்பி
நலங்கொளச்சேர்ந்தநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லாய்
புலன்களைச்செற்றுப்பொறியைநீக்கிப்புந்தியிலுந்நினைச்சிந்தைசெய்யு
மலங்கனல்லார்கண்மருங்குகூடலாலவாயின்கணமர்ந்தவாறே (௮)

பணியுடைமாலுமலரினோனும்பன்றியும்வென்றிப்பறவையாய்
நணுகலரியநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லாய்
மணியொலிசங்கொலியோடுமற்றைமாமுரசின்னொலியென்றுமோவா
தணிகிளர்வேந்தர்புகுதுங்கூடலாலவாயின்கணமர்ந்தவாறே (௯)

தடுக்குடைக்கையருஞ்சாக்கியருஞ்சாதியினீங்கியவத்தவத்தா
நடுக்குறநின்றநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லா
யெடுக்குமவிழவுநன்னாள்விழவுமிரும்பலியின்பின்னோடேத்திசையு
மடுக்கும்பெருமைசேர்மாடக்கூடலாலவாயின்கணமர்ந்தவாறே. (௧௦)

அன்புடையானையரனைக்கூடலாலவாய்மேவியதென்கொலென்று
நன்பொனைநாதனைநள்ளாற்றானையம்பெறப்போற்றிநலங்குலாவும்
பொன்புடைசூழ்தருமாடக்காழிப்பூசுரன்ஞானசம்பந்தன்சொன்ன
வின்புடைப்பாடல்கள்பத்தும்வல்லாரிமையவரேத்தவிருப்பர்தாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

# திருநள்ளாறு.

பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்

போகமார்த்தபூண்முலையாடன்னோடும்பொன்னகலம
பாகமார்த்தபைங்கணவெள்ளேற்றண்ணல்பரமேட்டி
யாகமார்த்ததோலுடையன்கோவணவாடையின்மே
னாகமார்த்தநம்பெருமான்மேயதுநள்ளாறே. (க)

தோடுடையகாதுடையன்றோலுடையன்றலையாப
பீடுடையபோர்விடையன்பெண்ணுமோர்பாலுடைய
னேடுடையமேலுலகோடேழ்கடலுஞ்சூழ்ந்த
நாடுடையநம்பெருமானமேயதுநள்ளாறே (உ)

3717 ஆன்முறையாலாற்றவெண்ணீறாடியணியிழையோர
பான்முறையாலவைத்தபாதம்பத்தர்பணிந்தேத்த
மான்மறியும்வெண்மழுவுஞ்சூலமும்பற்றியகை
நான்மறையானமபெருமான்மேயதுநள்ளாறே. (ங)

3720 புல்கவல்லவார்சடைமேற்பூமபுனலபெயதயலே
மல்கவல்லகொன்றைமாலைமதியோடுடன்சூடிப்
பலகவல்லதொண்டர்தம்பொயபாதகிழறசேர
நலகவல்லநம்பெருமானமேயதுநள்ளாறே. (ச)

3721 ஏறுதாங்கியூர்திபேணியேர்கொளிளமதிய
மாறுதாங்குஞ்சென்னிமேலோர்ராடரவஞ்சூடி
நீறுதாங்கிநூலகிடந்தமார்பினிற்கொன்றை
நாறுதாங்குநமபெருமான்மேயதுநள்ளாறே. (ரு)

திங்களுச்சிமேலவிளங்குந்தேவனிமையோர்க
ளெங்களுச்சியெமமிறைவனென்றடியேயிறைஞ்சத்
தங்களுச்சியால்வணங்குந்தன்னடியார்கட்கெல்லா
நங்களுச்சிநமபெருமான்மேயதுநள்ளாறே. (சு)

3723 வெஞ்சுடர்த்தீயங்கையேந்திவிண்கொண்முழவதிர
வஞ்சிடத்தேராடலபாடலபேணுவதன்றியுமபோய்ச
செஞ்சடைக்கோர்திங்கள்சூடித்திகழ்தருகண்டத்துள்ளே
நஞ்சடைத்தநமபெருமானமேயதுநள்ளாறே. (எ)

3724 சிட்டமார்ந்தமும்மதிலுஞ்சிலைவரைத்தீயம்பினுற
சுட்டமாட்டிச்சுண்ணவெண்ணீறாடுவதன்றியும்போயப
பட்டமார்ந்தசென்னிமேலோர்பான்மதியஞ்சூடி
நட்டமாடுநமபெருமானமேயதுநள்ளாறே. (அ)

3725 உண்ணலாகாநஞ்சுகண்டத்துண்டுடனேயொடுக்கி
யண்ணலாகாவண்ணனீழலாரழலபோலுருவ
மெண்ணலாகாவுள்வினையென்றெள்கவலித்திருவர்
நண்ணலாகாநம்பெருமான்மேயதுநள்ளாறே. (கூ)

மாசுமெய்யர்மண்டைத்தேரர்குண்டர்குணமிலிகள்
பேசும்பேச்சைமெய்யென்றெண்ணியந்நெறிசெல்லன்மின்
மூசுவண்டார்கொன்றைசூடிமும்மதிலுமுடனே
நாசஞ்செய்தநம்பெருமான்மேயதுநள்ளாறே. (௧௦)

தண்புனலும்வெண்பிறையுந்தாங்கியதாழ்சடைய
னண்புநல்லார்மல்குகாழிஞானசம்பந்தனல்ல
பண்புநள்ளாறேத்துபாடல்பத்துமிவைவல்லா
ருண்புநீங்கிவானவரோடுலகிலுறைவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

திருஞானசம்பந்தப்பிள்ளையார் தருமபுரத்தை அகன்று, திருநள்ளாற்றை அடைந்து, திருக்கோயிலிற் பிரவேசித்து, சுவாமியை வணங்கி, "போகமார்த்த பூண்முலையாள்" என்னுந் திருப்பதிகத்தை யாழ்நரம்பிலே இசை கூடும்படி பாடிமுடித்து, புறத்தணைந்து, திருநீலகண்டப் பெரும்பாணரை நோக்கி, யாழில் இட்டு வாசிக்கும்படி பணித்து, தாந்திருத்தாளங்கொண்டு பாடினார். பெரும்பாணர் அத்திருப்பதிகவிசையை யாழில் இட்டு வாசித்தார். அதுகேட்டு பிள்ளையார் திருவுளமகிழ்ந்தருளினார்.

பிள்ளையார் மதுரைத்திருப்பதியில் எழுந்தருளியிருக்கும்போது, சமணர்கள் பிள்ளையாருடைய சொல்வெற்றியை, அவர் தமிழ்ப்பதிகத்தினாலே பாண்டியனுடைய வெப்புநோயை நீக்கினமையால், அறிந்தபின் "தருக்கம்பேசி இவரை வெல்லுதல் கூடாது அக்கினியினாலும் ஜலத்தினாலும் வெல்லல்வேண்டும்" என்று தங்களுள்ளே சிந்தித்தார்கள். பிள்ளையார் சமணர்களை நோக்கி, "இனி உங்கள் சமயநூற்றுணிவைப் பேசுங்கள்" என்று அருளிச்செய்ய, சமணர்கள் "தருக்கம்பேசி வெல்லவேண்டுவதில்லை. நாமிருபக்ஷத்தேமும் எங்கள் எங்கள் சமய உண்மையை உள்ளபடி பிரத்தியக்ஷமாகக் காட்டி வெல்லுவோம் என்று" ஒட்டினார்கள். அப்பொழுது பாண்டியராஜா "என்னுடைய வெப்புநோயை நீங்கள் ஒழித்திலீர்கள் உங்களுக்கு என்னவாறு" என்று சொல்ல, சமணர்கள் அரசர் உங்களுக்கு என்னவாறு என்றதையே விடையாகக் கொண்டு, "நாங்கள் இருபக்ஷத்தேமும் எங்கள் எங்கள் சமயக்கருத்தை ஏட்டிலே தீட்டி, அக்கினியில் இடக்கடவோம் வேவப்பெறுமையே வெற்றி" என்றார்கள். அப்போது அரசர் ஒன்றுஞ் சொல்லுமுன், பிள்ளையார் 'நீங்கள் சொல்லியது நன்று அரசனெதிரே அப்படியே செய்வோம் வாருங்கள்" என்று சொல்லியருளினார். பிள்ளையாருடைய ஆஞ்ஞையினாலே பாண்டியர் சபைமுன்னே அக்கினி அமைக்கும்படி ஏவலாளர்களை ஏவ, அவர்களும் அக்கினி அமைந்தார்கள். பிள்ளையார் சமீபத்திலே எழுந்தருளிவந்து, சிவபெருமானே மெய்ப்பொருள் என்று தாம் பாடியருளிய தமிழ்வேதத் திருமுறையை ஸ்தோத்திரஞ் செய்து, "நம்முடைய சிவபெருமானே பரம்பொருள்" என்று சொல்லி வணங்கி, திருக்கரத்தினால் எடுத்து, சிரசின்மேற்கொண்டு, திருக்காப்பிட்ட கயிற்றை அவிழ்த்து, அத்திருமுறையைத் தமது திருக்கரத்தினால் மறிக்க, திருநள்ளாற்றின் மேலதாகிய "போகமார்த்த பூண்முலையாள்" என்னுந் திருப்பதிகம் வந்து நேர்ந்தது. பிள்ளையார் அத்திருப்பதிகத்தையே விரும்பி, திருநள்ளாற்றை வணங்கி, அது எழுதப்பட்ட திருவேட்டைக் கழற்றி, திருக்கரத்திலே கொண்டு, சிவபெருமானே மெய்ப்பொருள் என்பதைச் சமஸ்தருக்கும் உணர்த்தும்பொருட்டு, "இவை அக்கினியில் இடப்படுமாயிற் பழுதில்லை இது சத்தியம்" என்னுங் கருத்தினையுடைய "தளிரிளவளரொளி" என்னுந் திருப்பதிகத்தைப்பாடி, அங்குள்ளார்களெல்லாருங்காண, சமணர்களுடைய சிந்தை வேவ, அவ்வக்கினியிலே

அவ்வேட்டை இட்டருளினார். இட்ட ஏட்டில் எழுதப்பட்ட திருப்பதிகம், பரஞானம் அபரஞானம் என்கின்ற இருதனங்களையுடைய உமாதேவிபாகரும் அட்டமூர்த்தியுமாகிய சிவபெருமானையே பொருளென உடைமையால், மிகச்சுவாலிக்கின்ற அக்கினியிலே பசமையாய் விளங்கிற்று. சமணர்களும் தங்கள் நூற்பொருளை எழுதிய ஏட்டை, "இது உய்யுமோ" என்கின்ற கவலையோடு, நடுங்கி நின்று, அக்கினியில் இட்டார்கள். அது தகிக்கப்பட்டொழிந்தது. அது கண்டு பயத்தினாலே மனஞ்சோர்ந்து நின்றார்கள். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தாம அக்கினியில இட்ட ஏட்டை, குறித்தநாழிகையிலே ஊனமின்மை கண்டு, யாவரும் வியக்கும்படி எடுத்தருளினார் அது முன்னையினும் பசுமையும் புதுமையும் உடைத்தாய் விளங்கிற்று பிள்ளையார் அவ்வேட்டைச் சபைமுன்னே காட்டி, திருமுறையிலே முன்போலக் கோத்தருளினார் அரசன் அத்தியந்த ஆச்சரியம் அடைந்து, சமணர்களை நோக்கி, "நீங்கள் இட்ட ஏட்டைக் காட்டுங்கள்" என்றான். சமணர்கள் தாங்கள் இட்ட ஏட்டை எடுக்கும்படி சென்றணையும்போது, அக்கினி மிகச்சுவாலித்தலைக் கண்டு, திரும்பிவிட்டார்கள் அது கண்ட அரசன் ஜலத்தினாலே அக்கினியைத் தணிப்பித்தான் சமணர்கள் அங்கே சாம்பரும் கரியுமன்றி, மற்றொன்றுங் காணார்களாகி, செய்வதொன்றறியாது, திகைப்பினாலே, இரண்டுசாம்பரைக் கையினாலே பிசைந்து தூற்றிப் பார்த்தார்கள் அது கண்ட அரசன் புன்முறுவல செய்து, "ஏட்டை இன்னும அரித்துப் பாருங்கள் பொய்ந்நெறியையே மெய்ந்நெறியாகக் கொண்டு உலகின்றவர்களே, போங்கள முன்னை நாள் வெப்பாகிய தீயினின்றும் உய்ய, நீங்கள் அப்பொழுது தோற்றீர்கள் ஆதலால, அதுவே வழியாக இப்பொழுது அக்கினியில் இடப்பட்ட ஏடு உய்ந்ததில்லை என்றால, நீங்கள் தோற்றிலீர்கள்போலும்" என்றான்

---

## திருவிராகம்.

### பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

ஏடுமலிகொன்றையரவிந்துவிளவன்னி
மாடவலசெஞ்சடையெம்மைந்தனிடமென்பர்
கோடுமலிஞாழல்குரவேறுசுரபுன்னை
நாடுமலிவாசமதுவீசியநள்ளாறே. (௧)

விண்ணியலபிறைப்பிளவறைப்புனன்முடித்த
புண்ணியனிருக்குமிடமென்பர்புவிதன்மேற்
பண்ணியனடத்தொடிசைபாடுமடியார்கள்
நண்ணியமனத்தினொடுவழிபாடுசெயநள்ளாறே. (௨)

விளங்கிழைமடந்தைமலைமங்கையொருபாகத்
துளங்கொளவிருத்தியவொருத்தனிடமென்பர்
வளங்கெழுவுதீபமொடுதூபமலர்தூவி
நளன்கெழுவிநாளுமவழிபாடுசெய்நள்ளாறே. (௩)

கொக்கரவராகூன்மதியர்கோபர்திருமேனிச்
செக்கரவர்சேருமிடமென்பர்தடமூழ்கிப்
புக்கரவர்விஞ்சையருமவிண்ணவருநண்ணி
நக்கரவர்நாமநினைவெய்தியநள்ளாறே. (௪)

நெஞ்சமிதுகண்டுகொளுனக்கெனநினைந்தார்
வஞ்சமதறுத்தருளுமற்றவனைவானோ
ரஞ்சமுதுகாகியவர்கைதொழவெழுந்த
நஞ்சமுதுசெய்தவனிருப்பிடநள்ளாறே (ரு)

பாலனடிபேணவவனாருயிர்குறைக்குங்
காலனுடன்மாளமுனுதைத்தவரனூராங்
கோலமலர்நீர்க்குடமெடுத்துமறையாளர்
நாலின்வழிநின்றுதொழில்பேணியநள்ளாறே. (சு)

நீதியர்நெடுந்தகையர்நீண்மலையர்பாவை
பாதியர்பராபரர்பரம்பரரிருக்கை
வேதியர்கள்வேள்வியொழியாதுமறைநாளு
மோதியரனாமமுமுணர்த்திடுநள்ளாறே (எ)

கடுத்துவலரக்கன்முனெருக்கிவரைதன்னை
யெடுத்தவன்முடித்தலைகள்பத்துமிருதோளு
மடர்த்தவர்தமக்கிடமதென்பரளிபாட
நடத்தகலைவைத்திரள்கள்வைகியநள்ளாறே (அ)

உயர்ந்தவனுருக்கொடுதிரிந்துலகமெல்லாம்
பயந்தவனினைப்பரியபண்பனிடமென்பர்
வியந்தமரர்மெச்சமலர்மல்குபொழிலெங்கு
நயந்தருமவேதவொலியார்திருநள்ளாறே. (௯)

சிந்தைதிருகற்சமணர்தேரர்தவமென்னும்
பந்தனையறுத்தருளினற்பரமனூர்
மந்தமுழவந்தருவிழாவொலியும்வேதச்
சந்தமவிரவியபொழின்முழங்கியநள்ளாறே (கo)

ஆடலரவார்சடையனாயிழைதனோடு
நாடுமலிவெய்திடவிருந்தவனள்ளாறை
மாடமலிகாழிவளர்பந்தனதுசெஞ்சொற்
பாடலுடையாரையடையாபழிகணோயே (  )

திருச்சிற்றம்பலம்

---

## திருவிராகம்

பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்.

தளிரிளவளரொளிதனதெழிறருதிகழ்மலைமகள்
குளிரிளவளரொளிவனமுலையிணையவைகுலவலி
னளிரிளவளரொளிமருவுநள்ளாறர்தநாமமே
மிளிரிளவளரெரியிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. (க)

போதமதருபுரிகுழலெழின்மலைமகள்பூணணி
சீதமதணிதருமுகிழிளவனமுலைசெறிதலி
னூதமதெழிலுருவனையநள்ளாறர்தநாமமே
மீதமதெரியினிலிடவிவைபழுதிலைமெய்ம்மையே. (௨)

இடமுறுமணியணியிணர்புணரவளரொளியெழிலவடங்
கடமுறுகதிரிளவனமுலையிணையொடுகலவலி
னடமுறுசெறிவயன்மருவுநள்ளாறர்தநாமமே
யிடமுறுமெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. (௩)

மைச்சணிவரியரிநயனிதொன்மலைமகள்பயனுறு
கச்சணிகதிரிளவனமுலையவையொடுகலவலி
னச்சணிமிடறுடையடிகணள்ளாறர்தநாமமே
மெச்சணியெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. (௪)

பண்ணியன்மலைமகள்கதிர்விடுபருமணியணிநிறக்
கண்ணியல்கலசமதனமுலையிணையொடுகலவலி
னெண்ணியருளிபுனல்புகுதுநள்ளாறர்தநாமமே
விண்ணியலெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. (௫)

போதுறுபுரிகுழன்மலைமகளிளவளரபொன்னணி
சூதுறுதளிர்நிறவனமுலையவையொடுதுதைதலிற்
றாதுறுநிறமுடையடிகணள்ளாறர்தநாமமே
மீதுறுமெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. (௬)

சாமலிநெறிபுரிசுரிகுழன்மலைமகள்கவினுறு
சேமலிதருமணியணிமுலைதிகழ்வொடுசெறிதலி
னாமலிநகுதலையுடையநள்ளாறர்தநாமமே
யோமலியெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே (௭)

மனணியவளரொளிமலைமகடளிர்நிறமதமிகு
பொனணியனமணியணிகலசமதனமுலைபுணர்தலி
றன்னியறசமுகனெரியநள்ளாறர்தநாமமே
மினணியலெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. (௮)

கானமுகமயிலியன்மலைமகளசதிர்விடுகனமிகு
டானமுகமியலபணையிணைமுலைதுணையொடுபயிறலி
னூனமுகனரியறிவரியநள்ளாறர்தநாமமே
மேன்முகவெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. (௯)

அத்திரநயனிதொன்மலைமகளபயனுறுமதிசயச
சித்திரமணியணிதிகழ்முலையிணையொடுசெறிதலிற்
புத்தரொடமணர்பொய்பெயருநள்ளாறர்தநாமமே
மெய்த்திரளெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. (௧0)

சிற்றிடையரிவைதன்வனமுலையிணையொடுசெறிதரு
நற்றிறமுறுகழுமலநகர்ஞானசம்பந்தன
கொற்றவனெதிரிடையெரியினிலிடவிவைகூறிய
சொற்றெரியொருபதுமறிபவர்துயரிலர்தூயரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தப்பிள்ளையார் மதுரைத் திருப்பதியில் எழுந்தருளியிருந்து, தமிழ்வேதத் திருமுறையில் உதயமான 'போகமார்த்த பூண்முலையாள்" எனனுந் திருப்பதிகம் எழுதப்பட்ட திருவேட்டைத் திருக்காத்திலே கொண்டு, பாண்டியர் சபைமுன்னே, சிவபெருமானே பரம்பொருள் என்பதைச் சமயவாதருக்கும் உணர்த்தும் பொருட்டு "இவை அக்கினியில் இடப்படுமாயிற் ... இது சத்தியம்" என்னுங் கருத்தையுடைய "தளிரிள வளரொளி" என ... பதிகம்பாடியருளினர்

---

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

உள்ளாறாததோர்புண்டரிகத்திர
டெள்ளாறாச்சிவசோதித்திரளினைக
கள்ளாறாதபொற்கொன்றைகமழ்சடை
நள்ளாறாவெனநம்வினைநாசமே. (௧)

ஆரணப்பொருளாமருளாளனா
வாரணத்துரிபோர்த்தமணாளனா
நாரணனனையேத்துநள்ளாறனா
காரணககலைஞானககடவுளே. (௨)

மேகம்பூண்டதோர்மேருவிற்கொண்டெயில்
சோகம்பூணவழல்சோரத்தொட்டானவன
பாகம்பூண்டமாலபங்கயத்தானொடு
நாகம்பூண்டுகூத்தாடுநள்ளாறனே. (௩)

மலியுஞ்செஞ்சடைவாளரவம்மொடு
பொலியும்பூம்புனல்வைத்தபுனிதனா
நலியுங்கூற்றைநலிந்தநள்ளாறர்தம
வலியுங்கண்டிறுமாந்துமகிழ்வனே. (௪)

உறவனாய்நிறைந்துள்ளங்குளிர்ப்பவ
னிறைவனாகிநின்றெண்ணிறைந்தானவ
னறவன்றும்பொழிற்றிருநள்ளாறனை
மறவனாய்ப்பனறிப்பின்சென்றமாயமே. (௫)

செக்கரங்கழிசெஞ்சுடர்ச்சோதியா
நக்கரங்கரவார்த்தநள்ளாறனா
வக்கரனுயிர்வவ்வியமாயற்குச
சக்கரமருள்செய்தசதுரரே. (௬)

வஞ்சநஞ்சிற்பொலிகின்றகண்டத்தா
விஞ்சையிற்செலவப்பாவைக்குவேந்தனா
வஞ்சநெஞ்சத்தவாக்குவழிகொடா
நஞ்சநெஞ்சர்க்கருணநள்ளாறரே. (௭)

375

கட்டங்கமொன்று தங்கையிலேந்திக்
கங்கணமுன்கா திலவிந்தோட்டுச்
சுட்டங்குகொண்டு துதையப்பூசிச்
சுந்தரனாய்ச்சூலங்கையேந்தினானைப்
பட்டங்கமாலைநிறையச்சூடிப்
பல்கணமுந்தாமும்பாரத்தக்காட்டி
னட்டங்கமாடியைநள்ளாற்றானை
நானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (௩)

உலந்தார்தமங்கங்கொண்டுலகமெல்லா
மொருநொடியிலுழல்வானையுலப்பில்செல்வரு
சிலந்திதனக்கருள்செய்ததேவதேவைத்
திருச்சிராப்பள்ளியெனுஞ்சிவலோகனைக்
கலந்தார்தம்மனத்தென்றுங்காதலானைக்
கச்சியேகம்பனைக்கமழ்பூஞ்சோலை
நலந்தாங்குநம்பியைநள்ளாற்றானை
நானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (௪)

குலங்கொடுத்துச்சோ[illegible]
குலவரையன்மடப்பாவையிடப்பாலனை
மலங்கெடுத்துமாதீர்த்தநீராட்டிக்கொண்
மறையவனைப்பிறைதவழ்செஞ்சடையினானைச்
சலங்கெடுத்துத்தயாமூலதன்மமென்னுந்
தத்துவத்தின்வழிநின்றுதாழ்ந்தோர்க்கெல்லா
நலங்கொடுக்குநம்பியைநள்ளாற்றானை
நானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (௫)

பூவிரியமலர்க்கொன்றைச்சடையினானைப்
புறம்பயத்தெம்பெருமானைப்புகலூரானை
மாவிரியக்களிறுரித்ததமைந்தன்றன்னை
மறைக்காடுமேவலிவலமுமன்னினானைத்
தேவிரியத்திகழ்தக்கன்வேள்வியெல்லாஞ்
சிதைத்தானையுதைத்தவன்றன்சிரங்கொண்டானை
நாவிரியமறைநவின்றநள்ளாற்றானை
நானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (௬)

சொல்லானைச்சுடர்ப்பவளச்சோதியானைத்
தொல்லவுணர்புரமூன்றுமெரியச்செற்ற
வில்லானையெல்லார்க்குமேலானானை
மெல்லியலாள்பாகனைவேதநான்கும்
கல்லாலினீழற்கீழறங்கண்டானைக்
காளத்தியானைக்கயிலைமேய
நல்லானைநம்பியைநள்ளாற்றானை
நானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (௭)

குன்றுதமாமுனிவன்சாட்டீங்குக்
குரைகழலாற்கூற்றுவனைக்குமைத்தகோனை

யன்றாகவவுணாபுரமூன்றுமவேவ
வாரழல்வாயோட்டியடாவித்தானைச
சென்றாதுவேண்டிற்றென்றீவான்றன்னைச
சிவனையெம்பெருமானென்றிருப்பாக்கென்று
நன்றாருநம்பியைநள்ளாற்றானை
நானடியேனினைக்கப்பெறறுய்ந்தவாறே. (க)

இறவாமேவரம்பெற்றேனென்றுமிக்க
விராவணனையிருபதுதோணெரியவூன்றி
யுறவாகியின்னிசைகேட்டிரங்கிமீண்டே
யுற்றபிணிதவிாத்தருளவல்லான்றன்னை
மறவாதாாமனத்தென்றுமன்னினானை
மாமதியமலாகொன்றைவன்னிமத்த
நறவாாசெஞ்சடையானைநள்ளாறனை
நானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

### பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

செம்பொன்மேனிவெண்ணீறணிவானைக
கரியகண்டனைமாலயன்காணாச
சம்புவைததழலங்கையினானைச
சாமவேதனைததனொப்பிலானைக
கும்பமாகரியின்னுரியானைக
கோவின்மேலவருங்கோவினைநங்க
ணமபனைநளளாறனையமுதை
நாயினேன்மறநதென்னினைக்கேனே. (க)

விரைசெய்மாமலர்க்கொன்றையினானை
வேதகீதனைமிகசசிறநதுருகிப
பரசுவாாவினைபபற்றறுபபானைப்
பாலொடானஞ்சுமாடவலலானைக்
கரைகடலவரையேழுலகுடைய
கோனைஞானககொழுநதினைக்கொலலே
நரைவிடையுடைநள்ளாறனையமுதை
நாயினேன்மறநதென்னினைக்கேனே. (உ)

பூவில்வாசத்தைபபொன்னினைமணியைப்
புவியைக்காற்றினைபபுனலனல்வெளியைச
சேவினமேலவருஞ்செலவனைசசிவனைத்
தேவதேவனைததித்திககுநதேனைக

காவியங்கண்ணிபங்கனைக்கங்கைச
சடையனைக்காமரத்திசைபாட
நாவினூறுநள்ளாறனையமுதை
நாயினேன்மறந்தென்னினைக்கேனே. (௩)

தஞ்சமென்றுதன்றாளதுவடைந்த
பாலன்மேல்வந்தகாலனையுருள
நெஞ்சிலோருதைகொண்டபிரானை
நினைப்பவர்மனநீங்ககில்லானை
விஞ்சைவானவர்தானவர்கூடிக்
கடைந்தவேலையுண்மிக்கெழுந்தெரியு
நஞ்சமுண்டநள்ளாறனையமுதை
நாயினேன்மறந்தென்னினைக்கேனே. (௪)

மங்கைபங்கனைமாசிலாமணியை
வானநாடனையேனமோடன்ன
மெங்குநாடியுங்காண்பரியானை
யேழையேற்கெளிவந்தபிரானை
யங்கநான்மறையானிறைகின்ற
வந்தணாளரடியதுபோற்று
நங்கள்கோனைநள்ளாறனையமுதை
நாயினேன்மறந்தென்னினைக்கேனே. (௫)

கற்பகத்தினைக்கனகமால்வரையைக்
காமகோபனைக்கண்ணுதலானைச
சொற்பதப்பொருளிருளறுத்தருளுந்
தூயசோதியைவெண்ணெய்நல்லூரி
லற்புதப்பழவாவணங்காட்டி
யடியனாவென்னையாளதுகொண்ட
நற்பதத்தைநள்ளாறனையமுதை
நாயினேன்மறந்தென்னினைக்கேனே. (௬)

மறவனையன்றுபன்றிப்பின்சென்ற
மாயனைநாலவாக்காலின்கீழுரைத்த
வறவனையமராக்கரியானை
யமரர்சேனைக்குநாயகனான
குறவாமங்கைதன்கேள்வனைப்பெற்ற
கோனைநான்செயுங்குற்றங்கள்பொறுக்கு
நறைவிரியுநள்ளாறனையமுதை
நாயினேன்மறந்தென்னினைக்கேனே. (௭)

மாதினுக்குடம்பிடங்கொடுத்தானை
மணியினைப்பணிவாரவினைகெடுக்கும்
வேதனைவேதவேள்வியாவணங்கும்
விமலனையடியேற்கெளிவந்த
தூதனைத்தன்னைத்தோழமையருளித்
தொண்டனேன்செய்ததுரிசுகள்பொறுக்கு

நாதனைநள்ளாறனையமுதை
நாயினேன்மறந்தென்னினைக்கேனே. (௯)

3776 இலங்கைவேந்தனெழிறிகழ்கயிலை
யெடுப்பவாங்கிமவான்மகளஞ்சத்
துலங்குநீண்முடியொருபதுந்தோள்க
ளிருபதுநெரிதரவிசைகேட்டு
வலங்கைவாளொடுநாமமுங்கொடுத்த
வள்ளலைப்பிள்ளைமாமதிச்சடைமே
னலங்கொள்சோதிநள்ளாறனையமுதை
நாயினேன்மறந்தென்னினைக்கேனே. (௧௦)

3777 செறிந்தசோலைகள்சூழ்ந்தநள்ளாற்றெஞ்
சிவனைநாவலூராரசிங்கடிநந்தை
மறந்துநானமற்றுநினைப்பதேதென்று
வனப்பகையப்பனூரன்வன்றொண்டன்
சிறந்தமாலைகளஞ்சினோடஞ்சுஞ்
சிந்தையுள்ளுருகிச்செப்பவல்லார்க்
கிறந்துபோக்கில்லைவரவில்லையாகி
யின்பவெள்ளத்துளிருப்பார்களினிதே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

திருநள்ளாற்றுத் திருப்பதிகம் - எ.

சுவாமிதிருநாமம் - தர்ப்பாரணியநாதர்
தேவிதிருநாமம் - போகமார்த்தபூண்முலையாள்.

ஆ - திருப்பதிகம் - கஉஎ

# ௫௯. கோட்டாறு.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

3780 கருந்தடங்கண்ணின்மாதரார்இசைசெய்யக்காரதிர்கின்றபூம்பொழிற்
குருந்தமாதவியின்விரைமல்குகோட்டாற்றி
லிருந்தவெம்பெருமானையுள்கியிணையடிதொழுதேத்துமாந்தர்கள்
வருந்துமாறறியார்நெறிசேர்வர்வானூடே. (௧)

3781 நின்றுமேய்ந்துநினைந்துமாகரிநீரொடும்மலர்வேண்டிவான்மழை
குன்றினோடுகுத்திப்பணிசெய்யுங்கோட்டாற்று
ளென்றுமன்னியவெம்பிரானைக்கழலேத்திவானரசாளவல்லவர்
பொன்றுமாறறியார்புகழார்ந்தபுண்ணியரே. (௨)

விரவிநாளும்விழாவிடைப்பொலிதொண்டர்வீதியிற்பணிசெய்யக்
குரவமாருநீழற்பொழின்மல்குகோட்டாற்றி
லரவநீள்சடையானையுள்கிநின்றாதரித்துமுன்னன்புசெய்தடி
பரவுமாறுவல்லார்பழிபற்றறுப்பாரே. (௩)

அம்பினேர்விழிமங்கைமார்பலராடகம்பெறுமாடமாளிகைக்
கொம்பினேர்துகிலின்கொடியாடுகோட்டாற்றி
னம்பனேநட்டனேநலந்திகழ்நாதனேயென்றுகாதல்செய்பவர்
தம்பினோர்ந்தறியாதடுமாற்றவல்வினையே (௪)

பழையதம்மடியார்துதிசெய்யப்பாருளோர்களும்விண்ணுளோர்தொழக்
குழலுமொந்தைவிழாவொலிசெய்யுங்கோட்டாற்றிற்
கழலும்வண்சிலம்பும்மொலிசெய்யக்கானிடைக்கணமேத்தவாடிய
வழகனென்றெழுவாரணியாவர்வானவர்க்கே. (௫)

பஞ்சின்மெல்லடிமாதராடவர்பத்தர்சித்தர்கள்பண்புவைகலுங்
கொஞ்சியின்மொழியாற்றொழின்மல்குகோட்டாற்றின்
மஞ்சனேமணியேமணிமிடற்றண்ணலேயெனவுள்ளநெக்குருகித்தவாத்
துஞ்சுமாறறியார்பிறவாரிந்நானிலத்தே

கலவமாமயிலாளொர்பங்கனைக்கண்டுகண்மிசைநீர்நெகிழ்த்திசை
குலவுமாறுவல்லார்குடிகொண்டகோட்டாற்றி
னிலவுமாமதிசேர்சடையுடைநின்மலாவெனவுன்னுவாரவ
ருலவுவானவரினுயர்வாகுவதுண்மையதே (௭)

வண்டலார்வயற்சாலியாலைவளம்பொலிந்திடவார்புனற்றிரை
கொண்டலார்கொணர்ந்தங்குலவுந்திகழ்கோட்டாற்றிற்
றொண்டெலாந்துதிசெய்யநின்றதொழிலனேகழலாலரக்கனை
மிண்டெலாந்தவிர்த்தென்னுகந்திட்டவெற்றிமையே. (௮)

கருதிவந்தடியார்தொழுதெழக்கண்ணனோடயன்றேடவானையி
குருதிமெய்கலப்புரிகொண்டுகோட்டாற்றில்
விருதிறன்மடமாதுநீயும்வியப்பொடும்முயர்கோயின்மேவிவெ
ளெருதுகந்தவனேயிரங்காயுனதின்னருளே. (௯)

உடையிலாதுழல்கின்றகுண்டருமூணருந்தவத்தாயசாக்கியர்
கொடையிலாமனத்தார்குறையாருங்கோட்டாற்றிற்
படையிலார்மழுவேந்தியாடியபண்பனேயிவனென்கொலோவென
யடைகிலாதவண்ணமருளாயுனடியவர்க்கே. (௧௦)

காலனைக்கழலாலுதைத்தொருகாமனைக்கனலாகச்சீறிமெய் 57''
க்கோலவார்குழலாள்குடிகொண்டகோட்டாற்றின்
மூலனைமுடிவொன்றிலாதவெம்முதல்தனைப்பயில்பந்தன்சொல்லிய
மாலைபத்தும்வல்லார்க்கெளிதாகுமவானகமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.



## பண் - காந்தார பஞ்சமம்.

---

திருச்சிற்றம்பலம்

வேதியன்விண்ணவரேத்தநின்றானவிளங்கும்மறை
யோதியவொண்பொருளாகிநின்றானொளியாகிநின்
கோதியதண்பொழில்சூழ்ந்தழகார்திருக்கோட்டாற்று
ளாதியையேநினைந்தேத்தவல்லார்க்கல்லலில்லையே. (௧)

ஏலமலர்க்குழன்மங்கைநல்லாளிமவான்மகள்
பாலமருந்திருமேனியெங்கள்பரமேட்டியுங்
கோலமலர்ப்பொழில்சூழ்ந்தெழிலார்திருக்கோட்டாற்று
ளாலநீழற்கீழிருந்தறஞ்சொன்னவழகனே. (௨)

இலைமல்குசூலமொன்றேந்தினனுமிமையோர்தொழ
மலைமல்குமங்கையோர்பங்கனுமம்மணிகண்டனுங்
குலைமல்குதண்பொழில்சூழ்ந்தழகார்திருக்கோட்டாற்று
ளலைமல்குவார்சடையேற்றுகந்தவழகனன்றே. (௩)

ஊனமரும்முடலுள்ளிருந்தவுமைபங்கனும்
வானமரும்மதிசென்னிவைத்தமறையோதியுந்
தேனமருமலர்ச்சோலைசூழ்ந்ததிருக்கோட்டாற்றுட்
டானமரும்விடையானுமெங்கடலைவனன்றே. (௪)

வம்பமரும்மலர்க்கோதைபாகமகிழ்மைந்தனுஞ்
செம்பவளத்திருமேனிவெண்ணீறணிசெல்வனுங்
கொம்பமருமலர்வண்டுகெண்டுந்திருக்கோட்டாற்று
ணம்பனெனப்பணிவார்க்கருள்செய்யெங்கணாதனே. (௫)

பந்தமருமவிரன்மங்கைநல்லாளொருபாகமா
வெந்தமரும்பொடிப்பூசவல்லவிகிர்தன்மிகுங்
கொந்தமரும்மலர்ச்சோலைசூழ்ந்ததிருக்கோட்டாற்று
ளந்தணனைநினைந்தேத்தவல்லார்க்கில்லையல்லலே. (௬)

துண்டமரும்பிறைசூடிநீடுசுடர்வண்ணனும்
வண்டமருங்குழன்மங்கைநல்லாளொருபங்கனுந்
தெண்டிரைநீர்வயல்சூழ்ந்தழகார்திருக்கோட்டாற்று
ளண்டமுமெண்டிசையாகிநின்றவழகனன்றே. (௭)

இரவமருந்நிறம்பெற்றுடையவிலங்கைக்கிறை
கரவமரக்கயிலையெடுத்தான்வலிசெற்றவன்
குரவமரும்மலர்ச்சோலைசூழ்ந்ததிருக்கோட்டாற்று
ளரவமருஞ்சடையானடியார்க்கருள்செய்யுமே. (௮)

ஓங்கியநாரணனான்முகனும்முணராவகை
நீங்கியதீயுருவாகிநின்றநிமலன்னிழற்
கோங்கமரும்பொழில்சூழ்ந்தெழிலார்திருக்கோட்டாற்று
ளாங்கமரும்பெருமானமரர்க்கமரனன்றே. (௯)

கடுக்கொடுத்ததுவராடையர்காட்சியில்லாததோர்
தடுக்கிடுக்கிச்சமணேதிரிவார்கட்குத்தன்னருள்
கொடுக்ககில்லாக்குழகன்னமருந்திருக்கோட்டாற்று
ளிடுக்கணின்றித்தொழுவாரமராக்கிறையாவரே. (௧௦)

கொடியுடைமால்விடையூர்தியினான்றிருக்கோட்டாற்று
ளடிகழலார்க்கநின்றாடவல்லவருளாளனைக்
கடிகமழும்பொழிற்காழியுண்ஞானசம்பந்தன்சொற்
படியிவைபாடிநின்றாடவல்லார்க்கில்லைபாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

கோட்டாற்றுத் திருப்பதிகம் - உ.

சுவாமிதிருநாமம் - ஐராவதநாதர்
தேவிதிருநாமம் - வண்டமர்பூங்குழலி

ஆ திருப்பதிகம் - ௪௨௧

# ௫௪. திருவம்பர்ப்பெருந்திருக்கோயில்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

எரிதரவனலங்கையிலேந்தியெல்லியி
னரிதிரிகானிடைநட்டமாடுவ
ரரிசிலம்பொருபுனலம்பர்மாநகர்க்
குரிசில்செங்கண்ணவன்கோயில்சேர்வரே. (௧)

மையகண்மலைமகள்பாகமாயிருள்
கையதோர்கனலெரிகனலவாடுவ
ரையநன்பொருபுனலம்பர்ச்செம்பியர்
செய்யகணிறைசெய்தகோயில்சேர்வரே. (௨)

மறைபுனைபாடலர்சுடர்கைமல்கவோர்
பிறைபுனைசடைமுடிபெயரவாடுவ
ரறைபுனனிறைவயலம்பர்மாநக
ரிறைபுனையெழில்வளரிடமதென்பரே.

இரவுமல்கிளமதிசூடியீடியார்
பரவமல்கருமறைபாடியாடுவ
ரரவமோடியார்செம்மரும்பார்க்கொம்பலா
மரவமலெழினகர்மருவிவாழ்வரே. (௩)

சஙகணிகுழையினரசாமம்பாடுவர
வெஙகனல்கனறரவீசியாடுவ
ரஙகணிவிழவமரம்பரமாநகரச
செஙகணவிறைசெயதகோயிலசேரவரே. (௫)

சழலவளரகாலினரசுடரகைமல்கவோர
சுழலவளரகுளிரபுனல்சூடியாடுவ
ரழலவளரமறையவரம்பரப்பைமபொழி
னிழலவளரநெடுநகரிடமதென்பரே. (௬)

இகலுறுசுடரொரியிலஙகவீசியே
பகலிடம்பலிகொளப்பாடியாடுவ
ரகலிடமலிபுகழம்பரவமபவிழ்
புகலிடநெடுநகரபுகுவரபோலுமே. (௭)

எரியனமணிமுடியிலங்கைக்கோன்றனை
னரியனதடககைகளடரததகாலின
ரரியவரவளநகரம்பரினபொடு
புரியவரபிரிவிலாப்பூதஞசூழவே. (௮)

வெறிகிளரமலர்மிசையவனும்வெநதொழிற
பொறிகிளரரவணைப்புலககுசெலவனு
மறிகிலவரியவரம்பரசெமபியர
செறிகழலிறைசெயதகோயிலசேரவரே. (௯)

வழிதலைபறிதலையவரகளகடடிய
மொழிதலைபயனெனமொழியல்வமமினோ
வழிதலைபொருபுனலம்பரமாநக
ருழிதலையொழிநதுளருமையுநதாமுமே. (௧0)

அழகரையடிகளையம்பரமேவிய
நிழறிகழ்சடைமுடிநீலகணடனை
யுமிழ்திரையுலகினிலோதுவீரகொணமின்
றமிழகெழுவிரகினன்றமிழ்செயமாலையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருப்புகலூரை அகன்று, ஸ்ரீவாகீசமூர்த்தியை விட்டுப் பிரியாமல், முத்துச்சிவிகை பின் வர, வழிக்கொள்ளும்பொழுது, அப்பமூர்த்தி பிள்ளையாரை நோக்கி, "சிவபெருமான் தேவரீருக்கு அருளிச்செய்த இம் முத்துச்சிவிகையின்மேலே எழுந்தருளும்" என்று சொல்ல; பிள்ளையார் "நீர் அடியார்களோடும் எங்கே முன் போகுவீரோ அங்கே நான் பின் வருவேன்" என்றார் அப்பமூர்த்தி "தேவரீர் அருளிச்செய்தபடியே செய்வேன்" என்று சொல்லிக்கொண்டு, அன்றுமுதல் அவருடன் செல்லுநாளெல்லாம் அப்படியே செய்வாராகி, நடந்து முன்னே அடியாரோடும் திருவம்பருக்குச் சென்றார் பிள்ளையார் சிவபிரானுடைய திருவருள்வழியே நிற்பாராகி, முத்துச்சிவிகையில் ஏறித் திருப்புகலூரைக் கடந்து சென்று, "அப்பமூர்த்தி எங்கே சென்றார்" என்றுவினவிப் போய், திருவம்பரை அடைந்து, மாகாளத்தில் இருக்கின்ற சுவாமியை வணங்கித் திருப்பதிகம்பாடி, அப்பமூர்த்தியோடும் அந்தத்

திருப்பதியில் எழுந்தருளியிருந்தார் அங்கே கோச்செங்கட் சோழநாயனார் செய்த பெருந்திருக்கோயிலை அடைந்து, சுவாமிதரிசனஞ்செய்து, அந்நாயனாரைச் சிறப்பித்து "எரிதரவனலேந்தி" என்னுந் திருப்பதிகம்பாடினார்

சுவாமிதிருநாமம - பிரமபுரிநாதா.
தேவிதிருநாமம - பூங்குழனயகி.

ஆ திருபபதிகம - ௧௩௦.

# ருரு. திருவம்பர்மாகாளம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனா.

பண - குறிஞசி.

திருச்சிற்றமபலம

அடையாாபுரமூனறுமனலாயவிழவெயது
மடையாாபுனலமபாமாகாளமமேய
விடையாாகொடியெநதைவெளளைப்பிறைசூடுஞ
சடையான்கழலேததசசாராவினைதானே. (௧)

தேனாமதமததநதிஙகள்புனலசூடி
வானாாபொழிலமபாமாகாளமமேய
ஆனாதலைதனனிறபலிகொணடுழல்வாழ்கை
யானான்கழலேததவலலலடையாவே. (௨)

திரையாாபுனலோடுசெலவமதிசூடி
விரையாாபொழிலமபாமாகாளமமேய
நரையாாவிடையூருநமபான்கழனனு
முரையாதவாகணமேலொழியாவூனமமே. (௩)

கொநதண்பொழிற்சோலைகோலவரிவண்டு
மநதமமலியமபாமாகாளம்மேய
கநதஙகமழ்கொன்றைகமழ்புன்சடைவைதத
வெநதைகழலேத்தவிடாவநதடையாவே. (௪)

அணியாாமலைமஙகையாகம்பாகமாய
மணியாாபுனலம்பாமாகாளமமேய
துணியாருடையினன்றுதைபொறகழனனும
பணியாதவாதம்மேற்பறையாபாவமமே. (ரு)

பணடாாழ்கடனஞசையுண்டுகளிமாந்தி
வண்டாாபொழிலம்பர்மாகாளமமேய
விணடாாபுரமவேவமேருசசிலையாகக
கொணடானகழலேத்தக்குறுகாகுற்றமே. (௬)

மிளிருமரவோடுவெள்ளைப்பிறைசூடி
வளரும்பொழிலம்பர்மாகாளமமேய
இளருஞ்சடையண்ணல்சேவடிகழலேத்தத்
தளரும்முறுநோய்கள்சாருந்தவந்தானே. (எ)

கொலையாமழுவோடுகோலச்சிலையேந்தி
மலையார்புனலம்பர்மாகாளமமேய
விலையாத்திரிசூலப்படையான்கழனாளு
நிலையாநினைவார்மேனில்லாவினைதானே. (அ)

சிறையார்வரிவண்டுதேனுண்டிசைபாட
மறையார்நிறையம்பர்மாகாளமமேய
நறையாமலரானுமாலுங்காண்பொண்ணா
விறையானகழலேத்தவெய்துமின்பமே (கூ)

மாசூர்வடிவினார்மண்டையுணல்கொள்வார்
கூசாதுரைகருஞ்சொற்கொள்கைகுணமல்ல
வாசாரப்பொழிலம்பர்மாகாளமமேய
வீசாவென்பார்கட்கில்லையிடர்தானே. (கO)

வெருநீர்கொள்வோங்குவேணுபுரந்தன்னுட
டிருமாமறைஞானசம்பந்தன்சேணார
பெருமானமலியம்பர்மாகாளமபேணி
யுருகாவுரைசெய்வாருயர்வானடைவாரே (கக)

திருச்சிற்றம்பலம்



பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

புலகுபொன்னிறம்புரிசடைநெடுமுடிப்போழிளமதிசூடிப்
பிலகுதேனுடைநறுமலர்கொன்றையும்பிணையல்செய்தவர்மேய
மலகுதண்டுறையரிசிலின்வடகரைவருபுனன்மாகாள
மலனுநண்பசலுந்தொழுமடியவர்க்கருவினையடையாவே. (க)

அரவமாட்டுவர்ந்துகில்புலியதள்ங்கையிலனலேந்தி
யிரவுமாடுவரிவையிவர்சரிதைகளிசைவனபலபூத
மரவந்தோய்பொழிலரிசிலின்வடகரைவருபுனன்மாகாளம
பரவியும்பணிந்தேத்தவல்லாரவர்பயனறிபடுவாரே. (உ)

குணங்கள்கூறியுங்குற்றங்கள்பரவியுங்குரைகழலடிசேரக்
கணங்கள்பாடவுங்கண்டவர்பரவவுங்கருத்தறிந்தவர்மேய
மணங்கொள்பூம்பொழிலரிசிலின்வடகரைவருபுனன்மாகாளம
வணங்குமுள்ளமோடணையவல்லார்களைவல்வினையடையாவே. (ங)

எங்குமேதுமோர்பிணியிலர்கேடிலரிழைவளர்நறுங்கொன்றை
தங்குதோள்களுந்தாமமுங்கண்ணியுந்தாமகிழ்ந்தவர்மேய
மங்குறோய்பொழிலரிசிலின்வடகரைவருபுனன்மாகாளங
கங்குலும்பகலுந்தொழுமடியவர்காதன்மையுடையாரே. (ச)

பரவினவடியவாபடுதுயாகெடுப்பவர்பரிவிலார்பாற்
கரவினாகனலனவுருவினாபடுதலைப்பலிகொடேகு
மிரவினர்பகலெரிகானிடையாடியவேடர்பூணு
மரவினரரிவையோடிருப்பிடமமயாமாகாளநதானே. (௩)

நீறறினாநீண்டவாாசடையினாபடையினாமிமலாவெள்ளை
யேறறினரொரிபுரிகரத்தினர்புரததுளாருயிாவவவுங
கூறறினாகொடியிடைமுனிவுறநனிவருகுலவுகஙகை
யாற்றினரரிவையோடிருப்பிடமம்பாமாகாளநதானே. (௪)

புறததினரகத்துளாாபோற்றிநின்றழுதெழுமன்பாசிநதைத்
திறததினரறிவிலாசசெதுமதிததக்கன்றன்வேள்விசெறற
மறத்தினர்மாதவாநாலவருககாலின்கீழருள்புரிநத
வறததினரரிவையோடிருப்பிடமம்பாமாகாளநதானே. (௫)

பழகமாமலாபறிததிணடைகொணடிறைஞசுவாாபாறசெறிநத
குழகனூர்குணமபுகழநதேததுவாரவாபலாகூடநின்ற
கழகனாகரியுரிததாடுகஙகாளாநஙகாளியேதது
மழகனாரரிவையோடிருபபிடமமபாமாகாளநதானே. (௬)

சஙகவாாகுழையினர்தழலனவுருவினாதமதருளே
யெஙகுமாயிருநதவர்ருநதவமுனிவருக்களிததுகநதாா
பொங்குமாபுனலபரநதரிசிலினவடகரைதிருததமபேணி
யஙகமாறோதுவாரிருப்பிடமம்பாமாகாளநதானே. (௭)

பொருசிலைமதனனணடபொடிபடவிழித்தவாபொழிலிலஙகைக்
குரிசிலைக்குலவரைககீழுறவடாததவாகோயிலகூறிற்
பெருசிலைநலமணிபீலியொடேலமுமபெருகநுந்து
மரிசிலினவடகரையழகமரம்பாமாகாளநதானே. (௮)

வரியராவதனமிசைததுயின்றவனுறனுமாமலருளானு
மெரியராவணிகழலேததவொணணுவகையுயாநதுபின்னும
பிரியராமடியவாககணியராயப்பணிவிலாதவருக்கெனறு
மரியராயரிவையோடிருப்பிடமமபாமாகாளநதானே. (௯)

சாககியக்கயவாவன்றலைபறிககையருமபொயயினுரை
லாககியமொழியவைபிழையவையாதவிலவழிபடுவீர்
வீக்கியவரவுடைககசசையானிசசையாளவாகடகெலலா
மாககியவரனுறையமபாமாகாளமேயடைமினீரோ. (௧௦)

செம்பொனமாமணிகொழித்தெழுதிரைவருபுனலரிசிலசூழநத
வம்பாமாகாளமேகோயிலாவணங்கினேடிருநதகோனைக
கம்பினாநெடுமதிறகாழியுணஞானசமபந்தன்சொனன
நம்பிநாண்மொழிபவாககில்லையாம்வினைநலமபெறுவாதாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருவம்பாமாகாளததிருப்பதிகம் - ௩.

---

சுவாமிதிருநாமம - காளகணடேசர்.
தேவிதிருநாமம - பக்ஷநாயகி.
ஆ திருபபதிகம் - ௧௩௩.

ஏற்றானையேழுலகுமானான்றன்னை
யேழ்கடலுமேழ்மலையுமானான்றன்னைக்
கூற்றானைக்கூற்றமுதைத்தான்றன்னைக்
கொடுமழுவாள்கொண்டதோர்கையான்றன்னைக்
காற்றானைத்தீயானைநீருமாகிக்
கடிகமழும்புன்சடைமேற்கங்கைவெள்ள
மாற்றானையாரூரிலம்மான்றன்னை
யறியாதடிநாயேனயர்த்தவாறே. (௩)

முந்தியவல்வினைகடீர்ப்பான்றன்னை
மூவாதமேனிமுக்கண்ணினானைச்
சந்திரனும்வெங்கதிருமாயினானைச்
சங்கரனைச்சங்கக்குழையான்றன்னை
மந்திரமுமறைப்பொருளுமானான்றன்னை
மறுமையுமிம்மையுமானான்றன்னை
யந்திரனையாரூரிலம்மான்றன்னை
யறியாதடிநாயேனயர்த்தவாறே. (௪)

பிறநெறியாய்ப்பீடாகிப்பிஞ்ஞகனுமாய்ப்
பித்தனுமாய்ப்பத்தர்மனத்தினுள்ளே
யுறநெறியாயோமமாயீமக்காட்டி
லோரிபலவிடநட்டமாடினானைத்
துறநெறியாய்த்தூபமாய்த்தோற்றமாகி
நாற்றமாய்நன்மலர்மேலுறையாநின்ற
வறநெறியையாரூரிலம்மான்றன்னை
யறியாதடிநாயேனயர்த்தவாறே. (௫)

பழகியவல்வினைகள்பாற்றுவானைப்
பசுபதியைப்பாவகனைப்பாவந்தீர்க்குங்
குழகனைக்கோளரவொன்றாட்டுவானைக்
கொடுகொட்டிகொண்டதோர்கையான்றன்னை
விழவனைவீரட்டமேவினானை
விண்ணவர்களேத்திவிரும்புவானை
யழகனையாரூரிலம்மான்றன்னை
யறியாதடிநாயேனயர்த்தவாறே. (௬)

சூளாமணிசேர்முடியான்றன்னைச்
சுண்ணவெண்ணீறணிந்தசோதியானைக்
கோளாயரவமசைத்தான்றன்னைக்
கொல்புலித்தோலாடைக்குழகன்றன்னை
நாளாயுமபத்தர்மனத்துளானை
நம்பனைநக்கனைமுக்கண்ணானை
யாளானையாரூரிலம்மான்றன்னை
யறியாதடிநாயேனயர்த்தவாறே (௭)

முத்தினைமணிதன்னைமாணிக்கத்தை
மூவாதகற்பகத்தின்கொழுந்துதன்னைக்

கொத்தினைவயிரத்தைக்கொல்லேறூர்ந்து
கோளரவொன்றாட்டுங்குழகன்றன்னைப்
பத்தனைப்பத்தர்மனத்துளானைப்
பரிதிபோற்றிருமேனியுடையான்றன்னை
யத்தனையாரூரிலம்மான்றன்னை
யறியாதடிநாயேனயர்த்தவாறே (அ)

பையாடரவங்கையேந்தினானைப்
பரிதிபோற்றிருமேனிப்பானீற்றானை
நெய்யாடுதிருமேனிநிமலன்றன்னை
நெற்றிமேன்மற்றொருகண்ணிறைவித்தானைச்
செய்யானைச்செழும்பவளத்திரள்போல்வானைச்
செஞ்சடைமேல்வெண்டிங்கள்சேர்த்தினானை
யையாறுமேயானையாரூரானை
யறியாதடிநாயேனயர்த்தவாறே (௯)

சீரார்முடிபத்துடையான்றன்னைத்
தேசழியத்திருவிரலாற்சிதையநூக்கிப்
பேரார்பெருமைகொடுத்தான்றன்னைப்
பெண்ணிரண்டுமாணுமாய்நின்றான்றன்னைப்
போரார்புரங்கள்புரளநூறும்
புண்ணியனைவெண்ணீறணிந்தான்றன்னை
யாரானையாரூரிலம்மான்றன்னை
யறியாதடிநாயேனயர்த்தவாறே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

எம்பந்தவல்வினைநோய்தீர்த்திட்டான்காண்
ணேழுகடலுமேழுலகுமாயினான்காண்
வம்புந்துகொன்றையந்தார்மாலையான்காண்
வளர்மதிசேர்கண்ணியன்காண்வானோர்வேண்ட
வம்பொன்றான்மூவெயிலுமெரிசெய்தான்கா
ணனலாடியானஞ்சுமாடினான்காண்
செம்பொன்செய்மணிமாடத்திருவாரூரிற்
றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே.

அக்குலாமரையினன்காணடியார்க்கென்று
மாரமுதாயண்ணிக்குமையாற்றன்காண்
கொக்குலாம்பீலியொடுகொன்றைமாலை
குளிர்மதியுங்கூரரவுநீருஞ்சென்னி
நாகுலாஞ்சடையினன்காண்டொண்டர்செல்லுந்
தூநெறிகாண்வானவர்கடுதிசெய்தேத்துந்
திக்கெலாநிறைந்தபுகழ்த்திருவாரூரிற்
றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே. (௨)

நீரேறுசடைமுடியெந்நிமலன்றான்கா
ணெற்றிமேலொற்றைக்கண்ணிறைவித்தான்காண்
வாரேறுவனமுலையாள்பாகத்தான்காண்
வளர்மதிசேர்சடையான்காண்மாதேவன்காண்
காரேறுமுகிலனையகண்டத்தான்காண்
கல்லாலின்கீழறங்கள்சொல்லினான்காண்
சீரேறுமணிமாடத்திருவாரூரிற்
றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே. (௩)

கானேறுகளிற்றுரிவைப்போர்வையான்காண்
கற்பகங்காண்காலனையன்றுதைசெய்தான்கா
ணூனேறுமுடைதலையிற்பலிகொள்வான்கா
ணுத்தமன்காணொற்றியூர்மேவினான்கா
ணானேறொன்றதுவேறுமண்ணறான்கா
ணாதித்தன்பல்லிறுத்தவாதிதான்காண்
றேனேறுமலர்ச்சோலைத்திருவாரூரிற்
றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே. (௪)

பிறப்போடிறப்பென்றுமில்லாதான்காண்
பெண்ணுருவோடாணுருவமாயினான்காண்
மறப்படுமென்சிந்தைமருணீக்கினான்காண்
வானவருமறியாதநெறிநின்றான்கா
ணறப்படுபூமலர்தூய்நீப்பகல்ல
நறுஞ்சாந்தங்கொண்டேத்திநாளுமவாளா
சிறப்போடுபூசிக்குந்திருவாரூரிற்
றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே (௫)

சங்கரன்காண்சக்கரமாற்கருள்செய்தான்காண்
றருணேந்துசேகரன்காண்டலைவன்றான்கா
ணங்கமலத்தயன்சிரங்களைந்திலொன்றை
யறுத்தவன்காணணிபொழில்சூழையாற்றான்கா
ணெங்கள்பெருமான்காணென்னிடர்கள்போக
வருள்செய்யுமிறைவன்காணிமையோரேத்துஞ்
செங்கமலவயல்புடைசூழ்திருவாரூரிற்
றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே (௬)

நன்றருளித்தீதகற்றுநம்பிரான்கா
ணான்மறையோடாறங்கமாயினான்காண்
மின்றிகழுஞ்சோதியன்காணாதிதான்காண்
வெள்ளேறுநின்றுலவுகொடியினான்கா
டென்றுபொழிற்கச்சியேகம்பன்றான்காண்
சோற்றுத்துறையான்காண்சோலைசூழ்ந்த
தென்றலார்மணங்கமழுந்திருவாரூரிற்
றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே. (௭)

பொன்னலத்தநறுங்கொன்றைச்சடையினான்காண்
புகலூரும்பூவணமும்பொருந்தினான்காண்

மின்னலத்தநுண்ணிடையாள்பாகத்தான்காண்
வேதியன்காண்வெண்புரிநூன்மார்பினான்காண்
கொன்னலத்தமூவிலைவேலேந்தினான்காண்
கோலமாநீறணிந்தமேனியான்காண்
செந்நலத்தவயல்புடைசூழ்திருவாரூரிற்
றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே. (அ)

விண்டவர்தம்புரமூன்றுமெரிசெய்தான்காண்
வேலைவிடமுண்டிருண்டகண்டத்தான்காண்
மண்டலத்திலொளிவளரவிளங்கினான்காண்
வாய்மூருமறைக்காடுமருவினான்காண்
புண்டரிகக்கண்ணானும்பூவின்மேலைப்
புத்தேளுங்காணாப்பரியபுராணன்றான்காண்
றெண்டிரைநீர்வயல்புடைசூழ்திருவாரூரிற்
றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே. (௯)

செருவளருஞ்செங்கண்மாலேற்றினான்காண்
றென்னானைக்காவான்காண்டயில்வீழ
மருவலார்தம்புரமூன்றுமெரிசெய்தான்காண்
வஞ்சகர்பாலணுகாதமைந்தன்றான்கா
ணருவரையையெடுத்தவன்றன்சிரங்கள்பத்து
மைந்நான்குதோளுநெரிந்தலறவன்று
திருவிரலாலடர்த்தவன்காண்டிருவாரூரிற்
றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே. (௧0)

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

இடர்கெடுமாறெண்ணுதியேனெஞ்சேநீவா
யீண்டொளிசேர்கங்கைச்சடையாயென்றுஞ்
சுடரொளியாயுள்விளங்குசோதீயென்றுந்
தூநீறுசேர்ந்திலங்குதோளாவென்றுங்
கடல்விடமதுண்டிருண்டகண்டாவென்றுங்
கலைமான்மறியேந்துகையாவென்று
மடல்விடையாயாரமுதேயாதீயென்று
மாரூராவென்றென்றேயலறாநில்லே (௧)

செடியேறுதீவினைகடீருமண்ணாஞ்
சிந்தித்தேநெஞ்சமேதிண்ணமாகப்
பொடியேறுதிருமேனியுடையாயென்றும்
புரந்தரன்றன்றோடுணித்தபுனிதாவென்று
மடியேனையாளாகக்கொண்டாயென்று
மம்மானேயாரூரெம்மரசேயென்றுங்
கடிநாறுபொழிற்கச்சிக்கம்பாவென்றுங்
கற்பகமேயென்றென்றேகதறாநில்லே. (௨)

4958. நிலைபெறுமாறெண்ணுதியேனெஞ்சேநீவா
நித்தலுமெம்பிரானுடையகோயில்புக்குப்
புலர்வதன்முன்னலகிட்டுமெழுக்குமிட்டுப்
பூமாலைபுனைந்தேத்திப்புகழ்ந்துபாடித்
தலையாரக்கும்பிட்டுக்கூத்துமாடிச
சங்கராசயபோற்றிபோற்றியென்று
மலைபுனல்சோர்செஞ்சடையெம்மாதியென்று
மாரூராவென்றெனறேயலறுநிலலே. (க)

புண்ணியமுநன்னெறியுமாவதெல்லா
நெஞ்சமேயிதுகண்டாய்பொருந்தக்கேணீ
நுண்ணியவெண்ணூலகிடந்தமாா்பாவென்று
நுந்தாதவொண்சுடரேயென்றுநாளும
விண்ணியங்குதேவாகளுமவேதநானகும
விரைமலர்மேனான்முகனுமாலுங்கூடி
யெண்ணரியதிருநாமமுடையாயென்று
மெழிலாரூராவென்றேயேத்தாநிலலே. (ச)

இழைத்தநாளெல்லைகடப்பதன்று
மிரவினொடுநண்பகலுமேத்திவாழ்த்திப்
பிழைத்ததெலாம்பொறுத்தருள்செயபெரியோயென்றும்
பிஞ்ஞகனேமைஞ்ஞவிலுங்கண்டாவென்று
மழைத்தலறியடியேனுன்னரணங்கண்டா
யணியாரூரிடங்கொண்டவழகாவென்றுங
குழற்சடையெங்கோனென்றுங்கூறுநெஞ்சே
குற்றமிலையெனமேனான்கூறினேனே. (ரு)

நீப்பரியபல்பிறவிநீக்கும்வண்ண
நினைந்திருந்தேன்காணெஞ்சேநித்தமாகச
சேட்பிரியாவெலகொடியினனேயென்றுஞ
சிவலோகநெறிதந்தசிவனேயென்றும
பூப்பிரியாநான்முகனும்புள்ளினமேலைப
புண்டரிகக்கண்ணனுமபோற்றியென்னத
தீப்பிழம்பாய்நின்றவனேசெல்வமல்கு
திருவாரூராவென்றேசிந்திநெஞ்சே. (சு)

பற்றிநின்றபாவங்களபாற்றவேண்டிற
பரகதிக்குச்செலவதொருபரிசுவேண்டிற
சுற்றிநின்றசூழ்வினைகளவீழ்க்கவேண்டிற
சொல்லுகேன்கேணெஞ்சேதுஞ்சாவண்ண
முற்றவருமுறுதுணையுநீயேயென்று
முனையலாலொருதெய்வமுளகேனென்றும்
புற்றரவக்கச்சார்த்தபுனிதாவென்றும்
பொழிலாரூராவென்றேபோற்றுநிலலே. (எ)

4963 மதிதருவனெஞ்சமேயுஞ்சுபோக
வழியாவதிதுகண்டாய்வானோர்க்கெல்லா

மதிபதியேயாரமுதேயாதீயென்று
மம்மானேயாரூரெம்மையாவென்றுந
துதிசெய்துதுனறுமலாகொணடுதூவிச
சூழுமவலஞ்செயதுதொண்டுபோடிக
கதிாமதிசோசென்னியனேகாலசாலா
கற்பகமேயென்றென்றேசுதரூகிலலே (அ)

பாசததைப்பற்றறுக்கலாகுநெஞ்சே
பரஞ்சோதீபணடரஙகாபாவநாசா
தேசததொளிவிளக்கேதேவதேவே
திருவாரூாததிருமூலடடாஞுவெனறு
நேசததைநீபெருக்கிநோநின்றுளகி
நிததலுஞசெனறடிமேலவீழநதுநினறு
வேசறறுநினறிமையோரேறேயென்று
மெமபெருமானெனறென்றேயேதாநில்லே (க)

புலனகளைநதாலாடடுணடுபோதுபோகி
புறமபுறமேதிரியாதேபோதுநெஞ்சே
சலஙகொளசடைமுடியுடையதலைவாவென்று
தக்கனசெயபெருவேளவிதகாததாயெனறு
மிலங்கையாகோனசிரநெரிததவிறைவாவென்று
மெழிலாரூரிடஙகொணடவெநதாயெனறு
நலஙகொளடியெனறலைமேல்வைததாயென்று
நாடோறுநவினறேததாயநனமையாமே. (க0)

திருசசிற்றமபலம்

## போறறிததிருததாணடகம.

திருசசிறறமபலம

கற்றவாகளுணணுஙகனியேபோறறி
கழலடைநதாாசெலலுஙகதியேபோறறி
யறறவாகடகாரமுதமானாயபோறறி
யலலலறுத்தடியேனையாணடாய்போறறி
மற்றொருவரொப்பிலலாமைநதாபோறறி
வானவாகளபோறறுமருநதேபோறறி
செற்றவாதமபுரமெரிததசிவனேபோறறி
திருமூலட்டானனேபோறறிபோறறி (க)

வஙகமலிகடனஞசமுணடாயபோறறி
மதயானையீருரிவைபோாததாயபோறறி
கொங்கலருநறுஙகொனறைததாராய்போறறி
கொல்புலித்தோலாடைக்குழகாபோறறி
யஙகணனேயமராகடமமிறைவாபோறறி
யாலமரநீழலறஞசொன்னாயபோறறி
செஙகனகத்தனிககுனறேசிவனேபோறறி
திருமூலடடானனேபோறறிபோற்றி. (உ)

மலையான்மடந்தைமணாளாபோற்றி
மழவிடையாய்நின்பாதம்போற்றிபோற்றி
நிலையாகவென்னெஞ்சினின்றாய்போற்றி
நெற்றிமேலொற்றைக்கண்ணுடையாய்போற்றி
யிலையார்ந்தமூவிலைவேலேந்திபோற்றி
யேழ்கடலுமேழ்பொழிலுமானாய்போற்றி
சிலையாலன்றெயிலெரித்தசிவனேபோற்றி
திருமூலட்டானனேபோற்றிபோற்றி (௩)

பொன்னியலுமேனியனேபோற்றிபோற்றி
பூதப்படையுடையாய்போற்றிபோற்றி
மன்னியசீர்மறைநான்குமானாய்போற்றி
மறியேந்துகையானேபோற்றிபோற்றி
யுன்னுமவர்க்குண்மையனேபோற்றிபோற்றி
யுலகுக்கொருவனேபோற்றிபோற்றி
சென்னிமிசைவெண்பிறையாய்போற்றிபோற்றி
திருமூலட்டானனேபோற்றிபோற்றி (௪)

நஞ்சுடையகண்டனேபோற்றிபோற்றி
நற்றவனேநின்பாதம்போற்றிபோற்றி
வெஞ்சுடரோன்பல்லிறுத்தவேந்தேபோற்றி
வெண்மதியங்கண்ணிவிகிர்தாபோற்றி
துஞ்சிருளிலாடலுகந்தாய்போற்றி
தூநீறுமெய்க்கணிந்தசோதீபோற்றி
செஞ்சடையாய்நின்பாதம்போற்றிபோற்றி
திருமூலட்டானனேபோற்றிபோற்றி. (௫)

சங்கரனேநின்பாதம்போற்றிபோற்றி
சதாசிவனேநின்பாதம்போற்றிபோற்றி
பொங்கரவாநின்பாதம்போற்றிபோற்றி
புண்ணியனேநின்பாதம்போற்றிபோற்றி
யங்கமலத்தயனோடுமாலுங்காணா
வனலுருவாநின்பாதம்போற்றிபோற்றி
செங்கமலத்திருப்பாதம்போற்றிபோற்றி
திருமூலட்டானனேபோற்றிபோற்றி (௬)

வம்புலவுகொன்றைச்சடையாய்போற்றி
வான்பிறையும்வாளரவும்வைத்தாய்போற்றி
கொம்பனையநுண்ணிடையாள்கூறாபோற்றி
குரைகழலாற்கூற்றுதைத்தகோவேபோற்றி
நம்புமவர்க்கரும்பொருளேபோற்றிபோற்றி
நால்வேதமாறங்கமானாய்போற்றி
செம்பொனேமரகதமேமணியேபோற்றி
திருமூலட்டானனேபோற்றிபோற்றி. (௭)

உள்ளமாயுள்ளத்தேநின்றாய்போற்றி
யுகப்பார்மனத்தென்றுநீங்காய்போற்றி

வளளலேபோற்றிமணாளாபோற்றி
வானவர்கோனறேடுணித்தமைநதாபோற்றி
வெள்ளையேறேறும்விகிர்தாபோற்றி
மேலோர்க்குமேலோர்க்குமேலாய்போற்றி
தெளளுநீர்க்கஙகைச்சடையாயபோற்றி
திருமூலட்டானனேபோற்றிபோற்றி (௮)

பூவாரநதசெனனிப்புனிதாபோற்றி
புத்தேளிர்போற்றுமபொருளேபோற்றி
தேவாதிதேவாக்குநதேவேபோற்றி
திருமாலுக்காழியளித்தாய்போற்றி
சாவாமேகாத்தெனனையாணடாயபோற்றி
சங்கொத்தநீற்றெஞசதுராபோற்றி
சேவாாநதவெல்கொடியாயபோற்றிபோற்றி
திருமூலட்டானனேபோற்றிபோற்றி (௯)

பிரமனறனசிரமரிநதபெரியோயபோற்றி
பெணணுருவோடாணுருவாயநினறாயபோற்றி
கரநாலுமுககணணுமுடையாயபோற்றி
காதலிப்பார்க்காற்றவெளியாயபோற்றி
அருமநதுதேவாககரசேபோற்றி
அனறரக்கனைஞ்ஞானறுதோளுநதாளுஞ
சிரநெரித்தசேவடியாயபோற்றிபோற்றி
திருமூலட்டானனேபோற்றிபோற்றி. (௰)

திருச்சிற்றமபலம

---

## திருததாணடகம

திருச்சிற்றமபலம

ஒருவனுயுலகேத்தநினறநாளோ
வோருருவேமூவுருவமானநாளோ
கருவனுயககாலனைமுனகாயநதநாளோ
காமனையுஙகணணழலாலவிழித்தநாளோ
மருவனுயமணணுமவிணணுநதெரித்தநாளோ
மானமறிகைககேநதியோர்மாதோர்பாகந
திருவினுள்சோவதறகுமுனனோபினனோ
திருவாரூர்கோயிலாக்கொணடநாளே (௧)

மலையாரபொற்பாவையொடுமகிழநதநாளோ
வானவரவலியமுதமூட்டியநா
ணிலைபேறுபெறுவித்துநின்றநாளோ
நினைப்பரியதழற்பிழம்பாயநிமிர்நதநாளோ
வஞ்சாமேயலைகடனஞசுணடநாளோ
வமரர்கணமபுடைசூழவிருநதநாளோ
சிலையானமுப்புரமெரித்தமுனனோபினனோ
திருவாரூர்கோயிலாக்கொணடநாளே. (௨)

பாடகஞ்சேர்மெல்லடிநற்பாவையாளு
நீயும்போய்ப்பார்த்தனதுபலத்தைக்காண்பான்
வேடனாய்வில்வாங்கியெய்தநாளோ
விண்ணவர்க்குங்கண்ணவனாய்நின்றநாளோ
மாடமொடுமாளிகைகண்மல்குதில்லை
மணிதிகழுமம்பலத்தேமன்னிக்கூத்தை
யாடுவான்புகுவதற்குமுன்னோபின்னோ
வணியாரூர்கோயிலாக்கொண்டநாளே. (௩)

ஓங்கியுயர்ந்தெழுந்துநின்றநாளோ
வோருகம்போலேழுகமாய்நின்றநாளோ
தாங்கியசீர்த்தலையானவானோர்செய்த
தக்கன்றன்பெருவேள்விதகர்த்தநாளோ
நீங்கியநீர்த்தாமரையானெடுமாலோடு
நில்லாயெம்பெருமானேயென்றங்கேத்தி
வாங்கிமதிவைப்பதற்குமுன்னோபின்னோ
வளராரூர்கோயிலாக்கொண்டநாளே. (௪)

பாலனாய்வளர்ந்திலாப்பான்மையானே
பணிவார்கட்கங்கங்கேபற்றானானே
நீலமாமணிகண்டத்தெண்டோளானே
நெருநலையாயின்றாகிநாளையாகுஞ்
சீலமேசிவலோகநெறியேயாகுஞ்
சீர்மையேகூர்மையேகுணமேநல்ல
கோலநீகொள்வதற்குமுன்னோபின்னோ
குளிராரூர்கோயிலாக்கொண்டநாளே. (௫)

திறம்பலவும்வழிகாட்டிச்செய்கைகாட்டிச்
சிறியையாய்ப்பெரியையாய்நின்றநாளோ
மறம்பலவுமுடையாரைமயக்கந்தீர்த்து
மாமுனிவர்க்கருள்செய்தங்கிருந்தநாளோ
பிறங்கியசீர்ப்பிரமன்றன்றலைகையேந்திப்
பிச்சையேற்றுண்டுழன்றுநின்றநாளோ
வறம்பலவுமுரைப்பதற்குமுன்னோபின்னோ
வணியாரூர்கோயிலாக்கொண்டநாளே. (௬)

நிலந்தரத்துநீண்டுருவமானநாளோ
நிற்பனவுநடப்பனவுநீயேயாகிக்
கலந்துரைக்கக்கற்பகமாய்நின்றநாளோ
காரணத்தானாரணனைக்கற்பித்தன்று
வலஞ்சுருக்கிவல்லசுரர்மாண்டுவீழ
வாசுகியைவாய்மடுத்துவானோருய்யச்
சலந்தரனைக்கொல்வதற்குமுன்னோபின்னோ
தண்ணாரூர்கோயிலாக்கொண்டநாளே. (௭)

பாதத்தான்முயலகனைப்பாதுகாத்துப்
பாரகத்தேபரஞ்சுடராய்நின்றநாளோ

கீதத்தைமிகப்பாடுமடியார்க்கென்றுங்
கேடிலாவானுலகங்கொடுத்தநாளோ
பூதத்தானப்பொருள்விபுனிதனமேவிப்
பொய்யுரையாமறைநாலவாவிண்ணோர்க்கென்றும்
வேதத்தைவிரிப்பதற்குமுன்னோபின்னோ
விழவாரூர்கோயிலாகக்கொண்டநாளே. (௮)

புகையெட்டும்போக்கெட்டும்புலன்களெட்டும்
பூதலங்களவையெட்டும்பொழில்களெட்டுங்
கலையெட்டுங்காப்பெட்டுங்காட்சியெட்டுங்
கழற்சேவடியடைந்தார்களைகணெட்டு
நகையெட்டுநாளெட்டுநன்மையெட்டு
நலஞ்சிறந்தார்மனத்தகத்துமலர்களெட்டுந்
திசையெட்டுந்தெரிப்பதற்குமுன்னோபின்னோ
திருவாரூர்கோயிலாக்கொண்டநாளே. (௯)

ஈசனுலகேழுமலையுமாகி
யிராவணனையீடழித்திட்டிருந்தநாளோ
வாசமலர்மகிழ்தென்றலானநாளோ
மதயானையுரிபோர்த்துமகிழ்ந்தநாளோ
தாதுமலர்சண்டிக்குக்கொடுத்தநாளோ
சக்கரங்களைமறித்திட்டாட்கொண்டநாளோ
தேசமுமையறிவதற்குமுன்னோபின்னோ
திருவாரூர்கோயிலாக்கொண்டநாளே (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

### பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

இறைகளோடிசைந்தவின்பமின்பத்தோடிசைந்தவாழ்வு
பறைகிழித்தனையபோர்வைபற்றியானோக்கினேற்குத்
திறைகொணர்ந்தீண்டிதேவர்செம்பொனுமணியுந்தூவி
யறைகழலிறைஞ்சுமாரூரப்பனேயஞ்சினேனே. (௧)

ஊன்மிசையுதிரக்குப்பையொருபொருளிலாதமாய
மானமறித்தனையநோக்கிமடந்தைமார்மதிக்குமிந்த
மானுடப்பிறவிவாழ்வுவாழ்வதோர்வாழ்வுவேண்டே
னனல்வெள்ளேற்றாரூரப்பனேயஞ்சினேனே. (௨)

அறுபதும்பத்துமெட்டுமாறினோடஞ்சுநான்குந்
துறுபறித்தனையநோக்கிச்சொலவித்தென்றுகச்சொல்லா
நறுமலர்ப்பூவுநீருநாடொறும்வணங்குவார்க்கு
வறிவினைக்கொடுக்குமாரூரப்பனேயஞ்சினேனே.

4989 சொல்லிடுமெல்லலலைமிலைலசசுவையிலாப்பேதைவாழ்வு
நலலதோராகூடைாபுககுநலமிகவறிநதேனல்லேன
மல்லிகைமாடநீடுமருஙகொடுநெருஙகியெஙகு
மல்லிவண்டியஙகுமாரூரபபனேயஞசினேனே. (ச)

4990 நரம்பினேடெலும்புகட்டிநசையினேடிசைவொனறிலலாக
குரம்பைவாயககுடியிருநதுகுலததிறைல்வாழமாட்டேன
விருமபியகமழுமபுனனைமாதவித்தொகுதியெனறு
மருமபுவாய்மலருமாரூரபபனேயஞசினேனே (ரு)

4991 மணமெனமகிழ்வர்முனனேமககடாய்தநதைசுறறம்
பிணமெனசசுடுவாபோதநதேபிறவியைவேணடேனயேன
பணையிடைசசோலைதோறுமபைமபொர்ழிலவிளாகததெஙக
ளணைவினைக்கொடுககுமாரூரபபனேயஞசினேனே. (சா)

4992 தாழ்வெனுந்தன்மைவிட்டுததனத்தையேமனததில்வைதது
வாழவதேகருதிததொணட்டாமறுமைககொனறீயகிலலா
ராழகுழிபபட்டபோதுவலககணிலொருவாககாவா
யாழமுயனறிருககுமாரூரபபனேயஞசினேனே. (எ)

4993 உதிரநீரிறைசசிக்குபபையெடுத்ததுமலககுகைமமேல்
வருவதோராமாயககூடைவாழவதோராவாழவுவேண்டேன
கரியமாலயனுநதேடிககழலடிகாணமாட்டா
வரியனயினறவாரூரபபனேயஞசினேனே. (அ)

4994 பொயததனமைததாயமாயப்போாவையைமெயயெனறெணணும
விததகததாயவாழவுவேண்டிநானவிருமபகிலலேன
முத்தினைததொழுதுநாளுமுடிகளாலவணஙகுவாரககு
வததன்மைத்தாகுமாரூரபபனேயஞசினேனே. (௯)

4995 தனுசொலாலூளபயக்குநதமியனேன்றடமுலைககு
ணஞசொலாாபயிலுமாரூரபபனேயூரனஞசிச
செஞசொலானயநதபாடல்சிநதியாவேததவலலார
நஞசுலாங்கண்டததெஙகணுததனைநணுகுவாரே. (க0)

திருசசிற்றம்பலம்

---

பண் - கொலலி.

---

திருசசிற்றம்பலம்

4996 குருகுபாயககொழுஙகருமபுகணெரிநதசா
றருகுபாயுமவயலநதணாரூரரைப
பருகுமாறும்பணிந்தேததுமாறுநினைந
துருகுமாறுமறிவையுணாததவலலீாகளே. (க)

4997 பறக்குமெஙகிள்ளைகாள்பாடுமெம்பூவைகா
ளறககவெனனத்தகுமடிகளாரூரரை
மறக்ககிலலாமையும்வளைகணில்லாமையு
முறக்கமிலலாமையுமுணாததவலலீாகளே. (உ)

சூழுமோடிச்சுழன்றுழலுமவெண்ணுரைகா
ளாளுமம்பொற்கழலடிகளாரூரற்கு
வாழுமாறும்வளைகழலுமாறுமமெனக்
கூழுமாறுமமிவையுணர்த்தவல்லீர்களே. (௩)

சக்ரவாளத்திளம்பேடைகாளசேவல்கா
ளக்ரமங்கள்செயுமடிகளாரூரற்கு
வக்ரமில்லாமையுமவளைகணில்லாமையு
முக்ரமில்லாமையுமுணர்த்தவல்லீர்களே. (௪)

இலைகொள்சோலைத்தலையிருக்குமவெண்ணுரைகா
ளலைகொள்சூலப்படையடிகளாரூரற்குக்
கலைகள்சோர்கின்றதுங்கனவளைகழன்றது
முலைகள்பீர்கொண்டதுமமொழியவல்லீர்களே (௫)

வண்டுகாளகொண்டல்காளவாரமணற்குருகுகா
ளண்டவாணர்தொழுமடிகளாரூரனைக்
கண்டவாறுங்காமத்தீக்கனன்றெரிந்துமெய்
யுண்டவாறுமமிவையுணர்த்தவல்லீர்களே. (௬)

தேனலங்கொண்டதேன்வண்டுகாளகொண்டல்கா
ளானலங்கொண்டவெமமடிகளாரூரற்குப்
பானலங்கொண்டவெமபணைமுலைபயந்துபொன்
னூனலங்கொண்டதுமமுணர்த்தவல்லீர்களே. (௭)

சுற்றுமுற்றுஞ்சுழன்றுழலுமவெண்ணுரைகா
ளற்றமுற்றப்பகர்ந்தடிகளாரூரற்குப்
பற்றுமற்றின்மையும்பாடுமற்றின்மையு
முற்றுமற்றின்மையு~~முணர்த்த~~வல்லீர்களே. (௮)

குரவநாறக்குயிலவண்டினமபாட நின்
றரவமாடும்பொழிலந்தணாரூரரைப்
பரவிநாடுமமதுமபாடிநாடுமமது
முருகிநாடுமமதும்முணர்த்தவல்லீர்களே (௯)

கூடுமன்னப்பெடைகாளகுயிலவண்டுகா
ளாடுமம்பொற்கழலடிகளாரூரரைப்
பாடுமாறுமபணிந்தேத்துமாறுங்கூடி
யூடுமாறுமமிவையுணர்த்தவல்லீர்களே. (௧௦)

நித்தமாகநினைந்துள்ளமேத்தித்தொழு
மத்தனம்பொற்கழலடிகளாரூரனைச்
சித்தம்வைத்தபுகழ்ச்சிங்கடியப்பனமெய்ப்
பத்தனூரனசொன்னபாடுமின்பத்தரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

சுந்தரமூர்த்திநாயனார் திருத்துருத்தி என்னுந் திருப்பதியை நீங்கி, திருவாரூரிற் சென்று, மாலைக்காலத்திலே முன்னே தூவாயனை வணங்கும்படி அடியார்களோடு பரவையுண் மண்டளி என்னுந் திருக்கோயிலிலே பிரவேசித்து வணங்கிக் கண் தந்தருளும்படி திருப்பதிகம்பாடி, வெளியே போய், ஓரிடத்தில் இருந்து, பின் அடியார்களோடு திருமூலட்டானத்திலே திருவர்த்தயாமக்

திலே சுவாமிதரிசனஞ் செய்வதற்கு எழுந்து வழிக்கொண்டு, வழியிலே அடியார்கள் தமக்கெதிரே வர அவர்கள் முகத்தைப் பார்த்து, கைக்கிளையினாலே "குருகுபாய" என்னுந் திருப்பதிகம் பாடிக் கொண்டு போனார்.

பண் - பழமபஞ்சுரம.

திருச்சிற்றம்பலம்

பத்திமையுமடிமையையுங்கைவிடுவான்பாவியேன்
பொத்தினநோயதுவிதனைப்பொருளறிந்தேன்போய்த்தொழுவேன்
முத்தினைமாமணிதன்னைவயிரத்தைமூர்க்கனே
னெத்தனைநாட்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே. (க)

ஐவணமாம்பகழியுடையடன்மதனன்பொடியாகச்
செவ்வணமாந்திருநயனம்விழிசெய்தசிவமூர்த்தி
மையணவுகண்டத்துவளர்சடையெம்மாரமுதை
யெவ்வணநான்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே. (உ)

சங்கலக்குந்தடங்கடல்வாய்விடஞ்சுடவந்தமரர்தொழ
வங்கலக்கண்டீர்த்துவிடமுண்டுகந்தவம்மானை
யிங்கலக்குமுடற்பிறந்தவறிவிலியேன்செறிவின்றி
யெங்குலக்கப்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே. (ங)

இங்ஙனம்வந்திடர்ப்பிறவிப்பிறந்தயர்வேனயர்யாமே
யங்ஙனம்வந்தெனையாண்டவருமருந்தென்னாரமுதை
வெங்ஙனமாமேனியனைமான்மருவுங்கையானை
யெங்ஙனநான்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே. (ச)

செப்பரியவயனொடுமால்சிந்தித்துந்தெரிவரிய
வப்பெரியதிருவினையேயறியாதேயருவினையே
னொப்பரியகுணத்தானையிணையிலியையணைவின்றி
யெப்பரிசுபிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே. (ரு)

வன்னாகநாண்வரைவிலங்கிகணையரிபகழி
தன்னாகமுறவாங்கிப்புரமெரித்ததன்மையனை
முன்னாகநினையாதமூர்க்கனேனாகைகசுமந
தென்னாகப்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே. (சு)

வன்சயமாயடியான்மேல்வருங்கூற்றினுரங்கிழிய
முன்சயமார்பாதத்தான்முனிந்துகந்தமூர்த்திதனை
மின்செயும்வார்சடையானைவிடையானையடைவின்றி
யென்செயநான்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே. (எ)

முன்னெறிவானவர்கூடித்தொழுதேத்துமுழுமுதலை
யந்நெறியையமரர்தொழுநாயகனையடியார்கள
செந்நெறியைத்தேவர்குலக்கொழுந்தைமறந்திங்ஙனநா
னென்னறிவான்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே. (அ)

கற்றுளவான்கனியாயகண்ணுதலைக்கருத்தார
வுற்றுளனாமொருவனைமுன்னிருவர்நினைந்தினிதேத்தப்
பெற்றுளனாம்பெருமையனைப்பெரிதடியேன்கையகன்றிட்
டெற்றுளனாய்ப்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே. (கூ)

ஏழிசையாயிசைப்பயனாயின்னமுதாயென்னுடைய
தோழனுமாயான்செய்யுந்துரிசுகளுக்குடனாகி
மாழையொண்கட்பரவையைத்தந்தாண்டானைமதியிலா
வேழையேன்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே. (௧0)

வங்கமலிகடனஞ்சைவானவர்கடாமுய்ய
நுங்கியமுதவர்க்கருளிநொய்யேனைப்பொருட்படுத்துச்
சங்கிலியோடெனைப்புணர்த்தத்தத்துவனைச்சழக்கனே
னெங்குலக்கப்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே. (௧௧)

பேரூருமதகரியினுரியானைப்பெரியவர்தஞ்
சீரூருந்திருவாரூர்ச்சிவனடியேதிறம்விரும்பி
யாரூரனடித்தொண்டனடியன்சொலகலிட்டுத்தி
ஆரூரனிவைவல்லாருலகவர்க்குமேலாரே. (௧௨)

திருச்சிற்றம்பலம்.

---

சுந்தரமூர்த்திநாயனார் திருவோணகாந்தன்றளியை அகன்று, அநேகதங்காவதம் முதலிய ஸ்தலங்களை வணங்கிக்கொண்டு, திருக்காளத்தி மலையை அடைந்து, வணங்கி மேலேறி, காளத்தியப்பர் சந்நிதானத்திற் சென்று, அவரை வணங்கி, அவருக்கு வலப்பக்கத்தில் நிற்கின்ற அன்பிலே தமக்கு வேறொப்பில்லாத கண்ணப்பநாயனாருடைய திருவடிகளை வணங்கி, கீழே இறங்கி, சிலநாள் இருந்து, அவ்விடத்தை விட்டு நீங்கி, திருவொற்றியூரிற்சென்று சுவாமி தரிசனஞ் செய்துகொண்டு அங்கே வசித்தருளினார்

இதற்குமுன், திருக்கைலாசமலையிலே சுந்தரமூர்த்திநாயனார் மேல் ஆசை வைத்த சேடியர்கள் இருவருள் அநிந்திதையார் என்பவர் ஞாயிறு என்னும் ஊரிலே இருக்கும் வேளாளரிற் சிறந்தோங்கிய ஞாயிறுகிழவர் என்பவருக்குப் புத்திரியாராய் அவதரித்து, சங்கிலியார் என்னும் பெயரைப் பெற்று, உமாதேவியாருடைய திருவடிகளிலே மிகுந்த பத்தியுடையவராய், இருந்தார். அவர் பெதும்பைப் பருவமடைந்ததைக் கண்டு, தந்தையாராகிய ஞாயிறுகிழவர் தம்முடைய மனைவியாரை நோக்கி, "நம்முடைய புத்திரி இப்பூவுலகத்துப் பெண்களெல்லாரினும் பார்க்க அதிக சௌந்தரியமும் நற்குணமும் உடையவளாய் இருக்கின்றாள் அவளுக்கு விவாகஞ்செய்து கொடுக்குங்காலமாயிற்று இதற்கு யாது செய்வோம்" என்று சொல்ல, மனைவியார் "அவளுடைய அழகுக்கும் குணத்துக்கும் இசைய ஒரு புருஷனைத் தெரிந்து விவாகஞ்செய்து கொடும்" என்றார் அதைக் கேட்டுக் கொண்டிருந்த சங்கிலியார் 'இவர்கள் பேசும் வார்த்தை எனக்குப் பொருந்தும் வார்த்தையன்று, நானோ நமது கடவுளாகிய சிவபிரானுடைய திருவருளைப்பெற்ற ஒருவருக்கு மனைவியாதற்கு உரியேன் இப்படியன்றி மற்றெப்படி விளையுமோ தெரியேன்" என்று நினைந்து, அச்சங்கொண்டு, அறிவு மயங்கி மிகச்சோகித்து, நிலத்திலே விழுந்தார் சமீபத்திலே நின்ற பிதா மாதா இருவரும் அதைக் கண்டு, பதைபதைத்து அவரை எடுத்து, ஏங்கிய மனத்தையுடையவர்களாகி, "இவளுக்கு நிகழ்ந்தது யாதோ" என்று பயந்து, தாங்கிப் பனிநீர் தெளித்துத் தடவி, அவருக்குச் சோகம் நீங்கியபின் அவரைப் பார்த்து, "மகளே! உனக்கு நிகழ்ந்தது யாது? சொல்" என்று கேட்க; சங்கிலியார் "இப்பொழுது என்னைக்குறித்து நீங்கள் பேசியது எனக்கு இசையாது நானோ சிவபிரானது திருவருளைப்பெற்ற ஒருவருக்கு மனைவியாதற்கு உரியேன் நான் இனிமேல் திருவொற்றியூரை அடைந்து திருவருளிற் செல்லுவேன்' என்றார். அதைக்கேட்ட தந்தை தாயார் இருவரும் சோகமும் அச்சமும் அதி

சயமும் உடையவர்களாகி, அந்தச் சங்கிலியார் சொல்லிய வார்த்தையை மறைத்து ஒழுகினார்கள். ஒழுகும் நாட்களில், அவர்களுடைய குலத்துக்குச் சமமாகிய குலத்தில் உள்ள ஒருவன், நிகழ்ந்த அந்தச் சங்கதியை அறியாதவனாகி, சங்கிலியார்மேல் விருப்பங்கொண்டு, அவருடைய தந்தையாரிடத்திலே கலியாணம் பேசும்பொருட்டுச் சிலரை அனுப்பினான். அனுப்பப்பட்ட அவர்கள் அந்தத் தந்தையாரிடத்திற் சென்று பேச, அது கேட்டுத் தந்தையார், நிகழ்ந்த சங்கதியைச் சொல்லுதல் தகுதியன்று என்று நினைந்து, வேறோர் உபாயத்தினாலே அனுப்பிவிட்டார். அவர்கள் திரும்பிப்போய்ச் சேர்ந்தவுடனே, அவர்களை அனுப்பினவன் அவர்களோடு இறந்துபோயினான். அதைச் சங்கிலியாருடைய தந்தை தாயார் கேள்விப்பட்டு, மனமயங்கி, உய்யவேண்டும் என்கின்ற நினைவுடையவர்கள் சங்கிலியார் பக்ஷத்திலே பேசத் தகாத வார்த்தையைப் பேசினார்கள் என்பதை உலகம் அறியும்படி செய்த திருவருளைக் கண்டு, அதனை யாவர்க்கும் உள்ளபடி சொல்லி, மிகப்பயந்து "இனி நாங்கள் இவளெண்ணத்தின்படியே இவளைச் சிவபுண்ணியஞ் செய்துகொண்டு இருக்கும்பொருட்டுத் திருவொற்றியூரிலே கொண்டுபோய் விடவேண்டும்" என்று துணிந்து, தங்கள் ஞாதிகளோடும் சங்கிலியாரைப் பார்த்து, "நீர் திருவொற்றியூரை அடைந்து கன்னிமாடத்தில் இருந்து சிவபிரானுடைய திருவருளை முன்னிட்டுத் தவஞ்செய்யும்" என்று சொல்லி, மிகுந்த செல்வத்தோடும் அவரைத் திருவொற்றியூருக்குக் கொண்டுபோய், கோயிலிலே பிரவேசித்து, சுவாமியை வணங்கிக்கொண்டு, சமீபத்திலே ஒரு கன்னிமாடஞ் செய்வித்து, அதிலே அவரை இருத்தி, அவருக்கு வேண்டுந் திரவியங்களையும் அமைத்து, அவரை வணங்கி நின்று, "நீர் இந்தக் கன்னிமாடத்திலே சிவபிரானுக்குத் திருத்தொண்டு செய்துகொண்டு இரும்" என்று சொல்லி, அவரைப் பிரிதலினாலே இரண்டு கண்ணினின்றும் சோகபாஷ்பஞ் சொரிய, அநுமதி பெற்றுக்கொண்டு தங்கள் ஊருக்குத் திரும்பிவிட்டார்கள். சங்கிலியார் அந்தக் கன்னிமாடத்தில் இருந்து, தினந்தோறும் திரிகாலங்களினும் திருக்கோயிலிலேபோய், சுவாமிதரிசனஞ்செய்து, பூக்கட்டு மண்டபத்திலே திரை இட்டிருக்கின்ற ஓரிடத்திற் போயிருந்து, புஷ்பமாலைகட்டி, சுவாமிக்குச் சாத்துமபடி கொடுத்துக்கொண்டு வருவார்.

இப்படி நிகழுங்காலத்திலே, ஒருநாள் சுந்தரமூர்த்திநாயனார் திருக்கோயிலிலே போய்ச் சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு புறப்பட்டு, அடியார்கள் செய்கின்ற பலவகைத் திருத்தொண்டைப் பார்ப்பவராகி, புஷ்பமண்டபத்தினுள்ளே போனார். போனபொழுது, முன்போலத் திரையை நீக்கிச் சிவபிரானுக்குச் சாத்தும்படி தாம் கட்டிய பூமாலைகளைக் கொடுத்துவிட்டு மின்போல மறைந்த சங்கிலியாரை விதிகூட்டக்கண்டு, அவர்மேல் ஆசைகொண்டு, புறத்திலே போய், "புஷ்பமண்டபத்தினுள்ளே ஒருபக்கத்திலே திரைக்குள்ளே நின்று ஒரு பெண் என்னுடைய மனதைக் கவர்ந்துகொண்டாள். அவள் யார்" என்றார். சமீபத்திலே நின்றவர்கள் "அவர் சிவபிரானுக்கு மிகுந்த பத்தியோடு திருத்தொண்டு செய்கின்ற கன்னிகையாகிய சங்கிலியார்" என்றார்கள். அதைக் கேட்ட சுந்தரமூர்த்தி நாயனார் திருக்கோயிலினுள்ளே போய், சுவாமியை வணங்கி நின்று, சங்கிலியாரைத் தமக்குத் தந்தருளும்படி பிரார்த்தித்துக்கொண்டு, திருக்கோயிலின் புறத்திலே போய், ஓரிடத்திலே இருக்க, சூரியன் அஸ்தமயனமாயிற்று. அப்பொழுது சிவபிரான் சுந்தரமூர்த்தி நாயனாரிடத்திலே போய், 'இவ்வுலகத்தில் உள்ளவர்கள் யாவராலுஞ் செய்யப்படுதல் கூடாத பெருந்தவத்தைச் செய்கின்ற உத்தமியாகிய சங்கிலியை உனக்குத் தருவோம். நீ கொண்ட கவலையை ஒழி" என்று திருவாய்மலர்ந்தருளி, அர்த்தயாமத்திலே கன்னிமாடத்திலே நித்திரைசெய்கின்ற சங்கிலியாருக்குச் சொப்பனத்திலே தோன்றினார். தோன்றியபொழுது, சங்கிலியார் பரவசமாய் விழுந்து நமஸ

கரித்து எழுந்து நின்று, "சுவாமீ! அடியேன் உய்யும்படி தேவரீர் அடியேனிடத்திலே எழுந்தருளிவரும்பொருட்டுப் பூர்வ ஜன்மத்திலே என்னதவஞ்செய்தேன்" என்று சொல்ல; சிவபிரான் "சங்கிலியே! நம்மேலே மிகுந்த பத்தியுடையவனும் திருவெண்ணெய் நல்லூரிலே சமஸ்தரும் அறியும்படி நம்மாலே தடுத்தாட்கொள்ளப்பட்டவனும் நமக்குத் தோழனும் ஆகிய சுந்தரன் தனக்கு மனைவியாக உன்னைத் தரும்பொருட்டு என்னைப் பிரார்த்தித்தான். நீ மகிழ்ச்சியோடும் அதற்கு உடன்படு" என்று சொல்லியருளினார். அதற்குச் சங்கிலியார், 'சுவாமீ! அடியேன் தேவரீருடைய ஆஞ்ஞையைத் தலைமேற் கொண்டேன், தேவரீர் சொல்லியருளிய நாயனாருக்கே மனைவியாதற்கு உரியேன், ஆயின், அவர் திருவாரூரினிடத்தே மிகுந்த சந்தோஷத்தோடு வசிக்கின்றவர் என்பதைத் தேவரீர் திருவுளங்கொண்டருளும்" என்று விண்ணப்பஞ்செய்தார் அது கேட்ட கடவுள் "பெண்ணே! அந்தச் சுந்தரன் உன்னைப் பிரிந்து போகேன் என்று ஒரு சபதஞ்செய்துதருவான்" என்று சொல்லியருளி, சுந்தரமூர்த்தி நாயனாரிடத்திற் சென்று, "நாம் சங்கிலியிடத்திலே போய் உன்னெண்ணத்தைத் தெரிவித்தோம் நான் உன்னைப் பிரிந்து செல்லேன் என்று நீ அவளுக்குச் சபதஞ்செய்துகொடுத்தால், அவள் உடன்படுவாள் இனி உனக்கு நாம் என்னசெய்யவேண்டும்" என்று அருளிச்செய்ய, சுந்தரமூர்த்திநாயனார் "இக்கடவுளுடைய பிறதலங்களையும் சென்று வணங்க விரும்புகின்ற அடியேனுக்கு இது விலக்காகும்" என்று நினைந்து, அவரை வணங்கி, "சுவாமீ! சங்கிலிக்கு உன்னைப்பிரியேன் என்று சபதஞ்செய்து கொடுக்கும்பொருட்டு அடியேன் அவளோடு தேவரீருடைய ஆலயத்துக்கு வந்தால், அப்போது தேவரீர் அவ்வாலயத்தை விட்டுத் திருமகிழின்கீழ் இருந்தருளவேண்டும்" என்று பிரார்த்தித்தார் அதற்குக் கடவுள் இசைந்தருளி, சங்கிலியாரிடத்திலே முன்போலப் போய், "பெண்ணே! சுந்தரன் உனக்குச் சபதஞ்செய்து தருதற்கு உடன்பட்டிருக்கிறான் அவன் நம்முடைய ஆலயத்திலே சபதஞ்செய்துதருதற்கு வந்தால், நீ அதற்கு உடன்படாமல் மகிழின்கீழே சபதஞ்செய்து தரும்படி கேள்" என்று சொல்லி மறைந்தருளினார் சங்கிலியார் விழித்தெழுந்து, அதிசயித்து, அவ்விரவிலே சிவபெருமானுடைய திருவருளை நினைந்து நினைந்து, நித்திரைசெய்யாதவராகி, சமீபத்திலே நித்திரைசெய்கின்ற தம்முடைய சேடியர்களை எழுப்பி, தமக்குக் கனவிலே சிவபிரான் அருளிச்செய்த எல்லாவற்றையும் அவர்களுக்குத் தெரிவிக்க, அச்சம் அதிசயம் ஆனந்தம் மூன்றும் அடைந்து, சங்கிலியாரை வணங்கினார்கள் திருப்பள்ளியெழுச்சிக்குப் புஷ்பந்தொடுக்கும் பொழுது ஆயினமை கண்டு, சங்கிலியார் சேடியர்களோடு திருக்கோயிலுக்குச் செல்ல, அவருக்குச் சபதஞ்செய்து கொடுக்கும்பொருட்டு, அதற்குமுன் அவ்விடத்தில் வந்து அவருடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டு நின்ற சுந்தரமூர்த்திநாயனார், தமக்கு எதிரே வந்த அவர் சமீபத்திற்சென்று, தமக்குச் சிவபிரான் அருளிச்செய்ததைச் சொன்னார் அதற்குச் சங்கிலியார் எதிர்வார்த்தை ஒன்றும் சொல்லாமல் நாணங்கொண்டு, சேடியர்களோடும் திருக்கோயிலினுள்ளே புகுந்தார் சுந்தரமூர்த்திநாயனார் அவர் பின்னேபோய், "பெண்ணே! நான் உம்மைப் பிரியேன் என்று சபதஞ்செய்யும்பொருட்டுச் சுவாமி சந்நிதானத்துக்கு வாரும்" என்று சொல்ல, சங்கிலியார் கண்டகனவைக் கேட்டறிந்த சேடியர்கள் "சுவாமீ! இதன்பொருட்டுத் தேவரீர் சிவசந்நிதானத்திலே சபதஞ்செய்வது தகாது" என்றார்கள் அப்பொழுது சுந்தரமூர்த்திநாயனார் சிவபிரானுடைய செய்கையை அறியாமல், பெண்களே! நான் வேறெங்கே சபதஞ்செய்து தரவேண்டும்" என்று கேட்க, சேடியர்கள் "மகிழின்கீழே சபதஞ்செய்து கொடும்" என்றார்கள். அதைக்கேட்ட நாயனார் மனமருண்டு, இவர்கள் சொல்லியதை மறுக்கில், விவாகந் தவறினுந் தவறும். ஆதலால், இதற்கு உடன்பட

வேண்டும்" என்று துணிந்து, "அப்படியே செய்யலாம் வாருங்கள்" என்று சொல்லி, அவர்களோடு மகிழின்கீழே போய்ச் சேர்ந்து, சங்கிலியார் காணும்படி அந்த மகிழை மூன்றுதரம் வலஞ்செய்து, 'உன்னை நான் பிரியேன்" என்று சபதஞ்செய்து கொடுத்தார் அது கண்டு, சங்கிலியார் மனங்கலங்கி, "கடவுளுடைய ஆஞ்ஞையினாலே பாவியேன் இதைக் கண்டேனே" என்று துக்கித்துக்கொண்டு, ஒரு பக்கத்திலே மறைந்துநின்றார் சுந்தரமூர்த்திநாயனார் சபதமுடித்தபின்' ஆலயத்தினுள்ளே போய்க் கடவுளை வணங்கி, ஸ்தோத்திரஞ்செய்துகொண்டு, திரும்பிவிட்டார் அதற்றுப்பின், சங்கிலியார் புஷ்பமண்டபத்திலே போய்த் தம்முடைய பணியை முடித்து, சிவபிரான் தமக்கு அருள்செய்ததை நினைந்து, அவரை வணங்கிக்கொண்டு, விடியும்பொழுது கன்னிமாடத்துக்குத் திரும்பிவிட்டார். அவ்விரவிற்றானே சிவபிரான் திருவொற்றியூரில் இருக்கின்ற தம்முடைய தொண்டர்களுக்குச் சொப்பனத்திலே தோன்றி, "நம்முடைய அடியானாகிய சுந்தரனுக்குச் சங்கிலியென்னுங் கன்னிகையை விவாகஞ்செய்து கொடுங்கள்" என்று ஆஞ்ஞாபித்து மறைந்தருளினார் அவர்கள் அவ்வாஞ்ஞையைத் தலைமேற்கொண்டு, மற்றநாளிலே அவ்வூரில் இருக்கின்ற சமஸ்த ஜனங்களோடுங் கூடி, மிகுந்த மகிழ்ச்சியோடும் மகாலங்காரத்தோடும் சங்கிலியாரைச் சுந்தரமூர்த்திநாயனாருக்கு விவாகஞ்செய்து கொடுத்தார்கள்.

விவாகஞ்செய்த சுந்தரமூர்த்திநாயனார் சங்கிலியாரோடு கூடி அவ்வூரிலே வாழ்ந்திருந்தார் இருக்கும் நாளிலே, ஒருநாள் திருவாரூரில் எழுந்தருளியிருக்கின்ற வீதிவிடங்கப்பெருமானுடைய வசந்தோற்சவகாலம் சமீபித்ததை அறிந்து, "வன்மீகநாதனை இவ்வளவு காலமும் மறந்திருந்தேனே" என்று துக்கித்து, அவர்மேலே 'பத்திமையும் அடிமையையுங் கைவிடுவான் பாவியேன்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினார்.

---

பண் - தக்கேசி.

---

திருச்சிற்றம்பலம்

பொன்னும்மெய்ப்பொருளுந்தருவானைப்
போகமுந்திருவும்புணர்ப்பானைப்
பின்னையென்பிழையைப்பொறுப்பானைப்
பிழையெலாந்தவிரப்பணிப்பானை
யின்னதன்மையனென்றறிவொண்ணா
வெம்மானையெளிவந்தபிரானை
யன்னம்வைகும்வயற்பழனத்தணி
யாரூரானைமறக்கலுமாமே. (௧)

கட்டமும்பிணியுங்களைவானைக்
காலற்சீறியகாலுடையானை
விட்டவேட்கைவெந்நோய்களைவானை
விரவினால்விடுதற்கரியானைப்
பட்டவார்த்தைபடநின்றவார்த்தை
வாராமேதவிர்க்கப்பணிப்பானை
யட்டமூர்த்தியைமட்டவிழ்சோலை
யாரூரானைமறக்கலுமாமே. (௨)

கார்க்குன்றமழையாய்ப்பொழிவானைக்
கலைக்கெல்லாம்பொருளாயுடன்கூடிப்
பார்க்கின்றவுயிர்க்குப்பரிந்தானைப்
பகலுங்கங்குலுமாகிநின்றானை
யோர்க்கின்றசெவியைச்சுவைதன்னை
யுணருநாவினைக்காண்கின்றகண்ணை
யார்க்கின்றகடலைமலைதன்னை
யாரூரானைமறக்கலுமாமே. (௩)

செத்தபோதினின்முன்னின்றுநம்மைச்
சிலர்கள்கூடிச்சிரிப்பதன்முன்னம்
வைத்தசிந்தையுண்டேமனமுண்டே
மதியுண்டேவிதியின்பயனுண்டே
முத்தனெங்கள்பிரானென்றுவானோர்
தொழநின்றதிமிலேறுடையானை
யத்தனெந்தைபிரானெம்பிரானை
யாரூரானைமறக்கலுமாமே. (௪)

செறிவுண்டேன்மனத்தாற்றெளிவுண்டேற்
றேற்றத்தால்வருஞ்சிக்கனவுண்டேன்
மறிவுண்டேன்மறுமைப்பிறப்புண்டேல்
வாணாண்மேற்செல்லுமவஞ்சனையுண்டேற்
பொறிவண்டியாழ்செய்யும்பொன்மலர்க்கொன்றை
பொன்போலுஞ்சடைமேற்புனைந்தானை
யறிவுண்டேயுடலத்துயிருண்டே
யாரூரானைமறக்கலுமாமே. (௫)

பொள்ளலிவ்வுடலைப்பொருளென்று
பொருளுஞ்சுற்றமும்போகமுமாகி
மெள்ளநின்றவர்செய்வனவெல்லாம்
வாராமேதவிர்க்கும்விதியானை
வள்ளலெந்தமக்கேதுணையென்று
நாணாளும்மமரர்தொழுதேத்து
மள்ளலங்கழனிப்பழனத்தணி
யாரூரானைமறக்கலுமாமே. (௬)

கரியானையுரிகொண்டகையானைக்
கண்ணின்மேலொருகண்ணுடையானை
வரியானைவருத்தங்களைவானை
மறையானைக்குறைமாமதிசூடற்
குரியானையுலகத்துயிர்க்கெல்லா
மொளியானையுகந்துள்கிநண்ணுதார்க்
கரியானையடியேற்கெளியானை
யாரூரானைமறக்கலுமாமே. (௭)

வாளாநின்றுதொழுமடியார்கள்
வானாளப்பெறுமவார்தந்தையைக்கேட்டு

நாளுநாளும்மலரிடவெணஙகா
நமமையாள்கினறதன்மையையோராரா
கேளாநானகிடநதேயுழைககின்றேன்
கிளைகளெலாநதுணையாமெனக்கருதி
யாளாவானபலாமுனபழைககினறே
னாரூரானைமறககலுமாமே. (௯)

5027 விடக்கையேபெருக்கிப்பலநாளும்
வேடகையாறபடடவேதனைதனனைக
கடககிலேனெறிகாணவுமாடடேன
கன்குழிநதிரப்பாரகையிலொன்று
மிடககிலேனபரவைததிரைககஙகைச
சடையானையுமையாளையோரபாகத
தடககினானைபநதாமரைபபொயகை
யாரூரானைமறககலுமாமே. (௰)

5028 ஓடடியாடகொண்டுபோயொளித்திடட
வுச்சிப்போதனைநசசரவாரதத
படடியைபபகலையிருடனனைப
பாவிபபாரமனததூறுமததேனைக
கடடியைககரும்பினறெளிதனனைக்
காதலாற்கடறசூரதடிநதிடட
செடடியபபனைபபடடனைசசெலவ
வாரூரானைமறககலுமாமே. (௰௧)

ஒருவொன்றுலகஙகளுககெலலா
முரைககெலாம்பொருளாயுடனகூடிக
காருருஙகமழுகொனறைநனமாலை
முடியனகாரிகைகாரணமாக
வாருரைமமறததறகரியானை
யமமானறனதிருபபோகொணடதொணட
னாரூரனனடிநாயுரைவலலா
ரமரலோகததிருபபவாதாமே. (௰௨)

திருச்சிற்றம்பலம

---

சுந்தரமூர்த்திநாயனூர் கொங்கநாட்டைக் கடந்து, மலைநாட்டிற் சென்ற பின்பு, சேரமான்பெருமாணுயனூர் சுநதரமூாத்திநாயனுரைத திருவஞ்சைக்களததுக்கு அழைத்துக்கொணடு போனூர் அங்கே சுந்தரமூர்த்திநாயனூர் சுவாமி தரிசனஞ்செய்து திருப்பதிகம்பாடிப புறபபட்டார் சேரமான் பெருமாணுய னூர் யானையின்மேலே முன்னே அவரை ஏற்றி, பின் தாமும் ஏறி, வெண்சாமரம் வீசிக்கொண்டு சென்று, தம்முடைய மாளிகையின் வாயிலிலே புகுந்து, யானையி னின்றும் இறங்கி, அந்நாயனுரை இறக்கி, மாளிகையினுள்ளே கொண்டுபோய், சிங்காசனத்திலிருத்தி, அவருக்கு அருச்சனைபண்ணி, விருந்துசெய்தார்.

சுந்தரமூர்த்திநாயனார் சேரமான்பெருமானாயனாரோடும் அந்தக்கொடுங் கோளூரிலே சிலநாள் இருந்தார் ஒருநாள் திருவாரூரில் எழுந்தருளியிருக்கின்ற வன்மீகநாதருடைய திருவடிகளை நினைந்து, "பொன்னுமெய்ப்பொருளும்" என்று திருப்பதிகம் எடுத்துத் திருப்பாட்டுதோறும் "ஆரூரானை மறக்கலுமாமே" என்று பாடி, திருவாரூருக்குச் செல்லும்பொருட்டு அடியார்களோடு எழுந்து வழிக்கொண்டு சென்றார்

---

### பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

கரையுங்கடலுமலையுங்காலையுமாலையுமெல்லா
முரையிலவிரவிவருவானொருவனுருத்திரலோகனை
வரையின்மடமகள்கேள்வன்வானவர்தானவர்க்கெல்லா
மரையனிருப்பதுமாரூரவரெம்மையுமாளவரோகேளீர் (௧)

தனியனென்றெள்கியறியேன்றம்மைப்பெரிதுமுகப்பன்
முனிபவர்தம்மைமுனிவன்முகம்பலபேசிமொழியேன்
கனிகள்பலவுடைச்சோலைக்காய்க்குலையீன்றகமுகி
னினியனிருப்பதுமாரூரவரெம்மையுமாளவரோகேளீர் (௨)

சொல்லிற்குலாவன்றிச்சொல்லேன்றொடர்ந்தவர்க்குந்துணையல்லேன்
கல்லில்வலியமனத்தேன்கற்றபெரும்புலவாண
ரல்லல்பெரிதுமறுப்பானருமறையாறங்கமோது
மெல்லையிருப்பதுமாரூரவரெம்மையுமாளவரோகேளீர். (௩)

நெறியுமறிவுஞ்செறிவுநீதியுநான்மிகப்பொல்லேன்
மிறையுந்தறியுமுகப்பன்வேண்டிற்றுச்செய்துதிரிவன்
பிறையுமரவும்புனலும்பிறங்கியசெஞ்சடைவைத்த
விறைவனிருப்பதுமாரூரவரெம்மையுமாளவரோகேளீர். (௪)

நீதியிலொன்றும்வழுவேனிட்கண்டகஞ்செய்துவாழ்வேன்
வேதியர்தம்மைவெகுளேன்வெகுண்டவர்க்குந்துணையாகேன்
சோதியிற்சோதியெம்மானைச்சுண்ணவெண்ணீறணிந்திட்ட
வாதியிருப்பதுமாரூரவரெம்மையுமாளவரோகேளீர். (௫)

அருத்தம்பெரிதுமுகப்பனலவலையேனலந்தார்க
ளொருத்தர்க்குதவியேனல்லேனுற்றவர்க்குந்துணையல்லேன்
பொருத்தமேலொன்றுமிலாதேன்புற்றெடுத்திட்டிடங்கொண்ட
வருத்தனிருப்பதுமாரூரவரெம்மையுமாளவரோகேளீர். (௬)

சந்தம்பலவறுக்கில்லேன்சார்ந்தவர்தம்மடிச்சாரேன்
முந்திப்பொருவிடையேறிமூவுலகுந்திரிவானே
கந்தங்கமழ்கொன்றைமாலைக்கண்ணியன்விண்ணவரேத்து
மெந்தையிருப்பதுமாரூரவரெம்மையுமாளவரோகேளீர் (௭)

நெண்டிக்கொண்டேயுங்கலாய்ப்பனிச்சயமேயிதுதிண்ணம்
மிண்டாக்குமிண்டலாற்பேசேன்மெய்ப்பொருளன்றியுணரேன்
பண்டங்கிலங்கையர்கோனைப்பருவரைக்கீழடர்த்திட்ட
வண்டனிருப்பதுமாரூரவரெம்மையுமாளவரோகேளீர். (௮)

நமாபிறனென்பதறியேனுன்கண்டதேகண்டுவாழ்வேன்
றமரமபெரிதுமுகப்பன்றக்கவாறொன்றுமிலாதேன்
குமரன்றிருமாலபிரமனகூடியதேவாவணங்கு
மமரனிருப்பதுமாரூரவரெம்மையுமாளவரோகேளீர். (௯)

ஆசைபலவறுக்கிலலேனுனையுமன்றியுனைபபன் லே
பேசிற்சழககலாற்டேசனபிறைப்புடையேன்மனநதன்னு
லோசைபெரிதுமுகப்பர்னொலிகடனஞசமுதுண்ட
வீசனிருப்பதுமாரூரவரெமமையுமாள்வரோகேளீர். (௧௦)

எநதையிருபபதுமாரூரவரெம்மையுமாளவரோவெனறு
சிநதைசெயுநதிறம்வல்லானறிருமருவுநதிரடோளன்
மநதமுழவமியமபுமவளவயனூவலாரூரன்
சநதமிசையொடுமவல்லாராதாமபுகழெயதுவாதாமே. (௧௧)

திருச்சிற்றமபலம்.

சுந்தரமூர்த்திநாயனார் சீர்காழியை அகன்று, திருக்கோலக்கா முதலிய ஸ்த லங்களை வணங்கிக்கொண்டு, திருவாரூருக்குச் சமீபித்தார் உடனே வன்மீக நாதர் திருவாரூரில வாழ்பவர்களெல்லாருக்கும் "நம்முடைய அடியானுகிய நம் பியாரூரன் நாம் அழைக்க வருகின்றான் நீங்கள் அவனை எதிர்கொள்ளக்கடவீர் கள்" என்று பணித்தருள, அவாகளெலலாரும் ஆச்சரியங்கொண்டு மனமகிழ் நது, வீதிகளெல்லாவற்றையுமமிகவலஙகரிதது நானுவித வாததியங்கள் ஒலிக்க, திருமதில்வாயிற் புறதது வநது, சுந்தரமூாததி நாயனுரை எதிர்கொணடு வணங் கினார்கள சுந்தரமூாத்தி நாயனூா அவர்களெதிரே அஞசலிகூப்பி வந்து, திரு வீதியிற் செலலுமபொழுது, அவாகளைநோககி, "கனையுங்கடலும்" என்றெடு த்து, "எந்தையிருபபது மாரூ ரவரெமமையு மாள்வரோ கேளீர" என்னுந் திரு ப்பதிகத்தைப பாடிக்கொண்டு, திருக்கோயிற்றிருவாயிலை அணுகினார் அணுகிய வுடனே திருவாயிலை நமஸ்கரிதது எழுந்து சென்று, தேவாசிரிய மண்டபத்தை வணங்கி, சிரசின்மீது குவித்த கைகளோடும் திருமூலட்டானத்தைச் சூழந்த திருமாளிகை வாயிலிற் புகுந்து, வன்மீகநாதரை வணங்கிப் பேரானந்தப் பெ ருங்கடலின் மூழ்கி நின்று, திருப்பதிகம பாடினா அபபொழுது, சுந்தரமூர் த்தி நாயனுா கேட்குமபடி, வன்மீகநாதருடைய திருவருளினலே, "நாம் உன க்குத் தோழராநோம் முன்னே நாம உன்னை ஆட்கொண்ட விவாககாலத்திலே நீகொண்ட மணக்கோலததை எபபொழுதும கொண்டு பூமியின்மேல் விளையாடு வாய்" என்று ஒரு அசரீரிவாக்கு எழுந்தது அது கேட்ட சுந்தரமூர்த்தி நாய னூர் வன்மீகநாதரை வணங்கித் துதிதது, "அடியேனைத் தடுத்தாட்கொண்டரு ளிய பரமகருணாநிதியே! திருவாரூரமர்ந்த அருமணியே! நாயினேனைப் பொரு ளாகக் கொண்டு இங்ஙனந திருவாயமலர்ந்தருளியது உமது பெருங்கருணையன் றோ" என்று விண்ணப்பஞ் செய்து, பலமுறை வணங்கி, உள்ளக்களிப்பினோடும நடந்து, தியாகேசர் சந்நிதியை அடைந்து, வணங்கித் துதித்துத் திருமாளிகை யை வலஞ் செய்துகொண்டு, வெளியேபோனார் அன்று முதற்கொண்டு அடி யார்கள் எலலாரும் சுந்தரமூர்த்தி நாயனாரைத் தமபிரான்றோழர் என்று சொலலிக்கொண்டார்கள்

# திருவாரூர்.

## பண் - புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்

அந்தியுநண்பகலுமஞ்சுபதஞ்சொல்லி
முந்தியெழும்பழையவல்வினைமூடாமுன்
சிந்தைபராமரியாத்தென்றிருவாரூர்புக்
கெந்தைபிரானாரையென்றுகொலெய்துவதே. (௧)

நின்றவினைக்கொடுமைநீங்கவிருபொழுதுந்
துன்றுமலரிட்டுச்சூழுமவலஞ்செய்து
தென்றன்மனங்கமழுந்தென்றிருவாரூர்புக்
கென்றனமனங்குளிரவென்றுகொலெய்துவதே. (௨)

முன்னைமுதற்பிறவிமூதறியாமையினாற்
பின்னைநினைந்தனவும்பேசுறவும்மொழியச்
செந்நெல்வயற்கழனித்தென்றிருவாரூர்புக்
கென்னுயிர்க்கின்னமுதையென்றுகொலெய்துவதே. (௩)

நல்லநினைப்பொழியநாள்களிலாருயிரைக்
கொல்லநினைப்பனவுங்குற்றமுமற்றொழியச்
செல்வவயற்கழனித்தென்றிருவாரூர்புக்
கெல்லைமிதித்தடியேனென்றுகொலெய்துவதே. (௪)

கடுவரிமாக்கடலுட்காய்ந்தவன்றாதையைமுன்
சுடுபொடிமெய்க்கணிந்தசோதியைவன்றலைவா
யடுபுலியாடையனையாதியையாரூர்புக்
கிடுபலிகொள்ளியைநானென்றுகொலெய்துவதே. (௫)

சூழொளிநீர்நிலந்தீத்தாழ்வளியாகாசம்
வானுயர்வெங்கதிரோன்வண்டமிழ்வல்லவர்க
ளேழிசையேழ்நரம்பினோசையையாரூர்புக்
கேழுலகாளியைநானென்றுகொலெய்துவதே. (௬)

கொம்பனநுண்ணிடையாள்கூறனைநீறணிந்த
வம்பனையெவ்வுயிர்க்கும்வைப்பினையொப்பமரர்
செம்பொனைநன்மணியைத்தென்றிருவாரூர்புக்
கென்பொனையென்மணியையென்றுகொலெய்துவதே. (௭)

ஆறணிநீண்முடிமேலாடரவஞ்சூடிப்
பாறணிவெண்டலையிற்பிச்சைகொணச்சரவன்
சேறணிதண்கழனித்தென்றிருவாரூர்புக்
கேறணியெம்மிறையையென்றுகொலெய்துவதே. (௮)

மண்ணினையுண்டுமிழ்ந்தமாயனுமாமலர்மே
லண்ணலுநண்ணரியவாதியைமாதினொடுந்
திண்ணியமாமதில்சூழ்தென்றிருவாரூர்புக்
கெண்ணியகண்குளிரவென்றுகொலெய்துவதே. (௯)

5050 மின்னெடுஞ்செஞ்சடையானமேவியவாரூரை
நன்னெடுங்காதன்மையாளுவலாகோனூரன்
பன்னெடுஞ்சொன்மலாகொண்டிட்டனபத்தும்வல்லார்
பொன்னுடைவிண்ணுலகநண்ணுவாபுண்ணியரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

சுந்தரமூர்த்தி நாயனார் காஞ்சிபுரத்தை நீங்கி, வழியிலே, "அந்தியு நண்பகலும்" என்றெடுத்து, "தெம் திருவாரூர்புக் கெந்தை பிரானாரை யென்றுகொலெய்துவதே" என்னுந்திருப்பதிகத்தைப்பாடிக் கொண்டு, மற்றுந்தலங்களை வணங்கிச் சோழமண்டலத்தை அடைந்தார்.

பண் - செந்துருத்தி.

திருச்சிற்றம்பலம்

மீளாவடிமையுமக்கேயாளாய்ப்பிறரைவேண்டாதே
மூளாததீப்போலுள்ளேகனன்றுமுகத்தான்மிகவாடி
யாளாயிருக்கும்மடியார்தங்களல்லல்சொன்னக்கால்
வாளாங்கிருப்பீர்திருவாரூரீர்வாழ்ந்துபோதீரே (௧)

விற்றுக்கொள்வீரொற்றியல்லேன்விரும்பியாட்பட்டேன்
குற்றமொன்றுஞ்செய்ததில்லைக்கொத்தையாக்கினீர்
எற்றுக்கடிகேளென்கண்கொண்டீர்நீரேபழிப்பட்டீர்
மற்றைக்கண்டானருராதொழிந்தால்வாழ்ந்துபோதீரே. (௨)

அன்றின்முட்டாதடையுஞ்சோலையாரூரகத்தீரே
கன்றுமுட்டியுண்ணச்சுரந்தகாலியவைபோல
வென்றுமுட்டாப்பாடுமடியார்தங்கண்காணாது
குன்றின்முட்டிக்குழியில்வீழ்ந்தால்வாழ்ந்துபோதீரே. (௩)

துருத்தியுறைவீர்பழனம்பதியாச்சோற்றுத்துறையாள்வீர்
இருக்கைதிருவாரூரேயுடையீர்மனமேயெனவேண்டா
வருத்தியுடையவடியார்தங்களல்லல்சொன்னக்கால்
வருத்திவைத்துமறுமைப்பணித்தால்வாழ்ந்துபோதீரே. (௪)

செந்தண்பவளந்திகழுஞ்சோலையிதுவோதிருவாரூர்
எந்தமடிகேளிதுவேயாமாறுமக்காட்பட்டோர்க்குச்
சந்தம்பலவும்பாடுமடியார்தங்கண்காணாது
வந்தெம்பெருமான்முறையோவென்றால்வாழ்ந்துபோதீரே. (௫)

தினைத்தாளன்னசெங்காலன்னைசேருந்திருவாரூர்ப்
புனத்தார்கொன்றைப்பொன்போன்மாலைப்புரிபுன்சடையீரே
தனத்தாலின்றித்தாந்தாமெலிந்துதங்கண்காணாதே
மனத்தால்வாடியடியாரிருந்தால்வாழ்ந்துபோதீரே. (௬)

ஆயம்பேடையடையுஞ்சோலையாரூரகத்தீரே
ஏயெம்பெருமானிதுவேயாமாறுமக்காட்பட்டோர்க்கு
மாயங்காட்டிப்பிறவிகாட்டிமறவாமனங்காட்டிக்
காயங்காட்டிக்கண்ணீர்கொண்டால்வாழ்ந்துபோதீரே. (௭)

கழியாய்க்கடலாய்க்கலனாய்நிலனாய்க்கலந்தசொல்லாகி
யிழியாக்குலத்திற்பிறந்தோமும்மையிகழாதேத்துவோம்
பழிதானாவதறியீரடிகேள்பாடும்பத்தரோம்
வழிதான்காணாதலமந்திருந்தால்வாழ்ந்துபோதீரே. (௮)

பேயோடேனும்பிரிவொன்றின்னாதென்பர்பிறரெல்லாங்
காய்தான்வேண்டிற்கனிதானன்றோகருதிக்கொண்டக்கா
னாய்தான்போலநடுவேதிரிந்துமுமக்காட்பட்டோர்க்கு
வாய்தான்றிறவீர்திருவாரூரீர்வாழ்ந்துபோதீரே (௯)

செருந்திசெம்பொன்மலருஞ்சோலையிதுவோதிருவாரூர்
பொருந்தித்திருமூலட்டானம்மேயிடமாகக்கொண்டீரே
யிருந்துநின்றுங்கிடந்துமும்மையிகழாதேத்துவோம்
வருந்திவந்துமுமக்கொன்றுரைத்தால்வாழ்ந்துபோதீரே. (௧௦)

காரூர்கண்டத்தெண்டோண்முக்கண்கலைகள்பலவாகி
யாரூர்த்திருமூலட்டானத்தேயடிப்பேராரூரன்
பாரூரறியவென்கண்கொண்டீர்நீரேபழிப்பட்டீர்
வாரூர்முலையாள்பாகங்கொண்டீர்வாழ்ந்துபோதீரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

சுந்தரமூர்த்திநாயனார் திருவாரூரிலே திருமூலட்டானத்திலே திருவந்தியாமத்திலே சுவாமிதரிசனஞ் செய்வதற்கு எழுந்து திருப்பதிகம் பாடிக்கொண்டு, அடியார்களோடு போய், தேவாசிரயமண்டபத்தை முன்னே நமஸ்கரித்து, கோபுரத்தையும் வணங்கி, உள்ளே புகுந்து, சுவாமி சந்நிதானத்திலே போய் விழுந்து நமஸ்கரித்து, எழுந்து நின்று, சுவாமியைத் தரிசனஞ்செய்தற்கு ஒரு கண் போதாமையால் அதிக துக்கங்கொண்டு "சுவாமீ, அடியேனுக்கு வலக்கண்ணையுந் தந்து அடியேனை இத்துக்கசாகரத்தினின்றும் கரையேற்றி யருளவேண்டும்" என்று பிரார்த்தித்து, "மீளாவடிமையுமக்கேயாளாய்" என்னுந் திருப்பதிகம் பாடினார் அப்பொழுது வன்மீகநாதர் திருவுளமிரங்கி அவருக்கு வலக்கண்ணையுங் கொடுத்தருளினார். உடனே சுந்தரமூர்த்திநாயனார் பரவசமாய்ப் பலமுறை விழுந்தும், எழுந்தும், மிகுந்த களிப்பினாலே ஆடியும், பாடியும், ஆனந்தசாகரத்தில் அமிழ்ந்தி, வன்மீகநாதருடைய திருக்கோலத்தை இரண்டு கண்களினாலுந் தரிசனஞ்செய்து வணங்கித் துதித்துக்கொண்டு புறப்பட்டு, தேவாசிரயமண்டபத்திலே போய், அங்கெழுந்தருளி யிருந்தார்

---

## திருத்தொண்டத்தொகை.

பண் - கொல்லிக்கௌவாணம்.

திருச்சிற்றம்பலம்.

தில்லைவாழந்தணர்தமடியார்க்குமடியேன்
றிருநீலகண்டத்துக்குயவனார்க்கடியே
னில்லையேயென்னாதவியற்பகைக்குமடியே
னிளையான்றன்குடிமாறனடியார்க்குமடியேன்
வெல்லுமாமிகவல்லமெய்ப்பொருளுக்கடியேன்
விரிபொழில்சூழ்குன்றையார்விறன்மிண்டற்கடியே
னல்லிமென்முல்லையந்தாரமர்நீதிக்கடியே
னாரூரனாரூரிலம்மானுக்காளே. (௧)

5063 இலைமலிந்தவேனம்பியெறிபத்தற்கடியே
னேனாதிநாதன்றனடியார்க்குமடியேன்
கலைமலிந்தசீர்நம்பிகண்ணப்பறகடியேன்
கடவூரிற்கலயன்றனடியார்க்குமடியேன்
மலைமலிந்ததோளவள்ளன்மானக்கஞ்சாற
னெஞ்சாதவாட்டாயனடியார்க்குமடியே
னலைமலிந்தபுனன்மங்கையானாயற்கடியே
னாரூரனாரூரிலம்மானுக்காளே (உ)

மும்மையாலுலகாண்டமூர்த்திக்குமடியேன
முருகனுக்குமுருத்திரபசுபதிக்குமடியேன்
செம்மையேதிருநாளைப்போவாறகுமடியேன
திருக்குறிப்புத்தொண்டாதம்மடியார்க்குமடியேன்
மெய்ம்மையேதிருமேனிவழிபடாநிற்க
வெகுண்டெழுந்ததாதையைமழுவினாலெறிந்த
வம்மையானடிச்சண்டிப்பெருமானுக்கடியே
னாரூரனாரூரிலம்மானுக்காளே. (௩)

5065 திருநின்றசெம்மையேசெம்மையாக்கொண்ட
திருநாவுக்கரையன்றனடியார்க்குமடியேன
பெருநம்பிகுலச்சிறைதனடியார்க்குமடியேன
பெருமிழலைக்குறும்பற்கும்பேயார்க்குமடியே
னொருநம்பியப்பூதியடியார்க்குமடியே
னொலிபுனல்சூழ்சாத்தமங்கைநீலநக்கற்கடியே
னருநம்பிநமிநந்தியடியார்க்குமடியே
னாரூரனாரூரிலம்மானுக்காளே. (௪)

வம்பறுவரிவண்டுமணநாறமலரு
மதுமலர்நற்கொன்றையானடியலாற்பேணு
வெம்பிரான்சம்பந்தனடியார்க்குமடியே
னேயர்கோன்கலிக்காமனடியார்க்குமடியே
னம்பிரான்றிருமூலனடியார்க்குமடியே
னாட்டமிகுதண்டிக்குமூர்க்கற்குமடியே
னம்பரான்சோமாசிமாறனுக்குமடியே
னாரூரனாரூரிலம்மானுக்காளே. (௫)

வார்கொண்டவனமுலையாளுமைபங்கன்கழலே
மறவாதுகல்லெறிந்தசாக்கியற்குமடியேன்
சீர்கொண்டபுகழ்வள்ளல்சிறப்புலிக்குமடியேன்
செங்காட்டங்குடிமேயசிறுத்தொண்டற்கடியேன்
கார்கொண்டகொடைக்கழறிற்றறிவார்க்குமடியேன்
கடற்காழிக்கணநாதனடியார்க்குமடியே
னார்கொண்டவேற்கூற்றன்களந்தைக்கோனடியே
னாரூரனாரூரிலம்மானுக்காளே. (௬)

பொய்யடிமையில்லாதபுலவர்க்குமடியேன்
பொழிற்கருவூர்த்துஞ்சியபுகழ்ச்சோழற்கடியேன்

மெய்யடியானரசிங்கமுனையரையர்க்கடியேன
விரிதிரைசூழ்கடனாகையதிபத்தற்கடியேன
கைதடிந்தவரிசிலையானகலிக்கம்பன்கலியன்
கழற்சத்திவரிஞசையர்கோனடியார்க்குமடியே
னையடிகள்காடவர்கோனடியார்க்குமடியே
னாரூரனாரூரிலம்மானுக்காளே. (எ)

கறைக்கண்டன்கழலடியேகாப்புக்கொண்டிருந்த
கணம்புல்லநம்பிக்குங்காரிக்குமடியே
னிறைக்கொண்டசிந்தையானெல்வேலிவென்ற
நின்றசீர்நெடுமாறனடியார்க்குமடியேன்
றுறைக்கொண்டசெம்பவளமிருளகற்றுஞ்சோதித்
தொன்மயிலைவாயிலானடியார்க்குமடியே
னறைக்கொண்டவேன்மபிமுனையடுவார்க்கடியே
னாரூரனாரூரிலம்மானுக்காளே. (அ)

கடல்சூழ்ந்தவுலகெலாங்காக்கின்றபெருமான
காடவர்கோன்கழற்சிங்கனடியார்க்குமடியேன
மடல்சூழ்ந்ததாரநம்பியிடங்கழிக்குந்தஞ்சை
மன்னவனாஞ்செருத்துணைதன்னடியார்க்குமடியேன
புடைசூழ்ந்தபுலியதண்மேலரவாடவாடி
பொன்னடிக்கேமனம்வைத்தபுகழ்த்துணைக்குமடியே
னடல்சூழ்ந்தவேன்மபிகோட்புலிக்குமடியே
னாரூரனாரூரிலம்மானுக்காளே. (கூ)

பத்தராய்ப்பணிவார்களெல்லார்க்குமடியேன
பரமனையேபாடுவாரடியார்க்குமடியேன
சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்க்குமடியேன
திருவாரூர்ப்பிறந்தார்களெல்லார்க்குமடியேன
முப்போதுந்திருமேனிதீண்டுவார்க்கடியேன
முழுநீறுபூசியமுனிவர்க்குமடியே
னப்பாலுமடிச்சார்ந்தவடியார்க்குமடியே
னாரூரனாரூரிலம்மானுக்காளே. (க0)

மன்னியசீர்மறைநாவனின்றவூர்ப்பூசல்
வரிவளையாண்மானிக்குநேசனுக்குமடியேன
றென்னவனாயுலகாண்டசெங்கணார்க்கடியேன
திருநீலகண்டத்துப்பாணனார்க்கடியே
னென்னவனாமரனடியேயடைந்திட்டசடைய
னிசைஞானிகாதலன்றிருநாவலூர்க்கோ
னன்னவனாமாரூரனடிமைகேட்டுவப்பா
ராரூரிலம்மானுக்கன்பராவாரே. (கக)

திருச்சிற்றம்பலம்

சுந்தரமூர்த்திநாயனார் திருவாரூரிலே மகாலங்காரம் பொருந்திய திருக்கோலத்தை யுடையவராய், வன்மீகநாதரைத் தினந்தோறும் போய்த் தரிசித்து வந்தார்.

இதற்குமுன்னே, திருக்கைலாசமலையில் இருந்த உமாதேவியாருடைய சேடியர்கள் இருவருள் ஒருவராகிய கமலினி என்பவர், அந்தத் திருவாரூரிலே உருத்திரகணிகையர் குலத்திலே பிறந்து, பரவையார் என்னும் பெயரைப் பெற்று, மங்கைப்பருவம் அடைந்திருந்தார். அவரும் தினந்தோறும் பாங்கிமாரோடு திருக்கோயிலுக்குப் போய், சுவாமிதரிசனம் பண்ணி வருவார்.

அந்தப்பரவையார் ஒருநாள் சுவாமிதரிசனம் பண்ணப் போம்போது, அப்படியே சுவாமிதரிசனம் பண்ணும்பொருட்டுப் பரிசனங்களோடு சென்ற சுந்தரமூர்த்திநாயனார், திருவருள் கூட்ட, அந்தப் பரவையாரைக் கண்டு ஆசைகொண்டுநின்றார். பரவையாரும் சுந்தரமூர்த்திநாயனாரைக் கண்டு ஆசைகொண்டு, பின்சுவாமிதரிசனம் பண்ணவேண்டும் என்னும் விருப்பமானது தம்மை அவ்வாசையினின்றும் நீக்கித் தன்வசமாக்கிக்கொண்டு திருக்கோயிலின் உள்ளே செலுத்த, சென்றார். சுந்தரமூர்த்திநாயனார் அது கண்டு, "என் மனசைக் கவர்ந்து சென்ற அதி சௌந்தரியமுள்ள இந்தப் பெண் யார்" என்று வினவ; அங்கு நின்றவர்கள் "இவர் உருத்திரகணிகையரில் ஒருவர். இவர்பெயர் பரவையார்" என்றார்கள். அதைக்கேட்ட சுந்தரமூர்த்திநாயனாரோ திருக்கோயிலினுள்ளே போனார். அதற்குமுன் பரவையார் பிரதக்ஷிணஞ்செய்து சுவாமியை நமஸ்காரம் பண்ணித் துதித்துக்கொண்டு சந்நிதியினின்றும் புறப்பட்டார். சுந்தரமூர்த்திநாயனார் சுவாமி சந்நிதானத்திற் சென்று, பரவையார்மேல் வைத்த பேராசையால் அவரைச் சேரவேண்டிச் சிவபிரானது திருவடிகளை வணங்கிக்கொண்டு, புறப்பட்டு, பரவையாரைத்தேடி, தேவாசிரயன் என்னும் பெயரையுடைய ஆயிரக்கால் மண்டபத்தை அடைந்து, "வன்மீகநாதர் பரவையாரை எனக்குத் தந்தருளுவார்" என்று சிந்தித்துக்கொண்டு, அங்கு இருக்க, சூரியன் அஸ்தமயனமாயிற்று. அது நிற்க.

முன்னே சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு புறப்பட்ட பரவையார், சுந்தரமூர்த்தியிடத்திலே தனியே சென்ற தமது மனசை ஒருவகையாக வலிந்து தமவசப்படுத்தி, அதிகமயக்கத்தோடு தமது மாளிகையை அடைந்து, பூவணையில் இருந்து, தம்மருகிருந்த பாங்கியை நோக்கி, "நாம் சுவாமிதரிசனம் செய்யப் போனபோது வழியிலே எதிராக வந்தவர் யார்" என்று கேட்க, அவள் "அவர் பிரமவிஷ்ணுக்களும் தேடியறியாத சமாரூபீதராகிய கடவுளே வலியவந்து ஆட்கொள்ளப்பெற்ற அதிசைவராகிய சுந்தரமூர்த்திநாயனார்" என்றாள். அது கேட்ட பரவையார் "நமது ஆண்டவருக்கு உரிய அடியவரோ" என்று சொல்லி, சுந்தரமூர்த்திநாயனார்மேல் முன் வைத்த ஆசை மேன்மேலும் வளரச் சயனத்தின் மேல் விழுந்து புலம்பினார். அப்பொழுது சிவபிரானானவர் பரவையாரைச் சுந்தரமூர்த்திநாயனாருக்கு விவாகஞ்செய்து கொடுக்கும்படி அடியார்களுக்குக் கட்டளையிட்டு, சுந்தரமூர்த்திநாயனாரிடத்திற் சென்று "உனக்குப் பரவையை விவாகஞ்செய்து தரும்படி நம்முடைய அடியார்களுக்கு ஆஞ்ஞாபித்தோம்" என்று அருளிச்செய்து, பரவையாரிடத்திலும் போய், 'உனக்கும் சுந்தரனுக்கும் விவாகம் நடக்கும்" என்று சொல்லியருளினார். மற்றநாள் உதயகாலத்திலே சிவபத்தர்கள் எல்லாருங் கூடி வந்து, சுந்தரமூர்த்திநாயனாருக்குப் பரவையாரை விதிப்படி விவாகஞ்செய்து கொடுத்தார்கள்.

சுந்தரமூர்த்திநாயனார், பரவையாரோடுகூடி வாழ்ந்திருக்குங் காலத்திலே, ஒருநாள் திருக்கோயிலை அடைந்தபோது, தேவாசிரய மண்டபத்திலே சிவனடியார்கள் கூடியிருந்ததைக் கண்டு, அவர்கள்மேலே பத்தி மிகுந்து, "இவர்களுக்கு நான் அடியனாகும் நாள் எந்நாள்" என்று நினைத்துக்கொண்டு, சுவாமி தரிசனஞ் செய்வதற்குத் திருக்கோயிலினுள்ளே போனார். அப்பொழுது, அடியார்க்கு அடியனாகவேண்டுமென்று அவர் விரும்பிய வரத்தைக் கொடுக்கும்பொரு

ட்டு, சுவாமி அவருக்குக் காட்சி கொடுத்தருளி, "நீ நம்முடைய அடியார்களை வணங்கி அவர்கண்மேலே பதிகம் பாடு" என்று அருளிச்செய்ய; சுந்தரமூர்த்திநாயனார் வணங்கி நின்று, "சுவாமீ, அடியார்களுடைய வரலாறு இன்னது என்னும் அவர்கள் தன்மை இப்படிப் பட்டது என்னும் அறியாத தமியேன் எப்படிப் பாடுவேன்? அவர்களைக் குறித்துப் பாடுஞ் சத்தியைச் சர்வஞ்ஞத்துவம் உடைய தேவரீரே அடியேனுக்கு அருளிச்செய்யவேண்டும்" என்று பிரார்த்தித்தார் சுவாமி அதற்கு இசைந்து, அடியார்களுடைய வழித்தொண்டு அவருக்குத் தெரியும்படி செய்து, உலகத்தார் உய்யும் வண்ணம் வேதசிவாகமங்களை அருளிச்செய்த தமது அருமைத் திருவாக்கினாலே "தில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேன்" என்று அடியெடுத்துக் கொடுத்து மறைந்தருளினார் அது கண்டு, சுந்தரமூர்த்திநாயனார் புறப்பட்டுத் தேவாசிரிய மண்டபத்தை அடைந்து, அடியார் திருக்கூட்டத்தைப் பலமுறை வணங்கி, அந்த அடியார்கள் யாவர்க்கும் வெவ்வேறாக அடியேன் அடியேன் என்று திருத்தொண்டத்தொகை என்னுந் திருப்பதிகம் பாடி, அவர்களை வணங்கினார்.

---

திருவாரூர்த் திருப்பதிகம் - ஙச.

---

சுவாமிதிருநாமம் - வனமீகநாதர்.
தேவிதிருநாமம் - அல்லியங்கோதை.

---

ஆ திருப்பதிகம் - உருக

---

# அஅ. திருவாரூரறநெறி.

## திருநாவுக்கரசுநாயனார்.

பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

எத்தீபுகினுமெமக்கொருதீதிலை
தெத்தேயெனமுரன்றெமமுளுழிதர்வா
முத்தீயனையதொர்மூவிலைவேலபிடித
தத்தீநிறத்தாரரநெறியாரே. (க)

வீரமும்பூண்பர்விசயனொடாயதொர்
தாரமும்பூண்பர்தமக்கன்புபட்டவர்
பாரமும்பூண்பர்படைக்கணிளிரர
வாரமும்பூண்பராரநெறியாரே (உ)

தஞ்சவண்ணத்தர்சடையினர்தாமுமொர்
வஞ்சவண்ணத்தர்வண்டார்குழலாளொடுந
துஞ்சவண்ணத்தர்துஞ்சாதகண்ணார்தொழு
மஞ்சவண்ணத்தராரநெறியாரே. (ஙு)

விழித்தனர்காமனைவீழ்தரவிண்ணின்
றிழிததனாகங்கையையேத்தினாபாவங
கழித்தனாகல்சூழகடியரண்மூன்று
மழித்தனராரூரரநெறியாரே. (௪)

துறறவாவெணடலையிறசுருளகோவணந
தற்றவாதமவினையானவெலாமற
வற்றவராரூரரநெறிகைதொழ
வுற்றவர்தாமொளிபெறறனாதாமே. (௫)

கூடரவததாகுரறகிண்கிணியடி
நீடரவத்தாமுன்மாலையிடையிருள்
பாடரவததாபணமஞசுபைவிரித
தாடரவததாரநெறியாரே. (௬)

கூடவலலாகுறிப்பிலலுமையாளொடு
பாடவல்லாபயின்றநதியுஞசநதியு
மாடவலலாதிருவாரூரரநெறி
நாடவலலாவினைவீடவலலாரே. (௭)

பாலைநருபனிவெணமதிபைஙகொனறை
மாலையுஙகண்ணியுமாவனசேவடி
காலையுமாலையுஙகைதொழுவாரமன
மாலயமாரூரரநெறியாரகசே. (௮)

முடிவணணமவானமினவணணநதமமாாபிற
பொடிவணணநதமபுகழாதியினவணணம
படிவணணமபாறகடல்வணணஞசெஞஞாயி
றடிவணணமாரூரரநெறியாரகசே (௯)

பெருன்னவில்புன்சடையானடியின்னிழ
லினனருளசூடியெள்காதுமிராபபகன
மனனவாகின்னராவானவாதாநதொழு
மனனவராரூரரநெறியாரே. (௧0)

பொருணமனனனைபபறறிப்புடபகஙகொண்ட
மருணமனனனையெறறிவாளுடனீநது
கருண்மனனுகணடஙகறுததநஞசுணட
வருணமனனராரூரரநெறியாரே. (௧௧)

திருசசிற்றம்பலம்.

---

## திருததாண்டகம.

---

திருச்சிற்றம்பலம்.

பொருங்கைமதகரியுரிவைபபோாவையானைப்
பூவணமுமவலஞசுழியுமபொருந்தினானைக்
கரும்புதருகடடியையின்னமிாதைத்தேனைக்
காண்பரியசெழுஞசுடரைக்கனகக்குன்றை

யிருஙகனகமதிலாரூாமூலடடானத்
தெழுநதருளியிருநதானையிமையோாதது
மருநதவனையரநெறியிலபபனறன்னை
யடைநதடியேனருவினைநோயறுத்தவாறே. (க)

கறபகமுமிருசுடருமாயினானைக
காளத்திகயிலாயமலையுளானை
விற்பயிலுமதனழியவிழிததான்றன்னை
விசயனுககுவேடுவனாய்நினறானறன்னைப
பொற்பமருமபொழிலாரூாமூலடடானம்
பொருநதியவெம்பெருமானைபபொருநதாாசிநதை
யற்புதனையரநெறியிலபபனறனனை
யடைநதடியேனருவினைநோயறுததவாறே. (உ)

பாதியொருபெண்முடிமேற்கஙகையானைப்
பாசூாபரஙகுன்றமேயானறனனை
வேதியனைததனனடியாாககெளியான்றன்னை
மெயஞ்ஞானவிளககானைவிரையோநாறும
போதியலும்பொழிலாரூாமூலட டானம
புற்றிடஙகொண்டிருநதானைப்போறறுவாாக
ளாதியனையரநெறியிலபபனறனனை
யடைநதடியேனருவினைநோயறுததவாறே. (ங)

நநதிபணிகொணடருளுநமபனறனனை
நாகேசசரமிடமாநணணினானைச
சநதிமலரிட்டணிநதுவானோாதது
ததுவனைசசக்கரமாறகீநதானறனனை
யிநதுநுழைபொழிலாரூாமூலடடான
மிடஙகொணடபெருமானையிமையோாபோறறு
மநதணனையரநெறியிலபபனறனனை
யடைநதடியேனருவினைநோயறுததவாறே (ச)

சுடாபபவளத்திருமேனிவெணணீறறானைச
சோதிலிங்கநதூஙகானைமாடததானை
விடககிடுகாடிடமாகவுடையான்றனனை
மிககரணமெரியூடடவலலான்றனனை
மடற்குலவுபொழிலாரூாமூலடடான
மனனியவெம்பெருமானைமதியாாவேளவி
யடாத்தவனையரநெறியிலபபனறன்னை
யடைநதடியேனருவினைநோயறுததவாறே. (ரு)

தாயவனையெவ்வுயிாககுநதனனொப்பில்லாத
தகுதில்லைநடமபயிலுநதலைவன்றன்னை
மாயவனுமலரவனுமவானோாதத
மறிகடனஞ்சுண்டுகநதமைநதன்றன்னை
மேயவனைப்பொழிலாரூாமூலட்டானம்
விரும்பியவெமபெருமானையெலலாமுனனே

திருநாவுக்கரசுநாயனாரும், திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரும் வேதாரணியத்தை அடைந்து, வேதங்களாலே திருக்காப்புச் செய்யப்பட்ட திருக்கதவு திறக்கவும் அடைக்கவும் பாடி, மடாலயத்தை அடைந்தபின், திருநாவுக்கரசு நாயனார், தாந்திருப்பதிகம் முழுதும் பாடியபின்னே திருக்கதவு திறந்த அருமையையும், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் முதற்பாட்டைப் பாடினவுடனே கதவு அடைத்த எளிமையையும் நினைந்து, "சிவபிரானுடைய திருவுள்ளம் இதுவென்று அறியமாட்டாமல் அயர்கின்றேன்" என்று கவன்று மிக அஞ்சி, மடாலயத்தில ஒருபக்கத்திலேபோய, வேதாரணியேசுரருடைய திருவடிகளைச் சிந்தித்துக்கொண்டு அருநித்திரை செய்தார் அப்பொழுது சிவபிரான் அவரிடத்திற் சென்று, "நாம் வாய்மூரில் இருப்போம் அவவிடத்திற்குத் தொடர்ந்து வா" என்று அருளிச செய்தார் அப்பமூர்த்தி "எங்கே யென்னை யிருந்திடந் தேடிக்கொண்——டங்கே வந்தடை யாள மருளினார்—தெங்கே தோன்றுந் திருவாய்மூர்ச் செல்வனா—ரங்கே வாவென்று போனார தென்கொலோ" என்னுந் திருப்பதிகம் பாடிக்கொண்டு எழுந்து, வேதாரணியத்தினின்றும் புறப்பட்டு விரைந்து போக, சுவாமி அவருக்குமுன்னாகத் தாம் அவருக்கு முன்காட்டியருளிய திருக்கோலத்தோடும் நடந்தருளினார் அப்பொழுது சிவபிரானுக்குப் பின்னாகச் செலகின்ற அப்பமூர்த்தி அவரைச சமீபிக்கப் பெற்றிலா சுவாமி சமீபத்திலே காட்சி கொடுப்பவாபோல ஒரு திருக்கோயிலை எதிரே காண்பித்து, அதனுள்ளே புகுந்தருள, அப்பமூர்த்தியும அவவிடத்திலே விரைந்து தொடர்ந்தார, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரும அப்பமூர்த்தி திருவாய்மூருக்குப் போகின்றார என்று கேள்வியுற்று, வந்து சேர்ந்தார அப்பமூர்த்தி சுவாமி மறைந்தமையைக் குறித்துத் துக்கித்து, "அடியார்களிற சிறந்த திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரோ திறக்கவேணடும் என்பதை நினையாமல திறந்து குற்றஞ்செய்த சிறியேனுக்கு ஒளிக்கலாம் ஒருதிருப்பதிகத்தின் முதற் பாட்டாலேயே திருக்கதவை அடைப்பித்த திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் இங்கே வந்திருக்கின்றார அவருக்கு எப்படி ஒளிக்கலாம என்றார" உடனே சிவபிரான் ஸ்ரீஞானசம்பந்த மூர்த்திக்குக் காட்சி கொடுத்தருளினார ஸ்ரீஞான சம்பந்த மூர்த்தி தரிசித்து ஸ்தோத்திரமபணணி, ஸ்ரீவாகீசமூர்த்தியும் காணும்படி காட்ட; ஸ்ரீவாகீசமூர்த்தியும தரிசித்து, "பாடவடியார பரவககணடேன" என்னும திருப்பதிகம் பாடினார் சுவாமி அந்தத் திருப்பதிகத்தைக் கேட்டுக்கொண்டு எழுந்தருள, நாயனமார இருவரும திருவாயமூரை அடைந்து, சுவாமி தரிசனஞ் செய்துகொணடு, சிலநாள அங்கிருந்து, பின வேதாரணியத்துக்குத் திரும்பி வந்து, அங்கே சுவாமி தரிசனஞ்செய்து கொண்டிருந்தார்கள

---

திருவாய்மூர்த் திருப்பதிகம ௩.

---

சுவாமிதிருநாமம - வாய்மூர் நாதர்.

தேவிதிருநாமம - பாலினுநன்மொழியாள

---

ஆ திருப்பதிகம - ௩0௪

# ௧௨௫. திருமறைக்காடு.*

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

### திருவிராகம்

பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்

சிலைதனைநடுவிடைநிறுவியொர்சினமலியரவதுகொடுதிவி
தலமலிசுரரசுரர்களொலிசலசலகடல்கடைவுழிமிகு
கொலைமலிவிடமெழவவருடல்குலைதரவதுநுகர்பவனெழின்
மலைமலிமதில்புடைதழுவியமறைவனமமர்தருபரமனே (௧)

கரமுதலியவவயவமவைகடுவிடவரவதுகொடுவரு
வரன்முறையணிதருமவனடலவலிமிகுபுலியதளுடையின
னிரவலர்துயர்கெடுவகைநினையிமையவர்புரமெழில்பெறவளர்
மரநிகர்கொடைமனிதர்கள்பயின்மறைவனமமர்தருபரமனே. (௨)

இழைவளர்தருமுலைமலைமகளினிதுறைதருமெழிலுருவினன்
முழையினின்மிகுதுயிலுறுமரிமுசுவொடுமெழமுளரியொடெழு
கழைநுகர்தருகரியிரிதருகயிலையின்மலிதவனிருணிறு
மழைதவழ்தருபொழினிலவியமறைவனமமர்தருபரமனே. (௩)

நலமிகுதிருவிதழியின்மலர்நகுதலையொடுகனகியினமுகை
பலசுரநதிபடவரவொடுமதிபொதிசடைமுடியினன்மிகு
தலநிலவியமனிதர்களொடுதவமுயறருமுனிவர்கடம
மலமறுவகைமனநினைதருமறைவனமமர்தருபரமனே. (௪)

கதிமலிகளிறதுபிளிறிடவுரிசெய்தவதிகுணனுயர்பசு
பதியதன்மிசைவருபசுபதிபலகலையவைமுறைமுறையுணர்
விதியறிதருநெறியமர்முனிகணனொடுமிகுதவமுயர்தரு
மதிநிபுணர்கள்வழிபடவளர்மறைவனமமர்தருபரமனே. (௫)

கறைமலிதிரிசிகைபடையடல்கனன்மழுவெழுதரவெறிமறி
முறைமுறையொலிதமருகமுடைதலைமுகிழ்மலிகணிவடமுக
முறைதருகரனுலகினிலுயரொளிபெறுவகைநினைவொடுமலர்
மறையவனமறைவழிவழிபடுமறைவனமமர்தருபரமனே. (௬)

இருநிலனதுபுனலிடைமடிதரவெரிபுகவெரியதுமிகு
பெருவளியினிலவிதரவளிகெடவியனிடைமுழுவதுகெட
விருவர்களுடல்பொறையொடுதிரியெழிலுருவுடையவனினமலர்
மருவியவறுபதமிசைமுரன்மறைவனமமர்தருபரமனே. (௭)

சனமவெருவுறவருதசமுகனொருபதுமுடியொடுமிருபது
கனமருவியபுயநெரிவகைகழலடியிலொர்விரனிறுவின்
னினமலிகணநிசிசரன்மகிழ்வுறவருள்செய்தகருணையனென
மனமகிழ்வொடுமறைமுறையுணர்மறைவனமமர்தருபரமனே. (௮)

* திருமறைக்காடு என்பது வேதாரணியம்.

அணிமலாமகடலைமகனயனறிவரியதொா பரிசினிலெரி
திணிதருதிரளுருவளாதரவவாவெருவுறலொடுதுதிசெயது
பணியுறவெளியுருவியபரனவனுறைமலிகடறிரளெழு
மணிவளரொளிவெயினிமிருதருமறைவனமமாதருபரமனே. (௯)

இயல்வழிதரவிதுசெலவுறவினமயிலிறகுறுதழையொடு
செயன்மருவியசிறுகடமுடியடைகையாதலைபறிசெயதுதவ
முயலபவாதுவாபடமுடல்பொதிபவரறிவருபரனவனணி
வயலினில்வளைவளமருவியமறைவனமமாதருடரமனே. (௧௦)

வசையறுமலாமகணிலவியமறைவனமமாபரமனைநினை
பசையொடுமிகுகலைபலபயில்புலவாகளபுகழ்வழிவளாதரு
விசையமாசமுமலநகரிறைதமிழ்விரகனதுரையியலவல
விசைமலிதமிழொருபதும்வலவவருடிைனிலெழில்பெறுவரே (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

சதுரமமறைதான்றுதிசெயதுவணங்கு
மதுரமபொழில்சூழ்மறைக்காடுறைமைந்தா
விதுநனகிறைவைததருளசெயகவெனககுன்
கதவநதிருககாபபுககொளளுங்கருத்தாலே (௧)

சங்கநதரளமமவைதானகரைக்கெற்றும்
வங்கககடலசூழமறைககாடுறைமைநதா
மங்கையுமைபாகமுமாகவிதெனகொல
கங்கைசடைமேலடைவித்தகருததே. (௨)

குரவங்குருக்கததிகள்புனனைகஞாழல
மருவுமபொழில்சூழமறைககாடுறைமைநதா
சிரமும்மலருநதிகழசெஞ்சடைதனமே
லரவம்மதியோடடைவிததலழகே. (௩)

படாசெம்பவளததொடுனமலாமுத்த
மடலமபொழிலசூழமறைக்காட்டுறைமைநதா
வுடலமமுமைபஙகமதாகியுமெனகொல
கடனஞசமுதாவதுவுண்டகருததே. (௪)

வானோமறைமாதவ ததோாவழிபடட
தேனாபொழில்சூழமறைககாடுறைசெலவா
வேனோதொழுதேதத்தவிருநதரியெனகொல
கானாகடுவேடுவனனகருததே. (௫)

பலசாலங்களவேதங்கள்பாதங்கள்போற்றி
மலரால்வழிபாடுசெய்மாமறைக்காடா
வுலகேழுடையாய்கடைதோறுமுன்னென்கொ
றலைசோபலிகொணடதிலுணடதுதானே. (௬)

வேலாவலயத்தயலேமிளிர்வெய்துஞ்
சேலார்திருமாமறைக்காடுறைசெல்வா
மாலோடயனிந்திரனஞ்சமுனென்கொல
காலார்சிலைக்காமனைக்காய்ந்தகருத்தே. (௭)

கலங்கொளகடலோதமுலாவுகரைமேல்
வலங்கொளபவர்வாழ்ததிசைக்குமமறைக்காடா
விலங்கையுடையானடர்ப்பட்டிடரெய்த
வலங்கல்விரலூன்றியருள்செய்தவாறே. (௮)

கோனென்றுபல்கோடியுருத்திரர்போற்றுந
தேனமபொழில்சூழ்மறைக்காடுறைசெல்வா
ஏனங்கழுகானவருன்னைமுனெனகொல்
வானந்தலமண்டியுங்கண்டிலாவாறே. (௯)

வேதம்பலவோமமவியந்தடிபோற்ற
வோதமமுலவுமமறைக்காட்டிலுறைவா
யேதில்சமண்சாக்கியர்வாக்கிவையெனகொ
லாதனொடுதாமலர்தூற்றியவாறே (௧௦)

காழிநகரான்கலைஞானசம்பந்தன
வாழிம்மறைக்காடனைவாய்ந்தறிவித்த
வேழினனிசைமாலையீரைந்திவைவல்லா
வாழியுலகோர்தொழவானடைவாரே (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரும், திருநாவுக்கரசுநாயனாரும் வேதாரணியத்தை அடைந்து வேதங்களாலே திருக்காப்புச் செய்யப்பட்ட திருக்கதவு திருநாவுக்கரசுநாயனார் பாடிய திருப்பதிகத்தினாலே திறக்கப்பட்டு, சுவாமிதரிசனஞ் செய்தபின், ஸ்ரீவாகீசமூர்த்தி ஸ்ரீஞானசம்பந்தமூர்த்தியை நோக்கி, "எம்பெருமானுடைய திருவருளினாலே இந்தத்திருக்கதவு திறக்கப்பட்டும் அடைக்கப்பட்டும் என்றும் வழங்கும்பொருட்டுத் தேவரீர் இது அடைக்கப்படும்படி திருப்பதிகம் பாடியருளும்" என்றார். ஸ்ரீஞானசம்பந்தசுவாமிகள் திருப்பதிகத்திலே "சதுரம்மறை" என்னும் முதற்றிருப்பாட்டுப் பாடியமாத்திரத்தில திருக்கதவு அடைக்கப்பட்டது அது கண்டு நாயன்மார் இருவரும் திருவருளை வியந்து களிப்புற்று வணங்கினார்கள் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தாம் எடுத்த திருப்பதிகத்தை முடித்தருளினார் அன்று தொடங்கி அந்தத்திருக்கதவு திறத்தலும அடைத்தலுமாகிய வழக்கம என்றும் நிகழ்ந்தது அங்கே நிகழ்ந்த அற்புதத்தைக்கண்ட அடியார்கள் அனைவரும் ஆச்சரியங்கொண்டு, உரோமாஞ்சங்கொள்ள, கண்ணீர்சொரிய, நாயன்மாரிருவருடைய திருவடிகளினும் விழுந்து நமஸ்கரித்தார்கள்

---

பண - பியந்தைககாநதாரம

---

திருச்சிற்றம்பலம்.

பொங்குவெண்மணறகானற்பொருகடறறிரைதவழமுத்தங
கஙகுலாரிருளபோழுஙகலிமறைககாடமர்நதார்தாம
திஙகள்சூடினரேனுநதிரிபுரமெரித்தனரேனு
மெஙகுமெஙகளபிரானார்புகழலதிகழபழியிலரே. (௧)

கூனிளம்பிறைசூடிக்கொடுவரித்தோலுடையாடை
யானிலஙகிளரநதுமாடுவார்பூண்பதுமரவங
கானலங்கழியோதங்கரையொடுகதிர்மணிததுமபத்
தேனலஙகமழ்சோலைததிருமறைககாடமர்நதாரே. (௨)

நுண்ணிதாய்வெளிதாகிநூல்கிடநதிலஙகுபொன்மார்பிற்
பண்ணியாழெனமுரலுமபணிமொழியுமையொருபாகன
றண்ணிதாயவெள்ளருவிசலசலநுரைமணிததுமபக
கண்ணிதானுமொர்பிறையார்கலிமறைககாடமர்நதாரே (௩)

ஏழைவெணகுருகயலேயிளமபெடைதனதெனககருதித
தாழைவெணமடறபுல்குநதணமறைககாடமர்நதார்தா
மாழையஙகயலொணகணமலைமகளகணவனதடியி
னீழலேசரணாகநினைபவர்வினைநலிவிலரே. (௪)

அரவமவீக்கியவரையுமதிர்கழறறழுவியவடியும்
பரவநாளுஞ்செய்தபாவமபறைதரவருளுவர்பதிதான
மரவநீடுயர்சோலைமழலைவணடியாழசெயுமறைககாட
டிரவுமெல்லியுமபகலுமேததுதல்குணமெனலாமே. (௫)

பலலிலோடுகையேநதிபபாடியுமாடியுமபலிதேர
ரல்லலவாழககையரேனுமழகியதறிவரெமமடிகள
புலலமேறுவர்பூதமபுடைசெலவுழிதர்வர்ககிடமா
மல்குவெணடிரையோதமாமறைக்காடதுதானே. (௬)

நாகந்தான்கயிறாகநளிர்வரையதறகுமததாகப
பாகநதேவரொடசுரர்படுகடலளறெழக்கடைய
வேகநஞ்செழவாஙகேவெருவொடுமிரிநதெஙகுமோட
வாகநதன்னிலவைத்தமிர்தமாககுவிததவனமறைககாடே. (௭)

தககன்வேள்வியைத்தகர்ததோன்றனதொருபெருமையையோரான
மிக்குமேறசென்றுமலையையெடுததலுமலைமகணடுஙக
நககுததன்றிருவிரலாலூன்றலுநடுநடுததரக்கன்
பக்கவாயுமவிட்டலறபபரிநதவன்பதிமறைக்காடே. (௮)

விண்டமாமலரோனுமவிளஙகொளியரவணையானும்
பணடுங்காண்பரிதாயபரிசினனவனுறைபதிதான
கணடலங்கழியோதஙகரையொடுகதிர்மணிததுமப
வண்டலஙகமழ்சோலைமாமறைக்காடதுதானே. (௯)

பெரியவாகியகுடையுமபீலியுமவைவெயிறகரவாக
கரியமண்டைகையேந்திக்கலலெனவுழிதருங்கழுக்க
ளரியவாகவுணடோதுமவாதிறமொழிநதுநம்மடிகள்
பெரியசீரமறைககாடேபேணுமினமனமுடையீரே. (கo)

மையுலாமபொழிலசூழநதமாமறைக்காடமாந்தாரைக
கையினுற்றெழுதெழுவான்காழியுண ஞானசமபநதன
செய்தசெநதமிழ்பத்துஞசிநதையுட்சேர்க்கவல்லாாபோயப்
பொய்யிலவரினவரோடுமபுகவலாகொளவலாபுகழே. (கக)

திருச்சிற்றம்பலம

## திருவிராகம்.

பண - சாதாரி.

திருசசிற்றமபலம்

கறபொலிசுரத்திளெரிகானினிடைமாநடமதாடிமடவா
ரிறபலிகொளபபுகுதுமெநதைபெருமானதிடமெனப புவிமேன
மறபொலிகலிக்கடனமலைககுவடெனததிரைகொழிததமணியை
விறபொலிநுதறகொடியிடைக்கணிகைமாாகவருமவேதவனமே. (க)

பணடிரைபவுபபுனரியிறகனகமாலவரையைநட்டரவினைக
கொணடுகயிறறகடையவநதவிடமுண்டகுழகனறனிடமாம
வணடிரைநிழற்பொழிலின்மாதவியினமீதணவுதென்றல்வெறியாா
வெண்டிரைகளசெமபவளமுநதுகடலவநதமொழிவேதவனமே. (உ)

காரியன்மெலோதிநதிமாதைமுடிவாாசடையிலவைததுமலையாா
நாரியொருபானமகிழுநமபருறைவெனபாநெடுமாடமறுகிற
றேரியல்விழாவினொலிதிண்பணிலமொன்படகநாளுமிசையால
வேரிமலிவாாகுழனமாதரிசைபாடலொலிவேதவனமே. (ஙு)

நீறுதிருமேனியின்மிசைத்தொளிபெறததடவிவநதிடபமே
யேறியுலகஙகடொறுமபிசசைநுகரிசசையரிருநதபதியா
மூறுபொருளின்றமிழியறகிளவிதேருமடமாதருடனா
வேறுதிசையாடவாகளகூறவிசைதேருமெழிலவேதவனமே (சு)

கத்திரிகைதுத்திரிகறஙகுதுடிதக்கையொடிடககைபடக
மெததனையுலபபிலகருவிததிரளலம்பவிமையோாகள்பரச
வொத்தறமிதித்துநடமிட்டவொருவாககிடமதெனபருலகின
மெய்ததகையபத்தரொடுசித்தாகண்மிடைநதுகளும்வேதவனமே. (ரு)

மாலைமதிவாளரவுகொன்றைமலாதுன்றுசடைநின்றுசுழலக
காலையிலெழுந்தகதிாதாரகைமடஙகவனலாடுமரனாா
சோலையின்மரஙகடொறுமிணடியினவண்டுமதுவுண்டிசைசெய
வேலையொலிசங்குதிரைவங்கசுறவங்கொணருமவேதவனமே. (சு)

வஞ்சகமனத்தவுணர்வல்லரணமன்றவியவாசிலைவளைத்
தஞ்சகமவித்தவமரர்க்கமரன்றிபெருமானதிடமாந்
இஞ்சுகவிதழ்க்கனிகளூறியசெவாயவர்களபாடலபயில
விஞ்சகவியக்காமுனிவர்க்கணிநிறைந்துமிடைவேதவனமே. (எ)

முடித்தலைகள்பத்துடைமுருட்டுருவரக்கனைநெருக்கிவிரலா
லடித்தலமுன்வைத்தலமரக்கருணைவைத்தவனிடமபலதுயா
கெடுத்தலைநினைத்தறஞ்சுறறுதலகிளாந்துபுலவாணாவறுமை
விடுத்தலைமதித்துநிதிநலகுமவாமலகுபதிவேதவனமே. (அ)

வாசமலாமேவியுறைவானுநெடுமாலுமறியாதநெறியைச்
கூசுதலசெயாதவமணதொடுதேராகுறுகாதவரனூர
காசுமணிவாாகனகநீடுகடலோடுதிரைவாாதுவலைமேல
வீசுவலைவாணரவைவாரிவிலைபேசுமெழிலவேதவனமே. (௯,௧0

மந்தமுரவங்கடலவளங்கெழுவுகாழிபதிமன்னுகவுணி
வெந்தபொடிநீறணியுமவேதவனமேவுசிவனின்னருளினற
சந்தமிவைதணடமிழினினிசையெனபபரவுபாடலுலகிற் |
பந்தனுரைகொண்டுமொழிவாாகளபயிலவாாகளுயாவானுலகமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

ஓதமாலகடல்பரவியுலகெலா
மாதராாவலஞ்கொணமறைக்காடரைக
காதலசெயதுகருதப்படுமவா
பாதமேத்தப்பறையுநமபாவமே (௧)

பூக்குந்தாழைபுறணியருகெலா
மாக்குந்தானுடைமாமறைக்காடரோ !
வாாகருங்காணபரியீரடியாாதமமை
நோக்கிககாண்பதுநமபணிசெய்யிலே. (௨)

புன்னைஞாழலபுறணியருகெலா
மன்னினாவலஞ்கொண்மறைக்காடரோ
வன்னமென்னடையாளையொாபாகமாச
சின்னவேடமுகப்பதுசெலவமே. (௩)

அட்டமாமலர்சூடியடம்பொடு
வட்டப்புன்சடைமாமறைக்காடரோ
நட்டமாடியுநான்மறைபாடியு
மிட்டமாகவிருக்குமிடமிதே. (௪)

மெய்த்தலாம்பணிறைவயலசூழ்தரு
மெய்யினாவலங்கொணமறைக்காடரோ
தையலபாகங்கொண் டாகவாபுனசடைப
பைதலவெணபிறைபாம்புடன்வைபபதே. (௫)

துஞ்சும்போதுந்துயிலினறியேததுவார
வஞ்சினறிவலங்கொண்மறைக்காடரோ
டஞ்சினமெல்லடிப்பாவைபலிகொணாந
தஞ்சிரிப்பதுமைந்தலைநாகமே. (௬)

விண்ணுளாரவிருமபியெதிர்கொளளவே
மணணுளாரவணங்குமமறைககாடரோ
கண்ணிறனுமைக்காணக்கதவினைத
திண்ணமாகததிறநதருள்செயமமினே. (௭)

திருவினாசெலவமலகுவிழாவணி
மருவினாவலங்கொணமறைககாடரோ
வுருவினாளுமையாளையொாபாகமாய
மருவினாயகங்கையைசசெனனிதனனிலே. (௮)

சங்குவந்தலைக்குநதடங்கானலவாய
வங்கமாாவலங்கொணமறைககாடரோ
கங்கைசெஞ்சடைவைடடதுமனறியே
யங்கையிலலனலேநதலழகிதே (௯)

மறைக்காட்டானவிட்டதோகுததமாமலை
யிறைககாடழியெடுத்தானறலையீைாநது
மறைககாடடானிறையூனறுமவாயவிட்டா
னிறைககாடடாயெமபிரானுனையேததவே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

## திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

பண்ணினேர்மொழியாளுமைபங்கரோ
மண்ணினாவலஞ்செயமறைககாடரோ
கண்ணினாலுமைககாணககதவினைத
திண்ணமாகததிறநதருளசெயமமினே. (௧)

கண்டுசெஞ்சடையாகததுளீசரோ
மூண்டகாரமுகிலினமுறிககண்டரோ
வாண்டுகொண்டநீரேயருளசெயதிடு
நீணடமாக்கதவினவலிநீககுமே. (௨)

அட்டமூாததியதாகியவபபரோ
துட்டர்வானபுரஞ்சுட்டசுவண்டரோ
பட்டங்கட்டியசெனனிப்பரமரோ
சட்டவிக்கதவந்திறப்பிமமினே. (௩)

அரியமாமறையோதியநாவரோ
பெரியவான்புரஞ்சுட்டசுவண்டரோ
விரிகொள்கோவணவாடைவிருத்தரோ
பெரியவான்கதவம்பிரிவிக்கவே. (௪)

மலையினீடிருக்கும்மறைக்காடரோ!
கலைகளவந்திறைஞ்சுங்கழலேத்தரோ
விலையின்மாமணிவண்ணவுருவரோ
தொலைவிலாக்கதவந்துணைநீக்குமே (௫)

பூக்குந்தாழைபுறணியருகெலாம்
மாக்குந்தண்பொழில்சூழ்மறைக்காடரோ
வாக்குங்காணபரியீரடிகேளுமை
நோக்கிக்காணக்கதவைத்திறவுமே (௬)

வெந்தவெண்பொடிப்பூசும்விகிர்தரோ
வந்தமில்லியணிமறைக்காடரோ
வெந்தைநீயடியாரவந்திறைஞ்சிட
விந்தமாகக்கதவம்பிணிநீக்குமே (௭)

ஆறுசூடுமணிமறைக்காடரோ
கூறுமாதுமைக்கீந்தசூழகரோ
வேறுதேறியவெம்பெருமானிந்த
மாறிலாக்கதவம்வலிநீக்குமே (௮)

சுண்ணவெண்பொடிப்பூசுஞ்சுவண்டரோ
பண்ணியேறுகந்தேறும்பரமரோ
வண்ணலாதியணிமறைக்காடரோ
திண்ணமாகக்கதவந்திறப்பிம்மினே (௯)

அரக்கனைவிரலாலடர்த்திட்டநீ
ரிரக்கமொன்றிலீரெம்பெருமானிரோ
சுரக்கும்புன்னைகள்சூழ்மறைக்காடரோ
சரக்கவிக்கதவந்திறப்பிம்மினே. (௰)

திருச்சிற்றம்பலம்

---

திருநாவுக்கரசு நாயனாரும், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரும் திருவீழிமிழலையினின்றும் நீங்கி, திருவாஞ்சியமுதலிய ஸ்தலங்களை வணங்கிக்கொண்டு, வேதாரணியத்தை அடைந்து, ஆலயத்திலே பிரவேசித்து வலஞ்செய்து, வேதங்கள் அருச்சித்துத் திருக்காப்புச் செய்த அந்நாண்முதல் இந்நாள் வரைக்கும் அடைக்கப்பட்டேயிருக்கின்ற திருக்கதவுக்கு முன் வந்து, வேதங்களாலே திருக்காப்புச் செய்யப்பட்ட அத்திருக்கதவை அடியார்கள் நீக்கப் பெறாமையினாலே வேறோர் பக்கத்திலே ஓர் வாயிலிட்டு அதன் வழியே செல்கின்றார்கள் என்பதைக் கேட்டறிந்தார்கள் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருநாவுக்கரசு நாயனாரை நோக்கி "அப்பரே, நாம் எப்படியும் சுவாமியை அபிமுகத் திருவாயில் வழியே சென்று தரிசிக்கவேண்டும் ஆதலால் இந்தத் திருக்கதவு திறக்கப்படும் பொருட்டு நீரே திருப்பதிகம் பாடும்" என்றார். அப்பமூர்த்தி 'பண்ணினேர் மொழியாள்' என்னுந் திருப்பதிகத்தைக் கதவு திறக்கப்படும் பொருட்டுப் பாட, அது திறக்கப்படாமல் தாழ்த்தது. அதுகண்டு, "இரக்கமொன்

றிலீர்" என்று திருக்கடைக்காப்பிலே பாடி வணங்கினார் உடனே வேதாரணியேசுரருடைய திருவருளினாலே திருக்கதவு திறக்கப்பட்டது அப்பொழுது நாயன்மாரிருவரும் விழுந்து நமஸ்கரித்தார்கள் அடியார்களெல்லாரும் ஆனந்தகோஷஞ் செய்தார்கள் நாயன்மாரிருவரும் பேரின்ப வெள்ளத்திலே அமிழ்ந்தி எழுந்து, உள்ளே புகுந்து, சுவாமிதரிசனஞ் செய்து திருப்பதிகங்கள் பாடி அரிதில் வெளியே வந்தார்கள்

## திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

இநதிரனோடுதேவரிருடிகளேத்துகினற
சுநதரமானாரபோலுநதுதிகசலாஞசோதிபோலுஞ
சநதிரனோடுகஙகையாவையுஞசடையுளவைதது
மநதிரமானாரபோலுமாமறைககாடனாரே. (க)

தேயனநாடராகித்தேவாகடேவாபோலும்
பாயனநாடறுக்குமபததாகளடணியவம்மின
காயனநாடுகண்டஙகதனுளாாகாளகண்டா
மாயனநாடாபோலுமாமறைககாடனாரே. (உ)

அறுமையிவவுலகுதனனையாமெனககருதிகினறு
வெறுமையினமனைகளவாழநதுவினைகளானலிவுறுதே
சிறுமதியரவுகொனறைதிகழதருசடையுளவைதது
மறுமையுமிம்மையயாவாாமாமறைககாடனாரே. (ங)

காலகொடுததிருகையேறறிககழிநனாததிறைசசிமேயநது
தோலபடுததுதிரநீராறசுவரொடுததிரணடுவாச
லேலவுடைததாவமைததஙகேழுசாலேகம்பணணி
மாலகொடுததாவிவைததாமாமறைககாடனாரே. (ச)

விணணினாவிணணினமிககாாவேதஙகளவிரும்பியோதப்
பணணினாகினனாஙகளபததாகளபாடியாடக
கணணினாகணணினுளளேசோதியாயநினறவெநதை
மணணினாவலஙகொணடேததுமாமறைககாடனாரே (ரு)

அஙகையுளனலுமவைததாாறுவகைசசமயமவைததாா
தஙகையிலவீணைவைததாாதமமடிபரவவைததாா
திஙகளைககஙகையோடுதிகழதருசடையுளவைத்தாா
மஙகையைபபாகமவைததாாமாமறைககாடனாரே. (சு)

சிதராயக்கிதஙகேட்டுக்கினனாநதனனைவைததாா
வேதராய்வேதமோதிவிளஙகியசோதிவைததா
ரோதராய்நடடமாடியிடடமாய்ககஙகையோடு
மாதையோாபாகம்வைததாாமாமறைக்காடனாரே. (எ)

சனததினாவலியுடையகடிமதிலரணமூன்றுஞ
சினத்தினுட்சினமாய்நின்றுதீயெழசசெற்றாபோலுந
தனத்தினைத்தவிரநதுநின்றுதம்மடிபரவுவாாக்கு
மனத்தினுண்மாசுதீாப்பாாமாமறைக்காடனாரே. (அ)

தேசனைத்தேசன்றன்னைத்தேவர்கள்போற்றிசைப்பார்
வாசனைசெய்துநின்றுவைகலும்வணங்குமின்கள்
காசினைக்கனலையென்றுங்கருத்தினில்வைத்தவர்க்கு
மாசினைத்தீர்ப்பர்போலுமாமறைக்காடனாரே. (௯)

பிணியுடையாக்கைதன்னைப்பிறப்பறுத்துய்யவேண்டிற்
பணியுடைத்தொழில்கள்பூண்டுபத்தர்கள்பற்றினாலே
துணியுடையரக்கனோடியெடுத்தலுந்தோகையஞ்ச
மணிமுடிப்பத்திறுத்தார்மாமறைக்காடனாரே. (௰)

திருச்சிற்றம்பலம்

## திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

தேரையுமேல்கடாவித்திண்ணமாத்தெழுந்துநோக்கி
யாரையுமேலுணராவாண்மையான்மிக்கான்றன்னைப்
பாரையும்விண்ணுமஞ்சப்பரந்ததோண்முடியடர்த்துக்
காரிகையஞ்சலென்பார்கலிமறைக்காடனாரே (௧)

முக்கிமுன்வெகுண்டெடுத்தமுடியுடையரக்கர்கோனை
* நக்கிருந்தூன்றிச்சென்னிநாண்மதிவைத்தவெந்தை
யக்கரவாமைபூண்டவழகனார்கருத்தினாலே
தெக்குநீர்த்திரைகண்மோதுந்திருமறைக்காடனாரே (௨)

மிகப்பெருத்துலாவமிக்கானக்கொருதேர்கடாவி
யகப்படுத்தென்றுதானுமாண்மையான்மிக்கரக்க
னுகைத்தெடுத்தான்மலையையூன்றியுமவனையாங்கே
நகைப்படுத்தருளினானான்மறைக்காடனாரே. (௩)

அந்தரந்தேர்கடாவியாரிவனென்றுசொல்லி
யுந்தினான்மாமலையையூன்றலுமொள்ளரக்கன்
றந்தமாந்தலைகள்பத்துமவாய்கள்விட்டலறிவீழச்
சிந்தனைசெய்துவிட்டார்திருமறைக்காடனாரே. (௪)

தடுக்கவுந்தாங்கவொண்ணாத்தன்வலியுடையனாகிக்
கடுக்கவோர்தேர்கடாவிக்கையிருபதுகளாலு
மெடுப்பனென்றண்டமென்றெடுத்தானையேங்க
வடுக்கவேவல்லனூர்மணிமறைக்காடனாரே. (௫)

நாண்முடிக்கின்றசீரானடுங்கியேமீதுபோகா
கோள்பிடித்தார்த்தகையான்கொடியனமாவலியனென்று
நீண்முடிச்சடையர்சேருநீள்வரையெடுக்கலுற்றா
னீண்முடிநெரியவைத்தார்தொன்மறைக்காடனாரே. (௬)

பத்துவாயிரட்டிக்கைகளுடையனமாவலியனென்று
பொத்திவாய்த்தீமைசெய்தபொருவலியரக்கர்கோனைக்
கத்திவாய்க்கதறவன்றுகாலவிரலூன்றியிட்டார்
முத்துவாய்த்திரைகண்மோதுமுதுமறைக்காடனாரே. (௭)

* "நீக்கிரு" என்றும் பாடம்.

பக்கமேவிட்டகையான்பாங்கிலாமதியனாகிப்
புக்கனன்மாமலைக்கீழ்ப்போதுமாறறியமாட்டான்
மிக்கமாமதிகள்கெட்டுவீரமுமிழந்தவாறே
நக்கனபூதமெல்லாநான்மறைக்காடனாக்கே (அ)

நாணஞ்சுகையனாகிநன்முடிபத்தினோடு
பாணஞ்சுமுன்னிழந்துபாங்கிலாமதியனாகி
நீணஞ்சுதானுணராநின்றெடுத்தானையன்று
வேணஞ்சுகைகள்செய்தாரொழின்மறைக்காடனாரே. (௯)

கங்கைநீர்சடையுள்வைக்கக்காண்டலுமங்கையூடத்
தென்கையான்றேர்கடாவிச்சென்றெடுத்தான்மலையை
முன்கைமாநரம்புவெட்டிமுன்னிருக்கிசைகள்பாட
வங்கைவாளருளினானூரணிமறைக்காடுதானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

தூண்டுசுடரனையசோதிகண்டாய்
தொல்லமரர்சூளாமணிதான்கண்டாய்
காண்டற்கரியகடவுள்கண்டாய்
கருதுவார்க்காற்றவெளியான்கண்டாய்
வேண்டுவார்வேண்டுவதேயீவான்கண்டாய்
மெய்ந்நெறிகண்டாய்விரதமெல்லா
மாண்டமனத்தார்மனத்தான்கண்டாய்
மறைக்காட்டுறையுமணாளன்றானே. (௧)

கைகிளரும்வீணைவலவன்கண்டாய்
காபாலிகண்டாய்திகழுஞ்சோதி
மெய்கிளருஞானவிளக்குக்கண்டாய்
மெய்யடியாருள்ளத்துவித்துக்கண்டாய்
பைகிளருநாகமசைத்தான்கண்டாய்
பராபரன்கண்டாய்பாரூரான்கண்டாய்
வைகிளருங்கூர்வாட்படையான்கண்டாய்
மறைக்காட்டுறையுமணாளன்றானே. (௨)

சிலந்திக்கருண்முன்னஞ்செய்தான்கண்டாய்
திரிபுரங்கள்வேவப்படுத்தான்கண்டாய்
நிலந்துக்கநீர்வளிதீயானான்கண்டாய்
நிருபியரூபியுமாய்நின்றான்கண்டாய்
சலந்துக்கசென்னிச்சடையான்கண்டாய்
தாமரையான்செங்கண்மாறானேகண்டாய்
மலந்துக்கமால்விடையொன்றூர்ந்தான்கண்டாய்
மறைக்காட்டுறையுமணாளன்றானே. (௩)

கள்ளிமுதுகாட்டிலாடிகண்டாய
காலனையுங்காலாற்கடிந்தானகண்டாய
புள்ளியுழைமானின்றோலான்கண்டாய்
புலியுரிசேராடைப்புனிதனகண்டாய
வெள்ளிமிளிாபிறைமேறசூடிகணடாய்
வெண்ணீற்றன்கண்டாயநஞ்செநதின்மேய
வள்ளிமணாளற்குத்தாதைகண்டாய
மறைககாட்டுறையுமணாளன்றனே. (௪)

மூரிமுழங்கொலிநீராளுன்கண்டாய்
முழுத்தழலமோன்மேனிமுதல்வன்கணடா
யேரிநிறைநதனையசெல்வனகண்டா
யின்னடியாாக்கினபம்விளைபபான்கணடா
யாரியன்கண்டாய்தமிழனகண்டா
யண்ணாமலையுறையுமண்ணலகணடாய
வாரிமதகளிறேபோல்வான்கண்டாய
மறைக்காட்டுறையுமணாளன்றனே. (௫)

ஆட்டனமாலயானையுரிததானகணடா
யகத்தியான்பள்ளியமாநதன்கண்டாய
கோடியான்கணடாய்குழகன்கணடாய
குளிாாரூாகோயிலாக்கொணடான்கணடாய
நாடியநன்பொருளகளானன்கணடாய
நன்மையோடிமமைமறுமமையெல்லாம
வாடியவாட்டநதவிாட்பானகண்டாய
மறைககாட்டுறையுமணாளனறனே. (௬)

வேலைசோநஞ்சமிடற்றன்கண்டாய
விண்டடவுழ்நகயிலைவெற்பன்கண்டா
யாலைசோவேளவியழிததானகணடா
யமராகடாமேத்துமணணலகண்டாய
பானெய்சோானஞ்சுமாடிகண்டாய
பருப்பததான்கணடாயபரவைமேனி
மாலையோாகூறுடையமைநதனகண்டாய்
மறைக்காட்டுறையுமணாளனறனே (௭)

அமமையயக்குமமிாதுகணடா
யநதேன்றெளிகண்டாயாககஞ்செய்திட்
டிமமைபயககுமிறைவனகண்டா
யென்னெஞ்சேயுன்னிலினியானகண்டாய
மெய்ம்மையேஞானவிளககுககண்டாய
வெண்காடன்கணடாய்வினைகளபோக
மமமாறுக்குமருநதுகண்டாய
மறைக்காட்டுறையுமணாளனறனே. (௮)

மூலநோயதீாக்குமுதல்வன்கணடாய
மூத்தமிழ்நான்மறையுமானன்கண்டா

யாலின்கீழ்நால்வர்க்கறத்தானகண்டா
யாதியுமந்தமுமானானகண்டாய
பாலவிருத்தனுமானான்கண்டாய்
பவளத்தடவரையேபோலவானகண்டாய
மாலைசோகொன்றைமலிந்தான்கண்டாய்
மறைக்காட்டுறையுமணாளன்றானே (கூ)

அயனவனுமாலவனுமறியாவண்ண
மாரழலாய்நீண்டுகந்தவண்ணலகண்டாய
துயரிலங்கைவேந்தன்றுளங்கவனறு
சோதிவிரலாலுறவைத்தான்கண்டாய
பெயரவற்குப்பேரருள்களசெயதான்கண்டாய்
பெரும்பெரும்படையோமந்தான்கண்டாய
மயருறுவல்வினைநோயதீர்ப்பானகண்டாய
மறைக்காட்டுறையுமணாளனறானே. (கo)

திருச்சிற்றம்பலம

சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - காந்தாரம

திருச்சிற்றம்பலம

யாழைப்பழித்தன்னமொழிமங்கையொருபாகன
பேழைச்சடைமுடிமேற்பிறைவைத்தானிடம்பேணிற
ருழைப்பொழிலூடேசென்றுபூழைத்தலைநுழைந்து
வாழைக்கனிகூழைக்குரங்குண்ணுமமறைக்காடே. (க)

சிகரத்திடையிளவெண்பிறைவைத்தானிடந்தெரியின்
முகரத்திடைமுத்தினனொளிபவளத்திரளோதத்
தகரத்திடைதாழைத்திரணஞாழற்றிரணீழன்
மகரத்தொடுசுறவங்கொணர்ந்தெற்றுமமறைக்காடே. (உ)

அங்கங்களுமறைநான்குடனவிரித்தானிடமறிந்தோந்
தெங்கங்களுநெடும்பெண்ணையும்பழமவீழமணற்படப்பைச
சங்கங்களுமிலங்கிப்பியும்வலம்புரிகளுமிடறி
வங்கங்களுமுயர்கூம்பொடுவணங்கும்மறைக்காடே. (௩)

நரைவிரவியமயிர்தன்னொடுபஞ்சவடிமார்ப
னுரைவிரவியவுத்தமனிடமுணரலுறுமனமே
குரைவிரவியகுலசேகரக்கொண்டற்றலைவிண்ட
வரைபுரைவனதிரைபொருதிழிந்தெற்றுமமறைக்காடே. (௪)

சங்கைப்படநினையாதெழுநெஞ்சேதொழுதேத்தக
கங்கைச்சடைமுடியுடையவர்க்கிடமாவதுடரவை
யங்கக்கடலருமாமணியுந்திக்கரைக்கேற்ற
வங்கத்தொடுசுறவங்கொணர்ந்தெற்றும்மறைக்காடே. (௫)

துன்னங்கொண்டவுடையானதுதைநதவெணணீற்றினன்
மனனுநகொனறைமதமத்தஞ்சூடினன்மாநக
ரன்னநதஙகுபொழில்சூழகத்தியான்பளளியை
யுனனனுசெய்தமனத்தாகடமவினையோடுமே. (உ)

உடுத்ததுவும்புலிததோலபலிதிரிநதுணபதுங
கடுத்துவநதகழற்காலனறன்னையுங்காலினு
லடாததததுவுமபொழிலசூழகததியான்பளளியான்
றொடுத்ததுவுஞ்சரமுடபுரநதுகளாகவே (ங)

காயநததுவுமனறுகாமனைநெற்றிக்கணணினுற
பாயநததுவுங்கழற்காலனைபபணணினன்மறை
யாயநததுவுமபொழில்சூழகததியானபள்ளியா
னேயந்ததுவுமிமவான்மகளொருபாகமே. (ச)

போாததுவுஙகரியின்னுரிபுலித்தோலுடை
கூாத்ததோாவெணமழுவேந்திக்கோளரவமமைக்
காாத்ததுவும்பொழிலசூழகத்தியானபளளியான்
பாாத்ததுவுமமரணமபடொரிமூழ்கவே. (ரு)

தெரிநததுவுஙகணையொனறுமுபபுரஞ்செனறுட
னெரிநததுவுமுனனெழிலாாமலருறைவானறலை
யரிநததுவுமபொழில்சூழகததியானபள்ளியான்
புரிநததுவுமமுமையாளொாபாகம்புனைதலே. (சு)

ஓதியெலலாமுலகுக்கொரொணபொருளாகிமெயச
சோதியெனறுதொழுவாரவாதுயாதீாத்திடு
மாதியெஙகளபெருமானகத்தியான்பளளியை
நீதியாற்றொழுவாரவாவினைநீஙகுமே. (எ)

செறுததததுவுந்தககனவேள்வியைததிருநதாாபுர
மொறுததததுவுமொளிமாமலருறைவானசிர
மறுததததுவும்பொழில்சூழகததியானபளளியா
னிறுத்ததுவுமரககனறனறோளகளிருபதே. (அ)

சிரமுநலலமதிமத்தமுநதிகழகொனறையு
மரவமல்குஞ்சடையானகத்தியான்பள்ளியைப்
பிரமனோடுதிருமாலுநதேடியபெறறிமை
பரவவலலாரவாதஙகணமேல்வினைபாறுமே. (கூ)

செநதுவராடையினுரும்வெறறரையேதிரி
புந்தியிலாாகளும்பேசும்பேசசவைபொய்ம்மொழி
யந்தணனெங்கள்பிரானகத்தியான்பள்ளியைச
சிநதியினுமவினையானவைசிதைநதோடுமே. (க0)

ஞாலமல்குந் தமிழ்ஞானசம்பந்தன் மாமயி
லாலுஞ்சோலைபுடைசூழ் அகத்தியான்பள்ளியுட்
சூலநல்லபடையானடி தொழுதேத்திய
மாலைவல்லாரவர் தங்கண்மேல்வினை மாயுமே. (கக)

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி திருநாமம் - அகத்தீசுரர்.
தேவி திருநாமம் - பாகம்பிரியாள்.

---

ஆ திருப்பதிகம் - ௩௯௫.

---

## கஉஎ. கோடிக்குழகர்.

---

### சுந்தரமூர்த்திநாயனார்.

---

பண் - கொல்லி

---

திருச்சிற்றம்பலம்

கடிதாய்க்கடற்காற்றுவந்தெற்றக்கரைமேற்
குடிதானயலேயிருந்தாற்குற்றமாமோ
கொடியேன்கண்கள்கண்டனகோடிக்குழகீ
ரடிகேளுமக்காருணையாகவிருந்தீரே. (க)

முன்றான்கடனஞ்சமுண்டவதனாலோ
பின்றான்பரவைக்குபகாரஞ்செய்தாயோ
குன்றாப்பொழில்சூழ்தருகோடிக்குழகா
வென்றான்றனியேயிருந்தாயெம்பிரானே. (உ)

மத்தம்மலிசூழ்மறைக்காடதன்றென்பா
லத்தாபலர்பாடவிருந்தபரமா
கொத்தார்பொழில்சூழ்தருகோடிக்குழகா
வெத்தாற்றனியேயிருந்தாயெம்பிரானே. (௩)

காடேன்மிகவாலிதுகாரிகையஞ்சக்
கூடிப்பொந்திலாந்தைகள்கூகைகுழறி
வேடித்தொண்டர்சாலவுந்தீயர்சழக்கர்
கோடிக்குழகாவிடங்கோயில்கொண்டாயே. (௪)

மையார்தடங்கண்ணிபங்காகங்கையாளு
மெய்யாகத்திருந்தனளவேறிடமில்லை
கையார்வளைக்காடுகாளோடுமுடனாய்க்
கொய்யார்பொழிற்கோடியேகோயில்கொண்டாயே. (௫)

ஈழநாட்டில் உள்ளஸ்தலங்கள்.

# க. திருக்கோணமலை.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

நிரைகழலரவஞ்சிலம்பொலியலம்புநிமலர்நீறணிதிருமேனி
வரைகெழுமகளோர்பாகமாப்புணர்ந்தவடிவினர்கொடியணிவிடையர்
கரைகெழுசந்துங்காரகிற்பிளவுமளப்பருங்கனமணிவரன்றிக்
குரைகடலோதநித்திலங்கொழிக்குங்கோணமாமலையமர்ந்தாரே (க)

கடிதெனவந்தகரிதனையுரித்தவ்வுரிமேனிமேற்போர்த்தார்
பிடியன்னநடையாள்பெய்வளைமடந்தைபிறைநுதலவளொடுமுடனாய்க்
கொடிதெனக்கதறுங்குரைகடல்சூழ்ந்துகொள்ளமுன்னித்திலஞ்சுமந்து
குடிதனைநெருங்கிப்பெருக்கமாய்த்தோன்றுங்கோணமாமலையமர்ந்தாரே. (உ)

பனித்திளந்திங்கட்பைந்தலைநாகம்படர்சடைமுடியிடைவைத்தார்
கனித்திளந்துவர்வாய்க்காரிகைபாகமாகமுன்கலந்தவர்மதின்மேற்
றனித்தபேருருவவிழித்தழனாகந்தாங்கியமேருவெஞ்சிலையாக்
குனித்ததோர்வில்லார்குரைகடல்சூழ்ந்தகோணமாமலையமர்ந்தாரே (௩)

பழித்திளங்கங்கைசடைமுடிவைத்துப்பாங்குடையமதனைப்பொடியா
விழித்தவன்றேவிவேண்டமுன்கொடுத்தவிமலனார்கமலமார்பாதர்
தெழித்துமுன்னரற்றுஞ்செழுங்கடற்றரளஞ்செம்பொனுமிப்பியுஞ்சுமந்து
கொழித்துவன்றிரைகள்கரையிடைச்சேர்க்குங்கோணமாமலையமர்ந்தாரே. (ச)

தாயினுநல்லதலைவரென்றடியார்தம்மடிபோற்றிசைப்பார்கள்
வாயினுமனத்துமருவிநின்றகலாமாண்பினர்காண்பலவேடர்
நோயிலும்பிணியுந்தொழிலர்பானீக்கியுழைதருநூலினர்ஞாலங்
கோயிலுஞ்சுனையுங்கடலுடன்சூழ்ந்தகோணமாமலையமர்ந்தாரே. (ரு)

பரிந்துநன்மனத்தால்வழிபடுமாணிதன்னுயிர்மேல்வருங்கூற்றைத்
திரிந்திடாவண்ணமுதைத்தவற்கருளுஞ்செம்மையார்நம்மையாளுடையார்
விரிந்துயர்மௌவன்மாதவிபுன்னைவேங்கைவண்செருந்திசெண்பகத்தின்
குருந்தொடுமுல்லைகொடிவிடும்பொழில்சூழ்கோணமாமலையமர்ந்தாரே (சு,எ)

எடுத்தவன்றருக்கையிழித்தவர்விரலாலேத்திடவாத்தமாம்பேறு
தொடுத்தவர்செல்வந்தோன்றியபிறப்புமிறப்பறியாதவர்வேள்வி
தடுத்தவர்வனப்பால்வைத்ததோர்கருணைதன்னருட்பெருமையும்வாழ்வுங்
கொடுத்தவர்விரும்பும்பெரும்புகழாளர்கோணமாமலையமர்ந்தாரே. (அ)

அருவராதொருகைவெண்டலையேந்தியகந்தொறும்பலியுடன்புக்க
பெருவராயுறையுநீர்மையர்சீர்மைப்பெருங்கடல்வண்ணனும்பிரம
னிருவருமறியாவண்ணமொள்ளெரியாயுயர்ந்தவர்பெயர்ந்தநன்மாற்குங்
குருவராய்நின்றார்குரைகழல்வணங்கக்கோணமாமலையமர்ந்தாரே. (௯)

நின்றுணுஞ்சமணுமிருந்துணுந்தேருநெறியலாதன்புறங்கூறி
வென்றுநஞ்சுண்ணுமபரிசினொருபான்மெலலியலொடுமுட்டிக்
துன்றுமொண்பவ்வமவ்வலுஞ்சூழ்ந்துதாழ்ந்துறுதிரைபலமோதிக்
குன்றுமொண்கானல்வாசமவந்துலவுங்கோணமாமலையமர்ந்தாரே. (௧௦)

குற்றமிலாதாரகுரைகடலசூழ்ந்தகோணமாமலையமாந்தாரைக்
கறறுணாகேள்விக்காழியாபெருமானகருத்துடைஞானசமபந்த
னுற்றசெந்தமிழாாமாலையீரைந்துமுரைப்பவாகேட்பவருயாந்தோர
சுறறமுமாகித்தொல்வினையடையார்தோன்றுவாவானிடைபபொலிந்தே. (௧௧)

திருச்சிற்றமபலம

சுவாமிதிருநாமம - கோணேசுரர்.
தேவிதிருநாமம - மாதுமையாள.

## உ. திருக்கேதீச்சரம்.

திருஞானசமபந்தமூர்த்திநாயனா

பண - நட்டராகம

திருச்சிற்றமபலம

விருதுகுன்றமாமேருவினாணரவாவனலெரியமபாற
பொருதுமூவெயிலசெற்றவனபற்றிநின்றுறைபதியெந்நாளுங
கருதுகின்றவூாகனைகடற்கடிகமழ்பொழிலணிமாதோட்டங
கருதநின்றகேதீச்சரங்கைதொழக்கடுவினையடையாவே. (௧)

பாடலவீணையாபலபலசரிதையாொருதுகைததருநட்ட
மாடலபேணுவரமராகளவேணடநஞ்சுணடிருளகணடத்த
ரீடமாவதிருங்கடற்கரையினிலெழிறிகழ்மாதோட்டங்
கேடிலாதகேதீச்சரந்தொழுதெழக்கெடுமிடாவினைதானே. (௨)

பெணணொருபாகததாபிறைதவழ்சடையினரறைகழல்சிலம்பாக்கச
சுண்ணமாதரித்தாடுவாபாடுவாகநதொறுமிடுபிச்சைக்
குணணலாவதோரிச்சையினுழல்பவருயாநதுறுமாதோட்டத
தணணலணணுகேதீச்சரமடைபவாககருவினையடையாவே. (௩)

பொடிகொண்மேனியாபுலியதளரையினாவிரிதருகரத்தேந்தும்
வடிகொண்மூவிலைவேலினாநூலினாமறிகடனமாதோட்டத்
தடிகளாதரித்திருந்தகேதீச்சரமபரிந்தசிந்தையராகி
முடிகளசாயத்தடிபேணவல்லாதமமேன்மொயத்தெழுமவினைபோமே. (௪)

நல்லராறறவுஞானநன்குடையாதம்மடைந்தவாக்கருளிய
வல்லாபாரிசைவான்பிறபபிறப்பிலாமலிகடனமாதோட்டத்
தெலலையில்புகழெந்தைகேதீச்சரமிராபபகனினைந்தேத்தி
யல்லலாசறுத்தரனடியிணைதொழுமன்பராமடியாரே. (௫)

பேழைவார்சடைப்பெருந்திருமகடனைப்பொருந்தவைத்தொருபாகம்
மாழையங்கயற்கண்ணிபாலருளியபொருளினர்குடிவாழ்க்கை
வாழையம்பொழின்மந்திகள்களிப்புறமருவியமாதோட்டக்
கேழல்வெண்மருப்பணிந்தநீண்மார்பர்கேதீச்சரம்பிரியாரே. (௬)

பண்டுநால்வருக்கறமுரைத்தருளிப்பல்லுலகினிலுயிர்வாழ்க்கை
கண்டநாதனார்கடலிடங்கைதொழக்காதலித்துறைகோயில்
வண்டுபண்செயுமாமலர்ப்பொழின்மஞ்ஞைநடமிடுமாதோட்டந்
தொண்டர்நாடொறுந்துதிசெயவருள்செய்கேதீச்சரமதுதானே. (௭)

தென்னிலங்கையர்குலபதிமலைநலிந்தெடுத்தவன்முடிதிண்டோ
டன்னலங்கெடவடர்த்தவற்கருள்செய்ததலைவனார்கடல்வாயப்
பொன்னிலங்கியமுத்துமாமணிகளும்பொருந்தியமாதோட்டத்
துன்னியன்பொடுமடியவரிறைஞ்சுகேதீச்சரத்துள்ளாரே. (௮)

பூவுளானுமப்பொருகடல்வண்ணனும்புவியிடந்தெழுந்தோடி
மேவிநாடிநின்னடியிணைகாண்கிலாவித்தகமென்னாகும்
மாவும்பூகமுங்கதலியுநெருங்குமாதோட்டநன்னகர்மன்னித்
தேவிதன்னொடுந்திருந்துகேதீச்சரத்திருந்தவெம்பெருமானே. (௯)

புத்தராய்ச்சிலபுனைதுகிலுடையவர்புறனுரைச்சமணாதர்
எத்தராகிநின்றுண்பவரியம்பியவேழைமைகேளேன்மின்
மத்தயானையைமறுகிடவுரிசெய்துபோர்த்தவர்மாதோட்டத்
தத்தமாமனம்பாலாவியின்கரையிற்கேதீச்சரமடைமின்னே. (௧௦)

மாடெலாமணமுரசெனக்கடலினதொலிகவர்மாதோட்டத்
தாடலேறுடையண்ணல்கேதீச்சரத்தடிகளையணிகாழி
நாடுளார்க்கிறைஞானசம்பந்தன்சொன்னவின்றமிழ்மாலை
பாடலாயினபாடுமின்பத்தர்காள்பரகதிபெறலாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்

நத்தார்புடைஞானன்பசுவேறிநனைகவிழ்வாய்
மத்தம்மதயானையுரிபோர்த்தமணவாளன்
பத்தாகியதொண்டர்தொழுபாலாவியின்கரைமேற்
செத்தாரெலும்பணிவான்றிருக்கேதீச்சரத்தானே. (௧)

சுடுவார்பொடிநீறுந்நலதுண்டப்பிறைக்கீளுங்
கடமார்களியானையுரியணிந்தகறைக்கண்டன்
படவேரிடைமடவாளொடுபாலாவியின்கரைமேற்
றிடமாவுறைகின்றான்றிருக்கேதீச்சரத்தானே. (௨)

அங்கம்மொழியன்னாரவரமரர்தொழுதேத்த
வங்கம்மலிகின்றகடன்மாதோட்டநன்னகரிற்
பங்கஞ்செய்தபிறைசூடினன்பாலாவியின்கரைமேற்
செங்கண்ணரவசைத்தான்றிருக்கேதீச்சரத்தானே. (௩)

கரியகறைக்கண்டனல்லகண்மேலொருகண்ணான்
வரியசிறைவண்டியாழ்செயுமாதோட்டநன்னகருட்
பரியதிரையெறியாவருபாலாவியின்கரைமேற்
பெரியமறைவல்லான்றிருக்கேதீச்சரத்தானே. (௪)

அங்கத்துறுநோய்களடியார்மேலொழித்தருளி
வங்கம்மலிகின்றகடன்மாதோட்டநன்னகரிற்
பங்கஞ்செய்தமடவாளொடுபாலாவியின்கரைமேற்
றெங்கம்பொழில்சூழ்ந்ததிருக்கேதீச்சரத்தானே. (௫)

வெய்யவினையாயவடியார்மேலொழித்தருளி
வையம்மலிகின்றகடன்மாதோட்டநன்னகரிற்
பையேரிடைமடவாளொடுபாலாவியின்கரைமேற்
செய்யசடைமுடியான்றிருக்கேதீச்சரத்தானே. (௬)

ஊனத்துறுநோய்களடியார்மேலொழித்தருளி
வானத்துறுமலியுங்கடன்மாதோட்டநன்னகரிற்
பானத்துறுமொழியாளொடுபாலாவியின்கரைமே
லேனத்தெயிறணிந்தான்றிருக்கேதீச்சரத்தானே. (௭)

அட்டன்னழகாகவ்வரைதன்மேலரவார்த்து
மட்டுண்டுவண்டாலும்பொழின்மாதோட்டநன்னகரிற்
பட்டவ்வரிநுதலாளொடுபாலாவியின்கரைமேற்
சிட்டன்னமையாள்வான்றிருக்கேதீச்சரத்தானே. (௮)

மூவரெனவிருவரெனமுக்கண்ணுடைமூர்த்தி
மாவின்கனிதூங்கும்பொழின்மாதோட்டநன்னகரிற்
பாவம்வினையறுப்பார்பயில்பாலாவியின்கரைமேற்
றேவன்னெனையாள்வான்றிருக்கேதீச்சரத்தானே. (௯)

கறையார்கடல்சூழ்ந்தகழிமாதோட்டநன்னகருட்
சிறையார்பொழில்வண்டியாழ்செயுங்கேதீச்சரத்தானை
மறையார்புகழூரன்னடித்தொண்டன்னுரைசெய்த
குறையாத்தமிழ்பத்துஞ்சொலக்கூடாகொடுவினையே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

## திருக்கேதீச்சரத் திருப்பதிகம் - ௨

சுவாமிதிருநாமம் - கேதீச்சுவரர்.
தேவிதிருநாமம் - கௌரியம்பிகை.

## திருப்பதிகம் - ௩.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரும் சுந்தரமூர்த்தி நாயனாரும் இராமேச்சுரத்துக்கு எழுந்தருளியபோது, அங்கிருந்து கொண்டே, ஈழநாட்டில் உள்ள திருக்கோணமலை, திருக்கேதீச்சரம் என்னுந் தலங்களை வணங்கி, திருப்பதிகங்கள் பாடியருளினார்கள்

பாண்டிநாட்டில் உள்ள ஸ்தலங்கள்.

# க. திருவாலவாய்*.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

### திருவிருக்குக்குறள்.

பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

நீலமாமிடற்
றாலவாயிலான்
பாலதாயினார்
ஞாலமாள்வரே. (க)

ஞாலமேழுமா
மாலவாயிலார்
சீலமேசொலீர்
காலன்வீடவே. (உ)

ஆலநீழலா
ராலவாயிலார்
காலகாலனார்
பாலதாமினே. (ங)

அந்தமில்புக
ழெந்தையாலவாய்
பந்தியார்கழல்
சிந்தைசெய்ம்மினே. (ச)

ஆடலேற்றினான்
கூடலாலவாய்
பாடியேமனம்
நாடிவாழ்மினே. (ரு)

அண்ணலாலவாய்
நண்ணினான்றனை
யெண்ணியேதொழத்
திண்ணமின்பமே. (சா)

அம்பொனாலவாய்
நம்பனார்கழல்
நம்பிவாழ்பவர்
துன்பம்விடுமே. (எ)

அரக்கனாவலி
நெருக்கனாலவா
யுரைக்குமுள்ளத்தார்க்
கிரக்கமுண்மையே. (அ)

அருவனாலவா
மருவினான்றனை
யிருவரோதநின்
றுருவமோங்குமே. (கூ)

ஆரநாகமாஞ்
சீரனாலவாய்த்
தேரமண்செற்ற
வீரனென்பரே. (க0)

அடிகளாலவாய்ப்
படிகொள்சம்பந்தன்
முடிவிலின்றமிழ்
செடிகணீக்குமே. (கக)

திருச்சிற்றம்பலம்

---

* திருவாலவாய் என்பது மதுரை.

# திருநீற்றுப்பதிகம்.

பண் - காந்தாரம.

திருச்சிற்றமபலம

மநதிரமாவதுநீறுவானவாமேலதுநீறு
சுநதரமாவதுநீறுதுதிககபபடுவதுநீறு
தநதிரமாவதுநீறுசமயத்திலுளளதுநீறு
செநதுவாவாயுமைபங்கன்றிருவாலவாயானறிருநீறே. (௧)

வேதத்திலுளளதுநீறுவெந்துயாதீாப்பதுநீறு
போதநதருவதுநீறுபுன்மைதவிாப்பதுநீறு
வோதத்தகுவதுநீறுவுண்மையிலுள்ளதுநீறு
சீதபபுனல்வயலசூழ்நததிருவாலவாயானறிருநீறே. (௨)

முத்திதருவதுநீறுமுனிவாணிவதுநீறு
சததியமாவதுநீறுதககோா புகழ்வதுநீறு
பததிதருவதுநீறுபாவவினியதுநீறு
சிததிதருவதுநீறுதிருவாலவாயான்றிருநீறே (௩)

காணவினியதுநீறுகவினைததருவதுநீறு
பேணியணிடவாக்கெலலாமபெருமைகொடுபபதுநீறு
மாணநதகைவதுநீறுமதியைததருவதுநீறு
சேணநதருவதுநீறுதிருவாலவாயானறிருநீறே. (௪)

பூசவினியதுநீறுபுணணியமாவதுநீறு
பேசவினியதுநீறுபெருநதவததோாகளுககெலலா
மாசைகெடுபபதுநீறுவநதமதாவதுநீறு
தேசம்புகழுவதுநீறுதிருவாலவாயான்றிருநீறே (௫)

அருத்தமதாவதுநீறுவவலமறுபபதுநீறு
வருத்தநதணிடபதுநீறுவானமளிபபதுநீறு
பொருததமதாவதுநீறுபுணணியாபூசுமவெணணீறு
திருததகுமாளிகைசூழ்நததிருவாலவாயானறிருநீறே. (௬)

எயிலதுவட்டதுநீறுவிருமைககுமுளளதுநீறு
பயிலப்படுவதுநீறுபாககியமாவதுநீறு
துயிலைத்தடுப்பதுநீறுசுததமதாவதுநீறு
வயிலைபபொலிதருசூலத்தாலவாயானறிருநீறே. (௭)

இராவணனமேலதுநீறுவெணணததகுவதுநீறு
பராவணமாவதுநீறுபாவமறுப்பதுநீறு
தராவணமாவதுநீறுதத்துவமாவதுநீறு
வராவணஙகுநதிருமேனியாலவாயானறிருநீறே. (௮)

மாலொடயனறியாதவண்ணமுமுள்ளதுநீறு
மேலுறைதேவர்கடங்கள்மெய்யதுவெண்பொடிநீறு
வேலவுடம்பிடர்தீர்க்குமின்பந்தருவதுநீறு
வாலமதுண்டமிடற்றெம்மாலவாயான்றிருநீறே. (௯)

குண்டிகைக்கையர்களோடுசாக்கியர்கூட்டமுங்*கூடக்
கண்டிகைப்பிப்பதுநீறுகருதவினியதுநீறு
வெண்டிசைப்பட்டபொருளாரேத்துந்தகையதுநீறு
வண்டத்தவர்பணிந்தேத்துமாலவாயான்றிருநீறே (௰)

ஆற்றலடல்விடையேறுமாலவாயான்றிருநீற்றைப்
போற்றிப்புகலிநிலாவும்பூசுரன்ஞானசம்பந்தன்
றேற்றித்தென்னனுடலுற்றதீப்பிணியாயினதீரச்
சாற்றியபாடல்கள்பத்தும்வல்லவர்நல்லவர்தாமே. (௰௧)

திருச்சிற்றம்பலம்

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் மதுரைப்பதியிலே, பாண்டியனுடைய அரமனையிலே, இரத்தினாசனத்திலே எழுந்தருளியிருந்தபொழுது, பாண்டிமாதேவியாரை நோக்கி, திருப்பதிகம்பாடியதைக் கேட்ட அரசன் பிள்ளையாரையும் குறைத்தல் ஒழியாத சமணர்களையும் நோக்கி, "நீங்கள் என்னுடைய வெப்புநோயை இகலித் தீருங்கள் தீர்த்தவர் எவரோ அவரே வாதில் வென்றவர்" என்று சொல்ல, சமணர்கள் "மகாராசாவே, உம்முடைய இடப்பாகத்து நோயை நாங்கள் எங்கள் சமய மந்திரத்தினாலே தீர்ப்போம் அவர் வலப்பாகத்து நோயைத் தீர்க்கக்கடவர்" என்று சொல்லி, அரசனுடைய இடப்பாகத்தைப் பீலியினாலே தடவினார்கள் அதனாலே வெப்புநோய்வளர, பாண்டியன் அதைப் பொறுக்கலாற்றாதவனாகி, பிள்ளையாரைப் பார்த்தான் பிள்ளையார் அரசனுடைய நோக்கத்தைக் கண்டு, "மந்திரமாவது நீறு" என்னுந் திருநீற்றுத் திருப்பதிகத்தைப் பாடி, அவனுடைய வலப்பாகத்தை விபூதிகொண்டு திருக்கையினாலே தடவியருள, அவ்வலப்பாகம் வெப்புநோய் நீங்கிப் பொய்கை போலக்குளிர்ந்தது இடப்பாகத்து வெப்புநோய் முன்னையினும் இருமடங்காய் மிகுந்து பொங்க, சமணர்கள் மனநடுங்குற்று, மயிற்பீலி தீய, அவ்வெப்புத் தம்மேலும் தாவ, சீரழிந்து, செருக்கு அழிந்து, அருகுவிட்டுத் தூரத்திலே நின்றார்கள் பாண்டியன் சமணர்களை நோக்கி, 'சமணர்களே நீங்கள் தோற்றுப் போனீர்கள் என்னை விட்டு அகலப்போய் விடுங்கள்" என்று சொல்லி, பின் பிள்ளையாரை நோக்கி, "அடியேனை ஒரு பொருளெனக்கொண்டு உய்வித்த காருண்ணிய சாகரமாகிய சுவாமி, இடப்பாகத்து வெப்பையும் தேவரீரே நீக்கியருளும்" என்று, மனசினாலே வணங்கிப் பிரார்த்தித்தான் பிள்ளையார் இடப்பாகத்தையும் முன்போல விபூதிகொண்டு தடவியருள, பாண்டியன் வெப்புநோய் முழுதும் நீங்கி உய்ந்தான் அதுகண்ட பாண்டிமாதேவியாரும் குலச்சிறை நாயனாரும் பிள்ளையாருடைய திருவடிகளை விழுந்து நமஸ்கரித்து, "எங்கள் அரசர் பிறவா மேன்மை பெற்றனர்" என்று களிப்படைந்தார்கள் பாண்டியர் சயனத்தை விட்டு எழுந்து, இரண்டு கைகளையும் சிரசின்மேலே குவித்து, "பொய்யராகிய சமணர்கள் முன் அடியேனுடைய நோயை நீக்கியருளிய திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருடைய ஸ்ரீ பாதங்களை அடைந்து உய்ந்தேன் உய்ந்தேன்" என்றார்

* "கூடாக்" என்றும் பாடம்

தங்களுக்குஞ்சாக்கியர்க்குந்தரிப்பொணாதநற்சேவடி
யெங்கணாயகனேத்தொழிந்திடுக்கேமுடுத்தொருபாயதவம
பொங்குநூல்வழியன்றியேபுலவோர்களைப்பழிக்குமெய்கொளா
வங்கதர்க்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே. (௧௦)

எக்கராமமண்கையருக்கெளியேனலேன்றிருவாலவாய்ச்
சொக்கனென்னுளிருக்கவேதுளங்குமுடித்தென்னன்முனனிலைத்
தக்கசீர்ப்புகலிக்குமன்றமிழ்நாதன்ஞானசம்பந்தன்வா
யொக்கவேயுரைசெய்தபத்துமுடையவர்க்கிடரில்லையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

திருஞானசம்பந்தப் பிள்ளையார் மதுரைப்பதியில் பாண்டியனுடைய அரமனையில் இரத்தினாசனத்தில் எழுந்தருளியிருந்தபொழுது, சமீபத்திலிருந்த சமணர்கள் பொறாமைகொண்டு, தங்கள் உள்ளத்துள்ள அச்சத்தை மறைத்து, கோபாக்கினி சொலிக்கக் கண்கள் சிவந்து, பாலசூரியனைச் சூழ்கின்ற கருமுகிற் குழாங்கள்போலப் பிள்ளையாரைச் சூழ்ந்து, அவரை வாதினால் வெல்லக்கருதி, தங்கள் சமயநூல்களை எடுத்துச் சொல்லிக் குரைத்தார்கள். பிள்ளையார் அதைக்கேட்டு, "உங்கள் சமயநூற்றுணிவை உள்ளபடி கிரமமாகப் பேசுங்கள்" என்று சொல்லியருள, சமணர்கள் துள்ளி எழுந்து, அநேகர்களாய்ச் சூழ்ந்து, பதறிக்கதறினார்கள். பாண்டிமாதேவியார் அதுகண்டு பொறாராகி, மனநடுங்கி, பாண்டியனை நோக்கி, "சுவாமிகள் சிறுபாலர்; இச்சமணர்களோ எண்ணில்லாதவர்கள், என்பிராண நாயகரே, எம்பெருமானார் உம்முடைய நோயை நீக்கியருளுக; பின்பு இச்சமணர்கள் பேசவல்லவராயிற் பேசக்கடவர்கள்" என்றார். பாண்டியன் தேவியாரை நோக்கி "நீ வருந்தாதே" என்று சொல்லி, சமணர்களை நோக்கி, "நீங்களும் இந்தச் சிவபத்தரும் உங்களுங்கள் தெய்வத்தன்மையை என்னுடைய வெப்புநோயை நீக்குதலினாலே தெரிவியுங்கள்" என்றான். ஸ்ரீஞானசம்பந்த சுவாமிகள் பாண்டிமாதேவியாரை நோக்கி, "மாதேவியே, என்னை நீ பாலன் என்று அஞ்சவேண்டாம்; திருவாலவாயரன் நிற்க நான் சமணர்களுக்கு எளியேனல்லேன்," என்னுங் கருத்தினையுடைய "மானினேர்விழி மாதராய்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினார்.

---

பண் - கௌசிகம்.

---

திருச்சிற்றம்பலம்

காட்டுமாவதுரித்துரிபோர்த்துட
ணாட்டமூன்றுடையாயுரைசெய்வனான்
வேட்டுவேள்விசெய்யாவமண்கையரை
யோட்டிவாதுசெயத்திருவுள்ளமே. (௧)

மத்தயானையினீருரிமூடிய
வத்தனேயணியாலவாயாய்பணி
பொய்த்தவன்றவவேடத்தராஞ்சமண்
சித்தரையழிக்கத்திருவுள்ளமே. (௨)

மண்ணகத்திலும்வானிலுமெங்குமாந்
திண்ணகத்திருவாலவாயாயருள்
பெண்ணகத்தெழிற்சாக்கியப்பேயமண்
டெண்ணர்கற்பழிக்கத்திருவுள்ளமே. (௩)

ஓதியோத்தறியாவமணாதரை
வாதில்வென்றழிக்கத்திருவுள்ளமே
யாதியேதிருவாலவாயண்ணலே
நீதியாகநினைந்தருள்செய்திடே. (௪)

வையமார்புகழாயடியார்தொழுஞ்
செய்கையார்திருவாலவாயாய்செப்பாய்
கையிலுண்டுழலுமமண்கையரைப்
பையவாதுசெயத்திருவுள்ளமே. (௫)

நாறுசேர்வயற்றண்டலைமிண்டிய
தேறலார்திருவாலவாயாய்செப்பாய்
வீறிலாத்தவமோட்டமண்வேடரைச்
சீறிவாதுசெயத்திருவுள்ளமே. (௬)

பண்டடித்தவத்தார்பயில்வாற்றெழுந்
தொண்டருக்கெளியாய்திருவாலவா
யண்டனேயமண்கையரைவாதினிற்
செண்டடித்துளறத்திருவுள்ளமே. (௭)

அரக்கன்றன்கிரியேற்றவன்றன்முடிச்
செருக்கினைத்தவிர்த்தாய்திருவாலவாய்ப்
பரக்குமாண்புடையாயமண்பாவரைக்
கரக்கவாதுசெயத்திருவுள்ளமே. (௮)

மாலுநான்முகனுமறியாநெறி
யாலவாயுறையுமண்ணலேபணி
மேலைவீடுணராவெற்றரையரைச்
சாலவாதுசெயத்திருவுள்ளமே (௯)

கழிக்கரைப்படுமீன்கவர்வாரம
ணழிப்பரையழிக்கத்திருவுள்ளமே
தெழிக்கும்பூம்புனல்சூழ்திருவாலவாய்
மழுப்படையுடைமைந்தனேநல்கிடே. (௧௦)

செந்தெனாமுரலுந்திருவாலவாய்
மைந்தனேயென்றுவல்லமணாசறச்
சந்தமார்தமிழ்கேட்டமெய்ஞ்ஞானசம்
பந்தன்சொற்பகரும்பழிநீங்கவே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் மதுரைப்பதியில் எழுந்தருளி, மடாலயத்திலே இராக்காலத்திலே சயனித்திருக்கும்போது, சமணர்கள் தீக்கொளுவிய வுடனே, அவ்வெப்பானது பாண்டியனைச் சென்று பற்றும்படி பிள்ளையார் திருப்பதிகம் பாடியபின், சூரியோதயமாயிற்று அப்பொழுது பாண்டிமாதேவியார் இரவிலே சமணர்கள் செய்த தீங்கைக் குலச்சிறை நாயனாரோடு கேள்வியுற்று, "திருஞானசம்பந்தப் பிள்ளையாரை இந்தப் பாதகர்களுடைய நாட்டிலே வர அழைத்த நாங்கள் இறப்பதே திண்ணம்" என மனமயங்கி அச்சுற்றுப் பதைபதைத்தார் பின்பு மடாலயத்திலே தீதின்மையைத் தெளிந்து, சம

ணர்கள் செய்த தீங்கு இறுதியில் எப்படி முடியுமோ" என்று நினைக்கும்பொழுது, "அரசனுக்கு வெப்புநோய் அடுத்தது" என்று கஞ்சுகிகள் வந்து சொல்ல, மாதேவியார் பதைபதைத்துச் சென்றார். குலச்சிறை நாயனாரும் விரைந்து போனார். பாண்டியன் வெப்பு நோயினாலே மிக வருந்தி, வைத்தியர்கள் வந்து பல வைத்தியங்களைச் செய்யவும் அந்நோய் சிறிதும் நீங்காமல் மேற்பட, அறிவிழந்து பேச்சின்றிக் கிடந்தான். சமணர்கள் அதனைக் கேள்வியுற்று, வெய்துயிர்த்து ஓடிவந்து, அந்நோயின் மூலம் இதுவென்று அறியாமல், தங்கள் மந்திரங்களைச் சொல்லி மயிற்பீலியினாலே தடவ, பீலிகள் பிரம்பினோடு வெந்து, பொறிசிதறி வீழ்ந்தன. அவ்வெப்பின் அதிசயத்தை நோக்கி, தங்கள் கையிலே தூங்குகின்ற குண்டிகையிலுள்ள ஜலத்தைத் "அருகனே காவாய் அருகனே காவாய்" என்று சொல்லிப் பாண்டியன் மேலே தெளிக்க, அந்த ஜலம் மிகச்சுவாலிக்கின்ற அக்கினியிலே சொரிந்த நெய்போலாக, பாண்டியன் மிக வருந்திச் சமணர்களை நோக்கி, "நீங்கள் ஒருவரும் இங்கே இராமல் போய்விடுங்கள்" என்று சொல்லி அறிவு சோர்ந்தான். பாண்டிமாதேவியார் பயமெய்திக் குலச்சிறை நாயனாரை நோக்கி, "இராத்திரியிலே திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருக்குச் சமணர்கள் செய்த தீங்கு இப்படி முடிந்ததோ" என்று சொல்ல, குலச்சிறை நாயனார் வணங்கி நின்று, "அசுரர்களுடைய முப்புரத்தையும் எரித்த சிவபெருமானுடைய அடியாராகிய திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருக்கு இவர்கள் செய்த தீங்கே அரசனிடத்தே பலித்தது. இவர்கள் நீங்கப்புகின், அது முதிர்வதே யாகும்" என்றார். மாதேவியாரும் மந்திரியாரும் அரசனை வணங்கி நின்று, "திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருக்குச் சமணர்கள் செய்த தீங்கினாலேயே உமக்கு இந்த வெப்புநோய் அடுத்தது. அதனால் இந்தப்பாதகர்கள் செய்யும் மாயம் இந்நோயை வளர்ப்பதே யன்றித் தீர்ப்பதில்லை. அந்தத்திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருவுளம்பற்றித் திருவருள் செய்வாராயின் இந்த வெப்புநோய் மாத்திரமா எவர்களாலும் நீக்குதற்கரிய பிறவிநோயும் நீங்கிவிடும். இது சத்தியம்" என்றார்கள். பாண்டியன் தன் செவியிலே, மெய்யறிவினையுடைய அவ்விருவருஞ் சொல்லிய "திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்" என்கின்ற திருமந்திரம் புகுந்தவுடனே, அயர்வு நீங்கி, "இந்தச் சமணர்கள் செய்யுஞ் செய்கைகளெல்லாம் இந்நோய்க்கு ஏதுவாயே யிருக்கின்றன" என்று நினைந்து, அவ்விருவரையும் நோக்கி, "அந்தத் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரை இங்கே அழையுங்கள். என்னுடைய நோயை நீக்கி வென்றவர் எவரோ அவர்பக்கஞ் சேர்வேன்" என்றான்.

மங்கையர்க்கரசியார் அது கேட்டு, பெருமகிழ்ச்சியுடையவராகி, சிவிகைமேலேறி, பெண்கள் சூழ, குலச்சிறை நாயனார் குதிரையிலேறிக்கொண்டு முன்னே செல்ல, சென்று மடாலயத்தை அடைந்தார். குலச்சிறை நாயனார் குதிரையினின்றும் இறங்கி, பரிசனங்களை நோக்கி, "அடியேங்கள் வந்து நிற்றலைச் சுவாமிகளுக்கு விண்ணப்பஞ் செய்ய வேண்டும்" என்றார். அவர்கள் உள்ளே புகுந்து, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரை வணங்கி நின்று, "சுவாமீ! பாண்டிமாதேவியாரும் குலச்சிறை நாயனாரும் வந்து நிற்கின்றார்" என்று விண்ணப்பஞ்செய்ய, பிள்ளையார் "அவர்களை இங்கே அழையுங்கள்" என்று அருளிச்செய்தார். பரிசனங்கள் மீண்டுபோய் அழைக்க, அவர்கள் இருவரும் உள்ளே பிரவேசித்து, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரைக் கண்களிப்பக் கண்டு, சமணர்கள் செய்த கொடுந்தொழிலை நினைந்து, நெடிதுயிர்த்து, சோகபாஷ்பஞ் சொரிய ஸ்ரீபாதங்களின் கீழே விழுந்தார்கள். உரைகுழற, சரீரம் நடுங்க, ஒன்றும் அறிந்திலராகி, நிலத்திலே புரண்டு அயர்ந்து, திருவடிகளைப் பற்றிக்கொண்டு, *கவலைக்கடற்கு ஓர் கரைபற்றினார் போன்று மெய்யன்பினாலே விடாது கிடந்தார்கள். பிள்ளையார் அதுகண்டு அவ்விருவரையும் திருக்கரத்தினால்

எடுத்தருளித் தேற்றவும், அவர்கள் தெளியாராக, அவர்களை நோக்கி, "அன்பர்களே உங்களிடத்திலே யாதாயினும் தீங்கு உண்டா" என்று வினவியருளினர் அதற்கு அவர்கள் "அடியேங்கள் சமணர்கள் முன்செய்த வஞ்சனைக்கு மிகஅஞ்சி வருந்தினேம் அது திருமேனிக்கு அடாது என்று உணர்ந்து, அது தீர்ந்தோம் அவ்வஞ்சகர்கள் செய்த தீத்தொழில் வெப்பு நோயாகி, அரசனை அடைந்து, மிக வருத்துகின்றது சமணர்கள் அதனைத் தீர்க்கப்புக, அது வளர்கின்றது ஆதலால தேவரீர் அவ்வரசன்முன் அவர்களை வென்றருளின், அவனுயிரும் அடியேங்களுயிரும் உய்யும்" என்று விண்ணப்பஞ் செய்தார்கள் அப்பொழுது கருணாகரராகிய பிள்ளையார "நீங்கள் சிறிதும் அஞ்சவேண்டாம் நாம் மெய்யுணர்விலலாத சமணாகளை இன்றைக்கு நீங்கள் மகிழும்படி சமஸ்தருங் காண வாதிலே வென்று, பாண்டியனை விபூதி அணிவிப்போம்" என்று சொலலியருளினர் அவவிருவரும் அதைக்கேட்டு, 'தேவரீா அடியேங்களைத் துன்பக் கடலினின்றும் எடுத்தருளும் பொருட்டு இவவிடத்துக்கு எழுந்தருளி வரப் பெற்றுக்கொண்ட நாங்கள் என்னபெறேம்' என்று விண்ணபபஞ்செய்து வணங்கினார்கள

ஆளுடைய பிள்ளையாா "பாவிகளாகிய சமணர்களை நோக்கி வாதுசெயது வெல்லுதற்குச் சொக்கலிங்கப் பெருமானுடைய திருவுள்ளத்தை அறிவேம்" என்று, மடாலயத்தினின்றும் நீங்கி, திருக்கூட்டஞ் சூழச் சென்று திருவாலவாயிலே புகுந்து, நோக்க வீதியிலலாத சமணர்களை நோக்கி வாது செய்தற்குத திருவுள்ளமோ என்பதை அறியும்பொருட்டு "காட்டுமாவதுரித்து" என்னுந் திருப்பதிகம் பாடி, சிவபிரானுடைய திருவுளளத்தை அறிந்து கொண்டனர்

---

பண - கௌசிகம.

---

திருச்சிற்றமபலம

செயயனேதிருவாலவாயமேவிய
வையனேயஞ்சலென்றருளசெயயெனைப
பொயயராமமணாகொளுவுஞ்சுடா
பையவேசென்றுபாண்டியற்காகவே. (க)

சித்தனேதிருவாலவாயமேவிய
வததனேயஞ்சலெனறருளசெயயெனை
யெததராமமணாகொளுவுஞ்சுடாப
பததிமனறெனனன்பாணடியறகாகவே. (உ)

தககனவேள்விதகாததருளாலவாயச
சொககனேயஞ்சலெனறருள்செயயெனை
யெககராமமணாகொளுவுஞ்சுடா
பககமேசெனறுபாணடியறகாகவே. (௩)

சிட்டனேதிருவாலவாயமேவிய
வட்டமாதியனேயஞ்சலெனறரு
ளிட்டராமமணாகொளுவுஞ்சுடா
பட்டிமனறெனனனபாணடியறகாகவே. (ச)

நண்ணலாரபுரமூன்றெரியாலவா
யண்ணலேயஞ்சலென்றருள்செய்யெனை
யெண்ணிலாவமணர்கொளுவுஞ்சுடர்
பண்ணியற்றமிழ்ப்பாண்டியற்காகவே (௫)

தஞ்சமென்றுன்சரண்புகுந்தேனையு
மஞ்சலென்றருளாலவாயண்ணலே
வஞ்சஞ்செய்தமணர்கொளுவுஞ்சுடர்
பஞ்சவன்றென்னன்பாண்டியற்காகவே. (௬)

செங்கண்வெள்விடையாய்திருவாலவா
யங்கணாவஞ்சலென்றருள்செய்யெனைக்
கங்குலாரமண்கையரிடுங்கனல்
பங்கமிற்றென்னன்பாண்டியற்காகவே. (௭)

தூர்த்தனவீரந்தொலைத்தருளாலவா
யாத்தனேயஞ்சலென்றருள்செய்யெனை
யேத்திலாவமணர்கொளுவுஞ்சுடர்
பார்த்திவன்றென்னன்பாண்டியற்காகவே (௮)

தாவினானயனானறியாவகை
மேவினாய்திருவாலவாயாயரு
ளோவிலாவமணர்கொளுவுஞ்சுடர்
பாவினான்றென்னன்பாண்டியற்காகவே (௯)

எண்டிசைக்கெழிலாலவாய்மேவிய
வண்டனேயஞ்சலென்றருள்செய்யெனைக்
குண்டராமமணர்கொளுவுஞ்சுடர்
பண்டிமன்றென்னன்பாண்டியற்காகவே. (௰)

அப்பனாலவாயாதியருளினா
லெப்பந்தென்னவன்மேலுறமேதினிக்
கொப்பஞானசம்பந்தனுரைபத்துஞ்
செப்பவல்லவர்தீதிலாச்செல்வரே (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

திருஞானசம்பந்தப் பிள்ளையார் அடியார்களோடு மதுரைத் திருப்பதிக்குப் பகலிலே எழுந்தருளி வரக்கண்ட சமணர்களெல்லாரும் மனங்கலங்கி, சூரியன் அஸ்தமயனமானபின், ஒருங்கு கூடினார்கள். பிள்ளையார் எழுந்தருளியிருக்கின்ற மடாலயத்திலே திருத்தொண்டர்கள் ஓதுகின்ற திருப்பதிக இசையின் பேரொலி செவிப்புலப்பட, க்ஷபணர்கள் அது பொறாராகி, "பாண்டிய ராஜனிடத்திற் சென்று சொல்லுவோம்" என்று துணிந்து, அப்பாண்டிய ராஜனை அடைந்தார்கள். பாண்டியன் அவர்களுடைய மனத்துயரத்தைக் கண்டு, "நீங்கள் இங்ஙனந் திரண்டு வருதற்குக் காரணம் யாது" என்று பரிந்து வினவ, சமணர்கள் "மஹாராஜாவே, உம்முடைய மதுரையிலே சைவப்பிராமணர்கள் வருதலால், இன்றைக்கு நாங்கள் கண்டுமுட்டு" என்றார்கள். உடனே அரசன் "நானும் கேட்டுமுட்டு" என்று சொல்லிக் கோபித்து, "அந்தச் சிவனடியார்கள் இன்றைக்கு இந்நகரத்திற்கு வருதற்குக் காரணம் யாது? அவர்கள் யாவர்"

என்றான், அதற்குச் சமணர்கள் "சோழநாட்டிலே சீர்காழியிலிருக்கின்ற ஓர்பிராமணப்பாலன் சிவனிடத்திலே ஞானம் பெற்றவனென்று முத்துச்சிவிகை மேற்கொண்டு, எங்களை வாதிலே வெல்லும் பொருட்டு அடியார்களோடு வந்திருக்கின்றான்" என்றார்கள் பாண்டியன் மிகக்கோபித்து, "இதற்கு நாம் யாதுசெய்வோம்" என்று சொல்ல, தீயவர்களாகிய சமணர்கள் "நாங்கள் அந்தப்பிராமணப பிள்ளையிருக்கின்ற மடத்திலே மந்திரவித்தையினாலே அக்கினி பற்றச் செய்வோமாயின், அவன் இந்நகரத்திலே இராமல் போய்விடுவான்" என்றார்கள் பாண்டியன் அதைக்கேட்டு "விரைந்து சென்று அங்ஙனஞ் செய்யுங்கள்" என்று சொல்லி, அவர்களைப் போக்கி, யாதொரு பேசுமின்றி, மனக்கவலையோடு சயனத்திற் புக்கான் பாண்டிமாதேவியாரும் புகுந்தார் பாண்டியன் ஒன்றும் பேசாதிருக்க, மாதேவியார் "என் பிராணநாயகரே, நீர்முன்னுள்ள மகிழ்ச்சியின்றி முகம்புலர்ந்திருக்கின்றீர் உம்முடைய மனதிலே வந்த கவலை யாது? சொல்லியருளும்" என்றார் பாண்டியன் தேவியாரை நோக்கி, "என் அதிப்பிரியையாகிய பிராணநாயகியே, "சோழநாட்டிலே சீர்காழியிலிருக்கின்ற ஒரு பிராமணப்பிள்ளை சிவனுடைய அருளைப்பெற்று நம்முடைய ஆசாரியர்களை வாதிலே வெல்லும் பொருட்டு அடியார்களோடும் இங்கே வந்திருக்கின்றான் ஆசாரியர்கள் அவர்களைக் கண்டுமுட்டு, நான் கேட்டுமுட்டு இதுவே யென் கவலைக்குக் காரணம்" என்றான் மங்கையர்க் கரசியார் "என் பிராணநாயகரே, நீர் கோபிக்க வேண்டுவதில்லை இரு பக்ஷத்தாரும் வாது செய்தால், வென்றவர் பக்கலே சேர்ந்து அவர் அனுட்டிக்குஞ் சமயத்தையே அனுட்டித்தல் உறுதியாகும்" என்று சொல்லிவிட்டு, பெரு மகிழ்ச்சியோடு தம்முடைய மாடத்திற் சென்றிருந்தார் குலச்சிறை நாயனார் அங்கே எய்த, பாண்டிமாதேவியார் இந்தச் சமாசாரத்தை அவருக்குச் சொல்லினார் குலச்சிறை நாயனார் கைகுவித்து நின்று, "இன்றைக்குத் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் இங்கே எழுந்தருளிவரப் பெற்றுக் கொண்டோம் இனிச் சமணர்கள் செய்யும் வஞ்சனையை அறியேன்" என்றார் பாண்டிமாதேவியாரும் அஞ்சி, "வஞ்சகப் புலையராகிய க்ஷபணர்கள் தீத்தொழில் செய்ய வல்லவர்கள் என் செய்வோம்" என்று நினைந்து, "திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருக்கு யாதாயினும் ஓரூறு வருமாயின், நாமும் உயிர் துறந்து விடுவோம்" என்றார்

தவமறைந்து அல்லன செய்யுஞ் சமணர்கள், பிள்ளையார் எழுந்தருளியிருக்கின்ற மடாலயத்திலே அக்கினி பற்றும்படி மந்திரஞ் செபித்தார்கள் உயர்வொப்பில்லாத ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை ஓதும் மகான்கள் பார்க்குந் திசையிலும் மற்றை மந்திரங்கள் பலிக்குமோ, பலியா அடியாருடைய மடாலயத்திலே தங்கள் மந்திர சாதனைகள் பலியாமையைக் கண்ட சமணர்கள் மனந்தளர்ந்து, "அரசன் இதனை அறியின் நம்மைச் சிறிதும் நன்குமதியான் நம்முடைய விருத்தியையும் ஒழித்து விடுவான்" என்று நினைந்து பயந்து, அக்கினியைக் கொண்டுபோய் மடாலயப் புறச் சுற்றிலே கொளுத்தினார்கள் அத்தொழில் வெளிப்படுதலும், பரிசனத்தவர்கள் மறுகிப் பதைப்புடனே சிதைத்து நீக்கி, அது செய்தவர்கள் பாதகர்களாகிய சமணர்களென்பதை உணர்ந்து சென்று, பிள்ளையாரை நமஸ்கரித்து நின்று, சமணர்கள் செய்த தீங்கை விண்ணப்பஞ் செய்தார்கள் உடனே பிள்ளையார் "சிவனடியார்கள் துயில்கின்ற இந்த மடாலயத்திலே பாவிகள் பழுது செய்யலாமோ" என்று பரிந்தருளி, "அவர்கள் என்பொருட்டுச் செய்த தீங்காயினும், சிவனடியார்களுக்கு இப்படி வருமோ" என்று பின்னும் அச்சுற்று, மகா கோபங்கொண்டு, "இத்தீங்கு அரசனால் வந்தது" எனத் திருவுளங் கொண்டு, "செய்யனே திருவாலவாய்" என்னுந் திருப்பதிகத்தை, "அமணர் கொளுவுஞ் சுடர் பையவே சென்று பாண்டியற்காகவே" என்று பாடியருளினார் சிவபத்தியிற் சிறந்த பாண்டிமாதேவியாருடைய திரும

ங்கவியத்தைப் பாதுகாத்தல் வேண்டினமையாலும், மந்திரியாராகிய குலச்சிறை நாயனாருடைய அன்பினாலும், அரசனிடத்தில் அபராதம் உறுதலாலும், அவனுக்கு மீண்டு சைவமார்க்கத்தை அடையும் விதி உண்மையாலும், அவன் வெப்பு நீங்கும்படி தம்முடைய அருமைத் திருக்கரங்களினாலே தீண்டி விபூதி சாத்தும் பெரும்பேற்றை உடையனாதலாலும், தீப்பிணியைப் "பையவே சென்று" என்று அருளிச்செய்தார். திருப்பதிகம் பாடியவுடனே, அக்கினி வெம்மைபோய்ப் பாண்டியனை அடைந்தது.

## திருவிராகம்

### பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்

வீடலாலவாயிலாய்விழுமியார்கணின்கழற்
பாடலாலவாயிலாய்பரவநின்றபண்பனே
காடலாலவாயிலாய்கபாலிநீள்கடிம்மதிற்
கூடலாலவாயிலாய்குலாயதென்னகொள்கையே. (௧)

பட்டிசைந்தவல்குலாள்பாவையாளோர்பாகமா
வொட்டிசைந்ததன்றியும்முச்சியாளொருத்தியாக்
கொட்டிசைந்தவாடலாய்கூடலாலவாயிலா
யெட்டிசைந்தமூர்த்தியாயிருந்தவாறிதென்னையே. (௨)

குற்றநீகுணங்கணீகூடலாலவாயிலாய்
சுற்றநீபிரானுநீதொடர்ந்திலங்குசோதிநீ
கற்றநூற்கருத்துநீயருத்தமின்பமென்றிவை
முற்றுநீபுகழ்ந்துமுன்னுரைப்பதென்முகம்மனே. (௩)

முதிருநீர்ச்சடைமுடிமுதல்வநீமுழங்கழ
லதிரவீசியாடுவாயழகநீபுயங்கநீ
மதுரநீமணாளநீமதுரையாலவாயிலாய்
சதுரநீசதுர்முகன்கபாலமேந்துசம்புவே. (௪)

கோலமாயநீண்மதிற்கூடலாலவாயிலாய்
பாலனாயதொண்டுசெய்துபண்டுமின்றுமுன்னையே
நீலமாயகண்டனேநின்னையன்றிநித்தலுஞ்
சீலமாய்ச்சிந்தையிற்றேர்வதில்லைதேவரே (௫)

பொன்றயங்கிலங்கொளிந்நலங்குளிர்ந்தபுன்சடை
பின்றயங்கவாடுவாய்பிஞ்ஞகாபிறப்பிலீ
கொன்றையம்முடியினாய்கூடலாலவாயிலாய்
நின்றயங்கியாடலேநினைப்பதேநியமமே. (௬)

ஆதியந்தமாயினாயாலவாயிலண்ணலே
சோதியந்தமாயினாய்சோதியுள்ளொர்சோதியாய்
ஈதிவந்தவாய்மையாற்கிளர்தருக்கினார்கடா
லோதிவந்தவாய்மையாலுணர்ந்துரைக்கலாகுமே. (௭)

கறையிலங்குகண்டனே கருத்திலாக்கருங்கடற்
றுறையிலங்கைமன்னனைத் தோளடரவூன்றினாய
மறையிலங்குபாடலாய் மதுரையாலவாயிலாய்
நிறையிலங்குநெஞ்சினானினைப்பதேசியம்மமே. (அ)

தாவணவ்விடையினாய தலைமையாகநாடொறுங்
கோவணவ்வுடையினாய கூடலாலவாயிலாய
தீவணம்மலர்மிசைத்திசைமுகனுமாலுநின
றூவணமளக்கிலாதுளக்கமெய்துவார்களே. (கூ)

தேற்றமில்வினைத்தொழிற்றேரருஞ்சமணரும
போற்றிசைத்துநின்கழற்புகழ்ந்துபுண்ணியங்கொளார
கூற்றுதைத்ததாளினாய்கூடலாலவாயிலாய
நாற்றிசைக்குமூர்த்தியாகிநின்றதென்னநன்மையே (கo)

போயநீர்வளங்கொளும்பொருபுனற்புகலியான்
பாயகேள்விஞானசம்பந்தனல்லபண்பினா
லாயசொல்லின்மாலைகொண்டாலவாயிலண்ணலைத்
தீயதீரவெண்ணுவார்கள்சிந்தையாவார்தேவரே. (கக)

திருச்சிற்றம்பலம்

---

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் மதுரைப்பதியிலே பாடியருளிய திருப்பாசுரம் எழுதிய திருவேடு வைகைநதியிலே எதிர்ந்துசென்றதைத் தங்குமபொருட்டுத் திருப்பதிகம்பாடியபின, திருவேடகத்திலே தங்கிய அவ் வேட்டைக் குலச்சிறைநாயனார் எடுத்துக் காட்ட, பாண்டியராஜர் கண்டு, குலச்சிறைநாயனாரை நோக்கி "வாதிலே ஒட்டித் தோற்ற இந்தச் சமணர்கள், முன்னே எங்கள் பரமாசாரியராகிய ஸ்ரீஞானசம்பந்த சுவாமிகளிடத்திலே அநுசிதஞ் செய்தவர்கள் ஆதலால இவர்களைக் கழுவிலே பற்றுக" என்று ஆஞ்ஞாபித்தார் கருணாகரராகிய பிள்ளையார் அதைக் கேட்டும், தாம் அவர்கண்மேற் சிறிதும் பகையிலராயினும், அவர்கள் சிவனடியார்கள் வாழுமடாலயத்திலே செய்த தீங்கு அதிபாதகமாதலாலும், அதிபாதகஞ்செய்தார் யாவராயினும அவரைக் கொல்லல்வேண்டுமென்பது சிவாகமநூற்றுணிவாதலாலும் பாண்டியருடைய குற்றமற்ற செய்கையை விலக்காதிருந்தார் திடபத்தியையுடைய குலச்சிறை நாயனார், கழுத்தறிகளை நிரையாக நாட்டுவித்து அவைகளில் ஏற்ற, அதிபாதகர்களாகிய சமணர்கள் எண்ணாயிரரும ஏறினார்கள் பிள்ளையார் பாண்டியராஜருக்கு விபூதிகொடுத்தருள, அவர், அவருடைய திருவடிகளைவிழுந்து நமஸ்கரித்து எழுந்து வாங்கி, அணிந்து நின்றார் பாண்டிநாட்டிலுள்ள சமஸ்தரும் விபூதி அணிந்து கொண்டார்கள் அரசர் சைவராயினமையால், சமணசமயம பாழாக, சைவசமயமே தழைத்தோங்கிற்று. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருடைய திருப்புகழே எங்கும பரந்தது பிள்ளையார் சொக்கலிங்கப் பெருமானைத் தரிசிக்க வேண்டும் என்று எழுந்து சென்று முத்துச்சிவிகை மேற்கொண்டு போனார் பாண்டியரும் மங்கையர்க்கரசியாரும் அவரைஸ்தோத்திரஞ் செய்துகொண்டு, உடன் சென்றார்கள் அடியார்கள் அனைவரும் பெருமகிழ்ச்சி பொங்க, பிள்ளையாரைத் துதித்துக்கொண்டு கூடப்போனார்கள் பிள்ளையார் திருக்கோயிலை அணைந்து, முத்துச்சிவிகை யினின்றும் இறங்கி, பாண்டியராஜரும் மாதேவியாரும மந்திரியாரும் தம்மைத் தோத்திரஞ்செய்துகொண்டு உடன்புகப் புகுந்து, வலஞ்செய்து சந்நிதானத்தை அடைந்து, சொக்கலிங்கப் பெருமானை வணங்கி,

"விடலாலவாயிலாய்" என்னுந் திருப்பதிகம் பாடினார். பாண்டியர் சொக்கலிங்கப்பெருமானை நமஸ்கரித்து நின்று, "திருவாலவாயில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானே சமணர்களுடைய மாயையினாலே மயங்கித் தேவரீரை அறியாதிருந்த சிறியேனைப் பிணி நீக்கி ஆட்கொள்ளும் பொருட்டுத் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரைத் தந்தருளிய பெருங்கருணையை என்னென்று பேசுவேன்" என்று தோத்திரம் பண்ணினார். பிள்ளையாருஞ் சுவாமியை வணங்கி அருள்பெற்று, அங்குநின்று அரிதினீங்கி மடாலயத்திற் சென்று, எழுந்தருளியிருந்தார். பாண்டியரும் மாதேவியாரும் பிள்ளையாரை வணங்கி அநுமதி பெற்றுக்கொண்டு, தங்கள்மாளிகைக்குப் போனார்கள்.

## நாலடிமேல்வைப்பு

திருச்சிற்றம்பலம்

வேதவேள்வியைநிந்தனைசெய்துழ
லாதமில்லிஅமணொடுதேரரை
வாதில்வென்றழிக்கத்திருவுள்ளமே
பாதிமாதுடனாயபரமனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
னாலவாயிலுறையுமெம்மாதியே (௧)

வைதிகத்தின்வழியொழுகாதவக்
கைதவமுடைக்காரமண்டேரரை
யெய்திவாதுசெயத்திருவுள்ளமே
மைதிகழ்தருமாமணிகண்டனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
னாலவாயிலுறையுமெம்மாதியே. (௨)

மறைவழக்கமிலாதமாபாவிகள்
பறிதலைக்கையர்பாயுடுப்பார்களை
முறியவாதுசெயத்திருவுள்ளமே
மறியுலாங்கையின்மாமழுவாளனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
னாலவாயிலுறையுமெம்மாதியே (௩)

அறுத்தவங்கமாறாயினநீர்மையைக்
கறுத்தவாழமண்கையர்கடம்மொடுஞ்
செறுத்துவாதுசெயத்திருவுள்ளமே
முறித்தவாண்மதிக்கண்ணிமுதல்வனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
னாலவாயிலுறையுமெம்மாதியே (௪)

அந்தணாளர்புரியுமருமறை
சிந்தைசெய்யாவருகர்திறங்களைச்
சிந்தவாதுசெயத்திருவுள்ளமே
வெந்தநீறதணியுமவிகிர்தனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
னாலவாயிலுறையுமெம்மாதியே. (௫)

வேட்டுவேள்விசெயுமபொருளைவிளி
மூட்டுசிநதைமுருட்டமண்குண்டரை
யோட்டிவாதுசெயததிருவுளளமே
காட்டிலானையுரித்தவெங்களவனே
ஞாலசின்புகழேமிகவேண்டுநதென
னாலவாயிலுறையுமெம்மாதியே. (சு)

அழலதோமபுமருமறையோாதிறம
விழலதென்னுமருகாதிறத்திறங
கழலவாதுசெயததிருவுள்ளமே
தழலிலஙகுதிருவுருசசைவனே
ஞாலசினபுகழேமிகவேண்டுநதென
னாலவாயிலுறையுமெமமாதியே. (எ)

நீற்றுமேனியராயினாமேலுற்ற
காற்றுக்கொளளவுநில்லாவமணரைத
தேற்றிவாதுசெயத்திருவுள்ளமே
யாற்றவாளரக்கற்குமருளினாய்
ஞாலசினபுகழேமிகவேணடுநதென்
னாலவாயிலுறையுமெம்மாதியே. (அ)

நீலமேனியமணாதிறததுநின
சீலம்வாதுசெயததிருவுள்ளமே
மாலுநானமுகனுங்காண்பரியதோா
கோலமேனியதாகியகுனறமே
ஞாலசினபுகழேமிகவேண்டுநதென்
னாலவாயிலுறையுமெமமாதியே. (கூ)

அன்றுமுப்புரஞ்செறறவழகநின்
றுன்றுபொறகழலபேணவருகரைத
தென்றவாதுசெயத்திருவுளளமே
கன்றுசாக்கியர்காணாததலைவனே
ஞாலசின்புகழேமிகவேணடுநதென
னாலவாயிலுறையுமெம்மாதியே. (க0)

கூடலாலவாயக்கோனைவிடைகொண்டு
வாடன்மேனியமணரைவாட்டிட
மாடககாழிசசமபநதனமதிததவிட
பாடலவல்லவாபாககியவாளரே. (கக)

திருச்சிற்றமபலம்

---

திருஞானசம்பந்தப் பிள்ளையார் மதுரைப்பதியில் எழுந்தருளி யிருந்தபோது, திருவாலவாயாகிய திருக்கோயிலை அடைந்து, திருப்பதிகம்பாடி, சமணாகளைநோக்கி வாதுசெய்தற்குச் சொக்கலிங்கப் பிரானுருடைய திருவுள்ளத்தை அறிந்த பினனும், சமணர்களை வாதில் வென்று அழிக்கும்பொருட்டும், சிவநாமத்தையே பரப்பும் பொருட்டும், "வேதவேள்வியை" என்னுந் திருப்பதிகம் பாடி, திருவருள் பெற்று, திருவுளமகிழ்ந்து விடைகொண்டு, கோபுரவாயிலை

கடந்து முத்துச்சிவிகையின்மேல் ஏறி, முத்துக்குடை நிழற்ற, அடியார்கள் சூழ, பலவகைப்பட்ட வாத்தியங்கள் முழங்க, முத்துச் சின்னங்கள் ஊத, மங்கையர்க்கரசியார் சிவிகைமேலேறிக்கொண்டு பின்னாகவர குலச்சிறை நாயனார் முன்னே அடியார் கூட்டத்திற் செல்ல, பாண்டியனுடைய கோயிலுக்கு எழுந்தருளினார்

---

## திருவியமகம்.

திருச்சிற்றம்பலம

ஆலநீழலுகநததிருக்கையேயானபாடலுகநததிருக்கையே
பாலினோமொழியாளொருபஙகனேபாதமோதலாசோபுரபஙகனே
கோலநீறணிமேதகுபூதனேகோதிலாமனமேவியபூதனே
யாலநஞசமுதுண்டகளத்தனேயாலவாயுறையணடாகளததனே (க)

பாதியாயுடன்கொணடதுமாலையேபாமபுதாாமலாககொனறைநனமாலையே
கோதினீறதுபூசிடுமாகனேகொண்டநறகையினமானிடமாகனே
நாதனுடொறுமாடுவதானையேநாடியனறுரிசெயததுமானையே
வேதநூல்பயில்கினறதுவாயிலேவிகிாதனூாதிருவாலநலவாயிலே. (உ)

காடுநீடதுறப்பலகததனேகாதலானினைவாாதமகததனே
பாடுபேயொடுபூதமசிககவேபல்பிணததசைநாடியசிககவே
நீடுமாநடமாடவிருபபனேநினனடிததொழநாளுமிருப்பனே
யாடனீளசடைமேவியவப்பனேயாலவாயினினமேவியவப்பனே. (௩)

பண்டயன்றலையொனறுமறுததியேபாதமோதினாபாவமறுததியே
துணடவெணபிறைசென்னியிருத்தியேதூயவெளளொருதேறியிருததியே
கண்டுகாமனைவேவவிழிததியேகாதலிலலவாதமமையிழிததியே
யண்டநாயகனேமிகுகணடனேயாலவாயினினமேவியகணடனே. (௪)

சென்றுதாதையுகுததனனபாலையேசீறியனபுசெகுததனனபாலையே
வென்றிசோமழுககொண்டுமுனகாலையேவீடவெடடிடககண்டுமுனகாலையே
நின்றமாணியையோடினககங்கையாணிலவமலகியுதிததனககங்கையா
லன்றுநின்னுருவாகததடவியேயாலவாயரனுகததடவியே. (௫)

நக்கமேகுவாநாடுமோரூருமேநாதன்மேனியினமாசுணமூருமே
தககபூமனைசசுறறக்கருளொடேதாரமுயததுபாணறகருளொடே
மிககதெனனவனதேவிக்கணியையேமெல்லநலகியதொணடாககணியையே
யக்கினாழுதுன்கலனோடுமேயாலவாயரனுருமையோடுமே. (௬)

வெய்யவன்பல்லுகுத்ததுகுட்டியேவெஙகணமாசுணஙகையபதுகுடடியே
யையனேயனலாடியமெய்யனேயனபினனினைவாாககருண்மெயயனே
வையமுய்யவன்றுண்டதுகாளமேவளளலகையததுமேவுககஙகாளமே
யையமேற்பதுணடபதுவீணையேயாலவாயரனகையதுவீணையே. (௭)

தோள்களபததொடுபததுமயக்கியேதொக்கதேவாசெருககைமயககியே
வாளரககனிலததுககளிததுமேவநத்மாலவணாகணடுகளிததுமே
நீள்பொருப்பையெடுத்தவுனமததனேநின்விரறறலையான்மதமத்தனே
யாளுமாதிமுறித்ததுமெயகொலோவாலவாயரனுயததததுமெயகொலோ. (அ)

---

* "விழித்தியே" என்றும்பாடம்

பஙகயததுளநான்முகனமாலொடேபாதநீணமுடிநேடிடமாலொடே
துங்கநறறழலின்னுருவாயுமேதூயபாடல்பயினறதுவாயுமே
செஙகயறகணிஞரிடுபிசசைசயேசென்றுகொண்டுளைசெயவதுபிசசைசயே
யஙகியைததிகழ்விப்பதிடக்கையேயாலவாயரனுரதிடக்கையே. (௯)

தேரரோடமணாககுநலகாணேயேதேவாநாடொறுஞசோவதுகாணேயே
கோரமட்டதுபுண்டரிகததையேகொணடநீள்கழல்புணடரிகத்தையே
நேரிலூாகளழித்ததுநாகமேநீளசடைததிகழ்கினறதுநாகமே
யாரமாகவுகநததுமெனபதேயாலவாயரனுரிடமெனபதே (௧0)

ானஞானிகடமமொடுவிரகனேயேறுபல்பொருணமுததமிழ்விரகனே
யானகாழியுண்ஞானசமபநதனேயாலவாயினின்மேயசமபநதனே
யானவானவாவாயினுளததனேயனபரானவாவாயினுளததனே
நானுாைததனசெநதமிழபததுமேவலலவாககிவைநற்றமிழ்பததுமே. (௧௧)

திருச்சிறறமபலம

திருஞானசம்பந்தப்பிள்ளையார், மதுரைபபதியில எழுந்தருளியிருந்தபொழுது, ‘ஆலநீழலுகந்ததிருக்கையே’’ என்னுந திருவியமகத் திருப்பதிகம் பாடியருளி, அதிலே, திருநீலகண்டபபெரும்பாணருக்கு அருளியதிறததையும் துதிதது, அவரோடும் அளவளாவியிருந்தார்

பண - புறநீாமைம.

திருச்சிற்றமபலம

மஙகையாககரசிவளவாகோனபாவைவரிவளைககைமடமானி
பங்கயசசெல்விபாண்டிமாதேவிபணிசெயதுநாடொறுமபரவப
பொஙகழலுருவனபூதநாயகனாலவேதமுமபொருள்களுமருளி
யஙகயறகணணிதனனொடுமமாநதவாலவாயாவதுமிதுவே (௧)

வெறறவேயடியாரடிமிசைவீழுமவிருபபினனவெளளைநீறணியுங
கொற்றவன்றனககுமநதிரியாயகுலசசிறைறகுலாவிநின்றேதது
மொறறைவெளவிடையனுமபராாதலைவனுலகினிலியறகையையொழிநதிட
டறறவாக்கறறசிவனுறைகினறவாலவாயாவதுமிதுவே. (௨)

செநதுவாவாயாளசேலனகணணாளசிவன்றிருநீறறினைவளாககும
பநதணைவிரலாளபாணடிமாதேவிபணிசெயட்பாரிடைநிலவுஞ
சநதமாாதாளமபாமபுநீாமததநதணனொருககமமலாவனனி
யநதிவான்மதிசோசடைமுடியணணலாலவாயாவதுமிதுவே. (௩)

கணஙகளாயவரினுநதமியராயவரினுமடியவாதஙகளைக்கண்டாற்
குணஙகொடுபணியுஙகுலசசிறைகுலாவுஙகோபுரஞசூழமணிககோயின்
மணஙகமழகொன்றைவாளராமதியமவன்னிவண்கூவிளமாலை
யணஙகுவீற்றிருநதசடைமுடியண்ணலாலவாயாவதுமிதுவே. (௪)

செய்யதாமரைமேலன்னமேயனையசேயிழைதிருநுதறசெல்வி
பையரவலகுறபாண்டிமாதேவிநாடொறும்பணிநதினிதேத்த
வெயயவேறசூலமபாசமஙகுசமான்விரிகதிரமழுவுடன்றரித்த
வையனுருமையோடின்புறுகின்றவாலவாயாவதுமிதுவே. (௫)

நலமிலராகநலமதுண்டாகநாடவர்நாடறிகின்ற
குலமிலராகக்குலமதுண்டாகத்தவம்பணிகுலச்சிறைபரவுங்
கலைமலிகரத்தன்மூவிலைவேலன்கரியுரிமூடியகண்ட
னலைமலிபுனல்சேர்சடைமுடியண்ணலாலவாயாவதுமிதுவே (சு)

முத்தின்றாழ்வடஞ்சந்தனக்குழம்புநீறுந்தன்மார்பினின்முயங்கப்
பத்தியாகின்றபாண்டிமாதேவிபாங்கொடுபணிசெயநின்ற
சுத்தமார்பளிங்கின்பெருமலையுடனேசுடர்மரகதமடுத்தாற்போ
லத்தனாருமையோடின்புறுகின்றவாலவாயாவதுமிதுவே (எ)

நாவணங்கியல்பாமஞ்செழுத்தோதிநல்லராய்நல்லியல்பாகுங்
கோவணம்பூதிசாதனங்கண்டாற்றொழுதெழுகுலச்சிறைபோற்ற
வேவணங்கியல்பாமிராவணன்றிண்டோளிருபதுநெரிதரவூன்றி
யாவணங்கொண்டசடைமுடியண்ணலாலவாயாவதுமிதுவே (அ)

மண்ணெலாநிகழமன்னனாய்மன்னுமணிமுடிச்சோழன்றன்மகளாம்
பண்ணினேர்மொழியாள்பாண்டிமாதேவிபாங்கினாற்பணிசெய்துபரவ
விண்ணுளாரிருவர்கீழொடுமேலுமளப்பரிதாயவர்நின்ற
வண்ணலாருமையோடின்புறுகின்றவாலவாயாவதுமிதுவே. (கூ)

தொண்டராயுள்ளார்திசைதிசைதோறுந்தொழுதுதன்குணத்தினைக்குலாவக்
கண்டுநாடோறுமின்புறுகின்றகுலச்சிறைகருதிநின்றேத்தக்
குண்டராயுள்ளார்சாக்கியர்தங்கள்குறியின்கணெறியிடைவாரா
வண்டநாயகன்றன்மாந்துவீற்றிருந்தவாலவாயாவதுமிதுவே (௧௦)

பன்னலம்புணரும்பாண்டிமாதேவிகுலச்சிறையெனுமிவர்பணியு
மன்னலம்பெறுசீராலவாயீசன்றிருவடியாங்கவைபோற்றிக்
கன்னலம்பெரியகாழியுண்ஞானசம்பந்தன்செந்தமிழிவைகொண்
டின்னலம்பாடவல்லவரிமையோரேத்தவீற்றிருப்பவரினிதே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

திருஞானசம்பந்த மூர்த்திநாயனார் வேதாரணியத்தினின்றும் புறப்பட்டு, சோழநாட்டைக் கடந்து, பாண்டிநாட்டை அடைந்து, மதுரைக்குச் சமீபித்தார்.

எட்டுமலைகளிலும் வசிக்கின்ற சமணர்களெல்லாரும் துர்நிமித்தங்களும் துர்ச்சொப்பனங்களுங் கண்டு, மதுரையிலே ஒருங்கு வந்து கூடி, தாந்தாங்கண்ட சொப்பனங்களை ஒருவருக்கொருவர் சொல்லி, பாண்டியராஜனுக்குந் தெரிவித்து, தங்களுக்குத் தீங்கு விளைவது திடமெனக் கருதி, உணவின்றிக் கவலைகொண்டிருந்தார்கள். சைவர்களாகிய பாண்டிமாதேவியாரும் குலச்சிறை நாயனாரும் அளவில்லாத மகிழ்ச்சியைக் காட்டுகின்ற நன்னிமித்தங்களைக் கண்டு, சமணசமயங் குன்றிச் சைவசமயம் விருத்தியாதல் திடமெனக் கருதி, மகிழ்ந்திருந்தார்கள். இருக்கும்பொழுது, "சர்வலோகங்களும் உய்யும்படி அவதரித்தருளிய பரமாசாரியராகிய திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் எழுந்தருளிவருகின்றார்" என்று சிலர் அவர்களுக்குப் போய்ச் சொன்னார்கள். மங்கையர்க்கரசியார் அதைக் கேட்டு, அவ்வார்த்தையைச் சொல்லியவர்களுக்கு அளவிறந்த திரவியங்களைக் கொடுத்து, எல்லையில்லாத மகிழ்ச்சியுடையராகி, தம்மை வணங்கிநின்ற குலச்சிறை நாயனாரை நோக்கி "நமது தம்பிரானாராகிய திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாரை எதிர்கொள்ளும்" என்றார். குலச்சிறை நாயனார்

பாண்டிமாதேவியாரை வணங்கிப்போந்து, "அரசனுக்கும் உறுதியே" என்று விரைந்து மதுரைக்குப் புறத்திலே போய், பிள்ளையாரை எதிர்கொள்ளுதற்குச் செல்ல, பாண்டிமாதேவியாரும் தம்முடைய பரிசனங்கள் சூழ ஆலயத்திற் சென்று சொக்கலிங்கப் பெருமானை நமஸ்கரித்து, பிள்ளையாருடைய நல்வரவை பற்று நின்றார்.

ஆருகதம் பௌத்த முதலிய பரசமய விருளை நீக்குகின்ற ஞானாதித்தராகிய திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், தோற்கருவி துளைக்கருவி நரம்புக்கருவி கஞ்சக்கருவி என்னும் நாலவகை வாத்தியங்களும் ஒலிக்க, எண்ணிறந்த பிராமணர்கள் உதாத்த அநுதாத்த ஸ்வரிதப் பிரசயங்களோடு வேதகோஷஞ் செய்ய, அடியார்கள் ஹரஹர என்று சொல்லும் ஓசையினாலே திக்குகளெல்லாஞ் செவிடுபட, செந்தமிழ் மாருதமாகிய தென்றல் எதிர்கொண்டு எம்மருங்குஞ் சேவிக்க, விபூதியைத் தரித்த திருமேனியையுடைய திருக்கூட்டம் சர்வலோகத்தாருஞ் செய்த சிவபுண்ணியங்களின் படையெழுச்சிபோலப் பொலிந்து விளங்க, க்ஷபணசமயம் பாழ்பட, சைவசமயம் தழைத்தோங்க, தம்முடைய திருநாமங்கள் பலவற்றையும் ஊதுகின்ற முத்துச் சின்னங்களெல்லாம் "பரசமயகோளரி வந்தார் பரசமயகோளரி வந்தார்" என்று பணிமாற, அடியார்கள் பலர் உரோமஞ் சிலிர்ப்ப ஆனந்தவருவி சொரிந்து எங்கும் பெருகி அலைப்பத் தம்முடைய மகிமைகள் எல்லாவற்றையும் பாடி ஆட, இவற்றைக் கண்ட கேட்ட சமணப் புலவர்களெல்லாரும் ஓட்டெடுக்க, அற்புத சின்மயத் திருவருள்வடிவாகிய முத்துச் சிவிகையின் மேலே முத்துக்குடை நிழற்ற எழுந்தருளி வந்தார் சத்திய நிமல சிவஞானானந்த வடிவாகிய பிள்ளையார் இப்படி எழுந்தருளி வரும்பொழுது, ஒப்பில்லாத முத்துச்சின்னம் உலகமெல்லாம் உய்யும்படி ஊதுகின்ற அதி மதுரமாகிய பேரொலியானது குலச்சிறை நாயனாருடைய திருச்செவிகளிலே திவ்வியாமிர்தம்போலப் புகுந்து சுவைக்க, உடனே அந்நாயனார் பூமியிலே விழுந்து நமஸ்கரித்து, அளத்தற்கரிய பெருங்களிப்பினை யுடையராகி எழுந்து, இரண்டு கைகளும் சிரசின்மேல் ஏறிக்குவிய, உரோமாஞ்சங் கொள்ள, எதிரே கடுகி நடந்தார். பிள்ளையாரோடு கூடி வருகின்ற அடியார்கள் திருக்கூட்டத்தை நெடுந்தூரத்திலே கண்டு வணங்கி, எழுந்து விரைந்து சமீபத்திற்சென்று, ஆனந்தபரவசராகி அடியற்ற மரம்போல நிலத்திலே விழுந்து கிடந்தார். அக்குலச்சிறை நாயனாரை எதிரே வந்த அடியார் பலர் வணங்கி, அவர் பூமியினின்று எழாமையைக் கண்டு, திரும்பித் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரை அடைந்து வணங்கி, வாய்பொத்தி நின்று, "சுவாமீ, பாண்டியனுடைய மந்திரியாராகிய குலச்சிறையார் திருமுன்னே வந்து அடியற்ற மரம்போல விழுந்து கிடக்கின்றனர்," என்று விண்ணப்பஞ் செய்தார்கள். சர்வஜீவ தயாநிதியாகிய பிள்ளையார் அது கேட்டு, திருமுகத் தாமரை மலர்ந்து, முத்துச் சிவிகையினின்றும் இறங்கி, விரைந்து சென்று, அவரை அணைந்து, தம்முடைய அருமைத் திருக்கரங்களினாலே பற்றி எடுக்க, அத்திருக்கரங்கள் தீண்டுதற்குப் பூர்வ ஜன்மங்களிலே அநந்தகோடி சிவபுண்ணியங்களைச் செய்திருந்த குலச்சிறை நாயனார், அப்பிள்ளையாருடைய திருமுக மண்டலம் பொழியாநின்ற பெருங்கருணை வெள்ளத்திலும் தம்முடைய கண்களினின்று பொழியாநின்ற ஆனந்த வெள்ளத்திலும் முழுகி, உரை தடுமாற, உரோமஞ்சிலிர்ப்ப, சரீரம் நடுங்க, எழுந்து, கைகளைச் சிரமேற் குவித்து நின்றார். பிள்ளையார் அவர்மீது திருவருணோக்கஞ் செய்து, 'அன்பரே, பாண்டிமாதேவியாருக்கும் உமக்கும் நமது கடவுளாகிய சிவபெருமானது திருவருள் பெருகும் நன்மைதான் வாலிதே" என்றுசொல்லியருள, அம்மதுர வாசகத்தைக் கேட்ட குலச்சிறை நாயனார் வணங்கி நின்று, "அடியேங்கள் செய்த தவப்பயனே, அருட்குன்றே, சிவஞான தீபமே அடியேங்களுக்குச் சென்ற காலத்திலே பழுதடையாத் திறமும் எதிர்காலத்திலே வரு

ஞ்சிறப்பும் இந்நிகழ்காலத்திலே தேவரீர் இந்நாட்டில் எழுந்தருளுதலினாலே பெற்ற பெரும்பேறுகும். இதனால் அடியேங்கள் எக்காலத்தும் திருவருளுடையேம் அன்றியும், பொய்ச்சமயமாகிய சமண சமயத்தில் அமிழ்ந்திய இந்நாடும் அரசனும் வெற்றி பொருந்திய விபூதிப் பிரகாசத்தினாலே விளங்கும் மேன்மையையும் பெற்றேம் பாண்டிமாதேவியார் தேவரீர் இங்கெழுந்தருளுதலைக் கேட்டு, பெருமகிழ்ச்சி கொண்டு, 'நமது பெருவாழ்வு எழுந்தருளியது, நீர் போய் எதிர்கொண்டு திருவடி பணிவீர்' என்று அடியேனை ஏவினார்'' என்று விண்ணப்பஞ்செய்து, மிக்க களிப்பினாலே மீளவும் பணிந்து தோத்திரம் பண்ணினார்

பிள்ளையார் அங்ஙனம் பணிந்து துதித்த குலச்சிறை நாயனாருக்கு அருண்மொழி கூறியருளும் பொழுது, மதுராபுரி தோன்றுதலும், அடியாரை நோக்கி, "நமது சிவபெருமானுடைய திருவாலவாய் எம்மருங்கினது'' என்று வினாவியருள, அவ்வடியவர் பிள்ளையாருடைய திருவடிகளை வணங்கித் திருமுன்னே நின்று, கையினாலே காட்டி, "இங்கே கோபுரந் தோன்றுகின்றது திருவாலவாய் இது'' என்றார் அது கண்டு, பிள்ளையார் கைகுவித்து மிகுந்த அன்போடு பூமியின்மேலே விழுந்து நமஸ்கரித்து, "மங்கையர்க்கரசி'' என்று எடுத்து, மங்கையர்க்கரசியாரும் குலச்சிறை நாயனருமாகிய இருவருடைய திருத்தொண்டுகளைக் கொண்டமையைச் சிறப்பித்து, திருப்பாட்டுதோறும் "ஆலவாயாவதுமிதுவே'' என்பதை அமைத்து, திருப்பதிகம் பாடிக் கொண்டு, அடியார்களோடும் திருவாலவாயை அணைந்து, கோபுரத்தை வணங்கி, உள்ளே புகுந்து வலஞ்செய்து, மந்திரியாரோடு சந்நிதானத்தை அடைந்து, சொக்கலிங்கப் பெருமானைத் தரிசித்து, அஷ்டாங்க பஞ்சாங்கமாகப் பலமுறை நமஸ்கரித்து, உரோமப் புளகங் கொள்ள ஆனந்த அருவி சொரிய நின்று, திருப்பதிகம்பாடி, திருமுன்றிலை யடைந்தார் முன்னே சுவாமி தரிசனஞ் செய்யும் பொருட்டுப் பிள்ளையார் உள்ளணையும்போது எதிர் செல்லாமல் ஒருபக்கத்திலே ஒதுங்கி நின்ற பாண்டிமாதேவியார் முன்னே வர, குலச்சிறை நாயனார் பிள்ளையாரை வணங்கி நின்று, "சுவாமீ, இங்கே சிரசின்மேற் கைகுவித்துக் கொண்டு வருகின்றவரே பாண்டிமாதேவியார்'' என்று விண்ணப்பஞ் செய்ய, பிள்ளையார் பெருங்களிப்போடு விரைந்து எதிரே சென்றார் பாண்டிமாதேவியார் பிள்ளையாருடைய திருவடிகளை விழுந்து நமஸ்கரித்தார் பிள்ளையார் திருவருள் சுரந்து, அவரைத் திருக்கரத்தினால் எடுத்தருளினார் பாண்டிமாதேவியார் தம்முடைய மனக்கருத்து முற்றியது என்று நினைந்து, கண்ணீர் சொரிய வாய் குழறி, "அடியேனும் அடியேனுடைய பதியும் செய்த தவம் என்'' என்று சொல்லி வணங்கினார். பிள்ளையார் "பரசமயத்தார்களுள் இருந்தும் சைவநெறியில் வாழும் அன்பரே, உம்மைக் காணுதற்கு வந்தோம்'' என்று சொல்லி அவரை விடைகொடுத்து அனுப்பிக் கொண்டு, அடியார்கள் சூழ எழுந்தருளினார் எழுந்தருளும் பொழுது, திருவாலவாயிலே திருத்தொண்டு செய்து கொண்டிருக்கின்ற அடியார்க ளெல்லாரும் வந்து, பிள்ளையாரை நமஸ்கரித்து, ஞானாதிதராகிய சுவாமீ, சமணிருள் நீங்கும்படி தேவரீர் இங்கே எழுந்தருளி வருவதற்கு அடியேங்கள் அளவிறந்த தவங்களைச் செய்திருந்தோம்'' என்றார்கள் பாலறுவாயர் அவர்களுக்கு அருள்செய்து, புறத்தணைந்து, குலச்சிறை நாயனார் மடாலயங்காட்ட, பரிசனங்களோடும் அதில் எழுந்தருளியிருந்தார் பாண்டிமாதேவியாருடைய ஆஞ்ஞையின்படி, குலச்சிறை நாயனார் பிள்ளையாருக்கும் பரிசனங்களுக்கும் விருந்தளித்தார்

# திருநாவுக்கரசுநாயனார்.

## திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

வேதியாவேதகீதாவிண்ணவரண்ணாவென்றென்
றோதியேமலர்கடூவியொருங்கிநின்கழல்கள்காணப்
பாதியோர்பெண்ணைவைத்தாய்படர்சடைமதியஞ்சூடு
மாதியேயாலவாயிலப்பனேயருள்செய்யாயே. (௧)

நம்பனேநான்முகத்தாய்நாதனேஞானமூர்த்தி
யென்பொனேயீசாவென்றென்றேத்திநானேசற்றென்றும்
பின்பினேதிரிந்துநாயேன்போந்தினிப்பிறவாவண்ண
மன்பனேயாலவாயிலப்பனேயருள்செய்யாயே. (௨)

ஒருமருந்தாகியுள்ளாயும்பரோடுலகுக்கெல்லாம்
பெருமருந்தாகிநின்றாய்பேரமுதின்சுவையாய்க்
கருமருந்தாகியுள்ளாயாளும்வல்வினைகடீர்க்கு
மருமருந்தாலவாயிலப்பனேயருள்செய்யாயே (௩)

செய்யநின்கமலபாதஞ்சேருமாதேவாதேவே
மையணிகண்டத்தானேமான்மறிமழுவொன்றேந்துஞ்
சைவனேசாலஞானங்கற்றறிவிலாதநாயே
னையனேயாலவாயிலப்பனேயருள்செய்யாயே (௪)

வெண்டலைக்கையிலேந்திமிகவுமூர்ப்பலிகொண்டென்று
முண்டதுமில்லைசொல்லிலுண்டதுநஞ்சுதன்னைப்
பண்டுநானினையமாட்டாப்பளகனேனுளமதார
வண்டனேயாலவாயிலப்பனேயருள்செய்யாயே. (௫)

எஞ்சலில்புகலிதென்றென்றேத்திநானேசற்றென்றும்
வஞ்சகமொன்றுமின்றிமலரடிகாணும்வண்ண
நஞ்சினைமிடற்றில்வைத்தநற்பொருட்பதமேநாயேற்
கஞ்சலென்றாலவாயிலப்பனேயருள்செய்யாயே (௬)

வழுவிலாதுன்னைவாழ்த்திவழிபடுந்தொண்டனேனுன்
செழுமலர்ப்பாதங்காணத்தெண்டிரைநஞ்சமுண்ட
குழகனேகோலவில்லீகூத்தனேமாத்தாயுள்ள
வழகனேயாலவாயிலப்பனேயருள்செய்யாயே. (௭)

நறுமலர்நீருங்கொண்டுநாடொறுமேத்திவாழ்த்திச்
செறிவனசித்தம்வைத்துத்திருவடிசேரும்வண்ண
மறிகடல்வண்ணன்பாகாமாமறையங்கமாறு
மறிவனேயாலவாயிலப்பனேயருள்செய்யாயே. (௮)

நலந்திகழ்வாயினூலாற்சருகிலைப்பந்தர்செய்த
சிலந்தியையரசதாளவருளினையென்றுதிண்ணங்
கலந்துடன்வந்துநின்னருள்கருதிநான்காண்பதாக
வலந்தனேனாலவாயிலப்பனேயருள்செய்யாயே. (௯)

பொடிக்கொடுபூசிபபொலலாகக்ரமமையிறபுநதியொன்றிட்
பிடித்துநினருளகளெனறுமபிதறறிநாணிருக்கமாட்டே
னெடுபபனெனறிலஙகைககோன்வந்தெடுத்தலுமிருபதுதோ
ள்டாத்தனேயாலவாயிலபபனேயருளசெயாயே. (௪௦)

திருச்சிற்றமபலம

## திருததாணடகம.

திருச்சிற்றமபலம

முளைத்தானையெலலாககுமுனனேதோனறி
முதிருஞசடைமுடிமேனமுகிழவெணடிஙகள்
வளைத்தானைவலலசுராபுரஙகணமூனறும
வரைசிலையாவாசுகிமாநாணுககோததுத
துளைத்தானைசசுடுசரத்தாறறுவளநீருத
அமுததவெணமுறுவலுமையோடாடித
திளைத்தானைத்தெனகூடறறிருவாலவாயச
சிவனடியேசிநதிககபபெறறேனுனே. (௧)

விணணுலகினமேலாாகணமேலானறன்னை
மேலாடுபுரமூனறுமபொடிசெயதானைப
பணணிலவுபைமெ ழிலசூழடழனததானைப
பசுமபொனனினிறத்தானைபபாணறறனை
யுணணிலவுசடைககறறைககஙகையாளைக
கரநதுமையோடுடனாகியிருநதானறனனைத
தெணணிலவுதெனகூடறறிருவாலவாயச
சிவனடியேசிநதிககபபெறறேனுனே (௨)

நீாததிரளைநீளசடைமேனிறைவித்தானை
நிலமருவிநீரோடகனலானறனனைப
பாறறிரளைபபயினறடவலலானறனனைப
பதைததெழுநதவெஙகூறறைப பாயநதானறனனைக
காறறிரளாயமேகததினுளளேநினறு
கடுஙகுரலாயிடிபபானைககணணாரநறித
தீததிரளைத்தெனகூடறறிருவாலவாயச
சிவனடியேசிநதிககபபெறறேனுனே. (௩)

வானமிதுவெலலாமுடையானறனனை
வரியரவககசசானைவனபேயசூழக
கானமதினடமாடவலலானறனனைக
கடைககணணனமஙகையுமைநோககாவெனமே
லூனமதுவெல்லாமொழிததானறனனை
யுணாவாகியடியேனதுளளேநினற
தேனமுதைத்தெனகூடறறிருவாலவாயச
சிவனடியேசிநதிக்கபபெற்றேனுனே. (௪)

ஊனானையுலகேழாய்நின்றானறன்னை
யொற்றைவெணபிறையானையுமையோடென்றும்

பேரானைப்பிறாகக்கென்றுமரியான்றனனைப
பிணக்காட்டினடமாடல்பேயோடென்று
மாரானையமராகளுக்கமுதீந்தானை
யருமறையானானமுகனுமாலும்போற்றுஞ்
சீரானைத்தென்கூடற்றிருவாலவாயச
சிவனடியேசிந்திக்கப்பெற்றேனானே. (௫)

மூவனைமூாததியைமூவாமேனி
யுடையானைமூவுலகுந்தானேயெங்கும
பாவனைப்பாவமறுப்பானறனனைப
படியெழுதலாகாதமங்கையோடு
மேவனைவிண்ணோாநடுங்கக்கண்டு
விரிகடலினஞ்சுணடமுதமீநத
தேவனைத்தென்கூடற்றிருவாலவாயச
சிவனடியேசிந்திக்கப்பெற்றேனானே (௬)

துறநதாாககுததுநெறியாயநின்றானறனனைத
துன்பந்துடைத்தாளவல்லானறன்னை
யிறநதாாகளெனபேயணிந்தானறனனை
யெல்லிநடமாடவல்லானறனனை
மறநதாாமதினமூனறுமாயத்தானறனனை
மறறொருபறறில்லாவடியேறகென்றுஞ
சிறநதானைத்தென்கூடற்றிருவாலவாயச
சிவனடியேசிந்திக்கப்பெற்றேனானே. (எ)

வாயானைமனததானைமனததுணினற
கருத்தானைக்கருததறிந்துமுடிப்பானறனனைத
தூயானைத்தூவெள்ளையேறறானறனனைச
சுடாததிங்கட்சடையானைத்தொடாந்துநினற
தாயானைததவமாயதன்மையானைத
தலையாயதேவாதிதேவாககென்றுஞ
சேயானைத்தென்கூடற்றிருவாலவாயச
சிவனடியேசிந்திக்கப்பெற்றேனானே (அ)

பகைச்சுடராயபாவமறுப்பானறன்னைப
பழியிலியாய்நஞ்சமுணடமிாதந்தானை
வகைச்சுடராயவல்லசுராபுரமட்டானை
வளவிலியாயெல்லாாககுமருளசெயவானை
மிகைச்சுடரைவிண்ணவாகண்மேலப்பாலை
மேலாயதேவாதிதேவாக்கென்றுந
திகைச்சுடரைத்தென்கூடற்றிருவாலவாயச
சிவனடியேசிந்திக்கப்பெற்றேனானே. (௯)

மலையானைமாமேருமன்னினானை
வளாபுன்சடையானைவானோாதங்க
டலையானையெனறலையினுச்சியென்றுந
தாபித்திருந்தானைத்தானேயெங்கும

துலையாகவொருவரையுமில்லாதானைத்
தோன்றுதாமதிலமூன்றுந் துவளவெய்த
சிலையானைத் தென்கூடற்றிருவாலவாயச்
சிவனடியேசிந்திக்கப்பெற்றேனானே. (௧௦)

தூத்தனைத்தோணமுடிபத்திறுத்தானறனைத்
தொன்னரம்பினின்னிசைகேட்டருள்செய்தானைப்
பாத்தனைப்பணிகண்டுபரிந்தான்றனைப்
பரிந்தவற்குப்பாசுபதமீந்தான்றனை
யாத்தனையடியேனுக்கன்பன்றன்னை
யளவிலாபல்லூழிகண்டுநின்ற
தீர்த்தனைத்தென்கூடற்றிருவாலவாயச்
சிவனடியேசிந்திக்கப்பெற்றேனானே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

சுவாமிதிருநாமம் - சொக்கலிங்கமூர்த்தி.
தேவிதிருநாமம் - மீனாக்ஷியம்மை

---

திருவாலவாயத் திருப்பதிகம் - ௪௧

---

## ௨. திருவாப்பனூர்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

முற்றுஞ்சடைமுடிமேன்முதிராவிளம்பிறைய
னொற்றைப்பட்டவரவமதுகொண்டரைக்கணிந்தான்
செற்றமில்சீரானைத்திருவாப்பனூரானைப்
பற்றுமனமுடையார்வினைபற்றறுப்பாரே. (௧)

குரவங்கமழ்குழலாள்குடிகொண்டுநின்றுவிண்ணோ
விரவுந்திருமேனிவிளங்குமவளைபெயிற்றி
னரவமணிந்தானையணியாப்பனூரானைப்
பரவுமனமுடையார்வினைபற்றறுப்பாரே (௨)

முருகுவிரிகுழலாரமனங்கொள்ளங்கனைமுன்
பெரிதுமுனிந்துகந்தான்பெருமானபெருங்காட்டி
னரவமணிந்தானையணியாப்பனூரானைப்
பரவுமனமுடையார்வினைபற்றறுப்பாரே. (௩)

பிணியும்பிறப்பறுப்பானபெருமான்பெருங்காட்டிற
றுணியினுடைதாழச்சுடரேந்தியாடுவா
னணியும்புனலானையணியாப்பனூரானைப
பணியுமனமுடையாரவினைபற்றறுப்பாரே. (ச)

தகரமணியருவித்தடமாலவரைசிலையா
நகரமொருமூன்றுநலங்குன்றவென்றுகந்தா
னகரமுதலானையணியாப்பனூரானைப
பகருமனமுடையாரவினைபற்றறுப்பாரே (ரு)

ஓடுந்திரிபுரங்களுடனேயுலந்தவியக்
காட்டிடமாகக்கனல்கொண்டுநின்றிரவி
லாடுந்தொழிலானையணியாப்பனூரானைப
பாடுமனமுடையாரவினைபற்றறுப்பாரே. (சா)

இயலுமவிடையேறியெரிகொணமழுவீசிக
கயலினிணைக்கண்ணுளொருபாலகலந்தாட
வியலுமிசையானையெழிலாப்பனூரானைப
பயிலுமனமுடையாரவினைபற்றறுப்பாரே. (எ)

கருக்குமணிமிடறனகதநாகக்கச்சையினு
னுருக்குமடியவரையொளிவெண்பிறைசூடி
யரக்கனறிறலழித்தானணியாப்பனூரானைப
பருக்குமனமுடையாரவினைபற்றறுப்பாரே. (அ)

கண்ணனகடிக்கமலமலாமேலினிதுறையு
மண்ணறகளப்பரிதாய்நின்றங்கடியாரமே
லெண்ணில்வினைகளைவானெழிலாப்பனூரானைப
பண்ணினனிசைபகர்வாரவினைபற்றறுப்பாரே (கூ)

செய்யக்லிங்கத்தாசிறுதட்டுடையாகள
பொய்யாபுறங்கூறப்புரிந்தவடியாரை
யையமகற்றுவானணியாப்பனூரானைப
பையநினைந்தெழுவாரவினைபற்றறுப்பாரே. (கo)

அந்தணபுனல்வைகையணியாப்பனூர்மேய
சந்தமலர்க்கொன்றைசடைமேலுடையானை
நந்தியடிபரவுநலஞானசம்பந்தன
சந்தமிவைவல்லாரதுமாற்றறுப்பாரே. (கக)

திருச்சிற்றம்பலம்

சுவாமிதிருநாமம் - ஆப்பனூர்நாதர்.
தேவிதிருநாமம் - அம்பிகை.

ஆ திருப்பதிகம் - க௨.

# ௩. திருப்பரங்குன்றம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

நீடலாசோதிவெணபிறையோடுநிறைகொனறைச
சூடலனநதிச்சுடரொரியேநதிசசுடுகானி
லாடலனஞசொலணியிழையாளையொருபாகம
பாடலனமேயநன்னகாபோலுமபரஙகுனறே (௧)

அஙகமொராறுமருமறைநானகுமருளசெயது
பொஙகுவெணணூலுமபொடியணிமாாபிறபொலிவிததுத
திஙகளுமபாமபுநதிகழசடைவைததோாதேனமொழி
பங்கினனமேயநனனகாபோலுமபரஙகுனறே. (௨)

நீரிடஙகொணடநிமிாசடைதனமேனிரைகொனறைச
சீரிடஙகொணடவெமமிறைபோலுஞசேயதாய
வோருடமபுள்ளேயுமையொருபாகமுடனாகிப
பாரிடமபாடவினிதுறைகோயிலபரஙகுனறே (௩)

வளாபூஙகோஙகமாதவியோடுமல்லிகைக
குளிாபூஞசாரலவணடறைசோலைபரஙகுனறந
தளிாபோனமேனிததையனலலாளோடொருபாகந
நளிர்பூஙகொனறைசூடினனமேயநகாதானே (௪)

பொனனியலகொனறைபபொறிகிளாநாகமபுரிசடைத
துன்னியசோதியாகியவீசனறொனமறை
பன்னியபாடலாடலனமேயபரஙகுனறை
யுன்னியசிநதையுடையவாககிலலையுறுநோயே (௫)

கடைநெடுமாடக்கடியரணமூனறுஙகனனமூழ்கத்
தொடைநவில்கினறவில்லினனநதிச்சுடுகானிற்
புடைநவிலபூதமபாடநினறாடுமபொருசூலப
படைநவிலவானறனனனகாபோலுமபரஙகுனறே (௬)

அயிலுடைவேலோரனலபுலகுகையினமபொனறா
லெயில்படவெயதவெமமிறைமேயவிடமபோலு
மயில்பெடைபுலகிமாநடமாடுமவளாசோலைப
பயிலபெடைவண்டுபாடலறாதபரஙகுனறே (௭)

மைத்தகுமேனிவாளரக்கன்றன்மகுடஙகள
பத்தினதிணடோளிருபதுஞசெற்றான்பரஙகுன்றைச
சித்தமதொன்றிச்செயகழலுன்னிச்சிவனென்று
நித்தலுமேத்தததொல்வினைநமமேனில்லாவே. (௮)

முந்தியவையநதாவியமாலுமொய்யொளி
யுநதியிலவநதிஙகருமறைபீநதவுரவோனுஞ
சிநதையினுலுநதெரிவரிதாகிததிகழசோதி
பநதியலஙகைமஙகையொாபஙகன்பரஙகுன்றே. (க)

குன்றாய்முற்றுநதிரிவாாகூறைமெயபோாதது
மிணடாயமிணடாபேசியபேசசுமெயயலல
பணடானீழனமேவியவீசனபரஙகுனறைத
தொண்டாலேத்ததொலவினைநமமேனிலலாவே. (கo)

தடமலிபொயகைசசணடைமனஞானசமபநதன
படமலிநாகமரைககசைநதானறனபரஙகுன்றைத
தொடைமலிபாடலபத்துமவல்லாாதநதுயாபோகி
விடமலிகணடனருளபெறுதனமைமிககோரே. (கக)

திருசசிறறமபலம

---

## சுந்தரமூர்த்திநாயனா

பண - இநதளம.

திருசசிறறமபலம

கோததிட்டையுஙகோவலுஙகோயிலகொணடருமைக
சொணடிழலகினறதோாகொலலைசசிலலைச
சேததிட்டுககுததிததெருவேதிரியுஞ
சிலபூதமுநீருநதிசைதிசையன
சோததிட்டுவிணணோாபலருநதொழுநும
மரைககோவணததோடொருதோலபுடைசூழந
தார்த்திட்டதுமபாமபுகைககொணடதும்பாம்
படிகேளுமககாட்செயவஞசுதுமே (க)

முணடநதரிததீாமுதுகாடுறைவீா
முழுநீறுமெயபூசுதிாமூககபபாமபைக
கணடததிலுநதோளிலுஙகட்டிவைத்தீா
கடலைககடைநதிட்டதோாநஞசையுணடீா
பிணடஞசுமநதுமமொடுஙகூடமாட்டோம
பெரியாரொடுநட்பினிதென்றிருதது
மணடஙகடநதபபுறததுமிருநதீா
ரடிகேளுமககாட்செயவஞசுதுமே (உ)

மூடாயமுயலகனமூககப்பாமபு
முடைநாறியவெணடலைமொய்த்தபலபேய
பாடாவருபூதஙகளபாயபுலித்தோல்
பரிசொன்றறியாதனபாரிடஙக
ளோடாமலாகநகொன்றையுநதுன்னெருககுந
துணைமாமணிநாகமரைக்கசைத்தொன்

5934 கோளாளியகுஞ்சரங்கோளிழைத்தீர்
மலையின்றலையல்லதுகோயில்கொள்ளீர்
வேளாளியகாமனைவெந்தழிய
விழித்தீரதுவன்றியும்வேய்புரையுந்
தோளாளுமைநங்கையொர்பங்குடையீ
ருடுகூறையுஞ்சோறுந்தந்தாளகில்லீ
ராளாளியவேகிற்றீரெம்பெருமா
னடிகேளுமக்காட்செயவஞ்சுதுமே. (கூ)

5935 பாரோடுவிண்ணும்பகலுமாகிப்
பனிமால்வரையாகிப்பரவையாகி
நீரோடுதீயுநெடுங்காற்றுமாகி
நெடுவெளியிடையாகிநிலனுமாகித்
தேரோடவரையெடுத்தவரக்கன்
சிரம்பத்திறுத்தீருஞ்செய்கையெல்லா
மாரோடுங்கூடாவடிகேளிதுவெ
னடியோமுமக்காட்செயவஞ்சுதுமே. (கய)

அடிகேளுமக்காட்செயவஞ்சுதுமென
றமரர்பெருமானையாரூரனஞ்சி
முடியாலுலகாண்டமூவேந்தர்முன்னே
மொழிந்தாறுமோர்நான்குமோரொன்றினையும்
படியாவிவைகற்றுவல்லவடியார்
பரங்குன்றமேயபரமனடிக்கே
குடியாகிவானோர்க்குமோர்கோவுமாகிக்
குலவேந்தராய்விண்முழுதாள்பவரே (கக)

திருச்சிற்றம்பலம்.

---

சுந்தரமூர்த்தி நாயனார் மதுரைத் திருப்பதியினின்றும் புறப்பட்டு, சேர சோழ பாண்டியராகிய தமிழ்நாட்டு மூவேந்தரோடும் திருப்பரங்குன்றுக்குப் போய், சுவாமிதரிசனஞ் செய்து, சிவபெருமானுடைய திருவடிகளுக்குத் தொண்டு செய்யும் அருமையை நினைந்தஞ்சுதும் என்று, "கோத்திட்டையுங் கோவலும்" என்னுந் திருப்பதிகம் பாடினார். அவ்வருமையை அரசர் மூவருங் கேட்டு அஞ்சி அந்நாயனாரை வணங்கினார்கள்.

---

திருப்பரங்குன்றத் திருப்பதிகம் - உ.

---

சுவாமிதிருநாமம் - பரங்கிரிநாதர்.
தேவிதிருநாமம் - ஆவுடையம்மை.

---

௯௲ திருப்பதிகம் - கச.

# ௪. திருவேடகம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

வன்னியுமத்தமுமதிபொதிசடையினன்
பொன்னியறிருவடிபுதுமலரவைகொடு
மன்னியமறையவர்வழிபடவடியவ
ரின்னிசைபாடலரேடகத்தொருவனே. (௧)

கொடிநெடுமாளிகைக்கோபுரங்குளிர்மதி
வடிவுறவமைதரமருவியவேடகத்
தடிகளையடிபணிந்தரற்றுமினடர்தரு
விடிபடுமவினைகள்போயில்லையதாகுமே (௨)

குண்டலந்திகழ்தருகாதுடைக்குழகனை
வண்டலம்பும்மலர்க்கொன்றைவான்மதியணி
செண்டலம்பும்விடைச்சேடனூரேடகங்
கண்டுகைதொழுதலுங்கவலைநோய்கழலுமே (௩)

ஏலமார்தருகுழலேழையோடெழில்பெறுங்
கோலமார்தருவிடைக்குழகனுறைவிடஞ்
சாலமாதவிகளுஞ்சந்தனஞ்சண்பகஞ்
சீலமாரேடகஞ்சேர்தலாஞ்செல்வமே. (௪)

வரியணிநயனிநன்மலைமகளறுகிடக்
கரியினையுரிசெய்தகறையணிமிடற்றினன்
பெரியவன்பெண்ணினோடாணலியாகிய
வெரியவனுறைவிடமேடகக்கோயிலே (௫)

பொய்கையின்பொழிலுறுபுதுமலர்த்தென்றலார்
வைகையின்வடகரைமருவியவேடகத்
தையனையடிபணிந்தரற்றுமினடர்தரு
வெய்யவல்வினைகெடவீடெளிதாகுமே. (௬, ௭)

தடவரையெடுத்தவன்றருக்கிறத்தோளடர்
படவிரலூன்றியேபரிந்தவற்கருள்செய்தான்
மடவரலொருக்கொடுவன்னியுமத்தமு
மிடமுடைச்சடையினனேடகத்திறைவனே. (௮)

பொன்னுமாமணிகளும்பொருதிரைச்சந்தகி
றன்னுளார்வைகையின்கரைதனிற்சமைவுற
வன்னமாமயனுமாலடிமுடிதேடியு
மின்னவாறறிவொணானேடகத்தொருவனே. (௯)

குண்டிகைக்கையினார்குணமிலாத்தேரர்கள்
பண்டிதைபெருக்கிடும்பாளர்கள்பணிகிலா
வண்டிரைக்குமமலர்க்கொன்றையுமவன்னியு
மிண்டுசெஞ்சடையனேடகத்தெந்தையே. (௧௦)

கோடுசந்தனமகிலகொண்டிழிவைகைநீ
ரோடுசென்றணைதருமேடகத்தொருவனை
நாடுதெனபுகலியுள்ஞானசம்பந்தன
பாடல்பத்திவைவல்லார்க்கில்லையாம்பாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் மதுரைத்திருப்பதியிலே திருப்பாசுரத்தைப்பாடி, ஏட்டில எழுதி அத்திருவேட்டை வைகைநதியிலே இட்டருளியவுடன், அத்திருவேடு நதியிலே எதிர்ந்து சென்றது குலச்சிறை நாயனார் அத்திருவேட்டைத் தொடர்ந்து எடுத்தற்கு விரும்பி, காற்றைப்போல அதிவேகத்தோடு செல்கின்ற குதிரைமேல் ஏறிக்கொண்டு, பின் சென்றார் பிள்ளையார் அவ்வேடு தங்கும் பொருட்டு, "வன்னியு மத்தமும" என்னும் திருப்பதிகம் பாட, குலச்சிறை நாயனார் சிவாலயத்துக்குப் பக்கத்தில இருக்கின்ற நீர் நடுவிலே புகுந்து, அங்கே தங்கிய ஏட்டை எடுத்துச் சிரமேற்கொண்டு, பெருமகிழ்ச்சி பொங்க, கரையில் ஏறி, திருவேடகத்தில் எழுந்தருளியிருக்குங் கடவுளை வணங்கித் துதித்து, திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் திருமுன்பு வந்து அவருடைய திருவடிகளை வணங்கிக்கொண்டு, பாண்டியர் முதலாயினோரெல்லாருக்குங் காட்ட, அடியார்கள் அனைவரும் அத்தியந்த ஆனந்தத்துடனே ஹரஹர என்று ஆரவாரித்தார்கள்

---

சுவாமிதிருநாமம் - ஏடகநாதர்.
தேவிதிருநாமம் - உமாதேவி.

---

ஆ திருப்பதிகம் - கரு

## ரு. கொடுங்குன்றம்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

வானிற்பொலிவெய்துமமழைமேகங்கிழித்தோடிக்
கூனற்பிறைசேருங்குளிர்சாரற்கொடுங்குன்றம்
மானிற்பொலிவைந்துமமமர்ந்தாடியுலகேத்தத்
தேனிற்பொலிமொழியாளொடுமேயான்திருநகரே. (௧)

கொடுங்குன்றம் என்பது பிரான்மலை.

மயிலடுலகுதண்பெடையோடடூடுமவளாசாரற
குயிலினினிசைபாடுங்குளிர்சோலைகொடுங்குன்ற
மயில்வேன்மலிநெடுவெஞ்சுடரனலேந்திநின்ருடி
யெயின்முனபடவெய்தானவனமேயவவெழிலநகரே. (௨)

மிளிரும்மணிபைம்பொனனொடுவிரைமாமலருந்திக
குளிரும்புனலபாயுங்குளிர்சாரற்கொடுங்குன்றங
கிளாகங்கையொடிளவெணமதிகெழுவுஞ்சடைதனமேல
வளர்கொன்றையுமதமத்தமுமவைத்தானவளநகரே. (௩)

பருமாமதகரியோடரியிழியுமவிரிசாரற
குருமாமணிபொன்னேடிழியருவிககொடுங்குன்றம
பொருமாவெயில்வரைவிறறருகணையிறபொடிசெயத
பெருமானவனுமையாளொடுமேவுமபெருநகரே. (௪)

மேகததிடிகுரலவந்தெழுவெருவிவ்வரையிழியுங
கூகைககுலமோடிததிரிசாரறகொடுங்குன்றந
நாகததொடுமிளவெணபிறைசூடிநலமங்கை
பாகததவனிமையோர்தொழுமேவுமபழநகரே. (௫)

கைமமாமதகரியினினமிடியினகுரலதிரக
கொயமமாமலாசசோலைபுகமணடுங்கொடுங்குன்ற
மமமாளெனவுள்கிததொழுவாாகட்கருள்செயயும
பெமமானவனிமையோாதொழுமேவுமபெருநகரே (௬)

மரவததொடுமணமாதவிமௌவலலதுவிணட
குரவததொடுவிரவுமபொழிலசூழதணகொடுங்குன்ற
மரவததொடுமிளவெணபிறைவிரவுமமலாககொனறை
நிரவசசடைமுடிமேலுடன்வைததானெடுநகரே (௭)

முடடாமுதுகரியினினமுதுவேயகளைமுனிநது
குடடாசசுனையவைமணடிநினருடுங்கொடுங்குன்ற
மொடடாவரககனறனமுடியொருபஃதவையுடனே
பிட்டானவனுமையாளொடுமேவுமபெருநகரே. (அ)

அறையுமமரிகுரலோசையையஞ்சியடுமானை
குறையுமமனமாகிமமுழைவைகுங்கொடுங்குன்ற
மறையும்மவையுடையானெனநெடியானெனவிவாக
ளிறையுமமறிவொணணாதவனமேயவெழிலநகரே. (௯)

மத்தககளிறுளிவவரவஞ்சிமமலைதனனைக
குத்திப்பெருமுழைதன்னிடைவைகுங்கொடுங்குன்றம
புத்தரொடுபொலலாமனசசமணாபுறங்கூறப
பததாக்கருளசெய்தானவனமேயபழநகரே. (௧௦)

கூனற்பிறைச்சடைமேன்மிகவுடையான்கொடுங்குன்றைக்
கானற்கழுமலமாநகர்த்தலைவன்னலங்கவுணி
ஞானத்துயர்சம்பந்தன்னலங்கொடமிழ்வல்லா
ருனத்தொடுதுயர்தீர்ந்துலகேத்துமெழிலோரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

சுவாமி திருநாமம் - கொடுங்குன்றீசர்.
தேவி திருநாமம் - குயிலமுதநாயகி.

ஆ திருப்பதிகம் - ௧௬

## ௬. திருப்புத்தூர்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்

வெங்கள்விம்முவெறியார்பொழிற்சோலைத்
திங்களோடுதிளைக்குந்திருப்புத்தூர்க்
கங்கைதங்குமுடியாரவர்போலு
மெங்களுச்சியுறையுமிறையாரே (௧)

வேனல்விம்முவெறியார்பொழிற்சோலைத்
தேனும்வண்டுந்திளைக்குந்திருப்புத்தூ
ரூனமின்றியுறைவாரவர்போலு
மேனமுள்ளுமெயிறும்புனைவாரே (௨)

பாங்குநல்லவரிவண்டிசைபாடத்
தேங்கொள்கொன்றைதிளைக்குந்திருப்புத்தூ
ரோங்குகோயிலுறைவாரவர்போலுந்
தாங்குதிங்கடவழ்புன்சடையாரே. (௩)

நாறவிண்டநறுமாமலர்கவ்வித்
தேறல்வண்டுதிளைக்குந்திருப்புத்தூ
ரூறல்வாழ்க்கையுடையாரவர்போலு
மேறுகொண்டகொடியெம்மிறையாரே. (௪)

இசைவிளங்குமெழிற்சூழ்ந்தியல்பாகத்
திசைவிளங்கும்பொழிற்சூழ்திருப்புத்தூர்ப்
பசைவிளங்கப்படித்தாரவர்போலும்
வசைவிளங்கும்வடிசேர்நுதலாரே. (௫)

கூராரவெந்தழலவனுங்காறறுநீருங
குலவரையுமாயவன்காண்கொடுஞ்சுணட
காராருங்கண்டனகாணணடோளனகாண
கயிலைமலைபபொருபபன்காண்விருபபோடென்றுந
தேராருநெடுவீதித்திருபபுததூரிற
றிருததளியானகாணவனெனசிநதையானே. (௨)

மினகாடடுங்கொடிமருங்குலுமையாடகென்றும
விருப்பவனகாணபொருபபுவலிசசிலைககையோனகா
ணனபாடடுப்புலவனுயசசங்கமேறி
நறகனககிழிதருமிக்கருளினனகாண
பொனகாடடககடிககொனறைமருங்கேநினற
புனக்காநதள்கைகாடடககணடுவணடு
தெனகாடடுஞ்செழும்பூறவிறறிருப்புததூரிற
றிருததளியானகாணவனெனசிநதையானே. (௩)

ஏடேறுமலாககமலததயனுமாலு
மிநதிரனுமபணிநதேததவிருக்கின்றானகாண
டோடேறுமலாககடுக்கைவனனிமததந
துன்னியசெஞ்சடையானகாணடுகடாசங்க
மாடேறிமுததீனுங்கானலவேலி
மறைக்காடடுமாமணிகாணவளங்கொண்மேதி
சேடேறிமடுட்படியுந்திருபுததூரிற
றிருததளியானகாணவனெனசிநதையானே. (௪)

கருமருவுவலவினைநோயகறறினனகாண
காமருபூங்கசசியேகமபததானகாண
பெருமருவுபேருலகிறபிணிகடாகரும
பெரும்பறறததணபுலியூரமனறாடிகாண
டருமருவுகொடைத்தடககையளகைககோனறன
சங்காததியாரூரிறறனியானகாண
டிருமருவுபொழிலபுடைசூழதிருப்புததூரிற
றிருததளியானகாணவனெனசிநதையானே (௫)

காமபாடுதோளுமையாளகாண நடடங்
கலநதாடலபுரிநதவனகாணகையிலவெயய
பாமபாடபபடுதலையிறபலிகொளவோன்காண
பவளத்தினபருவரைபோறறிடிமததானகாண
டாமபாடுசினவிடையேபகடாககொணட
சங்கரனகாணபொங்கரவககசசையோனகாண
சேமபாடுவயலபுடைசூழதிருபபுத்தூரிற
றிருததளியானகாணவனெனசிநதையானே. (௬)

வெறிவிரவுமலாக்கொனறைவிளங்குதிங்கள
வன்னியொடுவிரிசடைமேனமிலைசசினனகாண
பொறிவிரவுகதநாகமககினோடு
பூணடவனகாண்பொருபுலிததோலாடையான்கா

ணறிவரியநுண்பொருள்களாயினானைக்
காயிரம்பேருடையவன்காண்டண்கானற்
செறிபொழில்சூழ்மணிமாடத்திருப்புத்தூரிற்
றிருத்தளியான்காணவனென்சிந்தையானே (௭)

புக்கடைந்தவேதியற்காய்க்காலற்காய்ந்த
புண்ணியன்காண்வெண்ணகைவெள்வளையாளஞ்ச
மிக்கெதிர்ந்தகரிவெருவவுரித்தகோன்காண்
வெண்மதியைக்கலைசேர்த்ததிண்மையோன்கா
ணக்கரும்புபெரும்புன்னைநெருங்குசோலை
யாரூருக்கதிபதிகாண்டண்டென்ற
றிக்கணைந்துவருமருங்கிற்றிருப்புத்தூரிற்
றிருத்தளியான்காணவனென்சிந்தையானே (௮)

பற்றவன்காணேனோர்க்கும்வானோருக்கும்
பராபரன்காண்டக்கன்றன்வேள்விசெற்ற
கொற்றவன்காண்கொடுஞ்சினத்தையடங்கச்செற்று
ஞானத்தைமேன்மிகுத்தல்கோளாக்கொண்ட
பெற்றியன்காண்பிறங்கருவிக்கழுக்குன்றத்தெம்
பிஞ்ஞகன்காண்பேரொழியாக்காமவேளைச்
செற்றவன்காண்சீர்மருவுதிருப்புத்தூரிற்
றிருத்தளியான்காணவனென்சிந்தையானே (௯)

உரமதித்தசலந்தரன்றனாகங்கீண்ட
வோராழிபடைத்தவன்காணுலகுசூழும்
வரமதித்தகதிரவனைப்பற்கொண்டோன்காண்
வானவர்கோன்புயநெரித்தவல்லாளன்கா
ணரமதித்துச்செம்பொன்னினாரம்பூண்டு
வணிந்தவன்காணலைகடல்சூழிலங்கைவேந்தன்
சிரநெரித்தசேவடிகாண்டிருப்புத்தூரிற்
றிருத்தளியான்காணவனென்சிந்தையானே (௰)

திருச்சிற்றம்பலம்

---

திருப்புத்தூர்த் திருத்தாண்டகம் முற்றும்

---

சுவாமிதிருநாமம் - புத்தூர்நாதர்
தேவிதிருநாமம் - சிவகாமியம்மை.

---

ஆ. திருப்பதிகம் - சஅ

மறவனி மனமென னெஞ்சே குளறும்மை கூறு
முறவுமூழியு மாயபெம்மாற் கிடமாவது
பிறவுகளளியினீள கவட்டேறித் தன்பேடையைப்
புறவங்கூப்பிடப் பொன்புனஞ்சூழ் புனவாயிலே (௬)

ஏசற்று நீநினை யென்னெஞ்சே குளறும்மை கூறும்
பாசற்றவர் பாடிநின்றும் பழம்பதி
தேசத்தடியவர் வந்திருபோதும் வணங்கிடப்
பூசற்றுடி பூசலறாப் புனவாயிலே (௭)

கொள்ளிவாயிற் கூரெயிற்றேனங் கிழிச்சவே
தெள்ளிமாமணி தீவிழிக்கு மிடஞ்செந்நிறைக்
கள்ளிவற்றிப் புற்றீந்து வெங்கானங் கழிக்கவே
புள்ளிமானினம் புகக் கொளிக்கும் புனவாயிலே. (௮)

எற்றே நினையென்னெஞ்சே குளறும்மை கூறு
மற்றேதும் வேண்டா வல்வினையாயின மாய்ந்தறக்
கற்றுக்காக்கட்டிடை மேயந்த காரக்கோழிபோய்ப்
புற்றேறிக் கூகூவென வழைக்கும் புனவாயிலே. (௯,௰)

பொடியாடு மேனியன் பொன்புனஞ்சூழ் புனவாயிலை
யடியாரடியனாவலூரனுரைத்தன
மடியாது கற்றிவையேத்த வல்லார் வினைமாய்ந்துபோய்க்
குடியாகிப் பாடிநின்றாட வல்லார்க்கில்லை குற்றமே (௧௧)

திருச்சிற்றம்பலம்

திருப்புனவாயிற்றிருப்பதிகம் - ௨

சுவாமி திருநாமம் - புனவாயினாதர்
தேவி திருநாமம் - கருணைநாயகி

ஆ திருப்பதிகம் - ௨௦

## அ. இராமேச்சுரம்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

அலைவளர் தண்மதியோடயலே யடக்கியுமை
முலைவளர் பாகமுயங்க வல்ல முதல்வன் முனி
யிலைவளர் தாழைகள் விம்முகானலிராமேச்சுரத்
தலைவளர் கோலநன் மாலையன்றானிருந்தாடசியே (௧)

தேவியை வவ்விய தென்னிலங்கைத் தசமாமுகன்
பூவியலும் முடி பொன்றுவித்த பழிபோயற
ஏவியலுஞ் சிலையண்ணல் செய்த இராமேச்சுர
மேவிய சிந்தையினார்கள் தம்மேல் வினை வீடுமே. (௨)

பொறிகிளர்பாமடனையாரத்தயலேபுரிவோடுமைபாடத்
தெறிகிளரப்பெயர்ந்தெல்லியாடுந்திறமேதெரிந்துணர்வா
ரறிகிளர்வெண்டிரைவந்துபேருமிராமேச்சுரமேய
மறிகிளர்மானமழுப்புல்குகையெம்மண்ணலார்செய்யுஞ்செயலே. (௨)

அலைவளர்தண்புனல்வார்சடைமேலடக்கியொருபாக
மலைவளர்காதலிபாடவாடியமைக்கவாருமாட்சி
யிலைவளர்தாழைமுகிழ்விரியுமிராமேச்சுரமேயார்
தலைவளர்கோலநன்மாலைசூடுந்தலைவர்செய்யுஞ்செயலே (௩)

மாதனநேரிழையோடடுங்கணமலையானமகள்பாடத்
தேதெரியங்கையிலேந்தியாடுந்திறமேதெரிந்துணர்வா
ரோதமிலார்தொழுதேத்திவாழ்த்துமிராமேச்சுரமேயார்
போதுவெண்டிங்கள்பைங்கொன்றைசூடும்புனிதர்செய்யுஞ்செயலே (௪)

சூலமோடொண்மழுநின்றிலங்கச்சுடுகாடிடமாகக்
கோலநன்மாதுடன்பாடவாடுங்குணமேகுறித்துணர்வா
ஞாலநறும்பொழில்வண்டுபாடுமிராமேச்சுரமேய
நீலமார்கண்டமுடையவெங்கணிமலர்செய்யுஞ்செயலே (௫)

கணைபிணைவெஞ்சிலைகையிலேந்திக்காமனைக்காய்ந்தவர்தா
மிணைபிணைநோக்கிநல்லாளொடாடுமியல்பினராகிநல்ல
விணைமலர்மேலனமவைகுகானலிராமேச்சுரமேயா
ரணைபிணைபுல்குகரந்தைசூடுமடிகள்செய்யுஞ்செயலே. (௬)

நீரினார்புன்சடைபின்புதாழநெடுவெண்மதிசூடி
யூரினார்துஞ்சிருளாடியாடுமுவகைதெரிந்துணர்வா
ரோரினார்பைம்பொழில்வண்டுபாடுமிராமேச்சுரமேய
காரினார்கொன்றைவெண்டிங்கள்சூடுங்கடவுள்செய்யுஞ்செயலே (௭)

பொன்றிகழ்சுண்ணவெண்ணீறுபூசிப்புலித்தோலுடையாக
மின்றிகழ்சோதியர்பாடலாடன்மிக்கவாருமாட்சி
யென்றுநல்லோர்களரவியேத்துமிராமேச்சுரமேயார்
குன்றினலன்றரக்கனடர்த்தோள்தொடர்த்தார்கொள்ளுங்கொள்கையே. (௮)

கோவலனான்முகன்னோக்கொணாதகுழகனழகாய
மேவலனார்பரிசேந்தியாடுமிமையோரிறைமெய்ம்மமை
யேவலனார்புகழ்ந்தேத்திவாழ்த்துமிராமேச்சுரமேய
சேவலவெல்கொடியேந்துகொள்கையெம்மிறைவர்செய்யுஞ்செயலே. (௯)

பின்னொடுமுன்னிடுதட்டைச்சாத்திப்பி [illegible] ரிவாரும
பொன்னொடுசீவரப்போர்வையா [illegible] றலகேளாதே
யின்னொடுஞ்சோலைவண்டியாழ்மு [illegible] சுரமேய
பன்னெடுவெண்டலைகொண்டுழ [illegible] செய்யுஞ்செயலே. (௰)

தேவியைவவ்வியதென்னிலங்கைய [illegible] ன்றிறல்வாட்டி
யேவியல்வெஞ்சிலையண்ணனண்ணுமிராமேச்சுரத்தாரை
நாவியன்ஞானசம்பந்தனல்லமொழியானவின்றேத்தும
பாவியன்மாலைவல்லாரவர்தம்வினையாயினபற்றறுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசுநாயனார்

### திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

பாசமுங்கழிக்ககில்லாவரக்கரைப்படுத்துத்தக்க
வாசமிக்கலர்கள்கொண்டுமதியினான்மால்செய்கோயி
னேசமிக்கன்பினாலேநினைமினீர்நின்றுநாளுந்
தேசமிக்கானிருந்ததிருவிராமேச்சுரமே (௧)

முற்றினநாள்களென்றுமுடிப்பதேகாரணமா
யுற்றவன்போர்களாலேயுணர்விலாவரக்கர்தம்மைச்
செற்றமால்செய்தகோயிற்றிருவிராமேச்சுரத்தைப்
பற்றிநீபரவுநெஞ்சேபடர்சடையீசன்பாலே. (௨)

கடலிடைமலைகடம்மாலடைத்துமால்கருமமுற்றித்
திடலிடைச்செய்தகோயிற்றிருவிராமேச்சுரத்தைத்
தொடலிடைவைத்துநாவிற்சுழல்கின்றேன்றூய்மையின்றி
யுடலிடைநின்றும்பேராவைவராட்டுண்டுநானே (௩)

குன்றுபோற்றோளுடையகுணமிலாவரக்கர்தம்மைக்
கொன்றுபோராழியம்மால்வேட்கையாற்செய்தகோயி
னன்றுபோனெஞ்சமேநீநன்மையையறிதியாயிற்
சென்றுநீதொழுதுய்கண்டாய்திருவிராமேச்சுரமே (௪)

வீரமிக்கெயிறுகாட்டிவிண்ணுறநீண்டரக்கன்
கூரமிக்கவனைச்சென்றுகொன்றுடன்கடற்படுத்துத்
தீரமிக்கானிருந்ததிருவிராமேச்சுரத்தைக்
கோரமிக்கார்தவத்தாற்கூடுவார்குறிப்புளாரே (௫)

ஆர்வலந்நம்மின்மிக்கானென்றவவ்வரக்கர்கூடிப்
போர்வலஞ்செய்துமிக்குப்பொருதவர்தம்மைவீட்டித்
தேர்வலஞ்செற்றமால்செய்திருவிராமேச்சுரத்தைச்
சேர்மடநெஞ்சமேநீசெஞ்சடையெந்தைபாலே. (௬)

வாக்கினாலின்புரைத்துவாழ்கிலாதம்மையெல்லாம்
போக்கினாற்புடைத்தவர்களுயிர்தனையுண்டுமாலுந்
தேக்குநீர்செய்தகோயிற்றிருவிராமேச்சுரத்தை
நோக்கினால்வணங்குவார்க்குநோயவினைநண்ணுமன்றே. (௭)

பலவுநாட்டீமைசெய்துபார்தன்மேற்குழுமிவந்து
கொலைவிலார்கொடியராயவரக்கரைக்கொன்றுவீழ்த்த
சிலையினான்செய்தகோயிற்றிருவிராமேச்சுரத்தைத்
தலையினால்வணங்குவார்கடாழ்வராந்தவமதாமே. (௮)

கோடிமாதவங்கள்செய்துகுன்றினார்தம்மையெல்லாம்
வீட்டவேசக்கரத்தாலெறிந்துபின்னன்புகொண்டு
தேடிமால்செய்தகோயிற்றிருவிராமேச்சுரத்தை
நாடிவாழ்நெஞ்சமேநீநன்னெறியாகுமன்றே. (௯)

# க௦. திருக்கானப்பேர்*

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்

பிடியெலாம்பின்செலப்பெருங்கைமாமலர்தழீஇ
விடியலேதடமூழ்கிவிதியினால்வழிபடுங்
கடியுலாம்பூம்பொழிற்கானப்பேரண்ணலி
னடியலாலடைசரணுடையரோவடியரே. (க)

நுண்ணிடைப்பேரல்குனூபுரமெல்லடிப்
பெண்ணினல்லாளையோர்பாகமாப்பேணினான்
கண்ணுடைநெற்றியான்கருதியகானப்பேர்
விண்ணிடைவேட்கையார்விரும்புதல்கருமமே. (உ)

வாவிவாய்த்தங்கியநுண்சிறைவண்டினங்
காவிவாய்ப்பண்செய்யுங்கானப்பேரண்ணலை
நாவிவாய்ச்சாந்துளும்பூவுளுஞானநீர்
தூவிவாய்ப்பெய்துநின்றாட்டுவார்தொண்டரே. (௩)

சிறையுடைநெஞ்சுளுநீருளும்பூவுளும்
பறையுடைமுழவுளும்பலியுளும்பாட்டுளுங்
கறையுடைமிடற்றண்ணல்கருதியகானப்பேர்
குறையுடையவர்க்கலாற்களைகிலாகுற்றமே. (௪)

ஏனப்பூண்மார்பின்மேலென்புபூண்டீறிலா
ஞானப்பேராயிரம்பேரினானண்ணிய
கானப்பேரூர்தொழுங்காதலார்தீதிலா
வானப்பேரூர்புகும்வண்ணமும்வல்லரே. (௫)

பள்ளமேப்படர்சடைப்பாற்பட்டப்பாய்ந்தநீர்
வெள்ளமேதாங்கினான்வெண்மதிசூடினான்
கள்ளமேசெய்கிலார்கருதியகானப்பே
ருள்ளமேகோயிலாவுள்குமென்னுள்ளமே (௬)

மானமாமடப்பிடிவன்கையாலலகிட
கானமார்கடகரிவழிபடுங்கானப்பே
ரூனமாமுடம்பினிலுறுபிணிகெடவெண்ணில்
ஞானமாமலர்கொடுநணுகுதனன்மையே (௭)

வாளினான்வேலினான்மால்வரையெடுத்ததிண்
டோளினானெடுமுடிதொலையவேயூன்றிய
தாளினான்கானப்பேர்தலையினால்வணங்குவார்
நாளுநாளுயர்வதோர்நன்மையைப்பெறுவரே. (௮)

* திருக்கானப்பேர் என்பது காளையார்கோயில்

சிலையினான்முப்புரந்தீயெழச்செற்றவ
னிலையிலாவிருவரைநிலைமைகண்டோங்கினான்
கலையினார்புறவிற்றேன்கமழ்திருக்கானப்பேர்
தலையினால்வணங்குவார்தவமுடையார்களே (௯)

உறித்தலைச்சுரையொடுகுண்டிகைபிடித்துச்சி
பறித்தலும்போர்த்தலும்பயனிலாவிகாண
மறித்தலைமடப்பிடிவளரிளங்கொழுங்கொடி
கறித்தெழுகானப்பேர்கைதொழல்கருமமே (௧௦)

காட்டகத்தாடலானகருதியகானப்பேர்
கோட்டகத்திளவராலகுதிகொளுங்காழியா
னாட்டகத்தோங்குசீர்ஞானசம்பந்தன
பாட்டகத்திவைவலாரகிலலையாம்பாவமே (௧௧)

திருச்சிற்றம்பலம்

—————

## சுந்தரமூர்த்திநாயனார்

பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

தொண்டரடித்தொழலுஞ்சோதியிளம்பிறையுஞ்
சூதனமென்முலையாள்பாகமுமாகிவரும்
புண்டரிகப்பரிசாமேனியும்வானவர்கள்
பூசலிடக்கடனஞ்சுண்டகருத்தமருங்
கொண்டலெனத்திகழுங்கண்டமுமெண்டோளுங்
கோலநறுஞ்சடைமேல்வண்ணமுங்கண்குளிரக்
கண்டுதொழப்பெறுவதென்றுகொலோவடியேன்
காரவயல்சூழ்கானப்பேருறைகாளையையே (௧)

கூதலிடுஞ்சடையுங்கோளரவுமவிரவுங்
கொக்கிறகுங்குளிர்மாமத்தமுமொத்துனகா
ளோதலுணர்ந்தடியார்தன்பெருமைகருதி
துளுருகாவிரசுமோசையைப்பாடலுநீ
யாதலுணர்ந்தவரோடன்புபெருத்தடியே
னங்கையின்மாமலர்கொண்டென்கணதல்லலகெட
காதலுறத்தொழுவதென்றுகொலோவடியேன்
காரவயல்சூழ்கானப்பேருறைகாளையையே (௨)

நானுடைமாடெனவேகனமைகருமபரனை
நற்பதமென்றுணர்வார்சொற்பதமார்சிவனை
தேனிடையின்னமுதைமற்றதனிற்றெளிவை
தேவர்கணாயகனைப்பூம்புனல்சென்னியனை
வானிடைமாமதியைமாசறுசோதியனை
மாருதமுமமனலுமமண்டலமுமாய
கானிடைமாநடனென்றெய்துவதென்றுகொலோ
காரவயல்சூழ்கானப்பேருறைகாளையையே (௩)

செற்றவர்முப்புரமன்றட்டசிலைத்தொழிலார்
சேவகமுந்நினைவார்பாவகமுந்நெறியுங்
குற்றமிறந்தடியார்கூறுமிசைப்பரிசுங்
கோசிகமுமரையிற்கோவணமும்மதளு
மற்றிகழ்திண்புயமுமார்பிடைநீறுதுதை
மாமலைமங்கையுமைசேர்சுவடும்புகழக்
கற்றனவும்பரவிக்கைதொழலென்றுகொலோ
காவயல்சூழ்கானப்பேருறைகாளையையே (௪)

கொல்லைவிடைக்குழகுங்கோலநறுஞ்சடையிற்
கொத்தலருமிதழித்தொத்துமதன்னருகே
முல்லைபடைத்தநகைமெல்லியலாளொருபால்
மோகமிகுத்திலகுங்கூறுசெயப்பரிசுந்
தில்லைநகர்ப்பொதுவுற்றாடியசீர்நடமுந்
திண்மழுவுங்கைமிசைக்கூரெரியுமடியார்
கல்லவடப்பரிசுங்காணுவதென்றுகொலோ
காவயல்சூழ்கானப்பேருறைகாளையையே (௫)

டண்ணுதலைப்பயனார்பாடலுநீடுதலும
ங்கபமாதனையார்பத்தியுமுத்தியளித்
தெண்ணுதலைப்பெருமானென்றெழுவாரவர்த
மேசறவுமிறையாமெந்தையையுமவிர்வி
ரண்ணுதலைப்படுமாறெங்ஙனமென்றயலே
றைகிறவெண்ணிமதிற்றுடையுமவண்மருளுங்
கண்ணுதலைக்கனியைக்காண்டதுமென்றுகொலோ
காவயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (௬)

மாவையுரித்ததள்கொண்டங்கமணிந்தவனை
வஞ்சமனத்திறையுநெஞ்சணுகாதவனை
மூவருருத்தனதாமூலமுதற்கருவை
மூசிடுமாலவிடையின்டாக்கனைபாகமுறப்
டாவகமின்றிமெய்யேய றுமவாகசமுதை
டான்றுசெய்தயினைந்தாடு [illegible]
காவலனைக்கிறையென்றெ துவதென்றுகொலோ
காவயல்சூழ்கானப்பேருறைகாளையையே (௭)

தொண்டர்தமக்கெளியசோதியைவேதியனைச்
தூயமறைப்பொருளாநீதியைவாக்கடனஞ்
சுண்டதனுக்கிறவாதென்றுமிருந்தவனை
ஊழிபடைத்தவனோடொள்ளரியுமுணரா
வண்ணனையண்டர்தமக்காகமநூன்மொழியு
மாதியைமேதகுசீரோதியைவானவர்தங்
கண்டனையன்பொடுசென்றெய்துவதென்றுகொலோ
காவயல்சூழ்கானப்பேருறைகாளையையே. (௮)

நாதனைநாதமிகுத்தோசையதானவனை
ஞானவிளக்கொளியாமூனுயிரைப்பயிரை

மாற்றனைமேற்றுக்குத்தண்டத்தாமனத்திறையும்
பற்றுவிடாதவனைக்குற்றமில்கொள்கையனைத்
தூற்றனையென்றனையாட்கொள்நாயகனைத்
தாழ்மகரக்குழையுந்தோடுமணிந்ததிருக்
காதனைநாயடியேனெய்துவதென்றுகொலோ
கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே (௯)

கன்னலையின்னமுதைக் கார்வயல்சூழ்கானப்
பேருறைகாளையையொண் சீருறைதண்டமிழா
லுன்னிமனத்தயரா வுள்ளுருகிப்பரவு
மொண்பொழினாவலர்கோ னாகியவாரூரன்
பன்னுமிசைக்கிளவிப் பத்திவைபாடவல்லார்
பத்தர்குணத்தினராயெத்திசையும்புகழ
மன்னியிருப்பவர்கள்வானினிழிந்திடினு
மண்டலநாயகராய்வாழ்வதுநிச்சயமே (௧0)

திருச்சிற்றம்பலம்

---

சுந்தரமூர்த்தி நாயனார் இராமேச்சுரத்தை நீங்கித் திருச்சுழியலிலே போய்ச் சுவாமிதரிசனஞ் செய்து, திருப்பதிகம் பாடிக்கொண்டு, அங்கே இருக்க, சுவாமி அவருக்குச் சொப்பனத்திலே காளைவடிவங்கொண்டு கையிலே பொற்செண்டும் முடியின்மேலே சுழியமும் உடையவராகித் தோன்றி "நம்முடைய வாசஸ்தானம் கானப்பேர்" என்று சொல்லி மறைந்தருளினார். நாயனார் விழித்தெழுந்து, திருவருளை வியந்து, தாங்கண்ட சொப்பனத்தைத் தம்மோடுகூட வந்திருக்கின்ற சேரமான் பெருமாணாயனாருக்குத் தெரிவித்து, திருச்சுழியலை நீங்கி, "தொண்டரடித்தொழலும்" என்று எடுத்து, 'கண்டு தொழப்பெறுவதென்றுகொலோ வடியேன் கார்வயல் சூழ் கானப் பேருறை காளையையே" என்று திருப்பதிகத்தைப் பாடிக்கொண்டு திருக்கானப்பேருக்குப் போய், சுவாமிதரிசனஞ்செய்து திருப்பதிகம்பாடியருளினார்.

---

திருக்கானப்பேர்த் திருப்பதிகம் - ௨

---

சுவாமிதிருநாமம் - காளையப்பர்
தேவிதிருநாமம் - மகமாயி

---

ஆக திருப்பதிகம் - ௨௯

---

# ௧௧. திருப்பூவணம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்

அறையார்புனலுமாமலருமாடரவார்சடைமேற்
குறையார்மதியஞ்சூடிமாதோர்கூறுடையானிடமா
முறையான்முடிசேர்தென்னர்சேரர்சோழர்கடாம்வணங்குந்
திறையாரொளிசேர்செம்மையோங்குந்தென்றிருப்பூவணமே. (௧)

மருவாரமதின்மூன்றொன்றவெய்துமாமலையானமடந்தை
யொருபாலபாகமாகச்செய்தவும்பர்பிரானவனூர்
கருவார்சாலியாலைமலிக்கழன்மன்னர்காத்தளித்த
திருவானமலிந்தசேடர்வாழுந்தென்றிருப்பூவணமே. (௨)

போரார்மதமாவுரிவைபோர்த்துப்பொடியணிமேனியனுயக்
காரார்கடலினஞ்சமுண்டகண்ணுதல்விண்ணவனூர்
பாரார்வைகைப்புனல்வாய்ப்பரப்பிப்பன்மணிபொன்கொழித்துச்
சீரார்வாரிசேரநின்றதென்றிருப்பூவணமே. (௩)

கடியாரலங்கற்கொன்றைசூடிக்காதிலோர்வார்குழையன்
கொடியார்வெள்ளையேறுகந்தகோவணவனிடமாம்
படியார்கூடிநீடியோங்கும்பல்புகழாற்பரவச்
செடியார்வைகைசூழநின்றதென்றிருப்பூவணமே. (௪)

கூரார்வாளிசிலையிற்கோத்துக்கொடிமதில்கூட்டழித்த
போரார்வில்லிமெல்லியலாளோர்பானமகிழ்ந்தானிடமாம்
மாரார்வனப்பிற்றென்னர்சேரர்சோழர்கள்போற்றிசைப்பத்
தேரார்வீதிமாடநீடுதென்றிருப்பூவணமே (௫)

நன்றுதீதென்றொன்றிலாதநான்மறையோன்கழலே
சென்றுபேணியேத்தநின்றதேவர்பிரானிடமாங்
குன்றிலொன்றியோங்கமல்குகுளிர்பொழில்சூழ்மலர்மேற்
றென்றலொன்றிமுன்றிலாருந்தென்றிருப்பூவணமே. (௬)

பைவாயரவமரையிற்சாத்திப்பாரிடம்போற்றிசைப்ப
மெய்வாய்மேனிநீறுபூசியேறுகந்தானிடமாங்
கைவாழ்வளையார்மைந்தரோடுங்கலவியினானெருங்கிச்
செய்வார்தொழிலின்பாடலோவாத்தென்றிருப்பூவணமே (௭)

மாடவீதிமன்னிலங்கைமன்னனைமாண்பழித்துக்
கூடவென்றிவாள்கொடுத்தாள்கொள்கையினானிடமாம்
பாடலோடுமாடலோங்கிப்பன்மணிபொன்கொழித்து
வோடிநீர்வைகைசூழுமுயர்திருப்பூவணமே. (௮)

பொய்யாவேதநாவினானும்பூமகள்காதலனுங்
கையாற்றொழுதுகழல்கள்போற்றக்கனலெரியானவனூர்
மையார்பொழிலின்வண்டுபாடவைகைமணிகொழித்துச்
செய்யார்கமலந்தேனரும்புந்தென்றிருப்பூவணமே (௯)

அலையார்புனலைநீத்தவருந்தேரருமன்புசெய்யா
நிலையாவண்ணமாயவைத்தநின்மலன்றனிடமாம்
மலைபோற்றுன்னிவென்றியோங்குமாளிகைசூழ்ந்தயலே
சிலையார்புரிசைபரிசுபண்ணுந்தென்றிருப்பூவணமே. (௧௦)

திண்ணார்புரிசைமாடமோங்குதென்றிருப்பூவணத்துப்
பெண்ணார்மேனியெம்மிறையைப்பேரியலின்றமிழா
னண்ணாருட்கக்காழிமல்குஞானசம்பந்தன்சொன்ன
பண்ணார்பாடல்பத்தும்வல்லார்பயிலவதுவானிடையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

# திருப்பூவணம்.

பண் - காந்தாரபஞ்சமம்.

---

திருச்சிற்றம்பலம்

மாதமர்மேனியனாகிவண்டொடு
போதமர்பொழிலணிபூவணத்துறை
வேதனைவிரவலரரணமூன்றெய்த
நாதனையடிதொழநன்மையாகுமே. (௧)

வானணிமதிபுல்குசென்னிவண்டொடு
தேனணிபொழிற்றிருப்பூவணத்துறை
யானநல்லருமறையங்கமோதிய
ஞானனையடிதொழநன்மையாகுமே (௨)

வெந்துயருறுபிணிவினைகடாவதோர்
புந்தியார்தொழுதெழுபூவணத்துறை
யந்திவெண்பிறையினோடாறுசூடிய
நந்தியையடிதொழநன்மையாகுமே. (௩)

வாசநன்மலர்மலிமார்பில்வெண்பொடிப்
பூசனைப்பொழிறிகழ்பூவணத்துறை
யீசனைமலர்புனைந்தேத்துவார்வினை
நாசனையடிதொழநன்மையாகுமே. (௪)

குருந்தொடுமாதவிகோங்குமல்லிகை
பொருந்தியபொழிற்றிருப்பூவணத்துறை
யருந்திறலவுணர்தமரணமூன்றெய்த
பெருந்தகையடிதொழப்பீடையில்லையே. (௫)

வெறிகமழ்புன்னைபொன்ஞாழல்விம்மிய
பொறியரவணிபொழிற்பூவணத்துறை
கிறிபடுமுடையினன்கேடில்கொள்கைய
னறுமலரடிதொழநன்மையாகுமே. (௬)

பறைமல்குமுழவொடுபாடலாடலன்
பொறைமல்குபொழிலணிபூவணத்துறை
மறைமல்குபாடலன்மாதோர்கூறின
னறைமல்குகழறொழவல்லலில்லையே. (௭)

வரைதனையெடுத்தவல்லரக்கன்முடி
விரறனிலடர்த்தவன்வெள்ளைநீற்றினன்
பொருபுனல்புடையணிபூவணந்தனைப்
பரவியவடியவர்க்கில்லைபாவமே. (௮)

நீர்மல்குமலருறைவானுமாலுமாய்ச்
சீர்மல்குதிருந்தடிசேரகிற்கிலா
போர்மல்குமழுவினன்மேயபூவண
மேர்மல்குமலர்புனைந்தேத்தலின்பமே. (௯)

மணடைகொணடுழிதருமதியிறோருங
குணடருஙகுண[illegible]லபேசுஙகோலத்தா
வணடமாவளாபொழின்மல்குபூவணங
கண்டவரடிதொழுதேததல்கனமமே. (௧0)

புணணியாதொழுதெழுபூவணத்துறை
யணணலையடிதொழுதநதண்காழியு
ளணணியவருமறைஞானசமபநதன
பணணியதமிழசொலபபறையுமபாவமே. (௧௧)

திருச்சிற்றமபலம

# திருநாவுக்கரசுநாயனார்.

## திருததாணடகம.

திருசசிற்றமபலம

வடிவேறுதிரிசூலநதோனறுநதோனறும
வளாசடைமேலிளமதியநதோன்றுநதோனறுங
கடியேறுகமழகொனறைககணணிதோன்றுங
காதிலவெணகுழைதோடுகலநதுதோனறு
மிடியேறுகளிறறுரிவைபபோாவைதோன்று
மெழிறிகழுநதிருமுடியுமிலஙகிததோனறும
பொடியேறுதிருமேனிபொலிநதுதோனறும
பொழிறிகழுமபூவணததெமபுனிதனாககே. (௧)

ஆணாகிபபெண்ணாயவடிவுதோனறு
மடியவாகடகாரமுதமாகிததோனறு
மூனறாகிநாதிரிவானாகிததோனறு
மொறறைவெணபிறைதோனறுமபறறாதமமேற
சேனாகவளாவிலலாலெரிததரோனறுஞ
செததவாதமெலுமபினறசெறியசசெயத
பூணாணுமனாநாணுமபொலிநதுதோனறும
பொழிறிகழுமபூவணததெமபுனிதனாககே. (௨)

கலலாலினீழறகலநதுதோனறுங
கவினமறையோாநாலவாககுநெறிகளனறு
சொலலாகசசொலலியவாதோனறுநதோனறுஞ
சூழரவுமானமறியுநதோனறுநதோனறு
மலலாதகாலனைமுனனடாததரோனறு
மைவவகையாணினைவாாபாலமாநதுதோனறும
பொல்லாதபுலாலெலும்புபூணாயத்தோன்றும
பொழிறிகழும்பூவணததெமபுனிதனாககே. (௩)

படைமலிநதமழுவாளுமானுநதோன்றும
பனனிரண்டுகணணுடையபிள்ளைதோன்று

நடைமலிந்தவிடையோடுகொடியுந்தோன்று
நான்மறையினொலிதோன்றுநயனந்தோன்று
முடைமலிந்தகோவணமுங்கீளுந்தோன்று
மூரல்வெண்சிரமாலையுலாவித்தோன்றும்
புடைமலிந்தபூதத்தின்பொலிவுதோன்றும்
பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே (௪)

மயலாகுந்தன்னடியார்க்கருளுந்தோன்று
மாசிலாப்புன்சடைமேன்மதியந்தோன்று
மியல்பாகவிடுபிச்சையேற்றறோன்று
மிருங்கடனஞ்சுண்டிருண்டகண்டந்தோன்றுங்
கயல்பாயக்கடுங்கலுழிக்கங்கைநங்கை
யாயிரமாமுகத்தினொடுவானிற்றோன்றும்
புயல்பாயச்சடைவிரித்தபொற்புந்தோன்றும்
பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே (௫)

பாராழிவட்டத்தார்பரவியிட்ட
பன்மலருநறும்புகையுமடர்ந்துதோன்றுஞ்
சீராழித்தாமரையின்மலர்களன்ன
திருந்தியமாநிறத்தசேவடிகடோன்று
மோராழித்தேருடையவிலங்கைவேந்த
னுடறுணித்தவிடர்பாவங்கெடுப்பித்தன்று
போராழிமுன்னீந்தபொற்புந்தோன்றும்
பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே (௬)

தன்னடியார்க்கருள்புரிந்ததகவுதோன்றுஞ்
சதுர்முகனைத்தலையரிந்ததன்மைதோன்று
மின்னனையநுண்ணிடையாள்பாகந்தோன்றும்
வேழத்தினுரிவிரும்பிப்போர்த்தறோன்றுந்
துன்னியசெஞ்சடைமேலோர்புனலும்பாம்புந்
தூயமாமதியுடனேவைத்தறோன்றும்
பொன்னனையதிருமேனிப்பொலிந்துதோன்றும்
பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே (௭)

செறிகழலுந்திருவடியுந்தோன்றுந்தோன்றுந்
திரிபுரத்தையெரிசெய்தசிலையுந்தோன்று
நெறியதனைவிரித்துரைத்தநேர்மைதோன்று
நெற்றிமேற்கண்டோன்றும்பெற்றந்தோன்று
மறுபிறவியறுத்தருளும்வகையுந்தோன்று
மலைமகளுஞ்சலமகளுமலிந்துதோன்றும்
பொறியரவுமிளமதியும்பொலிந்துதோன்றும்
பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே (௮)

அருட்போட்டுமுலைமடவாள்பாகந்தோன்று
மணிகிளருமுருமென்னவடர்க்குங்கேழன்
மருப்போட்டுமணிவயிரக்கோவைதோன்று
மணமலிந்தநடந்தோன்றுமணியார்வைகைத் |

திருக்கோட்டினின்றதோர்திறமுந்தோன்றுஞ்
செக்கர்வானொளிமிக்குத்திகழ்ந்தசோதிப்
பொருப்போட்டினைறதிண்புயமுந்தோன்றும்
பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. (௯)

ஆநங்கணைந்தசண்டிக்குமருளியன்று
தன்முடிமேலலர்மாலையளித்தரேன்றும
பாநங்கணைந்துபணிசெய்வார்க்கருளிய
பலபிறவியறுத்தளும்பரிசுந்தோன்றும
கோநங்கணைந்தகூவிளமுமதமத்தமுங்
குழற்கணிந்தகொள்கையொடுகோலந்தோன்றும
பூநங்கணைவேளுருவழித்தபொறபுந்தோன்றும
பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. (௧௦)

ஆருருவவுள்குவாருள்ளத்துள்ளே
யவ்வுருவாய்நிற்கின்றவருளுந்தோன்றும
வாருருவப்பூண்முலைநன்மங்கைதன்னை
மகிழ்ந்தொருபாலவைத்துகந்தவடிவுந்தோன்று
நீருருவக்கடலிலங்கையரக்கர்கோனை
நெறுநெறெனவடர்த்திட்டநிலையுந்தோன்றும
போருருவக்கூற்றுதைத்தபொறபுந்தோன்றும
பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

திருவுடையார்திருமாலயனாலு
முருவுடையாருமைபாலொருபாகம
புரிவுடையாரடைவார்வினைதீர்க்கும
புரிவுடையாருறைபூவணமீதோ (௧)

எண்ணியிருந்துகிடந்துநடந்து
மண்ணெனநினைவார்வினைதீர்ப்பார
பண்ணிசையார்மொழியார்பலர்பாடப்
புண்ணியனாருறைபூவணமீதோ. (௨)

தெள்ளியபேய்பலபூதமவற்றொடு
நள்ளிருணட்டமதாடனவின்றோர்
புள்ளுவராகுமவர்க்கவர்தாமும
புள்ளுவனாருறைபூவணமீதோ. (௩)

தண்டோமழுப்படையானமழவிடையானெழுகடனஞ்
சுணடேபுரமெரியச்சிலைவளைத்தானிமையவாகாத்
திண்டோமிசைநின்றானவனுறையுந்திருச்சுழியற்
றெண்டேசெயவல்லாரவாநல்லாதுயரிலரே (௨)

கவ்வைக்கடலகதறிக்கொணர் முத்தங்கரைக்கேற்றக்
கொவ்வைத்துவாவாயாாகுடைந்தாடுந்திருச்சுழியற
றெய்வத்தினைவழிபாடுசெய்தெழுவாரடிதொழுவா
ரவ்வத்திசைக்கரசாகுவரலராளபிரியாளே. (௩)

மலையான்மகளமடமாதிடமாகத்தவனமறறுக
கொலையானையினுரிபோாத்தவெமபெருமானறிருச்சுழிய
லலையாாசடையுடையானடிதொழுவாாபழுதுள்ள
நிலையாாதிகழ்புகழாளெடுவானத்துயாவாரே. (௪)

உற்றானமகருயருமமதிசசடையானபுலனைந்து
செற்றாதிருமேனிப்பெருமானூாதிருச்சுழியல்
பெறறானினிதுறையததிறமபாமைத்திருநாமங
கற்றாரவாகதியுடசெலவரேத்துமமதுகடனே. (௫)

மலந்தாங்கியபாசப்பிறப்பறுப்பீாதுறைக்கங்கைச
சலந்தாங்கியமுடியானமாந்திடமாந்திருச்சுழிய
னிலந்தாங்கியமலராறகொழுமபுகையானினைந்தேத்துந
தலந்தாங்கியபுகழானமிகுதவமானசதுராமே. (௬)

சைவத்தசெவவுருவனறிருநீறறனனுருமேறறன
கைவைத்தொருசிலையாலரணமூனறுமமெரிசெய்தான
றெயவத்தவாதொழுதேத்தியகுழகனறிருச்சுழியன
மெயவைத்தடிநினைவாாவினைதீாதலெளிதனறே. (௭)

பூவேந்தியபீடத்தவனறானுமமடலரியுங
கோவேந்தியவினயத்தொடுகுறுகப்புகலறியாா
சேவேந்தியகொடியானவனுறையுந்திருச்சுழியன
மாவேந்தியகரத்தானெமசிரத்தானறனதடியே. (அ)

கொணடாடுதலபுரியாவருதக்கனபெருவேளவிச
செண்டாடுதலபுரிந்தானறிருச்சுழியறபெருமானைக
குண்டாடியசமணாதாகளகுடைசசாக்கியரறியா
மிண்டாடியவதுசெய்ததுவானுலவருவிதியே. (௯)

நீரூாதருநிமலனறிருமலையாாகயலருகே
தேரூாதருமரக்கனசிரநெரித்தானறிருச்சுழியல்
பேரூரெனவுறைவானடிபெயாநாவலாகோமா
ஞரூரனதமிழ்மாலைபததறிவாா துயரிலரே. (௰)

திருச்சிற்றம்பலம்

சுவாமிதிருநாமம - திருமேனிநாதா.
தேவிதிருநாமம - துணைமாலைநாயகி.

௮௫ திருப்பதிகம் - ௩௧.

# ௧௩. திருக்குற்றாலம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

### பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

வம்பார்குன்றநீடுயர்சாரல்வளர்வேங்கைக்
கொம்பார்சோலைக்கோலவண்டியாழ்செய்குற்றால
மம்பானெய்யோடாடலமர்ந்தானலர்கொன்றை
நம்பான்மேயநன்னகர்போலுநமரங்காள் (௧)

பொடிகள்பூசித்தொண்டர்பின்செல்லப்புகழ்விம்மக்
கொடிகளோடுநாள்விழமல்குங்குற்றாலங்
கடிகொள்கொன்றைகூவிளமாலைகாதல்செய்
யடிகண்மேயநன்னகர்போலுமடியீர்காள் (௨)

செல்வமல்குசெண்பகம்வேங்கைசென்றேறிக்
கொல்லைமுல்லைமெல்லரும்பீனுங்குற்றால
மில்லினொல்கமும்மதிலெய்துவினைபோக
நல்குநம்பானன்னகர்போலுநமரங்காள். (௩)

பக்கம்வாழைப்பாய்கனியோடுபலவின்றேன்
கொக்கின்கோட்டுப்பைங்கனிதூங்குங்குற்றால
மக்கும்பாம்புமாமையும்பூண்டோரனலேந்து
நக்கன்மேயநன்னகர்போலுநமரங்காள். (௪)

மலையார்சாரன்மகவுடன்வந்தமடமந்தி
குலையார்வாழைத்தீங்கனிமாந்துங்குற்றால
மிலையார்சூலமேந்தியகையானெயிலெய்த
சிலையான்மேயநன்னகர்போலுஞ்சிறுதொண்டீர். (௫)

மைம்மாநீலக்கண்ணியர்சாரன்மணிவாரிக்
கொய்ம்மாவேனலுண்கிளியோப்புங்குற்றாலங்
கைம்மாவேழத்தீருரிபோர்த்தகடவுளெம்
பெம்மான்மேயநன்னகர்போலும்பெரியீர்காள். (௬)

நீலநெய்தறண்சுனைசூழ்ந்தநீள்சோலைக்
கோலமஞ்ஞைபேடையொடாடுங்குற்றாலங்
காலன்றன்னைக்காலாற்காய்ந்தகடவுளெஞ்
சூலபாணிநன்னகர்போலுந்தொழுவீர்காள் (௭)

போதும்பொன்னுமுந்தியருவிபுடைசூழக்
கூதன்மாரிநுண்டுளிதூங்குங்குற்றால
மூதூரிலங்கைமுட்டியகோனைமுறைசெய்த
நாதன்மேயநன்னகர்போலுநமரங்காள் (௮)

அரவின்வாயின்முள்ளெயிறேய்ப்பவரும்பீன்று
குரவம்பாவைமுருகமர்சோலைக்குற்றால
மிரமனோடுமாலறியாதபெருமையெம்
பரமன்மேயநன்னகர்போலும்பணிவீர்காள். (௯)

பெருந்தண்சாரல்வாழ்சிறைவண்டுபெடைபுல்கிக்
குருந்தமேறிச்செவ்வழிபாடுங்குற்றால
மிருந்துண்டேரருநின்றுண்சமணுமெடுத்தார்ப்ப
வருந்தம்மேயவன்னைகாப்போலுமடியீர்காள். (கo)

மாடவீதிவருபுனற்காழியார்மன்னன்
கோடலீன்றுகொழுமுனைகூம்புங்குற்றால
நாடவல்லநற்றமிழ்ஞானசம்பந்தன
பாடல்பத்தும்பாடநம்பாவம்பறையுமே (கக)

திருச்சிற்றம்பலம்

## திருக்குறும்பலா.

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

திருந்தமதிசூடித்தெண்ணீர்சடைக்கரந்துதேவிபாகம்
பொருந்திப்பொருந்தாதவேடத்தாற்காடுறைதல்புரிந்தசெல்வ
ரிருந்தவிடம்வினவிலேலங்கமழ்சோலையினவண்டியாழ்செய்
குருந்தமணநாறுங்குன்றிடஞ்சூழ்தண்சாரற்குறும்பலாவே (க)

நாட்பலவுஞ்சேர்மதியஞ்சூடிப்பொடியணிந்தநம்பானம்மை
யாட்பலவுந்தானுடையவம்மானிடம்போலுமந்தண்சாரற்
கீட்பலவுங்கீண்டுகிளைகிளையன்மந்திபாய்ந்துண்டுவிண்ட
கோட்பலவின்றீங்கனியைமாக்கடுவனுண்டுகளுங்குறும்பலாவே. (உ)

வாடற்றலைமாலைசூடிப்புலித்தோல்வலித்துவீக்கி
யாடலரவசைத்தவம்மானிடம்போலுமந்தண்சாரற்
பாடற்பெடைவண்டுபோதலர்த்தத்தாதவிழ்ந்துபசும்பொனுந்திக்
கோடன்மணங்கமழுங்குன்றிடஞ்சூழ்தண்சாரற்குறும்பலாவே (௩)

பாலவெண்மதிசூடிப்பாகத்தோர்பெண்கலந்துபாடியாடிக்
காலனுடல்கிழியக்காய்ந்தாரிடம்போலுங்கல்சூழ்வெற்பி
னீலமலர்க்குவளைகண்டிறக்கவண்டரற்றுநெடுந்தண்சாரற்
கோலமடமஞ்ஞைபேடையொடாட்டயருங்குறும்பலாவே. (௪)

தலைவாண்மதியங்கதிர்விரியத்தண்புனலைத்தாங்கித்தேவி
முலைபாகங்காதலித்தமூர்த்தியிடம்போலுமுதுவேய்சூழ்ந்த
மலைவாயசும்புபசும்பொன்கொழித்திழியுமல்குசாரற்
குலைவாழைத்தீங்கனியுமாங்கனியுந்தேன்பிலிற்றுங்குறும்பலாவே. (௫)

நீற்றேதுதைந்திலங்குவெண்ணூலர்தண்மதியர்நெற்றிக்கண்ணர்
கூற்றேர்சிதையக்கடிந்தாரிடம்போலுங்குளிர்சூழ்வெற்பி
லேற்றேனமேனமிவையோடவைவிரவியிழிபூஞ்சாரற்
கோற்றேனிசைமுரலக்கேளாக்குயில்பயிலுங்குறும்பலாவே. (௬)

பொன்றொத்தகொன்றையும்பிள்ளைமதியும்புனலுஞ்சூடிப்
பின்றொத்தவார்சடையெம்பெம்மானிடம்போலும்பிலயந்தாங்கி
மன்றத்துமண்முழவமோங்கிமணிகொழித்துவயிரமுந்திக்
குன்றத்தருவியயலேபுனற்றதும்புங்குறும்பலாவே (௭)

ஏந்துதிணிதிண்டோளிராவணனைமாலவரைக்கீழடரவூன்றிச்
சாந்தமெனநீறணிந்தசைவரிடம்போலுஞ்சாரற்சாரற்
பூந்தணறுவேங்கைக்கொத்திறுத்துமதத்தகத்திற்பொலியவேந்திக்
கூந்தற்பிடியுங்களிறுமுடன்வணங்குங்குறும்பலாவே. (௮)

அரவினணையானுநான்முகனுங்காண்பரியவண்ணலெண்ணி
விரவிமதியணிந்தவிகிர்தற்கிடம்போலும்விரிபூஞ்சாரன்
மரவமிருகரையுமலரிகையுஞ்சண்பகமுமலர்ந்துமாந்தக்
குரவமுறுவல்செய்யுங்குன்றிடஞ்சூழ்தண்சாரற்குறும்பலாவே. (௯)

மூடியசீவரத்தார்முன்கூறுண்டேறுதலும்பின்கூறுண்டு
காடிதொடுசமணைக்காய்ந்தாரிடம்போலுங்கல்சூழ்வெற்பி
னீடுயர்வேய்குனியப்பாய்கடுவனீள்கழைமேனின்றுதன்செய்யக்
கூடியவேடுவர்கள்கூய்விளியாக்கைமறிக்குங்குறும்பலாவே. (௧௦)

கொம்பார்பூஞ்சோலைக்குறும்பலாமேவியகொல்லேற்றண்ண
லம்பானடிபரவுநான்மறையான்ஞானசம்பந்தன்சொன்ன
வின்பாயபாடலிவைபத்துமவல்லார்விருப்பிற்கேட்பார்
தம்பாலதீவினைகள்போயகலுநல்வினைகளாவனவே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

திருக்குற்றாலத் திருப்பதிகம் - ௨.

சுவாமி திருநாமம் - குறும்பலாநாதர்
தேவி திருநாமம் - குழல்வாய்மொழி

ஆ திருப்பதிகம் - ௩௩

## ௧௪ திருநெல்வேலி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

மருந்தவைமந்திரமறுமைநன்னெறியவைமற்றுமெல்லா
மருந்துயர்கெடுமவர்நாமமேசிந்தைசெய்நன்னெஞ்சமே
பொருந்துதண்புறவினிற்கொன்றைபொன்சொரிதரத்துன்றுபைம்பூஞ்
செருந்திசெம்பொன்மலர்திருநெல்வேலியுறைசெல்வர்தாமே (௧)

என்றுமோரியல்பினரெனநினைவரியவரேறதேறிச்
சென்றுதாஞ்செடிச்சியர்மனைதொறும்பலிகொளுமியல்பதுவே
துன்றுதண்பொழினுழைந்தெழுவியகேதகைப்போதளைந்து
தென்றல்வந்துலவியதிருநெல்வேலியுறைசெல்வர்தாமே. (௨)

பொறிவளரரவமுமபோழிளமதியமுங்கஙகையென்று
நெறிபடுகுழலியைசசடைமிசைசசுலவிவெணணீறுபூசிக
கிறிபடநடநதுநறகிளிமொழியவாமனஙகவர்வாபோலுஞ
செறிபொழிறழுவியதிருநெல்வேலியுறைசெலவாதாமே. (௩)

காணடகுமலைமகளகதிாநிலாமுறுவலசெயதருளவேயும
பூணடநாகமபுறஙகாடரஙகாநடமாடலபேணி
மீண்டுமாமாடஙகண்மாளிகைமீதெழுகொடிமதியந
தீண்டிவநதுலவியதிருநெலவேலியுறைசெலவாதாமே. (௪)

ஏனவெணகொமபொடுமெழிறிகழமததமுமிளவரவுங
கூனலவெணபிறைதவழசடையினாகொலபுலிததோலுடையா
ராணினலைநதுகநதாடுவாபாடுவரருமறைக
டேனிலவணடமாபொழிறறிருநெலவேலியுறைசெலவாதாமே. (௫)

வெடிதருதலையினாவேனலவெளளேறறினாவிரிசடையா
பொடியணிமாாபினாபுலியதளாடையாபொஙகரவா
வடிவுடைமஙகையோாபஙகினாமாதரைமையலசெயவாா
செடிபடுபொழிலணிதிருநெலவேலியுறைசெலவாதாமே (௬)

அக்குலாவரையினாதிரைகுலாமுடியினரடிகளனறு
தககனாவேளவியைசசாடியசதுரனாகதிாகொளசெமமை
புககதோாபுரிவினாவரிதருவணடுபணமுரலுஞசோலைத
திககெலாமபுகழுறுநதிருநெலவேலியுறைசெலவாதாமே. (௭)

முநதிமாவிலஙகலனறெடுததவனமுடிகடோணெரிதரவே
யுநதிமாமலரடியொருவிரலுகிா நுதியாலடாததாா
கநதமாாதருபொழினமநதிகளபாயதரமதுததிவலை
சிநதுபூநதுறைகமழதிருநெலவேலியுறைசெலவாதாமே (௮)

பைஙகணவாளரவணையவனொடுபனிமலரோனுஙகாணா
வஙகணாவுருவினாவரவாமுறைமுறையிறைஞசநினறா
சஙககானமறையவாநிறைதரவரிவையராடலபேணத
திஙகளுளவிழமலகுதிருநெலவேலியுறைசெலவாதாமே. (௯)

துவருறுவிரிதுகிலாடையாவேடமிலசமணெனனு
மவருறுசிறுசொலையவமெனநினையுமெமமணணலாாதாங
கவருறுகொடிமலகுமாளிகைசசூளிகைமயிலகளாலந
திவருறுமதிதவழதிருநெலவேலியுறைசெலவாதாமே. (௧௦)

பெருநதணமாமலாமிசையயனவனனையவாபேணுகல்வித
திருநதுமாமறையவாதிருநெலவேலியுறைசெலவாதமமைப
பொருநதுநீாததடமலகுபுகலியுணஞானசமபநதன்சொனன
வருநதமிழமாலைகளபாடியாடககெடுமருவினையே (௧௧)

திருசசிற்றமபலம

சுவாமிதிருநாமம - வேணுவனநாதர்.
தேவிதிருநாமம - காந்திமதிநாயகி.

ஆ திருபபதிகம - ௩௪.

மலைநாட்டில் உள்ள ஸ்தலம்.

# ௧. திருவஞ்சைக்களம்.

## சுந்தரமூர்த்திநாயனார்

### பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

தலைக்குத்தலைமாலையணிந்ததென்னே
சடைமேற்கங்கைவெள்ளந்தரித்ததென்னே
யலைக்கும்புலித்தோல்கொண்டசைத்ததென்னே
யதன்மேற்கதநாகங்கச்சார்த்ததென்னே
மலைக்குநிகரொப்பனவன்றிரைகள்
வலித்தெற்றிமுழங்கிவலம்புரிகொண்
டலைக்குங்கடலங்கரைமேன்மகோதை
யணியார்பொழிலஞ்சைக்களத்தப்பனே (௧)

பிடித்தாட்டியோர்நாகத்தைப்பூண்டதென்னே
பிறங்குஞ்சடைமேற்பிறைசூடிற்றென்னே
பொடித்தான்கொண்டுமெய்ம்முற்றும்பூசிற்றென்னே
புகரேறுகந்தேறல்புரிந்ததென்னே
மடித்தோட்டந்துவன்றிரையெற்றியிட
வளர்சங்கமங்காந்துமுத்தஞ்சொரிய
வடித்தார்கடலங்கரைமேன்மகோதை
யணியார்பொழிலஞ்சைக்களத்தப்பனே (௨)

சிந்தித்தெழுவார்க்குநெல்லிக்கனியே
சிறியார்பெரியார்மனத்தேறலுற்றான்
முந்தித்தொழுவாரிறவார்பிறவார்
முனிகண்முனியேயமரர்க்கமரா
சந்தித்தடமால்வரைபோற்றிரைக
டணியாதிடறுங்கடலங்கரைமே
லந்தித்தலைச்செக்கர்வானேயொத்தியா
லணியார்பொழிலஞ்சைக்களத்தப்பனே (௩)

இழைக்குமெழுத்துக்குயிரேயொத்தியா
லிலையேயொத்தியாலுளையேயொத்தியாற்
குழைக்கும்பயிர்க்கோர்புயலேயொத்தியா
லடியார்தமக்கோர்குடியேயொத்தியான
மழைக்குநிகரொப்பனவன்றிரைகள்
வலித்தெற்றிமுழங்கிவலம்புரிகொண்
டழைக்குங்கடலங்கரைமேன்மகோதை
யணியார்பொழிலஞ்சைக்களத்தப்பனே. (௪)

6152 வீடினபயனெனபிறப்பினபயனென
விடையேறுவதென்மதயானைநிற்கக்
கூடுமமலைமங்கையொருததியுடன்
சடைமேற்கங்கையாளைநீசூடிற்றெனனே
பாடுமபுலவாகசருளுமபொருளென
னிதியம்பலசெய்தகலசசெலவி
லாடுஙகடலஙகரைமேன்மகோதை
யணியாரபொழிலஞசைககளத்தபபனே. (௫)

6153 இரவததிடுகாட்டெரியாடிற்றெனனே
யிறந்தாரதலையிறபலிகொணடலெனனே
பரவிததொழுவாரபெறுபணடமெனனே
பரமாபரமேட்டிபணிததருளா
யுரவததொடுசஙகமொழிபபிழுதது
கொணாநதெறறிமுழஙகிவலமபுரிகொண
டரவககடலஙகரைமேனமகோதை
யணியாரபொழிலஞசைககளததபபனே (௬)

6154 ஆககுமமழிவுமமையநீயெனபனுன
சொலலுவாரசொறபொருளவைநீயெனபனு
ஞாககுஞசெவியுஙகணணுநீயெனபனு
னலனேயினிநானுனைநனகுணாநதே
னேககுநிதியமபலவெததனையுங
கலததிறபுகபபெயதுகொணடேறநுநதி
யாரககுஙகடலஙகரைமேனமகோதை
யணியாரபொழிலஞசைககளததபபனே. (௭)

வெறுததேனமனைவாழககையைவிட்டொழிநதேன
விளஙகுநகுழைககாதுடைவேதியனே
யிறுததாயிலஙகைககிறையாயவனை
தலைபததொடுதோளபலவிறறுவிழக
கறுததாயகடனஞசமுதுணடுகணடங
கடுகபபிரமனறலையைநதிலுமொன
றறுததாயகடலஙகரைமேனமகோதை
யணியாரபொழிலஞசைககளததபபனே. (௮)

பிடிககுககளிறேயொததியாலெமபிரான
பிரமறகும்பிரானமறறைமாறகுமபிரா
ஞெடிககுமமளவிறபுரமூனறெரியச
சிலைதொட்டவனேயுனைநானமறவேன
வடிககினறனபோற்சிலவளைஙிறாககள
வலிதெறறிமுழஙகிவலமபுரிகொண
டடிக்குஙகடலஙகரைமேனமகோதை
யணியாரபொழிலஞசைககளததபபனே. (௯)

எந்தம்மடிகளிமையோர்பெருமா
னெனக்கென்றுமளிக்குமணிமிடற்ற
னந்தண்கடலங்கரைமேன்மகோதை
யணியார்பொழிலஞ்சைக்களத்தப்பனை
மந்தம்முழவுங்குழலுமியம்பும்
வளர்நாவலர்கோனம்பியூரன்சொன்ன
சந்தம்மிகுதண்டமிழ்மாலைகள்கொண்
டடிவீழவல்லார்தடுமாறிலரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

சுந்தரமூர்த்தி நாயனார் திருப்புக்கொளியூரிலே முதலைவாய்ப் பிள்ளையை மீட்டு, கொங்கதேசத்தைக் கடந்து மலைநாட்டை அடைந்தார். அதனை யறிந்த அம்மலைநாட்டிலுள்ள சிவனடியார்கள் விரைந்தோடிப் போய்ச் சேரமான் பெருமாணாயனார் திருமுன் சென்று "மகாராஜாவே, சுந்தரமூர்த்தி நாயனார் எழுந்தருளி வருகின்றார்" என்று விஞ்ஞாபித்தார்கள். அதைக்கேட்ட சேரமான் பெருமாணாயனார் பேரானந்தப் பெருங்கடலின் மூழ்கி, அவர்களுக்குப் பொற்கிழிகளையும் இரத்தினாபரணங்களையும் வஸ்திரங்களையும் கொடுத்தார். கொடுத்த பின், "திருவாரூரிற் சைவசிகாமணியார் எழுந்தருளி வருகின்றார், நம்மையாண்டருளுஞ் சுந்தரமூர்த்தி நாயனார் எழுந்தருளி வருகின்றார், நமக்கு உயிர்த்துணைவராகிய தலைவர் எழுந்தருளி வருகின்றார், உலகமெல்லாம் உய்யும்பொருட்டுத் திருவவதாரஞ் செய்த பரமாசாரியர் எழுந்தருளி வருகின்றார்," என்று முரசறைவித்து, தமது திருநகரமெங்கும் மிக அலங்கரிப்பித்து, யானைமேற்கொண்டு, மந்திரிமார்களுஞ் சேனைகளுஞ் சூழப் புறப்பட்டுச் சென்று, தூரத்தே சுந்தரமூர்த்தி நாயனாரைக் கண்டவுடனே யானையினின்றும் இறங்கி விரைந்தோடிப்போய், அவருடைய திருவடிகளை நமஸ்கரித்தார். சுந்தரமூர்த்தி நாயனாரும் சேரமான் பெருமாணாயனாரை வணங்கித் தழுவினார். அதுகண்ட இருபக்கத்தாரும் ஆனந்தசாகரத்தின் மூழ்கி ஆரவாரித்தார்கள். சேரமான் பெருமாணாயனார் சுந்தரமூர்த்தி நாயனாரை யானைமேலேற்றித் தாம் பின்னே அவருக்கு வெள்ளைக் குடைபிடித்துக் கொண்டு, நால்வித வாத்தியங்களும் ஒலிக்கச் சென்று, தமது திருநகரத்திற் புகுந்து, தமது திருமாளிகை வாயிலை அடைந்து அந்நாயனாரை யானையினின்றும் இறக்கி, உள்ளே அழைத்துக்கொண்டு போய்ச் சிங்காசனத்தில் இருத்திப் பூசித்து வணங்கினார். சுந்தரமூர்த்தி நாயனார் அங்கே எழுந்தருளியிருந்தார். இருந்த நாட்களிலே அம்மலைநாட்டிலிருக்கின்ற சிவஸ்தலங்கள் பலவற்றிற்கும் போய்ச் சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு மகோதைநகரத்தை அடைந்தார்.

இப்படிப் பலநாட் சென்றபின், ஒருநாள் சேரமான் பெருமாணாயனார் ஸ்நானம் பண்ணும்பொழுது சுந்தரமூர்த்தி நாயனார் திருவஞ்சைக்களத்துக்கு எழுந்தருளி, அங்குள்ள சிவாலயத்தைப் பிரதக்ஷிணஞ் செய்து, உள்ளே புகு

ந்து, சந்நிதானத்திலே விழுந்து நமஸ்கரித்து, எழுந்து நின்று, அக்கினியிற் பட்ட மெழுகுபோல மனங்கசிந்துருக, இரண்டு கண்ணினின்றும் ஆனந்த வருவி சொரிய, சரீரத்திலே உரோமாஞ்சங் கொள்ள, இரண்டு கைகளும் சிரசின்மேல் ஏறிக் குவிய, அடியேனை இப்பிரபஞ்ச வாழ்க்கையினின்றும் நீக்கித் தேவரீருடைய திருவடியிலே சேர்த்தருளல் வேண்டுமென்னுங் குறிப்போடு "தலைக்குத் தலைமாலை" என்னுந் திருப்பதிகம் பாடினார். அப்பொழுது திருக்கைலாச கிரியிலே விசுவாதிகரும் விச்சுவ சேவியருமாகிய சிவபிரான் அரி பிரமேந்திராதி தேவர்களை நோக்கி, "நீங்கள் போய் நம்முடைய தோழனாகிய சுந்தரனை வெள்ளையானையின் மீதேற்றிக்கொண்டு, வாருங்கள்" என்று ஆஞ்ஞாபித்தருளினார். அதைக்கேட்ட தேவர்கள் சுவாமியை நமஸ்கரித்து, எழுந்து, அநுமதி பெற்று, வெள்ளையானையையுங் கொண்டு, திருவஞ்சைக் களத்தை அடைந்து, திருக்கோயிலை வலஞ்செய்து, திருவாயிலிலேபோய் உள்ளே நின்று எழுந்தருளி வந்த சுந்தரமூர்த்தி நாயனாரை எதிர்கொண்டு, சிவபிரானுடைய ஆஞ்ஞையைத் தெரிவித்தார்கள். அப்பொழுது சுந்தரமூர்த்தி நாயனார் சுவாமியை நினைந்து நமஸ்கரித்து, எழுந்து, தேவர்களுக்கு எதிரே போனார். தேவர்கள் அவரைப் பிரதக்ஷிணஞ் செய்து வெள்ளையானையின் மீதேற்ற, அவர் பஞ்சவாத்தியங்கள் ஆரவாரிக்கவும், தேவர்களெல்லாரும் ஸ்தோத்திரஞ் செய்து புஷ்பமாரி பொழியவும், தம்முடைய தோழராகிய சேரமான் பெருமாணாயனாரைத் திருவுளத்திலே கருதிக்கொண்டு சென்றார்.

---

சுவாமிதிருநாமம் - அஞ்சைக்களத்தப்பர்.
தேவிதிருநாமம் - உமையம்மை.

நள்ளாறுதெள்ளாறரத்துறைவாயெங்கணம்பனே
வெள்ளாடைவேண்டாயவேங்கையினதோலவிரும்பினாய
புள்ளேறுசோலைபபுககொளியூரிறகுளத்திடை
யுள்ளாடப்புக்கமாணியென்னைககிறிசெய்ததே (௯)

நீரேறவேறுநிமிர்புன்சடைநின்மலமூர்த்தியைப
போரேறதேறியைபபுக்கொளியூரவிநாசியைக
காரேறுகண்டனைததொண்டனாரூரனகருதிய
சீரேறுபாடல்களசெயபவல்லார்க்கில்லைதுன்பமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

சுந்தரமூர்த்தி நாயனார் சேரமான பெருமாளநாயனாரை நினைந்து, திருவாரூரினின்றும் புறப்பட்டு, அவரிடத்திற்குப் போமபடி கருதி, சோழமண்டலத்தைக கடந்து, கொங்கதேசத்தை அடைந்து, திருப்புக்கொளியூரிற் சென்று, அங்கே ஒருவீதியிலே இரண்டு வீடுகளில ஒன்றிலே மங்கலவொலியும் மற்றதிலே அழுகையொலியும எழுதலைக் கேட்டு, அங்கே இருந்த பிராமணர்களை நோககி, "இவவிரண்டொலியும் ஒருங்கு நிகழ்வது என்னை" என்று வினவினார். அதுகேட்ட பிராமணர்கள வணங்கி, "ஐந்துவயசுடைய இரண்டுபுதலவர்கள் குளத்திலே குளித்த பொழுது, ஒரு புதலவனை முதலை விழுங்கிறறு, மற்றபபுதலவன் பிழைத்துக்கொண்டான் இந்தவீட்டில ஒலி பிழைத்த புதலவனுக்கு உபநயனஞ்செயயும் ஒலி, இந்தவீட்டில ஒலி இறந்த புதலவனைக குறித்து அழும் ஒலி" என்று சொன்னார்கள அதைக கேட்டுத் திருவுளமிரங்கி நின்ற சுந்தரமூர்த்தி நாயனாரை, புதலவனை இழந்த பிராமணனும் மனைவியுங் கண்டு, ஓடி வந்து, முகமலர்ச்சியோடு அவருடைய திருவடிகளை நமஸகரித்தார்கள். சுந்தரமூர்த்தி நாயனார் அவர்களுடைய முகத்தை நோக்கி, "புதலவனை இழந்தவர்கள் நீங்களா" என்று சொலலியருள, அவர்கள் பின்னும் வணங்கி, "சுவாமீ, அது முன்னே நிகழ்ந்து போயிறறு அது நிறக, அடியேங்கள தேவரீரை வணங்குதற்கு நெடுங்காலமாக அவாவியிருந்தோம அவவன்பு பழுதாகாமல தேவரீர் இங்கே எழுந்தருளப்பெற்றேம்" என்று விண்ணப்பஞ் செயதார்கள அதைக் கேட்ட நாயனார் "இந்தப் பிராமணனும மனைவியும் தங்கள புதலவனை இழந்த துன்பத்தை மறந்து நாம வந்ததற்காக மனமகிழகின்றார்கள ஆகையால, நாம் இவர்கள் புதலவனை அமமுதலைவாயினின்றும் அழைத்துக் கொடுத்து, அவிநாசியில எழுந்தருளியிருக்கின்ற நமது கடவுளை வணஙகுவேம்" என்று அருளிச செயது, 'அந்தப புதலவனை முதலை விழுங்கிய வாவி எங்கே" என்று வினவி, அதனகரையிலே எழுந்தருளி அமமுதலை தான விழுங்கிய புதலவனைக் கொண்டு வரும பொருட்டு "எற்றான் மறக்கேன்" என்னுந் திருப்பதிகம் பாடத் தொடங்கினார் "உரைப்பா ருரையுகந் துள்கவல லார்தங்க ளுச்சியா—யரைக்காடர வாவாதியு மந்தமு மாயினாய—புரைக்காடு சோலைப புக்கொளி யூரவி நாசியே—கரைக்கால் முதலையைப பிள்ளை தரச்சொல்லு காலனையே" என்னு நான்காந திருப்பாட்டு முடிதற்கு முன், இயமன் அந்தப் புதலவனுடைய உயிரைக் கொண்டு வந்து, அவ்வாவியிலுள்ள முதலைவாயினுள்ளே முந்தின தேகத்தைச் சென்ற ஆண்டுகளின் வளர்ச்சியையும் உடையதாகத் தோற்றுவித்து, அதனுள்ளே புகுத்தி விட்டான் உடனே முதலை அந்தப் புதலவனைக் கரையிலே கொண்டுபோய் உமிழ்ந்தது அப்பொழுது மாதாவானவள் ஓடிப்போய், அப் புதல்வனை எடுத்துககொண்டு வந்து, நாயகனோடு சுந்தரமூர்த்திநாயனாருடைய திருவடியிலே விழுந்து நமஸகரித்தாள் இவவற்புதத்தைக் கண்ட தேவர்கள் ஆகாயத்தினின்று நாயனார்மேல புஷபமாரி பொழிந்தார்கள். பிராமணர்களெல்லாரும உத்தரீயங்களை ஆகாயத்திலே வீசி ஆரவாரித்தார்கள். சுந்தர

வேதமோதிவெண்ணீறுபூசிவெண்கோவணந்தற்றயலே
யோதமேவியவொற்றியூரையுமுத்திரநீர்மகிழ்வீர்
மோதிவேடுவர்கூறைகொள்ளுமுருகன்பூண்டிமாநகர்வா
யேதுகாரணமேதுகாவல்கொண்டெத்துக்கிங்கிருந்தீரெம்பிரானீரே. (எ)

படவரவுநுண்ணேரிடைப்பணைத்தோள்வரிநெடுங்கண்
மடவரலுமைநங்கைதன்னையொர்பாகம்வைத்துகந்தீர்
முடவரல்லீரிடரிலீர்முருகன்பூண்டிமாநகர்வா
யிடவமேறியும்போவதாகினீரெத்துக்கிங்கிருந்தீரெம்பிரானீரே. (அ)

சாந்தமாகவெண்ணீறுபூசிவெண்பற்றலைகலனா
வேய்ந்தவெண்பிறைக்கண்ணிதன்னையொர்பாகம்வைத்துகந்தீர்
மோந்தையோடுமுழக்கறாமுருகன்பூண்டிமாநகர்வா
யேந்துபூண்முலைமங்கைதன்னொடுமெத்துக்கிங்கிருந்தீரெம்பிரானீரே. (கூ)

முந்திவானவர்தாந்தொழுமுருகன்பூண்டிமாநகர்வாயப்
பந்தணைவிரற்பாவைதன்னையொர்பாகம்வைத்தவனைச்
சிந்தையிற்சிவத்தொண்டனூரனுரைத்தனபத்துங்கொண்
டெந்தமடிகளையேத்துவாரிடரொன்றுந்தாமிலரே. (க0)

திருச்சிற்றம்பலம்

---

சுந்தரமூர்த்திநாயனார் கொடுங்கோளூரிலிருந்து திருவாரூருக்குச் செல்லும்பொழுது, சேரமான்பெருமாணாயனார் பிரிவாற்றாதவராகி, எழுந்து அவரைப் பின்றொடர்ந்து, போகாதபடி தடுத்து, அதற்கு அவர் உடன்படாமை கண்டு, மந்திரிகளை அழைத்து, தம்முடைய நகரத்திலிருக்கின்ற களஞ்சியத்திலுள்ள பொன் இரத்தினம் ஆபரணம் வஸ்திரம் சுகந்தவர்க்கம் முதலிய திரவியங்களெல்லாவற்றையும் ஆட்களின்மேலே சுமத்தி அனுப்பும்படி ஆஞ்ஞாபிக்க, அவர்கள் அப்படியே செய்தார்கள். சேரமான்பெருமாணாயனார் அந்தச் சுமையாட்களைச் சுந்தரமூர்த்திநாயனாருடைய பரிசனத்தாருக்கு முன் செல்லும்படி அனுப்பி, அவரை விழுந்து நமஸ்கரிக்க, அவர் அவரைத் தழுவி விடைகொடுத்து, மலைநாட்டை நீங்கி, சுரங்களையும் கானயாறுகளையும் வனங்களையும் கடந்து திருமுருகன்பூண்டிவழியே செல்லுதற்குத் திருவுளங்கொண்டபோது, அதற்கு அயலிலே போயபொழுது, சிவபிரான் தம்முடைய பூதகணங்களை நோக்கி, "நீங்கள் வேடவடிவங்கொண்டு சென்று சுந்தரனுடைய பண்டாரங்களைக் கவருங்கள்" என்று ஆஞ்ஞாபிக்க, அவைகள் சுந்தரமூர்த்திநாயனாருடைய சுமையாட்கள் வெருவ வழியிலே வேடுவர்களாகிப் போய் வில்லை வளைத்து நாண் பூட்டி அம்புகளைத் தொடுத்து, "நாங்கள் உங்களைக் கொன்றுபோடுவோம், இத்திரவியங்களெல்லாவற்றையும் போட்டுவிட்டுப் போங்கள்" என்று சொல்லிக் கோபத்தினாலே குத்தி, அந்தத் திரவியங்களெல்லாவற்றையும் கவர்ந்துகொண்டன. அவர்கள் துன்பத்துடனே ஓடிப்போய், சுந்தரமூர்த்திநாயனார் பக்கத்திலே சேர்ந்தார்கள். அவ்வேடுவர்களோ சிவாஞ்ஞையினாலே சுந்தரமூர்த்திநாயனார் பக்கத்திலே செல்லாமல் நீங்கிவிட, சுந்தரமூர்த்திநாயனார் திருமுருகன்பூண்டியிலே சென்று திருக்கோயிலிலே பிரவேசித்து, சுவாமியை வணங்கி, "கொடுகு வெஞ்சிலை வடுகவேடுவர்" என்று திருப்பதிகமெடுத்துத் திருப்பாட்டுத்தோறும் "எத்துக்கிங்கிருந்தீரெம்பிரானீரே" என்று பாடியருளினார். உடனே கடவுளுடைய திருவருளினால், அவ்வேடுவர்கள் தாங்கள் பறித்த திரவியங்களெல்லாவற்றையும் அந்தத் திருக்கோயில் வாயிலிலே கொண்டுபோய்க் குவித்தார்கள். சுந்தரமூர்த்திநாயனார் அது கண்டு, சுவாமியை வணங்கி, அவை

பாலனீறுபுனை திகழ்மார்பிற்பல்வளைக்கை நல்ல
வேல்மலர்க்குழலாளொருபாகமமர்ந்தருளிக்
கோலமலர்ப்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர் மலரு
நீலநன்மாமிடற்றன்கழலேத்தநில்லா வினையே. (ங)

வாருறுகொங்கைநல்லமடவாடிகழ்மார்பி னண்ணுங்
காருறுகொன்றையொடுங்கதநாகம்பூண்டருளிச்
சீருறுமந்தணர்வாழ்கொடிமாடச்செங்குன்றூர் நின்ற
நீருறுசெஞ்சடையானகழலேத்தநில்லா வினையே. (ச)

பொன்றிகழாமையொடுபுரிநூறிகழ்மார்பி னல்ல
பன்றியின்கொம்பணிந்துபணைத்தோளியோர்பாகமாகக்
குன்றனமாளிகைசூழ்கொடிமாடச்செங்குன்றூர் வானின்
மின்றிகழ்செஞ்சடையானகழலேத்தமெய்ப்பொருளே. (ரு)

ஓங்கியமூவிலைநற்சூலமொருகையேந்தி செய்வினை
தாங்கியகங்கையொடுமதியஞ்சடைக்கணிந்து
கோங்கணவும்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர் வாய்ந்த
பாங்கனதாடொழுவார்வினையாயபற்றறுமே (சா)

நீடலர்கொன்றையொடுநிமிர்புன்சடைதாழ வெள்ளை
வாடலுடைதலையிற்பலிகொள்ளுமவாழ்க்கையனுய்க
கோடலவளம்புறவிற்கொடிமாடச்செங்குன்றூர் நின்ற
சேடன்றாடொழுவார்வினையாயதேயுமே (எ)

மத்தநன்மாமலருமதியும்வளர்கொன்றையுட ன்றுன்று
தொத்தலர்செஞ்சடைமேற்றுதையவுடன்சூடிக்
கொத்தலர்தண்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர் மேய
தத்துவன்றடொழுவார்தடுமாற்றறுப்பாரே. (அ)

செம்பொனின்மேனியனும்பிரமன்றிருமாலுந்தேட நின்ற
வம்பவளத்திரள்போலொளியாயவாதிபிரான்
கொம்பணவும்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர் மேய
நம்பன்றாடொழுவார்வினையாயநாசமே. (கூ)

போதியர்பிண்டியரென்றிவர்கள்புறங்கூறும் பொய்யர்நூ
லோதியகட்டுரைகேட்டுழல்வீர்வரிக்குயில்கள்
கோதியதண்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர் நின்ற
வேதியனைத்தொழநும்வினையானவீடுமே (கo)

அலைமலிதண்புனல்சூழ்ந்தழகார்புகலிந்நகர் பேணுந்
தலைமகனாகிநின்றதமிழ்ஞானசம்பந்தன்
கொலைமலிமூவிலையானகொடிமாடச்செங்குன்றூர் சேர்ந்து
நலமலிபாடல்வல்லார்வினையானநாசமே (கக)

திருச்சிற்றம்பலம்

---

சுவாமிதிருநாமம் - அர்த்தநாரீசுவரர்.
தேவிதிருநாமம் - அர்த்தநாரீசுவரி.

---

ஆ திருப்பதிகம் - ச.

# ௫. வெஞ்சமாக்கூடல்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

எறிக்குங்கதிர்வேயுதிர்முத்தமொ
டேலமிலவங்கந்தகக்கோலமிஞ்சி
செறிக்கும்புனலுட்பெய்துகொண்டுமண்டித்
திளைத்துத்தெற்றுசிற்றாறதன்கீழ்க்கரைமேன்
முறிக்குந்தழைமாமுடப்புன்னைஞாழல்
குருக்கத்திகண்மேற்குயில்கூவலறா
வெறிக்குங்கலைமாவெஞ்சமாக்கூடல்
விகிர்தாவடியேனையும்வேண்டுதியே (௧)

குளங்கள்பலவுங்குழியுந்நிறையக்
தடமாமணிசந்தனமுமகிலுந்
துளங்கும்புனலுட்பெய்துகொண்டுமண்டித்
திளைத்துத்தெற்றுசிற்றாறதன்கீழ்க்கரைமேல்
வளங்கொண்மதின்மாளிகைகோபுரமு
மணிமண்டபமுமிவைமஞ்சுதன்னுள்
விளங்கும்மதிதோய்வெஞ்சமாக்கூடல்
விகிர்தாவடியேனையும்வேண்டுதியே (௨)

வரைமானனையார்மயிற்சாயனல்லார்
வடிவேற்கணல்லார்பலர்வந்திறைஞ்சத்
திரையார்புனலுட்பெய்துகொண்டுமண்டித்
திளைத்துத்தெற்றுசிற்றாறதன்கீழ்க்கரைமே
னிரையார்கமுகுந்நெடுந்தாட்டெங்குங்
குறுந்தாட்பலவும்விரவிக்குளிரும்
விரையார்பொழில்சூழ்வெஞ்சமாக்கூடல்
விகிர்தாவடியேனையும்வேண்டுதியே (௩)

பண்ணேர்மொழியாளையோர்பங்குடையாய்
படுகாட்டகத்தென்றுமோர்பற்றொழியாய்
தண்ணாரகிலுந்நல்லசாமரையு
மலைத்துத்தெற்றுசிற்றாறதன்கீழ்க்கரைமேன்
மண்ணார்முழவுங்குழலுமியம்ப
மடவார்நடமாடுமணியரங்கில்
விண்ணார்மதிதோய்வெஞ்சமாக்கூடல்
விகிர்தாவடியேனையும்வேண்டுதியே. (௪)

துளைவெண்குழையுஞ்சுருள்வெண்டோடுந்
தூங்குங்காதிற்றுளங்கும்படியாய்

வஞுசியாதளிக்குமவயனுவலாகோன்
வனப்பகையப்பன்வனறொண்டன்சொன்ன
செஞுசொறறமிழமாலைகளபத்துமவல்லாா
சிவலோகத்திருப்பது திண்ணமன்றே. (கo)

திருசசிற்றம்பலம்

சுவாமிதிருநாமம - விகிர்தேசுவரா.
தேவிதிருநாமம - விகிர்தேசுவரி.

ஆ திருப்பதிகம - ரு.

# சு. திருப்பாண்டிக்கொடுமுடி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண - காந்தாரம

திருசசிற்றமபலம

பெணணமாமேனியினாருமபிறைபுலகுசெஞசடையாரும
கணணமாநெறறியினாருஙகாதமருஙகுழையாரு
மெணணமருஙகுணததாருமிமையவரேததநின்றாரும
பண்ணமாடலினாருமபாணடிககொடுமுடியாரே (க)

தனைககணிமாமலாகொணடுதாடொழுவாரவாதஙகள
வினைப்பகையாயினதீாககுமவிணணவாவிஞசையாநெஞசி
னினைத்தெழுவாாதுயாதீாபபா நினைவனமஙகைநடுஙகப
டனைககைப்பகடடுரிபோாததாாபாணடிககொடுமுடியாரே. (உ)

சடையமாகொனறையினாருஞசாநதவெணணீறணிநதாரும
புடையமாபூததினாருமபொறிகிளாபாம்பசைததாரும
விடையமருஙகொடியாருமவெணமழுமூவிலைசசூலப
படையமா கொளகையினாருமபாணடிச்கொடுமுடியாரே. (ங)

நறைவளாகொனறையினாருஞாலமெலலாநதொழுதேததக
கறைவளாமாமிடறறாருஙகாடரஙகாககனலேநதி
மறைவளாபாடலினோடுமண் முழவஙகுழனமொநதை
பறைவளாபாடலினாருமபாணடிககொடுமுடியாரே. (ச)

போகமுமினபமுமாகிப்போற்றியெனபாரவாதஙக
ளாகமுறைவிடமாகவமாநதவாகொன்றையினோடு
நாகமுநதிஙகளுஞசூடிநனனுதன்மஙகைதனமேனிப
பாகமுகநதவாதாமுமபாணடிககொடுமுடியாரே. (ரு)

கடிபடுகூவிளமததஙகமழசசடைமேலுடையாரும
பொடிபடமுப்புரஞசெறறபொருசிலையொன்றுடையாரும்
வடிவுடைமங்கைதனோடுமணம்படுகொளகையினாரும
படிப்படுகோலத்தினாரும்பாணடிககொடுமுடியாரே. (சு)

ஊனமாவெண்டலையேந்தியுண்பலிக்கென்றுழலவாருந
தேனமரும்மொழிமாதுசேர்திருமேனியினருந்
கானமாமஞ்ஞைகளாலுங்காவிரிக்கோலக்கரைமேற
பானலநீறணிவாரும்பாண்டிக்கொடுமுடியாரே (எ)

புரந்தரன்றன்னொடுவானோர்போற்றியெனறேத்தநின்றாரும
பெருந்திறலவாளரக்கனைப்பேரிடர்செய்துகந்தாருங்
கருந்திரைமாமிடற்றாருங்காரகிலபனமணியுந்திப
பரந்திழிகாவிரிப்பாங்கர்ப்பாண்டிக்கொடுமுடியாரே. (அ)

திருமகள்காதலினானுந்திகழ்தருமாமலர்மேலப
பெருமகனுமமவர்காணாப்பேரழலாகியபெம்மான
மருமலிமென்மலர்ச்சந்துவந்திழிகாவிரிமாடே
பருமணிநீர்த்துறையாரும்பாண்டிக்கொடுமுடியாரே. (க)

புத்தருமபுந்தியிலாதசமணருமபொய்யமமொழியலலான
மெய்ததவமபேசிடமாட்டார்வேடமபலபலவற்றாற
சித்தருந்தேவருங்கூடிச்செழுமலர்நல்லனகொண்டு
பத்தர்கடாமபணிந்தேத்துமபாண்டிக்கொடுமுடியாரே. (க0)

கலமலகுதண்கடல்சூழ்ந்தகாழியுண்ஞானசம்பந்தன
பலமலகுவெண்டலையேந்திப்பாண்டிக்கொடுமுடிதன்னைச
சொலமல்குபாடல்கள்பத்துஞ்சொல்லவல்லார்துயர்தீர்ந்து
நலமலகுசிந்தையராகிநன்னெறிஎய்துவர்தாமே. (கக)

திருச்சிற்றமபலம

## திருநாவுக்கரசுநாயனார்

### திருக்குறுந்தொகை.

திருச்சிற்றமபலம

சிட்டனைச்சிவனைச்செழுஞ்சோதியை
யட்டமூர்த்தியையாலநிழலமா
பட்டனைத்திருப்பாண்டிக்கொடுமுடி
நட்டனைத்தொழநம்வினைநாசமே. (க)

பிரமன்மாலறியாதபெருமையன
றருமமாகியதத்துவனெமபிரான
பரமனுறைபாண்டிக்கொடுமுடி
கருமமாகத்தொழுமடநெஞ்சமே. (உ)

ஊசலாளல்லளொண்கழலாளல்ல
டேசமாந்திருப்பாண்டிக்கொடுமுடி
யீசனேயெனுமித்தனையல்லது
பேசுமாறறியாளொருபேதையே. (௩)

தூண்டியசுடர்போலொக்குஞ்சோதியான்
காண்டலுமெளியனடியார்கட்குப்
பாண்டிக்கொடுமுடிமேயபரமனைக்
காண்டுமென்பவர்க்கேதுங்கருத்தொன்றுமே (ச)

நெருக்கியமுடிநின்றிசைவாணரை
இருக்கொடும்பணிந்தேத்தவிருந்தவர்
திருக்கொடுமுடியென்றலுந்தீவினைக்
கருக்கெடுமிதுகைகண்டயோகமே (ரு,சு,எ,அ,கூ,க0)

திருச்சிற்றம்பலம்

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

மற்றுப்பற்றெனக்கின்றிநின்றிருப்பாதமேமனம்பாவித்தேன்
பெற்றலும்பிறந்தேனினிப்பிறவாததன்மைவந்தெய்தினேன்
கற்றவர்தொழுதேத்துஞ்சீர்க்கறையூரிற்பாண்டிக்கொடுமுடி
நற்றவாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே (க)

இட்டனும்மடியேத்துவாரிகழ்ந்திட்டநாண்மறந்திட்டநாள்
கெட்டநாளிவையென்றலாற்கருதேன்கிளர்புனற்காவிரி
வட்டவாசிகைகொண்டடிதொழுதேத்துபாண்டிக்கொடுமுடி
நட்டவாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே (உ)

ஓவுநாளுணர்வழியுநாளுயிர்போகுநாளுயர்பாடைமேற்
காவுநாளிவையென்றலாற்கருதேன்கிளர்புனற்காவிரிப்
பாவுதண்புனல்வந்திழிபரஞ்சோதிபாண்டிக்கொடுமுடி
நாவலாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (ங)

எல்லையில்புகழெம்பிரானெந்தைதம்பிரானென்பொன்மாமணி
கல்லையுந்திவளம்பொழிந்திழிகாவிரியதன்வாய்க்கரை
நல்லவர்தொழுதேத்துஞ்சீர்க்கறையூரிற்பாண்டிக்கொடுமுடி
வல்லவாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே (ச)

அஞ்சினார்க்கரணாதியென்றடியேனுநான்மிகவஞ்சினேன்
அஞ்சலென்றடித்தொண்டனேற்கருணல்கினாய்க்கழிகின்றதென்
பஞ்சின்மெல்லடிப்பாவைமார்குடைந்தாடுபாண்டிக்கொடுமுடி
நஞ்சணிகண்டநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (ரு)

ஏடுவானிளந்திங்கள்சூடினையென்பின்கொல்புலித்தோலின்மேல்
ஆடுபாம்பதரைக்கசைத்தவழகனேயந்தண்காவிரிப்
பாடுதண்புனல்வந்திழிபரஞ்சோதிபாண்டிக்கொடுமுடிச்
சேடனேயுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே (சு)

விரும்பிநின்மலர்ப்பாதமேநினைந்தேன்வினைகளும்விண்டன
னெருங்குவண்பொழில்சூழ்ந்தெழில்பெறுநின்றகாவிரிக்கோட்டிடைக்
குரும்பைமென்முலைக்கோதைமார்குடைந்தாடுபாண்டிக்கொடுமுடி
விரும்பனேயுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே (எ)

செம்பொனேர்சடையாய்திரிபுரந்தீயெழச்சிலைகோலினாய
வம்புலாங்குழலாளைப்பாகமமர்ந்துகாவிரிக்கோட்டிடைக்
கொம்பின்மேற்குயில்கூவமாமயிலாடுபாண்டிக்கொடுமுடி
நம்பனேயுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே (அ)

சாரணன்றந்தையெம்பிரானெந்தைதம்பிரானென்பொன்மாமணியென்று
பேரெணாயிரகோடிதேவர்பிதற்றிநின்றுபிரிகிலார்
நாரணன்பிரமன்றொழுங்கறையூரிற்பாண்டிக்கொடுமுடிக்
காரணாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே (கூ)

கோணியபிறைசூடியைக்கறையூரிற்பாண்டிக்கொடுமுடி
பேணியபெருமானைப்பிஞ்ஞகப்பித்தனைப்பிறப்பில்லியைப்
பாணுலாவரிவண்டறைகொன்றைத்தாரனைப்படப்பாம்பரை
நாணனைத்தொண்டனூரன்சொல்லிவைசொல்லுவார்க்கில்லைதுன்பமே (௧0)

திருச்சிற்றம்பலம்

திருப்பாண்டிக்கொடுமுடித்திருப்பதிகம் - ௩

சுவாமிதிருநாமம் - கொடுமுடிநாதர்
தேவிதிருநாமம் - பண்மொழியம்மை

திருப்பதிகம் - அ

## எ. கருவூரானிலை.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

தொண்டெலாமலர்தூவியேத்தநஞ்
சுண்டலாருயிராயதன்மையர்
கண்டனார்கருவூருளானிலை
யண்டனாரருளீயுமன்பரே. (க)

நீதியார்நினைந்தாயநான்மறை
யோதியாரொடுங்கூடலார்குழைக்
காதினார்கருவூருளானிலை
யாதியாரடியார்தமன்பரே. (உ)

விண்ணுலாமதிசூடிவேதமே
பண்ணுளாபரமாயபண்பினா
கண்ணுளாகருவூருளானிலை
யணணலாரடியார்கருநலலரோ. (ரு)

முடியாமுமமதயானையீருரி
பொடியாபூங்கணைவேளைசெறறவா
கடியுளாகருவூருளானிலை
யடிகள்யாவையுமாயவீசரோ. (௪)

பஙகயமமலாப்பாதாபாதியோா
மஙகையாமணிநீலகணடாவான
கஙகையாாகருவூருளானிலை
யஙகையாடரவததெமணணலே. (௫)

தேவாதிஙகளுமபாமபுஞ்சென்னியின
மேவாமும்மதிலெய்தவில்லியா
காவலாகருவூருளானிலை
மூவராகியமொயம்பரல்லரோ (௬)

பணணிஞாபடியேறறா்நீறறா்மெயப
பெணணிஞாபிறைதாஙகுநெறறியார
கண்ணிஞாகருவூருளானிலை
நண்ணிஞாநமையாளுநாதரோ. (எ)

கடுத்தவாளரககனகயிலையை
யெடுத்தவனறலைதோளுநதாளிஞ
லடாத்தவன்கருவூருளானிலை
கொடுததவனனருள்கூததனலலனே. (அ)

உழுதுமாநிலததேனமாகிமா
ஞெழுதுமாமலரோனுஙகாண்கிலாா
கழுதிஞனகருவூருளானிலை •
முழுதுமாகியமூாததிபாதமே. (௯)

புததாபுன்சமணாதாபொயயுரைப
பிததாபேசியபேசசைவிடடுமெயப்
பததாசோகருவூருளானிலை
யத்தாபாதமடைநதுவாழமினே. (௧0)

கநதமாாபொழிறகாழிஞானசம
பநதன்சோகருவூருளானிலை
யெநதையைசசொன்னபததும்வலலவா
சிநதையிறறுயராயதீாவரோ. (௧௧)

திருசசிற்றம்பலம்

---

சுவாமிதிருநாமம - பசுபதிநாதர்.
தேவிதிருநாமம - கிருபாநாயகி.

---

ஆ திருப்பதிகம் - கூ.

நடுநாட்டில் உள்ள ஸ்தலங்கள்.

# க. திருநெல்வாயிலரத்துறை.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - பியந்தைககாந்தாரம.

திருச்சிறறம்பலம

எநதையீசனெமபெருமானேறமாகடவுளென றேததிச
சிநதைசெய்பவாக்கலலாறசெனறுகைகூடுவதன்றால்
கநதமாமலருநதிக்கடுமபுனனிவாமலகுகரைமே
லநதண்சோலைநெலவாயிலரததுறையடிகடமமருளே. (க)

ாரவாாசடைதனமேலிளம்பிறையணிநதவெமபெருமான
சீருஞசெல்வமுமெயதாசசிதடாகதொழசசெல்வதனறால்
வாரிமாமலருநதிவருபுனனிவாமலகுகரைமே
லாருஞசோலைநெல்வாயிலரத்துறையடிகடமமருளே. (உ)

பிணிகலநதபுனசடைமேறபிறையணிசிவனெனபபேணி
பணிகலநதுசெயயாதபாவிகடொழசசெலவதனறுன
மணிகலநதுபொனனுநதிவருபுனனிவாமலகுகரைமே
லணிகலநதநெலவாயிலரத்துறையடிகடமமருளே. (ங)

துனனவாடையொனறுடுததுதூயவெணணீறறினராகி
யுன்னிநைபவாககலலாலொனறுஙகைகூடுவதனறுற
பொன்னுமாமணியுநதிபொருபுனனிவாமலகுகரைமே
லனனமாருநெலவாயிலரததுறையடிகடமமருளே (ச)

வெருகுரிஞசுவெஙகாட்டிலாடியவிமலனெனறுளகி
யுருகிநைபவாககலலாலொன்றுஙகைகூடுவதன்றுன
முருகுரிஞசுபூஞசோலைமொயமமலாசுமநதிழிநிவாவந
தருகுரிஞசுநெல்வாயிலரததுறையடிகடமமருளே (ரு)

உரவுநீாசசடைககரநதவொருவனெனறுளகுளிாநதேததிய
பரவிநைபவாக்கலலாறபரிநதுகைகூடுவதனறுற
குரவநீடியாசோலைக்குளிாபுனனிவாமலகுகரைமே
லரவமாருநெல்வாயிலரததுறையடிகடமமருளே. (சு)

நீலமாமணிமிடற்றுநீறணிசிவனெனபபேணுஞ
சீலமாநதாகடகல்லாறசென்றுகைகூடுவதனறுற
கோலமாமலருநதிக்குளிாபுனனிவாமல்குகரைமே
லாலுஞசோலைநெல்வாயிலரததுறையடிகடமமருளே. (எ)

செழுந்தண்மால்வரையெடுத்தசெருவலியிராவணனலற
வழுநதவூன்றியவிரலானபோற்றியென்பாாக்கல்லதருளான்
கொழுங்கனிசுமநதுநதிக்குளிாபுனனிவாமல்குகரைமே
லழுநதுஞசோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (அ)

நுணங்குநூலயன்மாலுமிருவருநோக்கரியானை
வணங்கிநைபவர்க்கல்லால்வந்துகைகூடுவதன்றால்
மணங்கமழ்ந்துபொன்னுந்திவருபுனல்வாய்மலங்குகண்மே
லணங்குஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (௯)

சாக்கியப்படுவாருஞ்சமண்படுவார்களுமற்றும்
பாக்கியப்படகில்லாப்பாவிகடொழச்செல்வதன்றால்
பூக்கமழ்ந்துபொன்னுந்திப்பொருபுனல்வாய்மல்குகண்மே
லார்க்குஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (௧0)

கறையினார்பொழில்சூழ்ந்தகாழியுண்ஞானசம்பந்த
னறையும்பூம்புனல்பரந்தவரத்துறையடிகடம்மருளை
முறைமையாற்சொன்னபாடன்மொழியுமாந்தாந்தம்வினைபோய்ப்
பறையுமையுறவில்லைப்பாட்டிவைபத்தும்வல்லார்க்கே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

ஆளுடைய பிள்ளையார் திருநீலகண்டப் பெரும்பாணர் வேண்டுகோளின் படி, தந்தையார் முதலிய சமஸ்தரோடும் அப்பெரும்பாணர் அவதரித்தருளிய திருவெருக்கத்தம்புலியூருக்கும் திருமுதுகுன்றுக்கும் போய், சுவாமிதரிசனஞ் செய்து கொண்டு, பெண்ணாகடத்தை அடைந்தார். அங்கே திருத்தூங்கானை மாடம் என்னும் ஆலயத்தில் எழுந்தருளியிருக்கின்ற சுவாமியைத் தரிசனஞ்செய்து கொண்டு, திருநெல்வாயிலரத்துறைக்குப் போக விரும்பி, தந்தையாருடைய தோண்மேலிருத்தலை ஒழிந்து, அவர் மனம் வருந்தும்படி, பிராமணர் முதலியோர் சூழ்ந்து செல்ல, திருவடித்தாமரை நோவ, பையப்பைய நடந்து, மாறன்பாடி என்னும் பதி வந்தவுடனே, வழிச்சென்ற வருத்தத்தினாலே ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை உச்சரித்துக்கொண்டு, அப்பதியிற் சென்றார். அப்பொழுது சூரியன் அஸ்தமயனமாயிற்று.

அவ்விரவு பிள்ளையார் அடியார்களோடும் அந்தப்பதியிலேயே தங்கினார். திருவரத்துறையில் எழுந்தருளியிருக்கின்ற கடவுள் தம்முடைய திருக்குமாரராகிய திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருடைய வழிவருத்தத்தைத் திருவுளத்தடைத்து, அவர் ஏறுதற்கு முத்துச்சிவிகையும், அவருக்கு நிழற்றுதற்கு முத்துக்குடையும், ஊதுதற்கு முத்துச்சின்னங்களும் கொடுத்தருளத் திருவுளங்கொண்டு, அந்த ஸ்தலத்திலிருக்கின்ற பிராமணர்கள் அனைவருக்கும் தனித்தனியே சொப்பனத்திலே தோன்றி, "ஞானசம்பந்தன் நம்மிடத்துக்கு வருகின்றான், நீங்கள் முத்துச்சிவிகையும் முத்துக்குடையும் முத்துச்சின்னங்களும் நம்மிடத்தில் எடுத்து அவனிடத்திற்குக் கொண்டுபோய்க் கொடுங்கள்" என்று அஞ்ஞாபித்து மறைந்தருளினார். உடனே பிராமணர்கள் விழித்தெழுந்து, மகிழ்ந்து, அற்புதமெய்திய சிந்தையோடும் ஆலயத்திலே வந்து கூடி திருப்பள்ளியெழுச்சிக்காலம் வர, திருக்காப்பை நீக்கி, முத்துச்சிவிகையையும் முத்துக்குடையையும் முத்துச்சின்னங்களையும் கண்டு, ஆனந்தங்கொண்டு, துந்துபி முதலிய வாத்தியங்கள் ஒலிப்ப, சிவனடியார்களோடு, அந்தச் சிவிகை முதலியவற்றைத் தாங்கிக்கொண்டு, ஆளுடைய பிள்ளையாரிடத்திற்குப் போனார்கள். அதற்கு முன் சிவபிரான் ஆளுடைய பிள்ளையாருக்கும் சொப்பனத்திலே தோன்றி "நாம் உனக்கு முத்துச்சிவிகையும் முத்துக்குடையும் முத்துச்சின்னங்களும், அனுப்புகின்றோம் நீ அவைகளை ஏற்றுக்கொள்" என்று திருவாய் மலர்ந்தருளினார். பிள்ளையார் விழித்தெழுந்து, தாங்கண்ட சொப்பனத்தைத் தந்தையாருக்கும் அடியார்களுக்கும் அருளிச்செய்து, வைகறையிலே விபூதி தரித்து

யனாரிடத்துக்குத் திரும்பிப் போய்த் தெரிவித்தார்கள். அப்பொழுது சடையனார் மகிழ்ச்சிகொண்டு, விவாகத்துக்குச் சுபதினமுஞ் சுபமுகூர்த்தமும் நிச்சயித்து, தம்முடைய ஞாதிகள் சினேகர்கள் யாவரையும் விவாகபத்திரம் அனுப்பி அழைப்பித்தார் பின்பு நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்திநாயனார் விவாகதினத்துக்கு முதற்றினத்திலே சமாவர்த்தனம் பண்ணி, ரக்ஷாபந்தனஞ் செய்து, மற்றநாள் நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு, திருமணக் கோலங்கொண்டு, குதிரைமேல் ஏறி, மகாலங்காரத்தோடு புத்தூரிலே சடங்கவி சிவாசாரியர் வீட்டிலே திருக்கலியாணப் பந்தருக்கு முன் சென்று, குதிரையினின்றும் இறங்கி, உள்ளேபோய், ஆசனத்தில் இருந்தார்

அப்பொழுது ஊரும் பேரும் உருவும் இல்லாதவராயினும் ஆன்மாக்களுக்கு வினைவயத்தால் வந்த ஊரையும் பேரையும் உருவையும் இருவினையொப்பாகிய பக்குவகாலத்திலே ஒழிக்கும்பொருட்டு அருள்வயத்தால் ஊரும் பேரும் உருவுங் கொண்டருளுகின்ற சிவபெருமான், தாம் திருக்கைலாசத்திலே சுந்தரமூர்த்திக்கு வாக்குதத்தம் பண்ணிய பிரகாரம் அவரைப் பிரபஞ்ச வாழ்க்கையிலே மயங்கவிடாமல் தடுத்து ஆட்கொண்டருளும்பொருட்டு, ஒரு வயோதிகப் பிராமண வடிவங்கொண்டு, அவ்விடத்திலே எழுந்தருளி வந்து நின்று, "இவ்விடத்தில் இருக்கின்ற எல்லீர்களும் நான் சொல்லும் இவ்வார்த்தையைக் கேளுங்கள்" என்று சொல்லியருளினார் அப்படிச் சொல்லிய அந்த ஐயரை விவாகஞ்செய்யத் தொடங்கும் நம்பியாரூரரும் அங்கிருக்கின்ற மற்றப்பிராமணர்களும் பார்த்து, "இவ்விடத்திலே நீர் சொல்ல விரும்பியதைச் சொல்லும்" என்றார்கள் அதைக் கேட்ட ஐயர் நம்பியாரூரரை நோக்கி, "எனக்கும் உனக்கும் ஒரு வழக்கு இருக்கின்றது அதை முடித்துக்கொண்டு உன்னுடைய விவாகத்தை நடத்து" என்று அருளிச்செய்தார் நம்பியாரூரர் "உமக்கும் எனக்கும் ஒரு வழக்கு உளதாயின், அதை முடித்தன்றி நான் விவாகஞ் செய்யேன் நீர் அவ்வழக்கு இன்னதென்று தெரியும்படி சொல்லும்" என்று கேட்க, அந்த ஐயர் பிராமணர்களைப் பார்த்து, "இந்தத் திருநாவலூரனாகிய நம்பியாரூரன் எனக்கு அடியவன்" என்று சொல்லியருளினார் அதைக்கேட்ட நம்பியாரூரர் "இந்த ஐயர் சொன்ன வார்த்தை நன்றாயிருக்கின்றது" என்று இகழ்ச்சியாகச் சொல்லிச் சிரிக்க, பிராமண வேடங்கொண்ட கடவுள் அவருக்குச் சமீபத்திலே போய், "அக்காலத்திலே உன்னுடைய பாட்டன் எனக்கு எழுதித் தந்த அடிமையோலை இதுவே அப்படியிருக்க, இந்தக் காரியத்தைக்குறித்து நீ பரிகாசம்பண்ணியது என்ன" என்றார் உடனே நம்பியாரூரர் ஐயரைப் பார்த்து, 'பிராமணருக்குப் பிராமணர் அடிமையாதல் இன்றைக்கு நீயே சொல்லக் கேட்டோம் நீ பித்தனோ" என்று சொல்ல, ஐயர் "நான் பித்தனுமாகுக பேயனுமாகுக நீ இப்போது எத்தனை வசைமொழிகளைச் சொன்னாலும் அவைகளினால் நான் சிறிதாயினும் வெட்கம் அடையேன். நீ என்னைச் சிறிதும் அறிந்திலை இப்படி நின்று விளையாட்டுமொழிகள் பேசவேண்டாம் அடிமைத்தொழில் செய்யவா" என்றார் அப்பொழுது நம்பியாரூரர் "இவர் அடிமையோலை ஒன்று உண்டென்றாரே அதின் உண்மையை அறியவேண்டும்" என்று நினைத்து, "ஐயரே, உம்முடைய ஓலையைக் காட்டும்" என்று சொல்ல, ஐயர் "நீ இந்த ஓலையைப் பார்த்து நிச்சயிக்கத்தக்கவனோ? நான் இந்தச் சபையாருக்கு ஓலையைக் காட்டி மெய்யென்று அங்கீகாரஞ்செய்வித்தபின், எனக்கு ஊழியஞ் செய்தற்குமாத்திரந் தக்கவன்" என்றார் அது கேட்ட நம்பியாரூரர் கோபங்கொண்டு, அவர்கையில் இருக்கும் ஓலையைப் பறிக்கும்படி அவருக்கு எதிரே விரைந்து சென்றபோது, அவர் ஓடத் தாமும் ஓடி, அவரைப் பின்றொடர்ந்து பிடித்து, ஓலையைப் பறித்து, "பிராமணர்கள் அடிமையாய ஊழியஞ் செய்தல், என்ன

முறை" என்று சொல்லிக் கிழிக்க, ஐயர் சுந்தரமூர்த்தியைப் பிடித்துக்கொண்டு, ஒருதரம் "இது முறையோ" என்று சத்தமிட, சமீபத்தில் நின்றவர்கள் அவ்விருவரையும் விலக்கி, "உலகத்திலே ஒருகாலமும் நடவாத புதுப் பாட்டைக்கொண்டு வழக்காடுகின்ற பிராமணரே, நீர் எங்கே இருக்கின்றவர்? சொல்லும்" என்றார்கள். அதற்கு ஐயர் "நான் இந்தத் திருவெண்ணெய் நல்லூரில் இருக்கின்றவன். அது நிற்க, இந்த நம்பியாரூரன் தருமவழிக்கு விரோதமாக வலாத்காரம்பண்ணி என் கையில் ஓலையைப் பறித்துக் கிழித்ததினாலே, தான் எனக்கு அடியவன் என்பதை ஸ்திரப்படுத்துகின்றான்" என்றார். அப்பொழுது சுந்தரமூர்த்தி நாயனார் "நீர் திருவெண்ணெய் நல்லூரில் இருக்கிறவராகில், இந்த வழக்கை அங்கேதானே பேசித் தீர்ப்புச்செய்ய வாரும்" என்று சொல்ல, ஐயர் அதைக் கேட்டு, "திருவெண்ணெய் நல்லூரில் இருக்கின்ற பிராமணர்களுக்கு முன்னே ஆதியில் எழுதப்பட்ட மூலவோலையைக் காட்டி நீ எனக்கு அடிமை என்பதைச் சாதிப்பேன்" என்று சொல்லித் தண்டை ஊன்றிக்கொண்டு முன்னே நடந்தார். சுந்தரமூர்த்தியும் மற்றப் பிராமணர்களும் பின்னாகப் போனார்கள்.

ஐயர் தமக்குப் பின் வந்த சுந்தரமூர்த்தியோடும் மற்றப் பிராமணர்களோடும் திருவெண்ணெய் நல்லூரை அடைந்து, அங்கே இருக்கின்ற பிராமணர்களுடைய சபையிலே போய், அவர்களை நோக்கி, "அறிவால் அமைந்த பெரியோர்களே, திருநாவலூரில் இருக்கின்ற ஆரூரனாகிய இவன் தான் எனக்கு அடிமையென்று காணபித்த ஓலையைக் கிழித்துவிட்டு உங்களிடத்துக்கு வந்திருக்கின்றான்" என்று சொல்லி முறைப்பாடுசெய்தார். அந்த அபியோகத்தைக் கேட்ட பிராமணர்கள் அவரைப் பார்த்து, "பிராமணர்கள் அடிமையாதல் இவ்வுலகத்திலே இதுவரையிலும் இல்லை. ஐயரே, நீர் என்ன தப்புவார்த்தை சொன்னீர்" என்று சொல்ல, ஐயர் "நான் பொய்வழக்குக் கொண்டு வரவில்லை. மெய்வழக்கே கொண்டுவந்தேன். இவன் பறித்துக் கிழித்த ஓலை இவன் பாட்டன் தானும் தன் மரபினரும் எனக்கு அடிமையென்று எழுதித் தந்த அடிமையோலை" என்றார். உடனே பிராமணர்கள் சுந்தரமூர்த்தியை நோக்கி, "இவர் உம்முடைய பாட்டன் அடிமைசெய்தற்கு இசைந்து எழுதிக் கொடுத்த ஓலையைக் காட்டினாராகில், நீர் அதைப் பறித்துக் கிழித்ததனால் உம்முடைய பக்ஷம் ஜயம்பெறுமோ? இவர் தம்முடைய வழக்கை யாவரும் அங்கீகரிக்கும்படி சொன்னார். இனி உம்முடைய எண்ணம் யாது" என்றார்கள். அதற்குச் சுந்தரமூர்த்தி "வேதாகமம் முதலாகிய சமஸ்த சாஸ்திரங்களையும் உணர்ந்தவர்களாகிய நீங்கள்! நான் ஆதிசைவன் என்பது உங்கள் எல்லாருக்குந் தெரியும். அப்படியிருக்க, இந்தப் பிராமணர் தமக்கு என்னை அடிமையென்று சாதித்தாராகில், இது மனத்தினால் அறிதல் கூடாத ஒரு மாயையென்று நினைக்கவேண்டும். இதைக்குறித்து நான் யாது சொல்வேன்! இது என்னால் அறியப்படுதல் கூடாது" என்று சொல்ல, பிராமணர்கள் கேட்டு, அந்த ஐயரைப் பார்த்து, "நீர் இவரை உம்முடைய அடிமை என்று சொல்லுகின்ற விவகாரத்தை எங்களுக்கு முன் உறுதிப்படுத்தல் வேண்டும். ஒரு விவகாரத்தை உண்மையென்று நிச்சயிப்பதற்கு, அநுபவம் லிகிதம் சாக்ஷியென்கிற மூன்றும் வேண்டும். ஆயினும், இந்த ஆரூரர் உமக்கு அடிமையென்பதற்கு அம்மூன்றில் ஒன்றாயினும் காட்டும்" என்றார்கள். அப்பொழுது ஐயர் "இவன் கிழித்த ஓலை மூலவோலையைப் பார்த்து எழுதிய படியோலை. மூலவோலையோ என்னிடத்தில் இருக்கின்றது." என்று சொன்னார். உடனே பிராமணர்கள் "அதை எங்களுக்குக் காட்டும்" என்று சொல்ல, ஐயர் "ஆரூரன் அதையும் பறித்துக் கிழியாதபடி செய்வீர்களாயின், அதைக்காட்டுவேன்" என்றார். அதற்குப் பிராமணர்கள் "நாங்கள் கிழிக்க விடோம்" என்று சொல்ல, ஐயர்

மூலவோலையைக் கையில் எடுத்தார். அப்பொழுது சபையாருடைய கட்டளையினால் ஒரு கரணன் அவரைக் கும்பிட்டு அந்த ஓலையைவாங்கி, சுருளாயிருக்கின்ற மடிப்பை நீக்கி விரித்து, சபையார் கேட்கும்படி, "திருநாவலூரில் இருக்கின்ற ஆதிசைவனாகிய ஆரூரன் என்கின்ற நான் திருவெண்ணெய்நல்லூரில் இருக்கின்ற பித்தனுக்கு நானும் என்சந்ததியாரும் வழித்தொண்டு செய்வதற்கு உள்ளும் புறமும் ஒப்ப உடன்பட்டு எழுதிக் கொடுத்தேன். இப்படிக்கு ஆரூரன்" என்று வாசித்தான். பின்பு அந்த ஓலையிலே சாட்சிகளாகக் கையெழுத்து இட்டவர்கள் தங்கள் கையெழுத்தென்றே ஒத்துக்கொண்டார்கள். அதைக் கண்ட பிராமணர்கள் சுந்தரமூர்த்தியை நோக்கி, "இது உம்முடைய பாட்டனுடைய எழுத்தோ! பாரும்" என்று சொல்ல, ஐயர் அவர்களைப் பார்த்து, "இந்தச்சிறுவன் அடிமையோலையில் எழுதப்பட்டிருக்கின்ற தன் பாட்டன் கையெழுத்தைக் கண்டறியச் சத்தியுள்ளவனோ? இவன்பாட்டன் எழுதிய வேறு கைச்சாத்து உண்டாகில், வருவித்து, இதனுடன் ஒத்துப்பார்த்து, உங்கள் மனசிலே தோன்றிய தீர்ப்பைச் சொல்லுங்கள்" என்றார். அதைக் கேட்ட பிராமணர்கள், சந்தேகந்தெளியும்படி, சுந்தரமூர்த்தி சமுகத்திலே அவர்பாட்டனார் எழுதிய கைச்சாத்து ஒன்று அழைப்பித்து, அதின் எழுத்தையும் அடிமையோலையின் எழுத்தையும் ஒத்துப் பார்த்து, "இவ்விரண்டும் ஒத்திருக்கின்றன. இனி நீர் தப்ப வழி இல்லை. நீர் இந்தப் பிராமணருக்குத் தோற்றுப்போனீர். ஆதலால், அவர் கருத்தின்படி அவருக்கு ஏவல் செய்வதே கடன்" என்று சொல்ல, சுந்தரமூர்த்தி "விதிமுறை இதுவேயானால், நான் இதற்கு உடன்படாதிருத்தல் கூடுமோ" என்று சொல்லி நின்றார். அப்பொழுது பிராமணர்கள் அந்த ஐயரைப்பார்த்து, "நீர் காட்டிய அடிமையோலையிலே எங்கள் ஊரே உமமுடைய ஊராக எழுதப்பட்டிருக்கின்றது. ஆதலால், உமக்கு இவ்வூரிலே தலைமுறையாக இருக்கின்ற வீடும் வதிதியும் காட்டும்" என்று சொல்ல, பிராமணவடிவங்கொண்ட கடவுள் "இத்தனை விருத்தர்களில் ஒருவரும் என்னுடைய வீடு முதலியவற்றை அறியாதிருப்பீரானால், காட்டுகிறேன். வாருங்கள்" என்று சொல்லி, சுந்தரமூர்த்தியும் பிராமணர்களும் பின்னே வர, தாம் அவ்வூரிலிருக்கின்ற திருவருட்டுறை என்னும் சிவாலயத்தினுள்ளே போனார். பின்பு சபையார் அவரைக் காணாது திகைத்து நின்றார்கள்.

அப்பொழுது சுந்தரமூர்த்தி நாயனார் "என்னை அடிமைகொண்ட பிராமணர் நமது கடவுளாகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்குந் திருக்கோயிலினுள்ளே புகுந்தது என்ன ஆச்சரியம்" என்று நினைத்து, அத்தியந்த ஆசையோடும் தனியே அவரைத் தொடர்ந்து போய்க் கூப்பிட, சிவபெருமான் தருமவடிவாகிய இடபவாகனத்தின்மேலே உமாதேவி சமேதராய் வெளிப்பட்டு, சுந்தரமூர்த்திக்கு, "நீ முன்னே நமக்குத் தொண்டனாய் இருந்தாய். நீ பெண்கள்மேல் இச்சை வைத்ததினாலே நம்முடைய ஆஞ்ஞையினாலே பூமியிலே பிறந்தாய். இப்பொழுது துன்பத்தைத் தருகின்ற சமுசாரபந்தமானது உன்னைத் தொடராதபடி, நாமே வலிய வந்து உன்னைத் தடுத்து ஆட்கொண்டோம்" என்று திருவாய்மலர்ந்தருளினார். இந்தப்பிரகாரமாக எழுந்த அருமைத் திருவாக்கைக்கேட்டு, சுந்தரமூர்த்தியானவர் தன்னை ஈன்ற பசுவினது குரலைக்கேட்ட கன்றுபோல அலறி, சரீரமுழுதும் உரோமப் புளகங்கொள்ள, இரண்டு கண்ணினின்றும் ஆனந்தவருவி பொழிய, அடியற்ற மரம்போல நிலத்திலே விழுந்து நமஸ்கரித்து, எழுந்து நின்று, இரண்டு கைகளையும் சிரசின்மேல் ஏறக் குவித்து, "கனகசபையிலே படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்கிற ஐந்தொழிலாகிய திருநடனத்தைச் செய்தருளுகின்ற சுவாமீ, தேவரீர் ஒன்றுக்கும் பற்றாத சிறியேனை மார்ச்சார சம்பந்தம்

போல வலிய வந்து தடுத்தாட்கொண் - காருண்ணியமகிமை இருந்தபடி என்னென்று சொல்லுவேன்" என்றார் அப்பொழுது தம்மால் செய்யப்படும் கிருத்தியங்கள் ஒவ்வொன்றையும் தம்பயன் கருதாது பிறர்பயன் கருதியே செய்கின்ற சிவபெருமானுனவர், தமிழ்நாட்டில உள்ளவர்கள் தாமே மெய்ப்பொருளென்று உணர்ந்து தம்மை வழிபட்டு மும்மலத்தடைகளையும் நீங்கிப் பேரின்பம் பெற்று அனுபவிக்கவேண்டுமென்று தமது திருவுளத்திலே முகிழ்த்த பெருங்கருணையினாலே, சுந்தரமூர்த்தி நாயனாரை நோக்கி, "நீ நம்மோடு வன்சொற்களைச் சொல்லி வன்றொண்டன் என்கிற பெயரைப் பெற்றாய் நமக்கு அன்பினோடு செய்யத்தக்க அருச்சனையாவது பாட்டேயாம் ஆதலால், நம்மேலே தமிழ்ப்பாடல்களைப் பாடு" என்று அருளிச்செய்ய, சுந்தரமூர்த்திநாயனார் அஞ்சலியஸ்தராகி, "தேவரீர் பிராமணவடிவங்கொண்டு தமியேனை வழக்கினால் வெல்லுதற்கு எழுந்தருளி வந்ததமையை அறியாத சிறியேனுக்குப் பழைய அறிவைத் தந்து உலகவாழ்க்கையிலே மயங்காமல் உய்யும்படி செய்தருளிய கடவுளே, அடியேன் தேவரீருடைய அநந்த குணங்களில் எதையறிவேன்? என்னசொல்லிப் பாடுவேன்" என்றார் அதற்குக் கடவுள் "நீ முன்னே என்னைப் பித்தனென்று சொன்னாய் ஆகையால என்பெயர் பித்தனென்றே பாடு" என்று சொல்லியருள, சுந்தரமூர்த்தியானவர் தம்மை ஆண்டருளிய சிவபிரான்மேல் "பித்தா பிறை சூடி" என்னுஞ் சொற்றொடரை முதலாகக்கொண்ட திருப்பதிகத்தைப் பாடியருளினார் அதன்பின் கடவுளானவர் சுந்தரமூர்த்தி நாயனாரை நோக்கி, "தொண்டனே, நீ இன்னும் நம்முடைய புகழைக்குறித்துப் பலவகையாகப் பாடு" என்று அருளிச்செய்து, அந்தர்த்தானமாயினார் அது நிற்க புத்தூரிலிருக்கின்ற சடங்கவிசிவாசாரியருடைய புத்திரியாரோவெனில, கலியாணந் தவிர்ந்ததனாலே, சுந்தரமூர்த்தி நாயனாரையே தியானஞ் செய்துகொண்டிருந்து, சிலகாலத்தின்பின் சிவலோகப் பிராப்தியானார்

சுவாமிதிருநாமம் - தடுத்தாட்கொண்டநாதர்.
தேவிதிருநாமம் - வேற்கண்ணி.

௲ திருப்பதிகம் - சரு

# கரு. துறையூர்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்

மலையாரருவித்திரண்மாமணியுந்திக்
குலையாரக்கொணர்ந்தெற்றியோர்பெண்ணைவடபாற்
கலையாரல்குற்கன்னியராடுந்துறையூர்த்
தலைவாவுனைவேண்டிக்கொள்வேன்றவநெறியே. (௧)

மத்தம்மதயானையின்வெண்மருப்புந்தி
முத்தங்கொணர்ந்தெற்றியோர்பெண்ணைவடபாற்
பத்தர்பயின்றேத்திப்பரவுந்துறையூ
ரத்தாவுனைவேண்டிக்கொள்வேன்றவநெறியே. (௨)

கந்தங்கமழ்காரகில்சந்தனமுந்திச
செந்தண்புனல்வந்திழிபெண்ணைவடபான
மந்திபலமாநடமாடுந்துறையூ
ரெந்தாயுனைவேண்டிக்கொள்வேன்றவநெறியே. (௩)

அரும்பார்ந்தனமல்லிகைசண்பகஞ்சாடிச்
சுரும்பாரக்கொணர்ந்தெற்றியொர்பெண்ணைவடபாற்
கரும்பார்மொழிக்கன்னியராடுந்துறையூர்
விரும்பாவுனைவேண்டிக்கொள்வேன்றவநெறியே (௪)

பாடார்ந்தனமாவும்பலாக்களுஞ்சாடி
நாடாரவந்தெற்றியொர்பெண்ணைவடபான
மாடார்ந்தனமாளிகைசூழ்ந்துறையூர்
வேடாவுனைவேண்டிக்கொள்வேன்றவநெறியே (௫)

மட்டார்மலர்க்கொன்றையும்வன்னியுஞ்சாடி
மொட்டாரக்கொணர்ந்தெற்றியொர்பெண்ணைவடபாற்
கொட்டாட்டொடுபாட்டொலியோவாத்துறையூர்ச
சிட்டாவுனைவேண்டிக்கொள்வேன்றவநெறியே. (௬)

மாதார்மயிற்பீலியும்வெண்ணுரையுந்தித
தாதாரக்கொணர்ந்தெற்றியொர்பெண்ணைவடபாற்
போதார்ந்தனபொய்கைகள்சூழ்ந்துறையூர்
நாதாவுனைவேண்டிக்கொள்வேன்றவநெறியே (௭)

கொய்யாமலர்க்கோங்கொடுவேங்கையுஞ்சாடிச்
செய்யாரக்கொணர்ந்தெற்றியொர்பெண்ணைவடபான
மையார்தடங்கண்ணியராடுந்துறையூ
ரையாவுனைவேண்டிக்கொள்வேன்றவநெறியே. (௮)

விண்ணார்ந்தனமேகங்கணின்றுபொழிய
மண்ணாரக்கொணர்ந்தெற்றியொர்பெண்ணைவடபாற்
பண்ணார்மொழிப்பாவையராடுந்துறையூ
ரண்ணாவுனைவேண்டிக்கொள்வேன்றவநெறியே. (௯)

மாவாய்ப்பிளந்தானுமலர்மிசையானு
மாவாவவர்தேடித்திரிந்தலமந்தார
பூவார்ந்தனபொய்கைகள்சூழ்ந்துறையூர்த
தேவாவுனைவேண்டிக்கொள்வேன்றவநெறியே. (௧௦)

செய்யார்கமலம்மலர்நாவலூர்மன்னன்
கையாற்றொழுதேத்தப்படுந்துறையூர்மேற
பொய்யாத்தமிழூரனுரைத்தனவல்லார்
மெய்யேபெறுவார்கடவநெறிதானே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

சுவாமிதிருநாமம் - துறையூர்நாதர்.
தேவிதிருநாமம் - பூங்கோதைநாயகி.

௯௰ திருப்பதிகம் - ௪௬.

# ௧௬. வடுகூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

### பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

சுடுகூரெரிமாலையணிவர்சுடர்வேலர்
கொடுகூர்மழுவாளொன்றுடையார்விடையூர்வர்
கடுகூர்பசிகாமங்கவலைபிணியில்லார்
வடுகூர்புனல்சூழ்ந்தவடுகூரடிகளே (௧)

பாலுநறுநெய்யுந்தயிரும்பயின்றாடி
யேலுஞ்சுடுநீறுமென்புமொளிமல்கக்
கோலம்பொழிற்சோலைக்கூடிமடவன்ன
மாலும்வடுகூரிலாடுமடிகளே. (௨)

சூடுமிளந்திங்கட்சுடர்பொற்சடைதன்மே
லோடுங்களியானையுரிபோர்த்துமையஞ்ச
வேடுமலர்மோந்தங்கெழிலார்வரிவண்டு
டாடும்வடுகூரிலாடுமடிகளே. (௩)

துவரும்புரிசையுந்துதைந்தமணிமாடங்
கவரவெரியோட்டிக்கடியமதிலெய்தார்
கவருமணிகொல்லைக்கடியமுல்லைநல்லார்
பவரும்வடுகூரிலாடுமடிகளே. (௪)

துணியாருடையாடைதுன்னியரைதன்மேற்
றணியாவழனாகந்தரியாவகைவைத்தார்
பணியாரடியார்கள்பலரும்பயின்றேத்த
வணியார்வடுகூரிலாடுமடிகளே (௫)

தளருங்கொடியன்னாடன்னோடுடனாகிக்
கிளருமரவார்த்துக்கிளருமுடிமேலோர்
வளரும்பிறைசூடிவரிவண்டிசைபாட
வொளிரும்வடுகூரிலாடுமடிகளே (௬)

நெடியார்சிறிதாயபிரம்பர்மதிசூடு
முடியார்விடையூர்வர்கொடியார்மொழிகொள்ளார்
கடியதொழிற்காலன்மடியவுதைகொண்ட
வடியார்வடுகூரிலாடுமடிகளே. (௭)

பிறையுநெடுநீரும்பிரியாமுடியினா
மறையும்பலபாடிமயானத்துறைவாரும்
பறையுமதிருகுழலும்போலப்பலவண்டாங்
கறையும்வடுகூரிலாடுமடிகளே. (௮)

சந்தமமலர்வேய்ந்தசடையினனிடைவிம்மு
கந்தமமிகுதிங்கட்சிந்துகதிர்மாலை
வந்துநயந்தெம்மைநன்றுமருள்செய்வா
ரந்தண்வடுகூரிலாடுமடிகளே. (கூ)

திருமாலடிவீழத்திசைநான்முகனுய
பெருமானுணர்கில்லாப்பெருமானெடுமுடிசேர்
செருமாலவிடையூருஞ்செம்மானறிசைவில்லா
வருமாவடுகூரிலாடுமடிகளே (க0)

படிநோன்பவையாவர்பழியில்புகழான
கடிநாணிசழுசோலைகமழுமவடுகூரை
படியானசிந்தைமொழியார்சம்பந்த
னடிஞானமவல்லாரடிசேர்வார்களே. (கக)

திருச்சிற்றம்பலம்

சுவாமிதிருநாமம் - வடுகநாதர்
தேவிதிருநாமம் - வடுவகிர்க்கண்ணி

ஆ திருப்பதிகம் - சஎ.

# கஎ. திருமாணிகுழி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

### திருவிராகம்

பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

பொன்னியல்பொருப்பரையன்மங்கையொருபங்கர்புனற்கங்குசடைமேல்
வன்னியொடுமத்தமலர்வைத்தவிறல்வித்தகர்மகிழ்ந்துறைவிடம்
கன்னியிளவாளைகுதிகொள்ளவிளவள்ளைபடரள்ளல்வயல்வாய்
மன்னியிளமேதிகள்படிந்துமனைசேருதவிமாணிகுழியே. (க)

சோதிமிகுநீறதுமெய்பூசியொருதோலுடைபுனைந்துதெருவே
மாதர்மனைதோறுமிசைபாடிவசிபேசுமரனார்மகிழ்விடம்
தாதுமலிதாமரைமணங்கமழவண்டுமுரறண்பழனமிக்
கோதுமலிவேலைபுடைசூழுலகினீடுதவிமாணிகுழியே. (உ)

அமடனையகண்ணுமைமடந்தையவளஞ்சிவெருவச்சினமுடைக்
கமடமதயானையுரிசெய்தவரனார்கருதிமேயவிடமாம்
வம்புமலிசோலைபுடைசூழுமணிமாடமதுநீடியழகா
ருமபரவர்கோனகரமென்னமிகமன்னுதவிமாணிகுழியே. (ந)

சித்தநியமத்தொழிலனுங்கிநெடுமால்குறளனாகிமிகவுஞ்
சித்தமதொருக்கிவழிபாடுசெய்கின்றசிவலோகனிடமாம்
கொத்தலர்மலர்ப்பொழிலினீடுகுலமஞ்ஞைநடமாடலதுகண்
டொத்தவரிவண்டுகளுலாவியிசைபாடுதவிமாணிகுழியே. (௪)

மாசின்மதிசூடுசடைமாமுடியர்வல்லசுரர்தொன்னகரமுன்
னாசமதுசெய்துநல்வானவர்களுக்கருள்செய்நம்பனிடமாம்
வாசமலிமென்குழன்மடந்தையர்கண்மாளிகையின்மன்னியழகா
ரூசன்மிசையேறியினிதாகவிசைபாடுதவிமாணிகுழியே (௫)

மந்தமலர்கொண்டுவழிபாடுசெயுமாணியுயிர்வவ்வமனமாய்
வந்தவொருகாலனுயிர்மாளவுதைசெய்தமணிகண்டனிடமாம்
சந்தினொடுகாரகிலசுமந்துதடமாமலர்கள்கொண்டுகெடில
முந்துபுனல்வந்துவயல்பாயுமணமாருதவிமாணிகுழியே. (௬)

எண்பெரியவானவர்கணின்றுதுதிசெய்யவிறையேகருணையா
யுண்பரியநஞ்சதனையுண்டுலகமுய்யவருளுந்தமனிடம்
பண்பயிலும்வண்டுபலகெண்டிமதுவுண்டுநிறைபைம்பொழிலின்வா
யொண்பலவினின்கனிசொரிந்துமணநாறுதவிமாணிகுழியே. (௭)

எண்ணமதுவின்றியெழிலார்கைலைமாமலையெடுத்ததிறலார்
திண்ணியவரக்கனைநெரித்தருள்புரிந்தசிவலோகனிடமாம்
பண்ணமருமென்மொழியினார்பணைமுலைப்பவளவாயழகதா
ரொண்ணுதன்மடந்தையர்குடைந்துபுனலாடுதவிமாணிகுழியே. (௮)

நேடுமயனோடுதிருமாலுமுணராவகைநிமிர்ந்துமுடிமே
லேடுலவுதிங்கண்மதமத்தமிதழிச்சடையெமீசனிடமா
மாடுலவுமல்லிகைகுருந்துகொடிமாதவிசெருந்திகுரவி
னூடுலவுபுன்னைவிரைதாதுமலிசேருதவிமாணிகுழியே (௯)

மொட்டையமணாதர்முதுதேரர்மதியில்லிகண்முயன்றனபடு
முட்டைகண்மொழிந்தமொழிகொண்டருள்செய்யாதமுதல்வன்றனிடமா
மட்டைமலிதாழையிளநீர்முதியவாழையில்விழுந்தவதரி
லொட்டமலிபூகநிரைதாறுதிரவேறுதவிமாணிகுழியே. (௧௦)

உந்திவருதண்கெடிலமோடுபுனல்சூழுதவிமாணிகுழிமே
லந்திமதிசூடியவெம்மானையடிசேருமணிகாழிநகரான்
சந்தநிறைதண்டமிழ்தெரிந்துணருஞானசம்பந்தனதுசொன்
முந்தியிசைசெய்துமொழிவார்களுடையார்கணெடுவானநிலனே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

சுவாமிதிருநாமம் - மாணிக்கவரதர்.
தேவிதிருநாமம் - மாணிக்கவல்லி.

---

ஆ திருப்பதிகம் - ௪௮

# ௧௮. திருப்பாதிரிப்புலியூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - செவ்வழி.

திருச்சிற்றம்பலம்

முன்னநின்றமுடககான்முயறகருளசெய்துநீள
புன்னைநின்றுகமழ்பாதிரிபபுலியூருளான
றன்னைநின்றுவணஙகுநதனைதநவமிலலிகள
பினனைநினறபிணியாககையைப்பெறுவாாகளே. (௧)

கொள்ளிநககபகுவாயபேய்கள்குழைநதாடவே
மூளாிலவமமுதுகாடுறையுமமுதலவனிடம
புள்ளினஙகள்பயிலுமபாதிரிபபுலியூாதனை
யுளளநம்மேலவினையாயினவொழியுஙகளே. (௨)

மருளினலலாாவழிபாடுசெயயுமமழுவாளாமேற
பொருளினலலாாபயிலபாதிரிபபுலியூருளான்
வெருளினமானினபிணைநோககலசெயதுவெறிசெய்தபின
னருளியாகததிடைவைததுவுமமழகாகவே (௩)

போதினுலுமபுகையாலுமுய்ததேயடியாாகடாம
போதினாலேவழிபாடுசெயயபபுலியூாதனு
ளாதிநாலுமமவலமமிலாதவடிகண்மறை
யோதிநாளுமிடுமெபிசசையேறறுணடுணபபாலதே (௪)

ஆகநல்லாரமுதாககவுணடானழலைநதனை
நாகநலலாாபரவநநயநதஙகளையாாததவன்
போகநல்லாாபயிலும்பாதிரிப்புலியூாதனுட்
பாகநலலாளொடுநினறவெம்பரமேடடியே (௫)

மதியமொயததகதிாபோலொளிம்மணறகானல்வாயப
புதியமுததநதிகழபாதிரிபபுலியூரொனும
பதியிலவைக்கபபடுமெநதைதனபழநதொண்டாகள
குதியுங்கொளவாவிதியுஞ்செயவாகுழகாகவே. (௬)

கொஙகரவபபடுவண்டறைகுளிாகானலவாயச
சஙகரவபபறையின்னொலியவைசாாநதெழுப
பொஙகரவமமுயாபாதிரிபபுலியூாதனு
ளஙகரவமமரையிலசைததானையடைமினே. (௭)

வீக்கமெழுமிலங்கைக்கிறைவிலஙகல்லிடை
யூக்கமொழிநதலறவிரலிறையூன்றினன்
பூக்கமழுமபுனற்பாதிரிப்புலியூாதனை
நோககமெலிநதணுகாவினைநுணுகுங்களே. (௮)

அன்னந்தாவுமணியாரபொழின்மணியார்புனனை
பொன்னநதாதுசொரிபாதிரிபபுலியூாதனுன்
முனனநதாவியடிமூன்றளநதவனானமுகன்
றன்னநதாளுறறுணராததோாதவரீதியே. (௯)

உரிநதகூறையுருவத்தொடுதெருவததிடைத
திரிநதுதின்னுஞ்சிறுநோன்பரும்பெருநதோரு
மெரிநதுசொனனவவுரைகொளளாதேயெடுததேததுமின
புரிநதவெணணீற்றணணலபாதிரிபபுலியூரையே (௧0)

அநதணலலாரகனகாழியுண்ஞானசம்
பநதனல்லாாபயிலபாதிரிபபுலியூாதனுட
சநதமாலைத்தமிழபத்திவைதரிததாாகணமேல்
வநதுதீயவவடையாமையாலவினைமாயுமே (௧௧)

திருச்சிற்றம்பலம.

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருவிருத்தம்.

திருசசிற்றமபலம

ஈனறாளுமாயெனககெநதையுமாயுடனறோன்றினராய
மூன்றாயுலகம்படைததுகநதானமனததுளளிருகக
வேன்றானிமையவாக்கன்பனறிருபாதிரிபபுலியூர்த
தோன்றாததுணையாயிருநதனனறனனடியோஙகளுககே. (௧)

பறறாயநினைநதிடப்போதுநெஞசேயிநதபபாரைமுமறறுஞ
சுற்றாயலைகடனமூடினுஙகண்டேன்புகனமக்கு
வுறறானுமையவடகனபனறிருபபாதிரிபபுலியூா
முற்றாமுளைமதிககணணியினானறனமொயகழலே. (௨)

விடையானவிருமபியெனனுளளததிருநதானினிநமககிங
கடையாவவலமருவினைசாராநமனையஞசோம
புடையாாகமலததயனபோலபவாபாதிரிபபுலியூ
ருடையானடியாரடியடியோஙகடகரியதுண்டே. (௩)

மாயமெலாமுறறவிட்டிருணீஙகமலைமகடகே
நேயநிலாவவிருநதானவனறனறிருவடிககே
தேயமெலாநின்றிறைஞசுநதிருபபாதிரிபபுலியூா
மேயநல்லானமலாப்பாதமெனசிநதையுணின்றனவே. (௪)

வைததபொருணமக்காமெனறுசொலலிமனததடைததுச
சிததமொருககிசசிவாயநமவெனறிருககினலலான
மொயத்தகதிாமதிபோல்வாரவாபாதிரிபபுலியூ
ரத்தனருளபெறலாமோவறிவிலாடபேதைநெஞசே. (௫)

கருவாய்க்கிடநதுனகழலேநினையுஙகருததுடையே
னுருவாயத்தெரிநதுன்றனாமமபயினறேனுனதருளாற்
றிருவாய்ப்பொலியசசிவாயநமவென்றுநீறணிநதேன்
றருவாயசிவகதிநீபாதிரிபபுலியூரரனே. (௬)

எண்ணுதமரரிரக்கப்பரவையுணஞ்சமுண்டாய்
திண்ணாரசுராதிரிபுரந்தீயெழச்செற்றவனே
பண்ணார்ந்தமைந்தபொருள்கள்பயிலபாதிரிப்புலியூர்க்
கண்ணாருதலாயகழனங்கருதகிலுடையனவே. (எ)

புழுவாயப்பிறக்கினுமபுண்ணியாவுன்னடியென்மனத்தே
வழுவாதிருக்கவரந்தரவேண்டுமிவ்வையகத்தே
தொழுவார்க்கிரங்கியிருந்தருளசெய்பாதிரிப்புலியூர்ச்
செழுநீர்ப்புனற்கங்கைசெஞ்சடைமேலவைத்ததீவண்ணனே. (அ)

மண்பாதலம்புக்குமால்கடன்மூடிமற்றேழுலகும்
விண்பாறிசைகெட்டிருசுடர்வீழினுமஞ்சனெஞ்சே
திண்பானமக்கொன்றுகண்டோந்திருப்பாதிரிப்புலியூர்க்
கண்பாவுநெற்றிக்கடவுட்சுடரான்கழலிணையே. (௯)

திருந்தாவமணர்தந்நெறிப்பட்டுத்திகைத்துமுத்தி
தருந்தாளிணைக்கேசரணம்புகுந்தேனவரையெடுத்த
பொருந்தாவரக்கனுடனெரித்தாய்பாதிரிப்புலியூ
ரிருந்தாயடியேனினிப்பிறவாமல்வந்தேன்றுகொள்ளே (௧0)

திருச்சிற்றம்பலம்

திருப்பாதிரிப்புலியூர்த் திருப்பதிகம் - உ.

சுவாமிதிருநாமம - தோன்றுத்துணைநாதர்.
தேவிதிருநாமம - தோகைநாயகி.

ஆ. திருப்பதிகம் - ருo.

# ௧௬. மூண்டீச்சரம்.

## திருநாவுக்கரசுநாயனர்.

திருத்தாண்டகம

திருச்சிற்றம்பலம

ஆர்த்தானகாணழுஞ்சமதைக்குநாஞ
வடியவாகட்கனபன்காணுனைத்தோலை
போர்த்தானகாணபுரிசடைமேறபுனலேற்றுனகாண்
புறங்காட்டிலாடல்புரிந்தான்றனகாண
காத்தானகானுலகேழுங்கலங்காவண்ணங
கனைகடல்வாயநஞ்சதனைககண்டத்துள்ளே
சோத்தானகாணடிருமுண்டீசசரத்துமேய
சிவலோகனகாணவனென்சிந்தையானே. (௧)

கருத்தனகாணகமலத்தோன்றலையிலொன்றைக்
காயந்தானகாணபாய்ந்தநீர்பரந்தசெஞ்சடி

யொருத்தன்காணுமையவளோர்பாகத்தான்கா
ணேருருவின்மூவுருவாயொன்றாய்நின்ற
விருத்தன்காண்வினைவாகருமேலானான்கா
மெய்யடியாருள்ளத்தேவிரும்பிநின்ற
திருத்தன்காண்டிருமுண்டீச்சரத்துமேய
சிவலோகன்காணவனென்சிந்தையானே. (உ)

நம்பன்காணரைவிடையொன்றேறினான்கா
ணத்தன்காண்கீதத்தைநவிற்றினான்கா
ணின்பன்காணிமையார்முக்கண்ணினான்கா
ணேசற்றமனமுருகுமடியார்தங்கட்
கன்பன்காணாழலதாடினான்கா
ணவனிவனென்னறியவாகாமறியவொண்ணாச
செம்பொன்காண்டிருமுண்டீச்சரத்துமேய
சிவலோகன்காணவனென்சிந்தையானே. (ரூ)

மூவன்காண்மூவர்க்குமுதலானான்காண்
முன்னுமாய்ப்பின்னுமாய்முடிவானான்காண்
காவன்காணுலகுக்கோர்கண்ணானான்காண்
கங்காளன்காண்கயிலைமலையினான்கா
ணாவன்காணாவகத்தைந்தாடினான்கா
ணாழலாயயற்கரிகுமறியவொண்ணாத
தேவன்காண்டிருமுண்டீச்சரத்துமேய
சிவலோகன்காணவனென்சிந்தையானே (ச)

கானவன்காண்கானவனுக்கருடானன்காண்
கனலாடவல்லான்காண்கையிலேந்து
மானவன்காண்மறைநான்குமாயினான்காண்
வல்லேற்றொன்றதுவேறவல்லான்றான்கா
ணூனவன்காணுலகத்துக்குயிரானான்கா
ணுரையவன்காணுணர்வவன்காணுணர்ந்தார்க்கென்றுந்
தேனவன்காண்டிருமுண்டீச்சரத்துமேய
சிவலோகன்காணவனென்சிந்தையானே.

உற்றவன்காணுறவெல்லாமாவான்றான்கா
ணொழிவற்றநின்றெங்குமுலப்பிலான்காண்
புற்றரவேயாடையுமாயப்பூணுமாகிப்
புறங்காட்டிலெரியாட்டம்புரிந்தான்றான்கா
ணற்றவன்காண்டியடைந்தழூணிக்காக
நணுகியதோர்பெருங்கூற்றைச்சேவடியினாற்
செற்றவன்காண்டிருமுண்டீச்சரத்துமேய
சிவலோகன்காணவனென்சிந்தையானே. (சு)

உதைத்தவன்காணுணராதக்கன்வேள்வி
யுருண்டோடத்தொடர்ந்தருக்கன்பல்லையெல்லாந்
தகர்த்தவன்காண்டக்கன்றன்றலையைச்செற்ற
தலைவன்காண்மலைமகளாமுமையைச்சால

மதிப்பொழிந்தவல்லமராமாணடாரவேள்வி
வநதவியுண்டவரோடுமதனையெலலாஞ
சிதைத்தவனகாண்டிருமுண்டீசசரததுமேய
சிவலோகன்காணவனென்சிநதையானே. (எ)

உரிநதவுடையாாதுவராலுடம்பைமூடி
யுழுதருமவவூமரவருணராவண்ணம
பரிநதவன்காண்பனிவரைமீப்பண்டமெல்லாம்
பறிததுடனேசிரநதுவருபாயநீரபெண்ணை
சிரநதுவருமிருகரையுநதடவாவோடி
நின்மலனைவலங்கொணடுநீளநோககித
திரிநதுலவுதிருமுணடீசசரததுமேய
சிவலோகனகாணவனெனசிநதையானே. (அ,கூ)

அறுத்தவனகாணடியவாகளல்லலெலலா
மருமபொருளாயநின்றவன்காணநஙகளுக
மறுததவன்காணமலைதனனைமதியாதோடி
மலைமகடன்மனநடுஙகவானோரஞசக
கறுத்தவனுயக்கயிலாயமெடுத்தான்கையுங
கதிாமுடியுங்கண்ணுமபிதுங்கியோடச
செறுததவனகாணடிருமுணடீசசரததுமேய
சிவலோகனகாணவனெனசிநதையானே. (கo)

திருச்சிற்றம்பலம

சுவாமிதிருநாமம - முணடீசுரா.
தேவிதிருநாமம - கானாகுழலி.

ஆ திருபபதிகம - ருக.

# உO. புறவார்பனங்காட்டூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனூர்.

பண் - சீகாமரம.

திருச்சிற்றம்பலம்

விணணமாநதனமுமமதில்களைவீழவெஙகணையாலெயதாயவிரி
பணணமாநதொலிசோபுறவாாபனஙகாட்டூரப
பெணணமாந்தொருபாகமாகியபிஞ்ஞகாபிறைசோறுதவிடைக்
கண்ணமாநதவனேகலநதாாககருளாயே. (க)

நீடலகோடலலரவெணமுலலைநீமலாநிாைததாதளஞ்செயப
பாடல்வணடறையும்புறவாாபனங்காடோத
தோடிலஙகியகாதயன்மின்றுளங்கவெண்குழைதுளளநள்ளிரு
ளாடுஞசஙகரனேயடைநதாாக்கருளாயே. (உ)

வாளையுங்கயலும்மிளிர்பொய்கைவார்புனற்கரையருகெலாம்வயற்
பாளையொண்கமுகம்புறவார்பனங்காட்டூர்ப்
பூளையுந்நறுங்கொன்றையும்மதமத்தமும்புனைவாயகழலிணைத்
தாளையேபரவுந்தவத்தார்க்கருளாயே (௩)

மேய்ந்திளஞ்செந்நெல்மென்கதிர்கவ்விமேற்படுகலின்மேதிவைகறை
பாய்ந்ததண்பழனப்புறவார்பனங்காட்டூ
ராய்ந்தநான்மறைபாடியாடுமடிகளென்றென்றரற்றிநன்மலர்
சாய்ந்தடிபரவுந்தவத்தார்க்கருளாயே (௪)

செங்கயல்லொடுசேல்செருச்செயச்சீறியாழ்முரல்தேனினத்தொடு
பங்கயம்மலரும்புறவார்பனங்காட்டூர்க்
கங்கையும்மதியுங்கமழ்சடைக்கேண்மையாளொடுங்கூடிமான்மறி
யங்கையாடலனேயடியார்க்கருளாயே. (௫)

நீரினார்வரைகோலிமால்கடல்நீடியபொழில்சூழ்ந்துவைகலும்
பாரினார்பிரியாப்புறவார்பனங்காட்டூர்க்
காரினார்மலர்க்கொன்றைதாங்குகடவுளென்றுகைகூப்பிநாடொறுஞ்
சீரினால்வணங்குந்திறத்தார்க்கருளாயே (௬)

கையரிவையர்மெல்விரல்லவைகாட்டியம்மலர்க்காந்தளங்குறி
பையராவிரியும்புறவார்பனங்காட்டூர்
மெய்யரிவையொர்பாகமாகவுமேவினாய்கழலேத்திநாடொறும்
பொய்யிலாவடிமைபுரிந்தார்க்கருளாயே (௭)

தூவியஞ்சிறைமென்னடையனமல்கியொல்கியதாமரைப்பொய்கைப்
பாவில்வண்டறையும்புறவார்பனங்காட்டூர்
மேவியந்நிலையாயரக்கனதோளடர்த்தவன்பாடல்கேட்டரு
ளேவியபெருமானென்பவர்க்கருளாயே. (௮)

அந்தண்மாதவிபுன்னைநல்லவசோகமும்மரவிந்தமல்லிகை
பைந்தணாழல்கள்சூழ்புறவார்பனங்காட்டூ
ரெந்திளமுகில்வண்ணனான்முகனென்றிவர்க்கரிதாய்நிமிர்ந்ததோர்
சந்தமாயவனேதவத்தார்க்கருளாயே. (௯)

நீணமார்முருகுண்டுவண்டினநீலமாமலர்கவ்விநேரிசை
பாணில்யாழ்முரலும்புறவார்பனங்காட்டூர்
நாணழிந்துழல்வார்சமணருநண்பில்சாக்கியருந்நக்கதம்
பூணுரியவனேயுகப்பார்க்கருளாயே (௧௦)

மையினார்மணிபோன்மிடற்றனைமாசில்வெண்பொடிப்பூசுமார்பனைப்
பையதேன்பொழில்சூழ்புறவார்பனங்காட்டூ
ரையனைப்புகழானகாழியுளாய்ந்தநான்மறைஞானசம்பந்தன
செய்யுள்பாடவல்லார்சிவலோகஞ்சேர்வாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

சுவாமிதிருநாமம் - பனங்காட்டீசுரர்.
தேவிதிருநாமம் - புறவம்மை.

---

ஆ திருப்பதிகம் - ௫௨

# ௨௧. திருவாமாத்தூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

### பண் - சீகாமரம.

திருச்சிற்றம்பலம

துன்னமபெயகோவணமுநதோலுமுடையாடை
பின்னஞசடைமேலோாபிளளைமதிசூடி
யனனஞசோதண்கானலாமாததூரமமானறன
பொனனங்கழல்பரவாபபொககமுமபொககமே (௧)

கைமமாவின்றோல்போாததகாபாலிவானுலகின்
முமமாமதிலெயதானமுககணனபோபாடி
யமமாமலாசசோலையாமாததூரம்மானெம
பெம்மானெனறேததாதாாபேயரிறபேயரோ. (௨)

பாம்பனைசசாத்தியோாபணடரஙகன்விணடதோர்
தேமபலிளமதியஞசூடியசெனனியா
ஞமபலம்பூமபொயகையாமாததூரமமான்றன்
சாமபலகலத்தாாசாாபலலாற்சாாபிலமே. (௩)

கோணகபபேரலகுறகோலவளைககைமாதராள்
பூணகமபாகமாபபுலகியவளோடு
மாணுகஙகாதலசெயாமாததூரமமானைக்
காணாதகண்ணெலலாஙகாணாதகணகளே. (௪)

பாட்னெறிநினறானைபஙகொனறைததண்டாரோ
சூட்னெறிநினறானசூலஞசோ்கையினா
னாட்னெறிநினறானாமாததூரமமானறனை
வேடநெறிநிலலாவேடமுமவேடமே. (௫)

சாமவரைவில்லாகசசநதிததவெஙகணையாற
காவன்மதிலெயதானகணணுடைநெறறியான்
யாவருஞசென்றேததுமாமாததூரம்மானைத
தேவாதலைவணஙகுநதேவாக்குநதேவனே (௬)

மாறறதவெஙகூறறைமாற்றிமலைமகளை
வேறாகநில்லாதவேடமேகாட்டினா
னாறறதீயாடியாமாத்தூரம்மானைக
கூறாதநாவெல்லாஙகூறாதநாக்களே. (௭)

தாளாலரககன்றோள்சாயத்ததலைமகன்ற
னாளாதிரையென்றேநமபன்றனமததா
லாளாளாசெனறேத்துமாமாத்தூரம்மானைக்
கேளாசசெவியெலலாஙகேளாசசெவிகளே. (௮)

புள்ளுங்கமலமுங்கைக்கொண்டார்தாமிருவ
ருள்ளுமவன்பெருமையொப்பளக்குந்தன்மையதே
யள்ளல்விளைகழனியாமாத்தூரம்மானெம்
வள்ளலகழல்பரவாவாழ்க்கையும்வாழ்க்கையே. (௯)

பிச்சைபிறர்பெய்யப்பின்சாரக*கோசாரக்
கொச்சைப்புலானாறுமீருரிவைபோர்த்துகந்தா
னச்சந்தன்மாதேவிக்கீந்தானறுமாமாத்தூ
ரிச்சனினையாதார்நெஞ்சமுநெஞ்சமே. (௧௦)

ஆடலரவசைத்தவாமாத்தூரம்மானைக்
கோடலிரும்புறவிற்கொச்சைவயத்தலைவ
னாடலரியசீர்ஞானசம்பந்தன்றன்
பாடலிவைவல்லார்க்கில்லையாம்பாவமே (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்

குன்றவார்சிலைநாணராவரிவாளிகூரெரிகாற்றின்மும்மதில்
வென்றவாறெங்ஙனேவிடையேறும்வேதியனே
தென்றலார்மணிமாடமாளிகைசூளிகைக்கெதிர்நீண்டபெண்ணைமே
லன்றில்வந்தணையுமாமாத்தூரம்மானே (௧)

பரவிவானவர்தானவர்பலருங்கலங்கிடவந்தகார்விடம்
வெருவவுண்டுகந்தவருளென்கொல்விண்ணவனே
கரவின்மாமணிபொன்கொழித்திழிசந்துகாரகில்தந்துபம்பைநீ
ரருவிவந்தலைக்குமாமாத்தூரம்மானே. (௨)

நீண்டவார்சடைதாழநேரிழைபாடநீறுமெய்பூசிமாலயன்
மாண்டவார்சுடலைநடமாடுமாண்பதுவென்
பூண்டகேழன்மருப்பராவிரிகொன்றைவாளவரியாமைபூணென
வாண்டநாயகனேயாமாத்தூரம்மானே (௩)

சேலினேரனகண்ணிவெண்ணகைமானவிழித்திருமாதைப்பாகம்வைத்
தேலமாதவநீமுயல்கின்றவேடமிதென்
பாலினேர்மொழிமங்கைமார்நடமாடியின்னிசைபாடநீள்பதி
யாலைசூழ்கழனியாமாத்தூரம்மானே. (௪)

தொண்டர்வந்துவணங்கிமாமலர்தூவிநின்கழலேத்துவாரவ
ருண்டியாலவருந்தவிரங்காததென்னைகொலாம்
வண்டலார்கழனிக்கலந்துமலர்ந்ததாமரைமாதர்வாண்முக
மண்டவாணர்தொழுமாமாத்தூரம்மானே (௫)

ஓதியாரணமாயநுண்பொருளன்றுநால்வர்முன்கேட்கநன்னெறி
நீதியாலநீழலுரைக்கின்றநீர்மையதென்
சோதியேசுடரேசுரும்பமர்கொன்றையாய்திருநின்றியூருறை
யாதியேயரனேயாமாத்தூரம்மானே. (௬)

---

* "கோசாரங்" என்றும் பாடம்

மஙகைவாணுதனமான்மனத்திடைவாடியூடமணஙகமழசடைக
கஙகையாளிருநதகருததாவதென்னைகொலாம்
பங்கயமதுவுண்டுவண்டிசைபாடமாமயிலாடவிணமுழ
வஙகையாலதிாகுமாமாததூரம்மானே. (எ)

நின்றடாத்திடுமைமபுலனனிலையாதவண்ணநினைநதுளத்திடை
வெனறடாததொருபானமடமாதைவிருமபுதலென்
குனறெடுததநிசாசரனதிரடோளிருபதுதானெரிதர
வனறடாத்துகநதாயாமாததூரம்மானே. (அ)

செயயதாமரைமேலிருநதவனெடுமாலடிதேடநீணமுடி
வெயயவாரழலாயநிமிாநதனறவெறறிமையென
றையலாளொடுபிசசைககிசைதயஙகுதோலரையாாததவேடங்கொண்
டையமேறுகநதாயாமாததூரமமானே (கூ)

புத்தாபுனசமணாதாபொயயமமொழிநூலபிடிததலாதூறறநின்னடி
பததாபேணநினறபரமாயபான்மையதென
முததைவெனறமுறுவலாளுமைபஙகனெனறிமையோாபரவிடு
மததனேயரியாயாமாததூரம்மானே. (க0)

வாடலவெணடலைமாலையாாததுமயஙகிருளளெரியேநதிமாநட
மாடனமேயதென்னெனருமாத்தூரமமானைச
கோடனுகமருமபுபைமபொழிறகொசசையாரிறைஞானசமபநதன
பாடலபததுமவலலாாபரலோகஞசோவாரே. (கக)

திருசசிறறமபலம

---

# திருநாவுக்கரசுநாயனார்.

## திருககுறுநதொகை.

திருசசிறறமபலம

மாமாததாகியமாலயனமாலகொடு
தாமாததேடியுஙகாணகிலாதாணமுடி
யாமாததூரரனேயருளாயெனறென
றேமாபபெயதிககண்டாரிறையானையே. (க)

சநதியானைச்சமாதிசெயவாாதஙகள்
புநதியானைபபுததேளிாதொழபபடு
மநதியானையாமாததூாழகனைச
சிநதியாதவர்தீவினையாளரோ. (உ)

காமாததமமெனுஙகாாவலைபபடடுநான
போமாததையறியாதுபுலமபுவே
ஞமாததூரரனேயெனறழைததலுந
தேமாத்தீங்கனிபோலதிததிக்குமே. (ங)

பஞ்சபூதவலையிற்படுவதற்
கஞ்சினானுமாமாத்தூரழகனை
நெஞ்சினானினைந்தேனினைவெய்தலும்
வஞ்சவாறுகள்வற்றினகாணமினே. (௪)

குராமனுங்குழலாளொருகூறனு
மராமனுஞ்சடையானதிருவாமாத்தூ
ரிராமனுமவழிபாடுசெய்ஈசனை
யிராமயனறனைநாளுநினைமினே. (௫)

பித்தனைப்பெருந்தேவர்தொழப்படு
மத்தனையணியாமாத்தூர்மேவிய
முத்தினையடியேனுணர்முயறலும்
பத்திவெள்ளம்பரந்ததுகாண்மினே. (௬)

நீறனிந்ததிருமேனியனேரிழை
கூறனிந்தனகுழற்கோலச்சடையிலோ
ராறனிந்தனணியாமாத்தூர்மேவிய
வேறனிந்தெனையாளுடையீசனே (௭)

பண்ணிற்பாடல்கள்பத்திசெய்வித்தக்காக
கண்ணித்தாருமமுதினையாமாத்தூர்
சண்ணிப்பானைத்தமாகக்கணித்தாயதோர்
கண்ணிற்பாவையன்னானவன்காண்மினே. (௮)

குண்டாபீலிகள்கொள்ளுங்குணமிலா
மிண்டரோடெனைவேறுபடுத்துய்க்க
கொண்டநாதனகுளிர்புனல்வீரட்டத்
தண்டனிடமாமாத்தூர்காணமினே. (௯)

வானஞ்சாடுமதியரவத்தொடு
தானஞ்சாதுடனவைத்தசடையிடைத்
தேனஞ்சாடியதெங்கிளநீரொடு
மானஞ்சாடியவாமாத்தூரையனே (௧௦)

விடலையாயவிலங்கல்லெடுத்தானமுடி
யடர்வோர்விரலூன்றியவாமாத்தூ
ரிடமதாகக்கொண்டவீசனுக்கென்னுள
மிடமதாகக்கொண்டினபுற்றிருப்பனே (௧௧)

திருச்சிற்றம்பலம

---

## திருத்தாண்டகம.

திருச்சிற்றம்பலம

வண்ணங்கடாம்பாடிவந்துநின்று
வலிசெய்துவளைகவாந்தாரவகையானமமைக
கண்ணமபானினறெய்துகனலபேசிக
கடியதோர்விடையேறிக்காபாலியார

சுண்ணநகடாஙகொண்டுதுதையபபூசித
தோலுடுத்துநூலபூணடுதோன்றத்தோன்ற
வண்ணலாரபோகின்ஞராவநதுகாணீ
ரழகியரோயாமாத்தூரையனுரோ. (க)

வெநதாரபொடிபபூசிவெள்ளைமாலை
விரிசடைமேற்ருஞசூடிவீணையேந்திக
கநதாரநதாமுரலப்போகாநிறகக
றசோமணிமிடற்றீருரோதென்றே
ஞநதாரபோல்வநதெனதில்லேபுகக
நுடங்கேரிடைமடவாயநம்மூரகேடகி
லநதாமனைமலாமேலளிவணடியாழசெ
யாமாதநூரொன்றடிகள்போயினுரோ. (உ)

கடடஙகநதாமொனறுகையிலேநதிக
கழயவிடையேறிககாபாலியா
ரிடடஙகடாமபேசியிலலேபுகக
விடுமபலியுமிடக்கொளளாரபோவாரல்லா
படடிமையும்படிறுமேடேசுகினருா
பாரப்பாரைப்பரிசழிபபாரபோல்கின்ருர்தா
மடடியசிலபலியுஙகொளளாவிளளா
ரழகியரோயாமாத்தூரையனுரோ. (௩)

பசைநதபலபூததததாபாடலாடல
படநாககககசசையாபிசசைககெனறங
கிசைநததோரியல்பினரொரியினமேனி
யிமையாமுககணணினாநாலவேததா
பிசைநததிருநீறறினாபெண்ணோபாகம்
பிரிவறியாபபிஞஞகனாதெண்ணீாககஙகை
யசைநததிருமுடியரஙகைததீய
ரழகியரோயாமாததூரையனுரோ. (ச)

உருளுடையதோபுரவியோடுமியாளை
யொனறுஙகுறைவிலலேயூாதிவெளளே
திருளுடையகண்டததாசெநதீவணண
ரிமையவாகடொழுதேததுமிறைவனாதாம
பொருளுடையரலலரிலருமலலா
புலிததோலுடையாகபூதஞசூழ
வருளுடையவஙகோதைமாலேமாாப
ரழகியரோயாமாததூரையனுரோ. (ரு)

வீறுடையவேறேறிநீறுபூசி
வெணடோடுபெய்திடஙகைவீணையேந்திக்
கூறுடையமடவாளோாபாகஙகொண்டு
குழையாடககொடுகொடடிகொட்டாவநது
பாறுடையபடுதலேயோாகையிலேநதிப்
பலிகொள்வாரல்லாபடிறேபேசி

யாறுடையசடைமுடியெம்மடிகள்போலு
மழகியரோயாமாத்தூரையனாரே. (௬)

கையோர்கபாலத்தார்மானினுரிலா
கருத்துடையார்நிருத்தராய்க்காண்பார்முன்னே
செய்யதிருமேனிவெண்ணீறாடித்
திகழ்புன்சடைமுடிமேற்றிங்கள்சூடி
மெய்யொருபாகத்துமையைவைத்து
மேவார்திரிபுரங்கள்வேவச்செய்து
வையனார்போகின்றார்வந்துகாணீ
ரழகியரோயாமாத்தூரையனாரே (௭)

ஒன்றாலுங்குறைவில்லையூர்திவெள்ளை
யேறியூரும்மூரேயுணரக்கூறீர்
நின்றுதானென்செய்வீர்போவீராகி
னெற்றிமேற்கண்காட்டிநிறையுங்கொண்டு
சென்றுந்தானிவ்வகையேயிடர்செய்கின்றீ
ரிருக்குமூரினியறிந்தோமேகம்பமோ
வன்றித்தானபோகின்றீரடிகளெம்மோ
டழகியரோயாமாத்தூரையனாரே. (௮)

கல்லலகுதாங்கொண்டுகாளத்தியா
கடியவிடையேறிக்காணக்காண
வில்லமேதாமபுகுதாவிடுமின்பிச்சை
யென்றருகக்கெதிரெழுந்தேனெங்குங்காணேன்
சொல்லாதேபோகின்றீருமமூரேது
துருத்தியழனமோநெய்த்தானமோ
வல்லமேசெய்தடிகள்போகின்றீர்தா
மழகியரோயாமாத்தூரையனாரே. (௯)

மழுங்கலார்நீறுடுமார்பர்போலு
மணிமிழலைமேயமணாளர்போலுங்
கொழுங்குவளைக்கோதைக்கிறைவர்போலுங்
கொடுகொட்டிதாளமுடையார்போலுஞ்
செழுங்கயிலாயத்தெஞ்செல்வர்போலுந்
தென்னதிகைவீரட்டஞ்சேர்ந்தார்போலு
மழுங்கினுளையுறவுதீர்ப்பார்போலு
மழகியரோயாமாத்தூரையனாரே (௧௦)

திருச்சிற்றம்பலம்

# சுந்தரமூர்த்திநாயனார்.

## பண் - கொல்லிக்கௌவாணம்.

திருச்சிற்றம்பலம்

காண்டனன்காண்டனன்காரிகையாள்தன்கருத்தனா
யாண்டனனாண்டனனுமாதனொம்மடிகட்காட்
பூண்டனன்பூண்டனன்பொய்யன்றுசொல்லுவன்கேண்மின்கண்
மீண்டனன்மீண்டனன்வேதவித்தல்லாதவர்கட்கே. (௧)

பாடுவன்பாடுவன்பார்ப்பதிதனடிபற்றிநான்
றேடுவன்றேடுவன்றிண்ணெனப்பற்றிச்செறிதர
வாடுவனாடுவனுமாதனொம்மடிகளைக்
கூடுவன்கூடுவன்குற்றமதற்றென்குறிப்பொடே. (௨)

காய்ந்தவன்காய்ந்தவன்கண்ணழலாலன்றுகாமனைப்
பாய்ந்தவன்பாய்ந்தவன்பாதத்தினாலன்றுகூற்றத்தை
யாய்ந்தவனாய்ந்தவனுமாதனொம்மடிகளா
ரேய்ந்தவனேய்ந்தவனெம்பிராட்டியைப்பாகமே. (௩)

ஓர்ந்தனனோர்ந்தனனுள்ளத்துள்ளேநின்றவொண்பொருள்
சேர்ந்தனன்சேர்ந்தனன்சென்றுதிருவொற்றியூர்புக்குச்
சார்ந்தனன்சார்ந்தனன்சங்கிலிமென்றோட்டடமுலை
யார்ந்தனனார்ந்தனனுமாதனாயனருளதே. (௪)

வென்றவன்வென்றவன்வேள்வியில்விண்ணவர்தங்களைச்
சென்றவன்சென்றவன்சில்பலிக்கென்றுதெருவிடை
நின்றவனின்றவனீதிநிறைந்தவர்தங்கள்பா
லன்றவனன்றவன்செய்யருளாமாதனாயனே. (௫)

காண்டவன்காண்டவன்காண்டற்கரியகடவுளாய்
நீண்டவனீண்டவனாரணனான்முகனேடவே
யாண்டவனாண்டவனுமாதனையுமென்னையுமாட்
பூண்டவன்பூண்டவன்மார்பிற்புரிநூல்புரளவே (௬)

எண்ணவனெண்ணவனேழுலகத்துயிர்தங்கட்குக்
கண்ணவன்கண்ணவன்காண்டுமென்பாரவர்தங்கட்குப்
பெண்ணவன்பெண்ணவன்மேனியோர்பாகமாம்பிஞ்ஞக
னண்ணவனண்ணவனுமாதனொம்மடிகளே. (௭)

பொன்னவன்பொன்னவன்பொன்னைத்தந்தென்னைப்போகவிடா
மின்னவன்மின்னவன்வேதத்தினுட்பொருளாகிய
வன்னவனன்னவனுமாதனாயனையாரவத்தா
லென்னவனென்னவனென்மனத்தின்புறதிருப்பனே. (௮)

தேடுவன்றேடுவன்செம்மலர்ப்பாதங்களுநாடொறு
நாடுவனாடுவனாபிக்குமேலேயோரல்விரன்
மாடுவன்மாடுவன்வன்கைபிடித்துமகிழ்ந்துளே
யாடுவனாடுவனுமாதனொம்மடிகளே. (௯)

உற்றனனுற்றவர்தம்மையொழிந்துள்ளத்துள்பொருள்
பற்றினன்பற்றினன்பங்கயச்சேவடிக்கேசெல்ல
வற்றனனற்றனனாமாத்தூரமேயானடியார்கட்காட்
பெற்றனன்பெற்றனன்பெயர்த்தும்பெயர்த்தும்பிறவாமைக்கே. (க0)

ஐயனையத்தனையாளுடையாமாத்தூரண்ணலை
மெய்யனைமெய்யர்க்குமெய்ப்பொருளானவிமலனை
மையனைமையணிகண்டனைவன்றொண்டனூரன்சொற்
பொய்யொன்றுமின்றிப்புலம்புவார்பொற்கழல்சேர்வரே. (கக)

திருச்சிற்றம்பலம்

---

திருவாமாத்தூர்த்திருப்பதிகம் - ரு.

---

சுவாமி திருநாமம் - அழகுகாதலர்
தேவி திருநாமம் - அழகியநாயகி

---

ஆ திருப்பதிகம் - ருஎ

---

# உஉ. திருவண்ணாமலை.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

உண்ணாமுலையுமையாளொடுமுடனாகியவொருவன்
பெண்ணாகியபெருமான்மலைதிருமாமணிதிகழ
மண்ணார்ந்தனவருவித்திரள்மழலைம்முழவதிரு
மண்ணாமலைதொழுவார்வினைவழுவாவண்ணமறுமே. (க)

தேமாங்கனிகடுவன்கொளவிடுகொம்பொடுதீண்டித்
தூமாமழைதுறுவன்மிசைசிறுநுண்டுளிசிதற
வாமாம்பிணையணையும்பொழிலண்ணாமலையண்ணல்
பூமாங்கழல்புனைசேவடிநினைவார்வினையிலரே. (உ)

பீலிம்மயில்பெடையோடுறைபொழில்சூழ்கழைமுத்தஞ்
சூலிம்மணிதரைமேனிறைசொரியும்விரிசார
லாலிம்மழைதவழும்பொழிலண்ணாமலையண்ணல்
காலன்வலிதொலைசேவடிதொழுவாரனபுகழே. (ங)

உதிரும்மயிரிடுவெண்டலைகலனாவுலகெல்லா
மெதிரும்பலியுணலாகவுமெருதேறுவதல்லால்
முதிருஞ்சடையிளவெண்பிறைமுடிமேல்கொளவடிமே
லதிருங்கழலடிகட்கிடமண்ணாமலையதுவே. (ச)

மரவஞ்சிலைதரளம்மிகுமணியுந்துவெள்ளருவி
யரவஞ்செயமுரவம்படுமண்ணாமலையண்ண
லுரவஞ்சடையுலவும்புனலுடனாவதுமோரார்
குரவங்கமழ்நறுமென்குழலுமைபுல்குதல்குணமே. (௫)

பெருகும்புனலண்ணாமலைபிறைசேர்கடனஞ்சைப்
பருகுந்தனைதுணிவார்பொடியணிவாரதுபருகிக்
கருகும்மிடறுடையார்கமழ்சடையார்கழல்பரவி
யுருகும்மனமுடையார்தமக்குறுநோயடையாவே. (௬)

கரிகாலனகுடர்கொள்வனகழுகாடியகாட்டி
னரியாடியநகுவெண்டலையுதையுண்டவையுருள
வெரியாடியவிறைவர்க்கிடமினவண்டிசைமுரல
வரியாடியகண்ணாளொடுமண்ணாமலையதுவே (௭)

ஒளிறூபுலியதளாடையனுமையஞ்சுதல்பொருட்டாற்
பிளிறூகுரன்மதவாரணம்வதனம்பிடித்துரித்து
வெளிறூபடவிளையாடியவிகிர்தன்னிராவணனை
யளறூபடவடர்த்தானிடமண்ணாமலையதுவே. (௮)

விளவார்கனிபடநூறியகடல்வண்ணனும்வேதக்
கிளர்தாமரைமலர்மேலுறைகேடில்புகழோனு
மளவாவணமழலாகியவண்ணாமலையண்ண
றளராமுலைமுறுவலுமைதலைவன்னடிசரணே. (௯)

வேர்வந்துறமாசூர்தரவெயினின்றுழல்வாரு
மார்வம்புதைமெலிசீவரமறையாவருவாரு
மாரம்பர்தம்முரைகொள்ளன்மினண்ணாமலையண்ணல்
கூர்வெண்மழுப்படையானல்கழல்சேர்வதுகுணமே. (௧௦)

வெம்பந்தியகதிரோனொளிவிலகும்விரிசார
லம்புந்திமூவெயிலெய்தவனண்ணாமலையதனைக்
கொம்பந்துவகுயிலாலுவகுளிர்காழியுண்ஞான
சம்பந்தனதமிழ்வல்லவரடிபேணுதறவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்

பூவார்மலர்கொண்டடியார்தொழுவார்புகழ்வார்வானோர்கண்
மூவாபுரங்களெரித்தவன்றுமூவர்க்கருள்செய்தார்
தூமாமழைநின்றதிரவெருவித்தொறுவின்னிரையோடு
மாமாம்பிணைவந்தணையுஞ்சாரலண்ணாமலையாரே. (௧)

மஞ்சைப்போழ்ந்தமதியஞ்சூடும்வானோர்பெருமானார்
நஞ்சைக்கண்டத்தடக்குமதுவுநன்மைப்பொருள்போலும்
வெஞ்சொற்பேசும்வேடர்மடவாரிதணமதுவேறி
யஞ்சொற்கிளிகளாயோவென்னுமண்ணாமலையாரே. (௨)

ஞானத்திரளாய்நின்றபெருமானல்லவடியார்மே
லூனத்திரளைநீக்குமதுவுமுண்மைப்பொருள்போலு
மேனத்திரளோடினமான்கரடியிழியுமிரவின்க
ணானைத்திரள்வந்தணையுஞ்சாரலண்ணாமலையாரே. (௩)

இழைத்தவிடையாளுமையாள்பங்கரிமையோர்பெருமானா
ரிழைத்தசடையார்விடையொன்றேறித்தரியார்புரமெய்தார்
பிழைத்தபிடியைக்காணாதோடிப்பெருங்கைமதவேழ
மழைத்துத்திரிந்தங்குறங்குஞ்சாரலண்ணாமலையாரே. (௪)

உருவிற்றிகழுமுமையாள்பங்கரிமையோர்பெருமானார்
செருவிலொருகாலவளையவூன்றிச்செந்தீயெழுவித்தார்
பருவிக்குறவர்புனத்திற்குவித்தபருமாமணிமுத்த
மருவித்திரளோடிழியுஞ்சாரலண்ணாமலையாரே. (௫)

எனைத்தோரூழியடியாரேத்தவிமையோர்பெருமானா
நினைத்துத்தொழுவார்பாவந்தீர்க்குநிமலருறைகோயில்
கனைத்தமேதிகாணாதாயன்கைமேற்குழலூத
வனைத்துஞ்சென்றுதிரளுஞ்சாரலண்ணாமலையாரே. (௬)

வந்தித்திருக்குமடியார்தங்கள்வருமேல்வினையோடு
பந்தித்திருந்தபாவந்தீர்க்கும்பரமனுறைகோயின்
முந்தியெழுந்தமுழவினோசைமுதுகல்வரைகண்மே
லந்திப்பிறைவந்தணையுஞ்சாரலண்ணாமலையாரே. (௭)

மறந்தான்கருதிவலியைநினைந்துமாறாயெடுத்தான்றோ
ணிறந்தானமுரியநெரியவூன்றிநிறைவாயருள்செய்தார்
திறந்தான்காட்டியருளாயென்றுதேவரவர்வேண்ட
வறந்தான்காட்டியருளிச்செய்தாரண்ணாமலையாரே (௮)

தேடிக்காணார்திருமால்பிரமன்றேவர்பெருமானை
மூடியோங்கிமுதுவேயுகுத்தமுத்தம்பலகொண்டு
கூடிக்குறவர்மடவார்குவித்துக்கொள்ளவம்மினென
றாடிப்பாடியளக்குஞ்சாரலண்ணாமலையாரே. (௯)

தட்டையிடுக்கித்தலையைப்பறித்துச்சமணேநின்றுண்ணும்
பிட்டர்சொல்லுக்கொள்ளவேண்டாபேணித்தொழுமின்கள்
வட்டமுலையாளுமையாள்பங்கர்மன்னியுறைகோயி
லட்டமாளித்திரள்வந்தணையுமண்ணாமலையாரே (௰)

அல்லாடரவமியங்குஞ்சாரலண்ணாமலையாரை
நல்லார்பரவப்படுவான்காழிஞானசம்பந்தன்
சொல்லான்மலிந்தபாடலானபத்துமிவைகற்று
வல்லாரெல்லாம்வானோர்வணங்கமன்னிவாழ்வாரே (கக)

திருச்சிற்றம்பலம்

---

# திருநாவுக்கரசு நாயனார்.

## திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

வட்டனை மதிசூடியை வானவர்
சிட்டனைத் திருவண்ணாமலையனை
யிட்டனை யிகழ்ந்தார்புர மூன்றையு
மட்டனை யடியேன் மறந்துய்வனோ. (க)

வானனை மதிசூடிய மைந்தனைத்
தேனனைத் திருவண்ணாமலையனை
யேனனை யிகழ்ந்தார்புர மூன்றெய்த
வானனை யடியேன் மறந்துய்வனோ (உ)

மத்தனை மதயானை யுரித்தவெஞ்
சித்தனைத் திருவண்ணாமலையனை
முத்தனை முனிந்தார்புர மூன்றெய்த
வத்தனை யடியேன் மறந்துய்வனோ. (ங)

காற்றனைக் கலக்கும் வினைபோயறத்
தேற்றனைத் திருவண்ணாமலையனைக்
கூற்றனைக் கொடியார்புர மூன்றெய்த
வாற்றனை யடியேன் மறந்துய்வனோ. (ச)

மின்னனை வினைதீர்த்தெனை யாட்கொண்ட
தென்னனைத் திருவண்ணாமலையனை
யென்னனை யிகழ்ந்தார்புர மூன்றெய்த
வன்னனை யடியேன் மறந்துய்வனோ. (ரு)

மன்றனை மதியாதவன் வேள்விமேற்
சென்றனைத் திருவண்ணாமலையனை
வென்றனை வெகுண்டார்புர மூன்றையுங்
கொன்றனைக் கொடியேன் மறந்துய்வனோ (சா)

வீரனை விடமுண்டனை விண்ணவர்
தீரனைத் திருவண்ணாமலையனை
யூரனை யுணரார்புர மூன்றெய்த
வாரனை யடியேன் மறந்துய்வனோ. (எ)

கருவினைக் கடல்வாய் விடமுண்டவெந்
திருவினைத் திருவண்ணாமலையனை
* யுருவினை யுணரார்புர மூன்றெய்த
† வருவினை யடியேன் மறந்துய்வனோ. (அ)

* "யுருவனை" என்றும் பாடம்.
† "வருவனை" என்றும் பாடம்.

அருத்தனையரவைந்தலைநாகத்தைத்
திருத்தனைத்திருவண்ணாமலையனைக
கருத்தனைக்கடியாரபுரமூன்றெய்த
வருத்தனையடியேன்மறந்துய்வனோ. (௯)

அரக்கனையலறவ்விரலூன்றிய
திருத்தனைத்திருவண்ணாமலையனை
யிரக்கமாயென்னுடலுறுநோய்களைத்
துரக்கனைத்தொண்டனேன்மறந்துய்வனோ. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

பட்டியேறுகந்தேறிப்பலவில
மிட்டமாகவிரந்துண்டுழிதரு
மட்டமூர்த்தியண்ணாமலைகைதொழக்
கெட்டுப்போமவினைகேடில்லைகாண்மினே. (௧)

பெற்றமேறுவர்பெய்பலிக்கென்றவர்
சுற்றமாமிகுதொல்புகழாளொடு
மற்றநீக்குமண்ணாமலைகைதொழ
நற்றவத்தொடுஞானத்திருப்பரே. (௨)

பல்லிலோடுகையேந்திப்பலவில
மொல்லைசென்றுணங்கலகவர்வாரவ
ரல்லறீர்க்குமண்ணாமலைகைதொழ
நல்லவாயினநம்மையடையுமே. (௩)

பாடிச்சென்றுபலிக்கென்றுநின்றவ
ரோடிப்போயினர்செய்வதொன்றென்கொலோ
வாடிப்பாடியண்ணாமலைகைதொழ
வோடிப்போகுநமமேலைவினைகளே. (௪)

தேடிச்சென்றுதிருந்தடியேத்துமி
னாடிவந்தவர்நம்மையுமாட்கொள்வ
ராடிப்பாடியண்ணாமலைகைதொழ
வோடிப்போநமதுள்ளவினைகளே. (௫)

கட்டியொக்குங்கரும்பினிடைத்துணி
வெட்டிவீணைகள்பாடுமவிகிர்தனு
ரட்டமூர்த்தியண்ணாமலைமேவிய
நட்டமாடியைநண்ணநன்காகுமே. (௬)

கோணிகொண்டையர்வேடமுன்கொண்டவர்
பாணிநட்டங்களாடும்பரமனு
ராணிப்பொன்னனண்ணாமலைகைதொழப்
பேணிநின்றபெருவினைபோகுமே. (௭)

கண்டநதான்கறுததான்காலனாருயிர
பண்டுகால்கொடுபாய்நதபரமனா
ரண்டத்தோஙகுமண்ணாமலைகைதொழ
விண்டுபோகுநம்மேலைவினைகளே. (௮)

முநதிசசென்றுமுப்போதுமவணஙகுமி
னநதிவாயொளியான்றனண்ணாமலை
சிநதியாவெழுவாாவினைதீாததிடுங
கநதமாமலாசூடுஙகருத்தனே. (௯)

மறையினானொடுமாலவன்காணகிலா
நிறையுநீாமையுணின்றருள்செய்தவ
னுறையுமாண்பினண்ணாமலைகைதொழப
பறையுநாஞ்செய்தபாவஙகளானவே. (௧0)

திருசசிற்றம்பலம்.

---

## திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

ஓதிமாமலாகடூவியுமையவள்பஙகாமிக்க
சோதியேதுளஙகுமெண்டோட்சுடாமழுபபடையினானே
யாதியேயமராகோவேயணியணாமலையுளானே
நீதியானின்னையலலானினையுமாநினைவிலேனே (௧)

பண்டனைவென்றவின்சொற்பாவையோாபங்கநீல
கண்டனேகார்கொளகொன்றைக்கடவுளேகமலபாதா
வண்டனேயமராகோவேயணியணாமலையுளானே
தொண்டனேனுனனையல்லாறசொலலுமாசொலலிலேனே. (௨)

உருவமுமுயிருமாகியோதியவுலகுக்கெலலாம
பெருவினைபிறப்புவீடாயநின்றவெமபெருமான்மிகக
வருவிபொனசொரியுமணணாமலையுளாயணடாகோவே
மருவிநின்பாதமல்லான்மறறொருமாடிலேனே. (௩)

பைம்பொனேபவளகுன்றேபரமனேபால்வெண்ணீறா
செமபொனேமலாசெய்பாதாசீாதருமணியேமிக்க
வமபொனேகொழித்துவீழுமணியணாமலையுளானே
யெனபொனேயுன்னையலலாலேதுநானினைவிலேனே. (௪)

பிறையணிமுடியினானேபிஞ்ஞகாபெணணோாபாகா
மறைவலாவிறைவாவண்டாாகொன்றையாய்வாமதேவா
வறைகழலமராேதததுமணியணாமலையுளானே
யிறைவனேயுன்னையலலாலியாதுநானினைவிலேனே. (௫)

புரிசடைமுடியின்மேலோாபொருபுனற்கஙகைவைத்துக்
கரியுரிபோாவையாகக்கருதியகாலகாலா
வரிகுலமலிந்தவணணாமலையுளாயலரின்மிக்க
வரிமிகுவணடுபணசெய்பாதநான்மறப்பிலேனே. (௬)

இரவியுமதியும்விண்ணுமிருநிலமபுனலுஙகாறறு
முரகமாபவனமெட்டுநதிசையொளியுருவமானா
யரவுமிழமணிகொளசோதியணியணாமலையுளானே
பரவுநினபாதமலலாற்பரமநானபறறிலேனே (௭)

பார்த்தனுககன்றுநலகிபபாசுபதத்தையீநதாய
தீர்த்ததுமபுலாவுகஙகைநெடுமுடிநிலாவவைததா
யார்த்துவநதீண்டுகொணடலணியணாமலையுளானே
தீர்த்தனேநின்றன்பாததிறமலாறறிறமிலேனே (௮)

பாலுநெயமுதலாமிக்கபசுவிலைநதாடுவானே
மாலுநானமுகனுஙகூடிககாண்கிலாவகையுணின்ற
யாலுநீர்கொணடலபூகமணியணாமலையுளானே
வாலுடைவிடையாயுன்றனமலரடிமறப்பிலேனே. (௯)

இரக்கமொன்றியாதுமில்லாககாலனைககடிநதவெமமா
னுரத்தினல்வரையையூக்கவொருவிரலுதியினாலே
யரக்கனைநெரித்தவண்ணாமலையுளாயமராரேறே
சிரத்தினாலவணஙகியேத்திததிருவடிமறப்பிலேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம

---

திருவணணாமலைத்திருபபதிகம - ரு.

---

சுவாமிதிருநாமம - அருணாசலேசுரா.

தேவிதிருநாமம - உணணாமுலை.

---

ஆ திருப்பதிகம - ௬௨.

## தொண்டைநாட்டில் உள்ள ஸ்தலங்கள்.

# ௧. திருக்கச்சியேகம்பம்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - மேகராகக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

வெந்தவெண்பொடிப்பூசுமார்பினவிரிநூலொருபாலபொருந்தக்
கந்தமல்குகுழலியோடுங்கடிபொழிற்கச்சிதன்னு
ளந்தமில்குணத்தாரவர்போற்றவணங்கினோடாடல்புரி
யெந்தைமேவியவேகம்பந்தொழுதேத்தவிடர்கெடுமே. (௧)

வரந்திகழுமவுணர்மாநகர்மூன்றுடன்மாய்ந்தவியச
சரந்துரந்தெரிசெய்ததாழ்சடைச்சங்கரன்மேயவிடங்
குருந்தமல்லிகைகோங்குமாதவிநல்லகுராமரவந்
திருந்துபைம்பொழிற்கச்சியேகம்பஞ்சேரவிடர்கெடுமே (௨)

வண்ணவெண்பொடிப்பூசுமார்பின்வரியரவம்புனைந்து
பெண்ணமர்ந்தெரியாடல்பேணியபிஞ்ஞகனமேயவிடம்
விண்ணமாநெடுமாடமோங்கிவிளங்கியகச்சிதன்னுட
டிண்ணமாம்பொழில்சூழ்ந்தவேகம்பஞ்சேரவிடர்கெடுமே. (௩)

தோலுநூலுந்துதைந்தவரைமார்பிற்சுடலைவெண்ணீறணிந்து
காலன்மாளவுறக்காலாற்காய்ந்தகடவுள்கருதுமிட
மாலைவெண்மதிதோயுமாமதிற்கச்சிமாநகரு
ளேலநாறியசோலைசூழேகம்பமேத்தவிடர்கெடுமே. (௪)

தோடணிமலர்க்கொன்றைசேர்சடைத்தூமதியம்புனைந்து
பாடனான்மறையாகப்பல்கணப்பேய்கள்வைசூழ
வாடல்வெண்டலையோடனலேந்திமகிழ்ந்துடனாடல்புரி
சேடர்சோலைக்கச்சியேகம்பஞ்சேரவிடர்கெடுமே (௫)

சாகம்பொன்வரையாகத்தானவர்மும்மதில்சாயவெய்து
வாகம்பெண்ணொருபாகமாகவரவொடுநூலணிந்து
மாகந்தோயமணிமாடமாமதிற்கச்சிமாநகரு
ளேகம்பத்துறையீசன்சேவடியேத்தவிடர்கெடுமே. (௬, ௭)

வாணிலாமதிபுல்குசெஞ்சடைவாளரவம்மணிந்து
நாணிடத்தினில்வாழ்க்கைபேணிநகுதலையிற்பலிதேர்ந்
தேணிலாவரக்கன்றனீண்முடிபத்துமிறுத்தவனூர்
சேணுலாம்பொழிற்கச்சியேகம்பஞ்சேரவிடர்கெடுமே. (௮)

பிரமனுந்திருமாலுங்கைதொழப்பேரழலாயபெம்மா
னரவஞ்சேர்சடையந்தணனணங்கினொடமருமிடங்
கரவில்வண்கையினார்கள்வாழ்கலிக்கச்சிமாநகருண
மரவஞ்சூழ்பொழிலேகம்பந்தொழவல்வினைமாய்ந்தறுமே. (௯)

குண்டுபட்டமணாயவரொடுங்கூறைதம்மெய்போர்க்கு
மிண்டர்கட்டியகட்டுரையவைகொண்டுவிரும்பேன்மின்
விண்டவர்புரமூன்றுமவெங்கணையொன்றினாலவியக்
கண்டவன்கலிக்கச்சியேகம்பங்காணவிடர்கெடுமே. (௧௦)

ஏரினார்பொழில்சூழ்ந்தகச்சியேகம்பமேயவனைக்
காரினார்மணிமாடமோங்குகழுமலநன்னகருட்
பாரினார்தமிழ்ஞானசம்பந்தன்பரவியபத்தும்வல்லார்
சீரினார்புகழோங்கிவிண்ணவரோடுஞ்சேர்பவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

பண் - இந்தளம்.

---

திருச்சிற்றம்பலம்

மறையானைமாசிலாப்புன்சடைமல்குவெண்
பிறையானைப்பெண்ணொடாணாகியபெம்மானை
யிறையானையேர்கொள்கச்சித்திருவேகம்பத்
துறைவானையல்லதுள்காதென்னுள்ளமே. (௧)

நொச்சியேவன்னிகொன்றைமதிகூவிள
முச்சியேபுனைதல்வேடம்விடையூர்தியான்
கச்சியேகம்பமேயகறைக்கண்டனை
நச்சியேதொழுமினும்மேல்வினைநையுமே. (௨)

பாராருமுழவமொந்தைகுழல்யாழொலி
சீராலேபாடலாடல்சிறைவில்லதோ
ரேராரும்கச்சியேகம்பனையெம்மானைச்
சேராதாரின்பமாயநெறிசேராரே. (௩)

குன்றேய்க்குநெடுவெண்மாடக்கொடிகூடிப்போய்
மின்றேய்க்குமுகில்கடோயும்வியன்கச்சியுண்
மன்றேய்க்குமல்குசீரானமலியேகம்பஞ்
சென்றேய்க்குஞ்சிந்தையார்மேல்வினைசேராவே. (௪)

சடையானைத்தலைகையேந்திப்பலிதருவார்தங்
கடையேபோய்மூன்றுங்கொண்டான்கலிக்கச்சியுட்
புடையேபொன்மலருங்கம்பைக்கரையேகம்ப
முடையானையல்லதுள்காதென்னுள்ளமே. (௫)

மழுவாளோடெழில்கொள்சூலப்படைவல்லார்தங்
கெழுவாளோரிமையருச்சியுமையாள்கங்கை
வழுவாமேமல்குசீரால்வளரேகம்பந்
தொழுவாரேவிழுமியார்மேல்வினைதுன்றாவே (௬)

விண்ணுளாரமறைகள்வேதம்விரித்தோதுவார்
கண்ணுளார்கழலின்வெல்வார்கரிகாலனை
நண்ணுவாரெழில்கொள்கச்சிநகரேகம்பத்
தண்ணலாராடுகின்றவலங்காரமே. (௭)

தூயானைத்தூயவாயமறையோதிய
வாயானைவாளரக்கன்வலிவாட்டிய
தீயானைத்தீதில்கச்சித்திருவேகம்ப
மேயானைமேவுவாரென்றலைமேலாரே. (௮)

நாகமபூணேறதேறனறுஙகொன்ஹைறதாா
பாகமபெண்பலியுமேற்பாமறைபாடுவ
ரேகம்பமேவியாடுமிறையிருவாக்கு
மாகம்பமறியும்வண்ணத்தவனல்லனே. (கூ)

போதியாாபிண்டியாரொன்றிவாபொய்நூலை
வாதியாவம்மினமமாவெனுஙகச்சியு
ளாதியாாமேவியாடுநதிருவேகம்ப
நீதியாறறொழுமினும்மேல்வினைநில்லாவே (கo)

அநதணபூஙகச்சியேகமபனையமமானைக
கநதணபூஙகாழியூரனகலிகோவையாற
சநதமேபாடவல்லதமிழஞானசம்
பநதனசொற்பாடியாடககெடுமபாவமே. (கக)

திருச்சிற்றம்பலம

# திருவிருக்குக்குறள்.

## பண - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

கருவாாகச்சித
திருவேகமபத்
தொருவாவென்ன
மருவாவினையே (க)

மதியாாகச்சி
நதியேகமபம
விதியாலேததப
பதியாவாரே (உ)

கலியாாகச்சி
மலியேகமபம்
பலியாறபோறற
நலியாவினையே. (ந)

வரமாாகச்சிப்
புரமேகம்பம்
பரவாவேத்த
விரவாவினையே. (ச)

படமாாகச்சி
யிடமேகமபத
துடையாயென்ன
வடையாவினையே. (ரு)

நலமாாகச்சி
நிலவேகமபங
குலவாவேததக்
கலவாவினையே. (சு)

கரியினுரியன்
றிருவேகமபன
பெரியபுரமூன
றெரிசெய்தானே. (எ)

இலஙகையரசைத்
துலஙகவூன்று
நலஙகொளகமப
னிலங்குசரணே. (அ)

மறையோனரியு
மறியாவனலன
னெறியேகம்பங்
குறியாற்றொழுமே (கூ)

பறியாத்தேரா
நெறியில்கச்சிச்
செறிகொள்கமபங்
குறுகுவோமே. (கo)

கொச்சைவேநதன்
கச்சிககம்ப
மெச்சுஞசொல்லை
நச்சும்புகழே. (கக)

திருச்சிற்றம்பலம்

## திருவியமகம்.

திருச்சிற்றம்பலம்.

பாயுமால்விடைமேலொருபாகனேபாவைதன்னுருமேலொருபாகனே
தூயவானவாவேதத்துவனியேசோதிமாலெரிவேதத்துவனியே
யாயுநன்பொருணுண்பொருளாதியேயாலநீழலருமபொருளாதியே
காயவின்மதனபட்டதுகமபமேகண்ணுதறபரமறகிடஙகமபமே. (௧)

சடையணிநததுமவெண்டலைமாலையேதம்முடமபிலுமவெணடலைமாலையே
படையிலங்கையிற்சூலமதென்பதேபரநதிலஙகையிறசூலமதெனபதே
புடைபரப்பனபூதகணங்களேபோற்றிசைபபனபூதகணஙகளே
கடைகடோறுமிரப்பதுமிசசையேகம்பமேவியிருபபதுமிசசையே. (௨)

வெள்ளெருககொடுதுமபைமிலைசசியேவேறுமுனசெலததுமபைமிலைசசியே
யள்ளிநீறதுபூசுவதாகமேயானமாசுணமூசுவதாகமே
புள்ளியாடையுடுபபதுகததுமேபோனவூழியுடுபபதுகத்துமே
கள்ளுலாமலாககமபமிருபபதேகாஞசிமாநகாககமபமிருபபதே. (௩)

முறறலாமையணிநதமுதல்வரோமூரியாமையணிந்தமுதலவரோ
பற்றிவாளரவாட்டுமபரிசரோபாலுநெய்யுகநதாடுமபரிசரோ
வற்றலோடுகலமபலிதோவதேவாணினோடுகலம்பலிதோவதே
கறறிலாமனங்கமபமிருபபதேகாஞசிமாநகாககமபமிருபபதே.

வேடனாகிவிசையறகருளியேவேலைநஞசமிசையறகருளியே
யாடுபாமபரையாாததுடையதேயஞசுபூதமுமாாநததுடையதே
கோடுவானமதிக்கணணியழகிதேகுறறமினமதிக்கணணியழகிதே
காடுவாழ்பதியாவதுமும்மதேகமபமாபதியாவதுமும்மதே. (௫)

இரும்புகைககொடிதஙகழலகையதேயிமயமாமகடஙகழலகையதே [யே
யருமபுமொயததமலாபபொறைதாஙகியேயாழியானறனமலாபபொறைதாஙகி
பெருமபகனடமாடுதலசெயதுமேபேதைமாாமனமவாடுதலசெயதுமே
கரும்புமொயததெழுகமபமிருபபதேகாஞசிமாநகாககமடமிருப்பதே. (௬)

முதிரமஙகைதவஞசெயதகாலமேமுனபுமஙகைதவஞசெயதகாலமே
வெதிாகளோடகிலசநதமுருடடியேவேழமோடகிலசநதமுருடடியே
யதிரவாறுவரததமூவததொடேயானையாடுவரததமூவததொடே
கதிாகொளபூணமுலைககமபமிருபபதேகாஞசிமாநகாககம்பமிருப்பதே. (௭)

பணடரககனெடுத்தபலததையேபாயநதரககனெடுததபலததையே
கொணடரககியதுஙகாலவிரலையேகோளரககியதுஙகால்விரலையே
யுண்டுழன்றதுமுண்டததலையிலேயுடபதிககிடமுணடததலையிலே
கண்டநஞசமடக்கினகமபமேகடவுணீயிடஙகொணடதுகம்பமே (௮)

தூணியானசுடாவிடுசோதியேசுத்தமானசுடாவிடுசோதியே
பேணியோடுபிரமபபறவையேபிததனுனபிரமபபறவையே
சேணினோடுகீழூழிதிரிநதுமேசிததமோடுகீழூழிதிரிநதுமே
காணநின்றனருறறதுகம்பமேகடவுணீயிடமுற்றதுகம்பமே. (௯)

ஒருடம்பினையீருருவாகவேயுன்பொருடிறமீருருவாகவே
யாருமெய்தற்கரிதுபெரிதுமேயாறறவெய்தறகரிதுபெரிதுமே
தோருமமறியாதுதிகைபபரோசித்தமுமமறியாதுதிகைப்பரோ
காாநிறத்தமணாக்கொருகமபமேகடவுணீயிடஙகொண்டதுகம்பமே. (௰)

கநதமாரபொழிலசூழதருகமபமேகாதல்செயபவாதீாததிகேமபமே
புநதிசெயதுவிரும்பிப்புகலியேபூசுரன்றன்விரும்பிபபுகலியே
யநதமில்பொருளாயினகொணடுமேயண்ணலின்பொருளாயினகொண்டுமே
பநதனின்னியல்பாடியபததுமேபாடவலலவராயினபத்துமே (கக)

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசுநாயனார்.

பண - காநதாரம.

திருச்சிற்றம்பலம்

கரவாடும்வன்னெஞ்சாககரியானைககரவாபால
விரவாடும்பெருமானைவிடையேறுமவிததகனை
யரவாடசசடைதாழவஙகையிலனலேநதி
யிரவாடுமபெருமானையெனமனததேவைததேனே (க)

தேனோககுஙகிளிமழலையுமைகேளவனசெழுமபவளந
தானோககுநதிருமேனிதழலுருவாஞசஙகரனை
வானோககுமவளாமதிசோசடையானைவானோககு
மேனோககுமபெருமானையெனமனததேவைததேனே. (உ)

கைபபோதுமலாதூவிக்காதலிததுவானோாகண
முபபோதுமுடிசாயத்துத்தொழநினறமுதல்வனை
யபபோடுமலாதூவியைமபுலனுமகநதடககி
யெபபோதுமினியானையெனமனததேவைததேனே. (ஙா)

அண்டமாயாதியாயருமறையொடைமபூதப
பிணடமாயுலகுக்கொாபெயபொருளாம்பிஞஞகனைத
தொணடாதாமலாதூவிசசொனமாலைபுனைகினற
விணடைசோசடையானையெனமனததேவைததேனே. (ச)

ஆறேறுசடையானையாயிரமபேரமமானைப
பாறேறுபடுதலையிறபலிகொளளும்பரமபரனை
நீறேறுதிருமேனிநின்மலனைநெடுநதூவி
யேறேறுமபெருமானையெனமனததேவைததேனே. (ரு)

தேசனைததேசஙகடொழநினறதிருமாலாற
பூசனைபபூசனைகளுகப்பானைப்பூவினகண்
வாசனைமலைநிலநீாதீவளியாகாசமா
மீசனையெம்மானையெனமனததேவைததேனே. (சா)

நல்லானைநலலானநானமறையொடாறங்கம
வல்லானைவலலாாகணமனத்துறையுமைநதனைச
சொலலானைசசொல்லாாநதபொருளானைத்துகளேது
மில்லானையெமமானையென்மனத்தேவைத்தேனே (எ)

விரிததானைநால்வாக்குவெவ்வேறுவேதஙகள்
புரிததானைபபதஞசநதிபபொருளுருவாம்புணணியனைத
தரித்தானைககஙகைநீாதாழ்சடைமேனமதின்மூன்று
மெரிததானையெம்மானையென்மனத்தேவைத்தேனே. (அ)

ஆகம்பத்தரவணையானயனறிதற்கரியானைப
பாகம்பெண்ணாண்பாகமாய்நின்றபசுபதியை
மாகம்பமறையோதுமிறையானைமதிற்கச்சி
யேகம்பமேயானையென்மனத்தேவைத்தேனே. (கூ)

அடுத்தானையுரித்தானையருச்சுனற்குப்பாசுபதங
கொடுத்தானைக்குலவரையேசிலையாகக்கூரம்பு
தொடுத்தானைப்புரமெரியச்சுனைமல்குகயிலாய
மெடுத்தானைத்தடுத்தானையென்மனத்தேவைத்தேனே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

பண்டுசெய்தபழவினையின்பயன்
கண்டுங்கண்டுங்களித்திகாணெஞ்சமே
வண்டுலாமலர்ச்செஞ்சடையேகம்பன்
றொண்டனாய்த்திரியாய்துயர்தீரவே. (க)

நச்சிநாளுநயந்தடியார்தொழ
விச்சையாலுமைநங்கைவழிபடக்
கொச்சையார்குறுகார்செறிதீம்பொழிற்
கச்சியேகம்பமேகைதொழுமினே. (உ)

ஊனிலாவியியங்கியுலகெலாந்
தானுலாவியதன்மையராகிலும்
வானுலாவியபாணிபிறங்கவெங்
கானிலாடுவார்கச்சியேகம்பரே (ங)

இமையாமுக்கண்ணொனெஞ்சத்துள்ளவா
தமையாரும்மறிவொண்ணாத்தகைமைய
ரிமையோரேத்தவிருந்தவனேகம்ப
னமையாளுமவனைத்தொழுமின்களே. (ச)

மருந்தினோடுநற்சுற்றமுமக்களும்
பொருந்தினன்றெனக்காய்வெம்புண்ணியன்
கருந்தடங்கண்ணினாளுமைகைதொழ
விருந்தவன்கச்சியேகம்பத்தெந்தையே. (ரு)

பொருளினோடுநற்சுற்றமும்பற்றிலாக்
கருளுநன்மைதந்தாயவரும்பொருள்
சுருள்கொள்செஞ்சடையான்கச்சியேகம்ப
மிருள்கெடச்சென்றுகைதொழுதேத்துமே. (சு)

மூக்குவாய்செவிகண்ணுடலாகிவந்
தாக்குமைவர்தமாப்பையவிழ்த்தரு
ளாக்குவானமைநோய்வினைவாராமே
காக்குநாயகன்கச்சியேகம்பனே. (எ)

பண்ணிலோசைபழத்தினிலின்சுவை
பெண்ணொடாணென்றுபேசற்கரியவன்
வண்ணமில்லிவடிவுவேறாயவன்
கண்ணிலுண்மணிகச்சியேகம்பனே. (அ)

திருவிஞயகனசெமமலாமேலயன
வெருவநீணடவிளங்கொளிசசோதியா
ஞெருவஞயுணாவாயுணாவல்லதோர்
கருவுஞயகனகசசியேகமபனே. (௯)

இடுகுறுண்ணிடையேநதிளமென்முலை
வடிவினமாதாதிறமனம்வையன்மின்
பொடிகொண்மேனியனபூமபொழிறகச்சியு
ளடிகளெம்மையருநதுயாதீாபபரோ (௧0)

இலங்கைவேநதனிராவணனசென்றுதன
விலங்கலையெடுககவிரலூனறலுங்
கலஙகிககசசியேகமபவோவென்றலு
நலஙகொளசெல்வளிததானெஙகளுததனே. (௧௧)

திருசசிற்றம்பலம்.

## திருககுறுநதொகை.

திருச்சிற்றம்பலம்

பூமேலானுமபூமகள்கேள்வனு
நாமேதேவரொனுமைநடுககுறத்
தீமேவுமமுருவாதிருவேகம்பா
வாமோவலலறபடவடியோஙகளே (௧)

அருநதிறலமரரயனமாலொடு
திருநதநினறுவழிபடடதேவியோ
டிருநதவன்னெழிலாாகசசியேகமபம
பொருநதசசெனறுபுடைபடடெழுதுமே. (௨)

கறைகொளகணடததெண்டோளிறைமுக்கணன்
மறைகொணுவினனவானவாக்காதியா
னுறையும்பூமபொழிலசூழ்கசசியேகமப
முறைமையாற்செனறுமுநதிததொழுதுமே. (௩)

பொறிபபுலன்களைப்போககறுததுள்ளத்தை
நெறிபபடுததுநினைநதவாசிநதையு
ளறிபபுறும்மமுதாயவனேகமபங
குறிபபினுறசென்றுகூடிததொழுதுமே. (௪)

சிநதையுட்சிவமாய்நின்றசெம்மையோ
டநதியாயனலாய்ப்புனல்வானமாய்ப
புநதியாயபபுகுநதுளளநிறைநதவெம
மெநதையேகமபமேததிததொழுமினே. (௫)

சாககியத்தொடுமற்றுஞசமண்படும்
பாககியமமிலாாபாடுசெலாதுறப்
பூககொள்சேவடியானககசசியேகம்ப
நாக்கொடேததிநயநதுதொழுதுமே. (௬)

பண்மேலேபாவித்திருந்தாய்போற்றி
பண்ணொடியாழ்வீணையினுருய்போற்றி
விண்மேலுமேலுகிமிர்ந்தாய்போற்றி
மேலாகண்மேலாகண்மேலாய்போற்றி
கண்மேலுங்கண்ணொன்றுடையாயபோற்றி
கயிலைமலையானேபோற்றிபோற்றி. (எ)

7715

முடியாசடையின்மதியாயபோற்றி
முழுநீறுசண்ணித்தமூர்த்திபோற்றி
துடியாரிடையுமையாளபங்காபோற்றி
சோதித்தாராணுமைநின்றுய்போற்றி
யடியாரடிமையறிவாயபோற்றி
யமரர்பதியாளவைத்தாயபோற்றி
கடியாபுரமூன்றுமெய்தாயபோற்றி
கயிலைமலையானேபோற்றிபோற்றி (அ)

போற்றிசைத்துன்னடிபரவநின்றுய்போற்றி
புண்ணியனேநண்ணலரியாயபோற்றி
யேற்றிசைகரும்வானமேலிருந்தாயபோற்றி
யெண்ணுயிரநூறுபேராயபோற்றி
நாற்றிசைகருமவிளக்காயநாதாபோற்றி
நான்முகறகுமாறகுமரியாயபோற்றி
காற்றிசைக்குநதிசைகட்கெல்லாமவிதத்தேபோற்றி
கயிலைமலையானேபோற்றிபோற்றி. (கூ,கo)

திருச்சிற்றம்பலம்

---

## சுந்தரமூர்த்திநாயனுர்.

பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்

தானெனைமுன்படைத்தானதறிந்துதனபொன்னடிக்கே
நானெனபாடலந்தோநாயினேனைப்பொருட்படுத்து
வானெனைவந்தெதிர்கொள்ளமத்தயானையருளபுரிந்து
ஊனுயிர்வேறுசெய்தான் *நொடித்தான்மலையுத்தமனே. (க)

ஆனையுரித்தபகைபடியேனுடுமீளக்கொலோ
வூனையுயிர்வெருட்டியொள்ளியானைநினைந்திருந்தேன்
வானைமதித்தமராவலஞ்செய்தெனையேறவைகக
வானையருளபுரிந்தானொடித்தான்மலையுத்தமனே. (உ)

மந்திரமொன்றறியேன்மனைவாழ்க்கைமகிழ்ந்தடியேன்
சுந்தரவேடங்களாறுரிசேசெய்யுந்தொண்டனெனை
யந்தரமால்விசும்பிலழகானையருள்புரிந்து
துந்தரமோனெஞ்சமேனொடித்தான்மலையுத்தமனே. (ஙு)

---

* நொடித்தல் - சங்கரித்தல்.

வாழ்வையுகந்தநெஞ்சமடவார்தங்கள்வல்வினைப்பட்
டாழமுகந்தவென்னையதுமாற்றியமரரெல்லாஞ்
சூழவருள்புரிந்துதொண்டனேன்பரமல்லதொரு
வேழமருள்புரிந்தானொடித்தான்மலையுத்தமனே. (ச)

மண்ணுலகிற்பிறந்துநும்மைவாழ்த்தும்வழியடியார்
பொன்னுலகம்பெறுதல்றொண்டனேனின்றுகண்டொழிந்தேன்
விண்ணுலகத்தவர்கள்விரும்பவெள்ளையானையின்மே
லென்னுடல்காட்டுவித்தானொடித்தான்மலையுத்தமனே. (ரு)

அஞ்சினையொன்றிநின்றுவலர்கொண்டடிசேர்வறியா
வஞ்சனையென்மனமேவைகிவானநன்ஞானமுனனே
துஞ்சுதன்மாற்றுவித்துத்தொண்டனேன்பரமல்லதொரு
வெஞ்சினவானைதந்தானொடித்தான்மலையுத்தமனே. (சு)

நிலைகெடவிண்ணதிரநிலமெங்குமதிரத்தசைய
மலையிடையானையேறிவழியேவருவேனெதிரே
யலைகடலாலரையனலர்கொண்டுமுன்வந்திறைஞ்ச
வுலையணையாதவண்ணநொடித்தான்மலையுத்தமனே. (எ)

அரவொலியாகமங்களறிவாரறிதோத்திரங்கள்
விரவியவேதவொலிவிண்ணெல்லாம்வந்தெதிரத்திசைப்ப
வரமலிவாணர்வந்துவழிதந்தெனக்கேறுவதோர்
சிரமலியானைதந்தானொடித்தான்மலையுத்தமனே (அ)

இந்திரன்மால்பிரமனெழிலார்மிகுதேவரெல்லாம்
வந்தெதிர்கொள்ளவென்னைமத்தயானையருள்புரிந்து
மந்திரமாமுனிவரிவனாரெனவெம்பெருமா
னந்தமரூரனென்றானொடித்தான்மலையுத்தமனே. (கு)

ஊழிதொறூழிமுற்றுமுயர்பொன்னொடித்தான்மலையைச்
சூழிசையின்கரும்பின்சுவைநாவலவூரன்சொன்ன
வேழிசையின்றமிழாலிசைந்தேத்திய பத்திதனையு
மாழிகடலரையாவஞ்சையப்பர்க்கறிவிப்பதே. (க0)

திருச்சிற்றம்பலம்

---

சுந்தரமூர்த்தி நாயனார் திருக்கைலாச மலைக்கு எழுந்தருளுஞ் செயலை அறிந்த சேரமான் பெருமாணாயனார் அந்தக்ஷணமே அருகில் நின்ற ஓர் குதிரையின் மேலேறிக்கொண்டு, திருவஞ்சைக் களத்துக்குச் சென்று, வெள்ளையானையின்மேலேறிக்கொண்டு ஆகாயத்திற் செல்லும் சுந்தரமூர்த்தி நாயனாரைக் கண்டு, தாமேறிய குதிரையின் செவியிலே ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை ஓதியருளினார். உடனே அந்தக் குதிரையானது ஆகாயத்திலே பாய்ந்து, சுந்தரமூர்த்தி நாயனாருடைய வெள்ளையானையை அடைந்து, அதனை வலஞ்செய்து, அதற்கு முன்னாகச் சென்றது. சேரமான் பெருமாணாயனாருடைய படை வீரர்கள் குதிரையிற் செல்லும் அந்நாயனாரைத் தங்கள் கண்ணுக்குப் புலப்படு மெல்லை வரைக்கும் ஆகாயத்திலே கண்டு, பின் காணாமையால் மிகுந்த திடபத்தியினாலே உருவிய உடைவாட்களினால் தங்கள் தங்கள் தேகத்தைச் சேதித்து, வீரயாக்கையைப் பெற்றுப் போய், சேரமான் பெருமாணாயனாருக்கு முற்பட்டு, அவரைச் சேவித்துக்கொண்டு சென்றார்கள். சேரமான் பெருமாணாயனார் முன் செல்லப் பின் சென்ற சுந்தர

7735 சாக்கியப்படடுஞசமணுருவாகியுடையொழிந்தும்
பாககியமினறியிருதலைபபோகமும்பறறும்விட்டார்
பூக்கமழ்கொனறைப்புரிசடையீரடிபோறறுகின்றோந
தீக்குழிததீவினைதீண்டப்பெறாதிருநீலகணடம். (க0)

பிறநதபிறவியிறபேணியெஞசெல்வனகழலடைவா
னிறந்தபிறவியுண்டாகிலிமையவாகோனடிக்கட்
டிறமபயின்ஞானசம்பந்தனசெநதமிழ்பத்தும்வல்லா
ரிறைநதவுலகினிலவானவாகோனொடுங்கூடுவரே (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருஞானசம்பந்தப் பிள்ளையார் கொடிமாடச் செங்குன்றூரை அடைந்து, சுவாமிதரிசனஞ் செய்துகொண்டிருக்கு நாளிலே, மழைக்காலம் நீங்கிப் பனிக்காலம் வர, குளிர் மிகுந்தது அப்பொழுது பிள்ளையாருடைய பரிசனங்கள் குளிர் சுரத்தினால் வருத்தமுற்றுப் பிள்ளையாரை வணங்கி, அவருக்கு விண்ணப்பஞ் செய்தார்கள். பிள்ளையார் "அவ்வினைக் கிவ்வினை" என்னுந் திருநீலகண்டப் பதிகத்தைப் பாடியருளினார். உடனே அந்நகரவாசிகளுக்கு மாத்திரமேயன்றி அந்நாளிலே பனிப்பிணி அக்கொங்கநாடு முழுதுந் தீர்ந்தது.

## திருக்ஷேத்திரக்கோவை

பண் - இந்தளம்.

---

திருச்சிற்றம்பலம்

ஆரூர்தில்லையம்பலம்வல்லநல்லம
வடகச்சியுமச்சிறுபாக்கநல்ல
கூரூர்குடவாயில்குடந்தைவெண்ணி
கடல்சூழ்கழிப்பாலைதென்கோடிபீடார்
நீரூர்வயனின்றியூர்குன்றியூருங
குருகாவையூர்நாரையூர்நீடுகானப்
பேரூர்நன்னீளவயனெய்த்தானமும்
பிதற்றாய்பிறைசூடிதன்பேரிடமே. (க)

அணணாமலையீஙகோயுமததிமுததா
றகலாமுதுகுன்றங்கொடுங்குன்றமுங்
கணணாகழுககுன்றங்கயிலைகோணம்
பயில்கறகுடிகாளத்திவாட்போக்கியும
பண்ணாமொழிமஙகையோாபஙகுடையான்
பாஙகுன்றமபருபபதமபேணிநின்றே
யெணணுயிரவுமபகலுமிடும்பைக்
கடனீநதலாஙகாரணமே. (உ)

அட்டானமென்றோதியநாலிரணடு
மழகன்னுறைகாவனைத்துந்துறைக
ளெட்டாந்திருமூர்த்தியின்காடொன்பதுங
குளமூன்றுங்களமஞ்சும்பாடிநான்கு

கடல்வண்ணனுமாமலரோனுங்காணச்
சொற்கெனாநின்றதொல்லையிலாதானுறையுங்
குடமூக்கென்றுசொல்லிக்குலாவுமினே. (௯)

குத்தங்குடிவேதிகுடிபுனல்சூழ்
குருந்தங்குடிதேவன்குடிமருவு
மத்தங்குடிதண்டிருவண்குடியு
மலம்புஞ்சலந்தன்சடைவைத்துகந்த
நித்தன்னிமலனுமையோடுங்கூட
நெடுங்காலமுறைவிடமென்றுசொல்லாப்
புத்தர்புறங்கூறியபுன்சமணர்
நெடும்பொய்களைவிட்டுநினைந்துய்ம்மினே. (௧௦)

அம்மானையருந்தவமாகிநின்ற
வமரர்பெருமான்பதியானவுன்னிக்
கொய்ம்மாமலர்ச்சோலைகுலாவுகோச்சைக்
கிறைவன்சிவஞானசம்பந்தன்சொன்ன
விம்மாலையீரைந்துமிருநிலத்தி
லிரவும்பகலுந்நினைந்தேத்திநின்று
விம்மாவெருவாவிரும்புமடியார்
விதியார்பிரியார்சிவன்சேவடிக்கே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

## கோளறுதிருப்பதிகம்.

பண் - பியந்தைக்காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

வேயுறுதோளிபங்கன்விடமுண்டகண்டன்மிகநல்லவீணைதடவி
மாசறுதிங்கள்கங்கைமுடிமேலணிந்தென்னுளமேபுகுந்தவதனால்
ஞாயிறுதிங்கள்செவ்வாய்புதன்வியாழம்வெள்ளிசனிபாம்பிரண்டுமுடனே
யாசறுநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே. (௧)

என்பொடுகொம்பொடாமையிவைமார்பிலங்கவெருதேறியேழையுடனே
பொன்பொதிமத்தமாலைபுனல்சூடிவந்தென்னுளமேபுகுந்தவதனா
லொன்பதொடொன்றொடேழுபதினெட்டொடாறுமுடனாயநாள்களவைதா
மன்பொடுநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே. (௨)

உருவளர்பவளமேனியொளிநீறணிந்துவுமையோடும்வெள்ளைவிடைமேன்
முருகலர்கொன்றைதிங்கண்முடிமேலணிந்தென்னுளமேபுகுந்தவதனாற்
றிருமகள்கலையதூர்திசெயமாதுபூமிதிசைதெய்வமானபலவு
மருநெதிநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே. (௩)

மதிநுதன்மங்கையோடுவடபாலிருந்துமறையோதுமெங்கள்பரம
னதியொடுகொன்றைமாலைமுடிமேலணிந்தென்னுளமேபுகுந்தவதனாற்
கொதியுறுகாலனங்கிநமனோடுதூதர்கொடுநோய்களானபலவு
மதிகுணநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே. (௪)

நஞ்சணிகண்டனெநதைமடவாடனேடுவிடையேறுநஙகள்பரமன்
றுஞ்சிருள்வன்னிகொன்றைமுடிமேலணிநதெனுளமேபுகுநதவதனல்
வெஞ்சினவவுணரோடுமுருமிடியுமின்னுமிகையானபூதமவையு
மஞ்சிடுநல்லநலலவவைநலலநல்லவடியாரவாக்குமிகவே. (ரு)

வாள்வரியதளதாடைவரிகோவணததாமடவாடனேடுமுடனய,
நாண்மலாவனனிகொனறைநதிசூடிவநதெனுளமேபுகுநதவதனற
கோளரியுழுவையோடுகொலையானைகேழலகொடுநாகமோடுகரடி
யாளரிநலலநல்லவவைநல்லநல்லவடியாரவாகுமிகவே. (சு)

செப்பிளமுலைநனமஙகையொருபாகமாகவிடையேறுசெலவனடைவா
ரொப்பிளமதியுமபபுமுடிமேலணிநதெனுளமேபுகுநதவதனல்
வெபபொடுகுளிருமவாதமிகையானபிததுமவினையானவந்துநலியா
வபபடிநல்லநலலவவைநலலநலலவடியாரவாக்குமிகவே. (எ)

வேள்படவிழிசெயதனறுவிடைமேலிருநதுமடவாடனேடுமுடனய
வாண்மதிவனனிகொனறைமலாசூடிவநதெனுளமேபுகுநதவதனு
லேழ்கடலசூழிலஙகையரையனறனேடுமிடரானவநதுநலியா
வாழ்கடனலலநல்லவவைநல்லநல்லவடியாரவாகுமிகவே (அ)

பலபலவேடமாகுமபரனாரிபாகனபசுவேறுமெஙகளபரமன
சலமகளோடெருக்குமுடிமேலணிநதெனுளமேபுகுநதவதனன
மலாமிசையோனுமாலுமறையோடுதேவாவருகாலமானபலவு
மலைகடனமேருநல்லவவைநலலநல்லவடியாரவாகுமிகவே. (க)

கொத்தலாகுழலியோடுவிசயறகுநலகுணமாயவேடவிகிர்தன்
மததமுமதியுநாகமுடிமேலணிநதெனுளமேபுகுநதவதனற
புத்தரொடமணைவாதிலழிவிக்குமணணறிருநீறுசெமமைதிடமே
யத்தகுநலலநலலவவைநலலநல்லவடியாரவாக்குமிகவே. (கய)

தேனமாபொழில்கொளாலைவிளைசெநநெறுமணிவளாசெமபொனெஙகுநிகழ
நானமுகனுதியாயபிரமாபுரததுமறைஞானஞானமுனிவன்
றானுறுகோளுநாளுமடியாரைவநதுநலியாதவணணமுரைசெ
யானசொன்மாலையோதுமடியாாகளவானிலரசாளவ ராணைநமதே. (கக)

திருச்சிற்றம்பலம்

---

திருஞானசம்பந்தமூாததி நாயனு வேதாரணியததிலே, சுவாமிதரிசனஞ் செய்துகொண்டிருந்தா அதுசிறக

பாண்டிநாட்டிலே பாண்டியராஜன் தான் பூர்வ ஜன்மத்திலே செய்த தீவினையினுலே, உலகமெல்லாம் இடபடியேய நிசதயமாய இருக்கும் அருகேசுரன் குருத்துவ மாத்திரத்திலே கருததாயாய இருப்பன் எனப பிதற்றுகின்ற கபடிக ளாகிய சமணர்களுடைய துடமபோதனையை மெடயெனத் துணிந்து, சத்திய மார்க்கமாகிய சையதததை விட்டு, அவ களுடைய அசததிய மார்க்கமாகிய ஆருகதமதத்திலே பிரவேசித்தான் அரசன் அவவாறுயினமையால், "மன்னனெப் படி மன்னுயிரப்படி" என்னும பழமொழிப்படி குடிகளும் அவவாறுயின மயிர் பறிக்கப்பட்ட தலையையும், ஊத்தை வாயையும், உறிபொதிகலனும் மயிற்பீலி யும் பொருந்திய கையையும், பாயுடையையும், மனம்போல மாசுகண்ட சரீரத் தையும், நின்றுண்டலையும், வெற்றரையையும் உடைய சமணப்பதிதர்களே எங்கும் பரந்தார்கள இங்ஙனம் பாண்டிநாடெங்கும் வைதிகமார்க்கமும் சைவ

மார்க்கமுமாகிய இரண்டுங் குன்றி, சமணசமயமே விருத்தியாகியும், அப்பாண்டியனுடைய மனைவியாரும் சோழமகாராஜாவுடைய புதல்வியாருமாகிய மங்கையர்க்கரசியார் அவ்வரசனுடைய முதன் மந்திரியாராகிய குலச்சிறை நாயனார் என்கின்ற இருவரும், அரசனும் அப்பாண்டியனும் பாண்டி நாட்டாரும் மற்ற யாவருஞ்செய்த புண்ணியத்தினாலே, சைவர்களாயே யிருந்தார்கள். அவர்கள் அப்பாண்டிநாட்டுள்ளோர் பொருட்டுக் கவலைகொண்டு, தாங்கள் சைவவொழுக்கத்தில் நிற்குந் தன்மை அரசனுக்கு விளங்காவண்ணம் ஒழுகினார்கள். இங்ஙனம் ஒழுகுநாளிலே, உலகமெல்லாம் உய்யும்படி அவதரித்தருளிய உயர்வொப்பில்லாத சைவசமயாசாரியராகிய திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருடைய அளவிறந்த மகிமைகளையும் அவர் வேதாரணியத்திற் சென்று எழுந்தருளி யிருத்தலையும், பாண்டிநாடு செய்த பெருந்தவத்தினாலே, கேள்வியுற்றார்கள். கேள்வியுற்ற பொழுதே, அளவிறந்த மகிழ்ச்சி கொண்டு, சில பரிசனங்களை, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரிடத்திற்குச் செல்லும்பொருட்டு, ஏவினார்கள்.

ஏவப்பட்ட அப்பரிசனங்கள் பாண்டிநாட்டைக் கடந்து சென்று, வேதாரணியத்தை அடைந்து, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் எழுந்தருளியிருந்த மடாலயத்தை அணைந்து தங்கள் வரவை வாயிற்காவலாளர்களுக்குத் தெரிவிக்க, அவர்கள் உள்ளேபோய், நாயனாரை வணங்கி நின்று, "சுவாமீ, பாண்டிமாதேவியாராகிய மங்கையர்க்கரசியாரும் மந்திரியாராகிய குலச்சிறை நாயனாரும் முதலால் தேவரீருடைய ஸ்ரீபாதாரவிந்தங்களை வணங்குதற்குச் சிலர் வந்து நிற்கின்றனர்" என்று விண்ணப்பஞ் செய்தார்கள். பிள்ளையார் திருவுளங் கனிந்து, "அவர்களை இங்கே அழையுங்கள்" என்று அருளிச்செய்ய, வாயிற்காவலாளர்கள் அவர்களை அழைக்க, அவர்கள் உள்ளே புகுந்து, பிள்ளையாரை விழுந்து நமஸ்கரித்து எழுந்து, அஞ்சலியஸ்தர்களாகி நின்றார்கள். பிள்ளையார் அவர்களை நோக்கி, "மங்கையர்க்கரசியாருங் குலச்சிறையாரும் க்ஷேமமாய் இருக்கின்றார்களா" என்று வினவியருள, அவர்கள் 'ஆம்' என்று சொல்லி, பின் "ஏழுலகமும் உய்யும்படி அவதரித்தருளிய பரம கிருபாளுவே, சைவசமயாசாரிய மூர்த்தியே, பாண்டியனும் பாண்டி நாட்டாரும் சமணர்களுடைய துர்ப்போதனையினாலே விபூதி சாதனங்களை விட்டு ஆருகதமதத்திலே பிரவேசித்தமையால், மங்கையர்க்கரசியாருங் குலச்சிறை நாயனாரும் மிகக் கவலைகொண்டிருந்தார்கள். பின்பு தேவரீருடைய மகிமையைக் கேள்வியுற்று, அந்தச் சமாசாரத்தைத் தேவரீருக்கு விண்ணப்பஞ் செய்யும்பொருட்டு, அடியேங்களை அனுப்பினார்" என்று பிரார்த்தித்தார்கள். அதுகேட்ட சிவனடியார்கள் சமஸ்தரும் பிள்ளையாரை நமஸ்கரித்து எழுந்து நின்று, "சுவாமீ, தேவரீர் பாண்டிநாட்டுக்கு எழுந்தருளி, நமது கடவுளாகிய சிவபிரானுடைய திருவடிகளை அடையாத அதிபாதகர்களாகிய சமணர்களை வாதிலே வென்று, செய்த உபாயங்களால் ஒடுக்கப்பட்டிருந்த சைவசமயத்தை ஸ்தாபனம் பண்ணி, பாண்டியனையும் விபூதியணிவித்து, உய்விக்கும்பொருட்டுத் திருவுளங் கொண்டருளவேண்டும்" என்றார்கள். பிள்ளையார் அவர்களுக்கு அருள்புரிந்து, அப்பொழுது தம்பிரான் திருக்கோயிலிற்சென்று, சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு, திருக்கோபுரத்துள் இருந்து, பாண்டிமாதேவியாருங் குலச்சிறை நாயனாரும் சொல்லியனுப்பிய யாசனையை அவருக்குச் சொல்லி, பாண்டிநாட்டுக்கு எழுந்தருளுதற்குத் துணிந்தருளினார். அப்பொழுது அப்பமூர்த்தி "தேவரீர் சிறுபிள்ளையாய் இருக்கின்றீர். அச்சமணர்களுடைய வஞ்சனைக்கோர் அவதியில்லை. தேவரீருக்கு இப்போது கிரகங்கள் வலியில ஆதலால் தேவரீர் அவ்விடத்திற்கு எழுந்தருளுதற்கு உடன்படுவது நன்றன்று" என்று விண்ணப்பஞ்செய்ய, பிள்ளையார் "சிவபிரான் நம்முடைய சிந்தையே கோயில்கொண்டு எழுந்தருளி யிருத்தலினால் நமக்குத் தீங்கு வாராது" என்று

சொல்லிச் சிவபிரானுடைய திருவடிகளைத் துதித்து "வேயுறுதோளி" என்னுங் கோளறு திருப்பதிகத்தைப் பாடியருளினர். அந்தத் திருப்பதிகத்தைக் கேட்டதன்பின், அப்பமூர்த்தியும் அதற்கு உடன்பட்டு, தாமும் அவர் முன்னே எழுந்தருள அமைந்தபொழுது, பிள்ளையார் "அப்பரே நீர் இந்தச் சோழமண்டலத்திலே தானே எழுந்தருளியிரும்" என்று சொல்லிக் கைகுவித்து வணங்கித் தடுக்க, அப்பமூர்த்தியும் வணங்கி, அதற்கு ஒருவாறு அருமையாக உடன்பட்டார். பிள்ளையார் வேதத்தை வளர்த்தற்கும் சைவத்தை விளக்குதற்கும் எழுந்து, வேதாரணியேசுரரை மீண்டும் போய் நமஸ்கரித்துப் பாடித் துதித்து அநுஞ்ஞை பெற்றுக்கொண்டு புறப்பட்டு, அப்பமூர்த்தி மறுத்தவண்ணம் அவரை வணங்கி விடைகொடுத்து நீங்கி, முத்துச்சிவிகையில் ஏறி ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை ஓதி, சுவாமியுடைய விபூதியணிந்த திருமேனியைச் சிந்தித்துக்கொண்டு திருவகத்தியான்பள்ளி முதலிய பல தலங்களையும் பணிந்துகொண்டு சோழமண்டலத்தைக் கடந்து பாண்டிநாட்டை அடைந்து மதுரைக்குச் சமீபித்தார்.

---

## பஞ்சாக்கரத்திருப்பதிகம்

பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

துஞ்சலுந்துஞ்சலிலாதபோழ்தினு
நெஞ்சகநைந்துநினைமினாடொறும்
வஞ்சகமற்றடிவாழ்த்தவந்தகூற்
றஞ்சவுதைத்தனவஞ்செழுத்துமே (௧)

மந்திரநான்மறையாகிவானவர்
சிந்தையுணின்றவர்தம்மையாள்வன
செந்தழலோம்பியசெம்மைவேதியர்க்
கந்தியுண்மந்திரமஞ்செழுத்துமே. (௨)

ஊனிலுயிர்ப்பையொடுக்கியொண்சுடர்
ஞானவிளக்கினையேற்றிநன்புலத்
தேனைவழிதிறந்தேத்துவார்க்கிட
ரானகெடுப்பனவஞ்செழுத்துமே. (௩)

நல்லவர்தீயரெனாதுநச்சினர்
செல்லல்கெடச்சிவமுத்திகாட்டுவ
கொல்லநமன்றமர்கொண்டுபோமிடத்
தல்லல்கெடுப்பனவஞ்செழுத்துமே (௪)

கொங்கலர்வன்மதன்வாளியைந்தகத்
தங்குள்பூதமுமஞ்சவைம்பொழில்
றங்கரவின்படமஞ்சுந்தம்முடை
யங்கையிலைவிரலஞ்செழுத்துமே. (௫)

தும்மலிருமறொடர்ந்தபோழ்தினும்
வெம்மைநரகம்விளைந்தபோழ்தினு
மிம்மைவினையடர்த்தெய்தும்போழ்தினு
மம்மையினுந்துணையஞ்செழுத்துமே, (௬)

7765 வீடுபிறப்பையறுத்துமெச்சினார்
பீடைகெடுப்பனபின்னைநாடொறு
மாடுகொடுப்பனமன்னுமாநட
மாடியுகப்பனவஞ்செழுத்துமே. (எ)

வண்டமரோதிமடந்தைபேணின
பண்டையிராவணன்பாடியுய்ந்தன
தொண்டர்கள்கொண்டுதுதித்தபின்னவர்க்
கண்டமளிப்பனவஞ்செழுத்துமே. (அ)

கார்வணநான்முகன்காணுதற்கொணாச்
சீர்வணச்சேவடிசெவ்விநாடொறும்
பேர்வணம்பேசிப்பிதற்றும்பித்தர்கட்
கார்வணமாவனவஞ்செழுத்துமே (கூ)

புத்தர்சமண்கழுக்கையர்பொய்கொளாச்
சித்தத்தவர்கடெளிந்துதேறின
வித்தகநீறணிவார்வினைப்பகைக்
கத்திரமாவனவஞ்செழுத்துமே. (கo)

நற்றமிழ்ஞானசம்பந்தன்மறை
கற்றவன்காழியர்மன்னனுன்னிய
வற்றமின்மாலையீரைந்துமஞ்செழுத்
துற்றனவல்லவரும்பராவரே. (கக)

திருச்சிற்றம்பலம்

---

திருஞானசம்பந்தப் பிள்ளையார் சீர்காழியில், தினந்தோறும் தோணியப்பரைத் தரிசனஞ் செய்து, திருப்பதிகம் பாடிக்கொண்டிருக்கு நாளிலே, உபநயனப் பருவம் வர, பிராமணர்கள் வேதவிதிப்படி உபநயனச் சடங்கு செய்ய, சிவானுபூதிப் பெருஞ்செல்வராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார், தமக்கு அது வேண்டுவதன்றாயினும், உலகத்திலே வைதிக கர்மத்தை நாட்டல் வேண்டுமெனத் தமது திருவுளத்திலே முகிழ்த்த பெருங்கருணையினாலே, அதற்கிசைந்து யஞ்ஞோபவீத தாரணஞ் செய்தருளினார். பின்பு பிராமணர்கள் "உமக்கு நான்கு வேதத்திற்கும் அதிகாரந் தந்தோம்" என்று சொல்லி, மந்திரோபதேசஞ் செய்யப் புகும்பொழுது, பிள்ளையார் எண்ணிறந்த வேதங்களை ஓதி, அவற்றிற்கு அங்கமாகிய பல கலைகளையும், எடுத்துச்சொல்லியருளினார். பிராமணர்கள் அவர் சிவபிரானுடைய திருவருள் பெற்றமையை நினைந்து வியந்து, அவரை நமஸ்கரித்து ஸ்தோத்திரஞ் செய்து, தாங்கள் முன் பயின்ற வேதங்களை அவரிடத்திற் கேட்டு, ஐயந்திரிபற உணர்ந்தார்கள். பரமாசாரியராகிய ஆளுடைய பிள்ளையார் அந்தப் பிராமணருடைய சந்தேகந் தீரும்படி எல்லாவற்றையும் அருளிச்செய்து, பின் சகலமந்திரங்களுக்கும் வித்து ஸ்ரீ பஞ்சாக்ஷரம் என்பதை அவர்களுக்கும் மற்றை யாவருக்கும் விளக்கும்பொருட்டு, "துஞ்சலும் துஞ்சலிலாத போழ்தினும்" என்னும் பஞ்சாக்கரத் திருப்பதிகத்தைப் பாடியருளினார். அந்தத் திருப்பதிகத்திலே "வேதியர்க் கந்தியுள் மந்திர மஞ்செழுத்துமே" என்றருளிச் செய்தார். பிராமணர்கள் அதைக் கேட்டு மனமகிழ்ந்து, அவருடைய திருவருளைத் தலைமேற் கொண்டு, வணங்கித் துதித்து உய்ந்தார்கள்.

ஆளுடைய பிள்ளையார் திருக்கூட்டத்தோடு பாண்டிநாட்டைக் கடந்து, சோழநாட்டை அடைந்து, திருத்தெளிச்சேரியிற் சேர்ந்து சுவாமி தரிசனஞ் செய்துகொண்டு செல்லும்போது, பௌத்தர்கள் இருக்கின்ற போதிமங்கை சமீபிக்க, அதனை அறிந்த அடியார்களெல்லாரும் கடலொலிபோலச் சங்கு தாரை முதலிய பலவகைப்பட்ட வாத்தியங்களையும் முழக்கி ஆரவாரித்தார்கள் முத்துச்சின்னங்களெல்லாம் "பரசமய கோளரி வந்தார்" என்று ஊதின. பௌத்தர்கள் ஒருங்குகூடி, பிள்ளையார் தங்கள் எல்லையில் எழுந்தருளும்போது அடியார்கள் எடுத்த ஆரவாரத்தினாலும் திருச்சின்ன வொலியினாலும் பொறாமை கொண்டு, தங்கள் சமயநூலிலே மகா பாண்டித்தியமுள்ள புத்தநந்தி முதலியோருக்குச் சொன்னார்கள். அவர்களுடைய சொல்லும் பிள்ளையார்முன் வருகின்ற திருச்சின்ன வொலியும் அடியார்களுடைய ஆரவாரமும் காதினுள்ளே புகுந்து நாராசம்போலப் புகுந்தபோது, புத்தநந்தி மிகக்கோபித்து எழுந்து, பௌத்தர் கூட்டஞ் சூழச் சென்று, சிவனடியார்களை அணைந்து, "நீங்கள் எங்களைத் தருக்கத்தில் வென்றன்றோ வெற்றிச் சின்னங்கள் ஊதல் வேண்டும்" என்று கோபங்கொண்டு விலக்கினான். அப்பொழுது திருத்தொண்டர்கள் மிகக் கோபித்து, "இந்தக்கொடுஞ் செயலுக்கு இவர்களைக் கொல்லாது பொறுக்கின், இவர்கள் தங்கள் நிலையெடுப்பார்கள்" என்று முத்துச் சிவிகைமேல் எழுந்தருளியிருக்கின்ற திருஞானசம்பந்தப் பிள்ளையாரை அடைந்து வணங்கி, நிகழ்ந்ததை விண்ணப்பஞ் செய்தார்கள். பிள்ளையார் "நாம் வருமிடத்திலே நமக்கழகிதாய் இருக்கின்றது புத்தநந்தி வாதுசெய்யப் புகுமிடத்து அவனுடைய பொய்ம்மேற்கோளை அறிகின்றோம்" என்று அருளிச்செய்தார். அதற்கு முன்னே, தேவாரத் திருமுறை எழுதும் அடியவர் பொறாமல், பஞ்சாக்கரத் திருப்பதிகத்திலே "புத்தர் சமண்கழுக் கையர் பொய்கொளாச் சித்தத்தவர்கள் தெளிந்து தேறின வித்தக நீறணிவார் வினைப் பகைக் கத்திரமாவன அஞ்செழுத்துமே" என்னுந் திருப்பாட்டை ஓதி 'இப்புத்தனுடைய சிரம் உருண்டு வீழும்படி இடியிடித்து விழக்கடவது" என்று சொல்லியருளினார். உடனே இடியிடித்துப் புத்தநந்தியுடைய சரீரத்தையும் தலையையும் வேறாகக் கூறுபடுத்தியது. அதுகண்ட பௌத்தர் கூட்டம் அஞ்சிக் குலைந்தோடிற்று. இங்ஙனந் தமிழ்வேதலேககராலே நிகழ்ந்த நிகழ்ச்சியைக் கண்ட அடியார்களெல்லாரும் ஓடிப்போய், பிள்ளையாருக்கு விண்ணப்பஞ் செய்தார்கள். பிள்ளையார் "அங்ஙனம் எதிர்ந்த விலக்கை நீக்கும் முறை அதுவேயாம். நீங்கள் எல்லீரும் ஹரஹர என்று ஆரவாரியுங்கள்" என்று அருளிச்செய்ய, அவ்வொலி மிகுந்தோங்கிற்று. அஞ்சி ஓடிய பௌத்தர்களெல்லாரும் ஆச்சரியங் கொண்டு மீண்டும் ஒருங்கு கூடி, 'இச்செய்கை வஞ்சனையோ அவர்களுடைய சைவசமயத்து உண்மையோ" என மருண்டு, "நீங்கள் எங்களோடு மந்திரவாதமின்றி எதிர்ந்து தருக்கம் பேச வாருங்கள்" என்று தங்களுள்ளே தலைவனாகிய சாரிபுத்தனையே முன்கொண்டு பின்னும் வந்தார்கள். பிள்ளையார் அதைக்கேட்டுத் திருவுள மிகமகிழ்ந்து, விரைந்து சென்று, முத்துச் சிவிகையினின்றும் இறங்கி, ஒரு சித்திர மண்டபத்தின்மேல் ஏறி, சைவர்கள் சூழ வீற்றிருந்து கொண்டு, திருமுன்னே நின்ற அடியார் சிலரை நோக்கி, "தருக்கம் பேச விரும்பிய பௌத்தர்களை இங்கே அழையுங்கள்" என்று ஆஞ்ஞாபித்தருளினார். அவ்வடியார்கள் அவ்வாஞ்ஞையைச் சிரமேற்கொண்டு, பௌத்தர் கூட்டத்தை அணைந்து, "வேதசிவாகமாதி சமஸ்த சாத்திரங்களையும் ஓதாதுணர்ந்தவரும், முத்தமிழ் வேந்தரும், பரசமயகோளரியும், எங்கள் பரமாசாரியருமாகிய ஸ்ரீ ஞானசம்பந்த சுவாமிகள் உங்கள் விருப்பத்தின்படி வாது செய்தற்கு உங்களை மகிழ்ச்சியோடும் அழைக்கின்றார். வாருங்கள்" என்றார்கள். அது கேட்ட சாரிபுத்தன் பௌத்தர்களோடு வந்து, மண்டபத்திலே பிள்ளையாருக்குச் சமீபத்தில் நின்றான். அப்பொழுது திருச்சின்னத்தைத் தடுத்த புத்தநந்தியினுடைய சிரசைப் பொடிபடுத்திய தமிழ்வேதலேககர் பிள்ளையாருடைய

திருவடிகளை வணங்கித் துதித்து, சாரிபுத்தனோடு வாதுசெய்து பௌத்த சமயத்தை நிராகரணம் பண்ணி, அவனை வென்று, பிள்ளையாருடைய திருவடிகளை நமஸ்கரித்தார். பௌத்தர்கள் தோற்று, தங்கள் சமயம் பொய்ந்நெறியென்று கண்டு, பிள்ளையாரை விழுந்து நமஸ்கரித்தார்கள். பிள்ளையார் சைவசமயமே சற்சமயமென்பதை அவர்களுக்கு ஐயந்திரிபற உணர்த்தியருள, அவர்கள் அவருடைய கருணைநோக்கம் பெற்றமையால், அதனை இனிதுணர்ந்து, அவரை வணங்கி, சைவர்களாயினார்கள்.

---

## தனித்திருவிருக்குக்குறள்.

பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்

கல்லானீழ, லல்லாத்தேவை, நல்லார்பேணா, ரல்லோநாமே. (க)

கொன்றைசூடி, நின்றதேவை, யன்றியொன்று, நன்றிலோமே (உ)

கல்லாநெஞ்சி, னில்லானீசன், சொல்லாதாரோ, டல்லோநாமே. (௩)

கூற்றுதைத்த, நீற்றினானைப், போற்றுவார்க, டோற்றினாரே. (௪)

காட்டுளாடும், பாட்டுளானை, நாட்டுளாருந், தேட்டுளாரே. (௫)

தக்கன்வேள்விப், பொக்கந்தீர்த்த, மிக்கதேவர், பக்கத்தோமே. (௬)

பெண்ணாணாய, விண்ணோர்கோவை, நண்ணாதாரை, யெண்ணோநாமே. (௭)

தூர்த்தன்வீரந், தீர்த்தகோவை, யார்த்தமாக, வேத்தினோமே (௮)

பூவினானுந், தாவினானு, நாவினாலு, மோவினாரே. (௯)

மொட்டமணர், கட்டர்தேரர், பிட்டர்சொல்லை, விட்டுளோமே. (க0)

அந்தண்காழிப், பந்தன்சொல்லைச், சிந்தைசெய்வோ, ருய்ந்துளாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## நமச்சிவாயத்திருப்பதிகம்.

பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

காதலாகிக்கசிந்துகண்ணீர்மல்கி
யோதுவார்தமைநன்னெறிக்குய்ப்பது
வேதநான்கினுமெய்ப்பொருளாவது
நாதனாமநமச்சிவாயவே. (க)

நம்புவார்நமாநாவினவிற்றினால்
வம்புநாண்மலர்வார்மதுவொப்பது
செம்பொனார்திலகம்முலகுக்கெலா
நம்பனாமநமச்சிவாயவே. (உ)

நெக்குளார்வமிகப்பெருகிநினைந்
தக்குமாலைகொடங்கையிலெண்ணுவார்
தக்கவானவராத்தகுவிப்பது
நக்கனாமநமச்சிவாயவே. (௩)

இயமன்றூதருமஞ்சுவரின்சொலார்
நயம்வந்தோதவல்லார்தமைநண்ணினு
நியமந்தானினைவார்க்கினியானெற்றி
நயனனாமநமச்சிவாயவே. (௪)

கொல்வாரேனுங்குணம்பலநன்மைக
ளில்லாரேனுமியம்புவராயிடி
னெல்லாத்தீங்கையுநீங்குவரென்பரா
னல்லாநாமநமச்சிவாயவே (௫)

மந்தரம்மனபாவங்கண்மேவிய
பந்தனையவர்தாமும்பகர்வரேற்
சிந்தும்வல்வினைசெல்வமுமல்குமா
னந்திநாமநமச்சிவாயவே (௬)

நரகமேழ்புகநாடினராயினு
முரைசெய்வாயினராயினுருத்திரர்
விரவியேபுகுவித்திடுமென்பரால்
வரதனாமநமச்சிவாயவே (௭)

இலங்கைமன்னனெடுத்தவடுக்கன்மேற்
றலங்கொள்கால்விரல்சங்கரனூன்றலு
மலங்கிவாய்மொழிசெய்தவனுய்வகை
நலங்கொணாமநமச்சிவாயவே. (௮)

போதன்போதன கண்ணனுமண்ணறன்
பாதந்தான்முடிநேடியபண்பரா
யாதுங்காண்டரிதாகியலந்தவ
ரோதுநாமநமச்சிவாயவே. (௯)

கஞ்சிமண்டையர்கையிலுண்கையர்கள்
வெஞ்சொன்மிண்டர்விரவிலரென்பரால்
விஞ்சையண்டர்கள்வேண்டவமுதுசெய்
நஞ்சுண்கண்டனமச்சிவாயவே. (௧0)

நந்திநாமநமச்சிவாயவெனுஞ்
சந்தையாற்றமிழ்ஞானசம்பந்தன்சொல்
சிந்தையான்மகிழ்ந்தேத்தவல்லாரெல்லாம்
பந்தபாசமறுக்கவல்லார்களே (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருநல்லூர்ப் பெருமணத்தில் எழுந்தருளியிருக்குங் கடவுளைப் பாடியபின்பு, கருணாநிதியாகிய சிவபெருமான் "நீயும் உன் மனைவியும் உன்னுடைய விவாகத்தைக்காண வந்தவர்கள் யாவரும் இந் தச் சோதியினுள்ளே வந்து நம்மை அடையுங்கள்" என்று அருளிச்செய்து,

திருக்கோயிலை உட்பட மேலோங்கிய சுத்தசோதி வடிவமாகி, அச்சோதிக்கு ஒரு திருவாயிலை வகுத்துக் காட்டியருளினார். திருப்பாசமுத்திரமாகிய திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் சோதிவடிவாய் நின்ற கடவுளை வணங்கித் துதித்து, உலகம் உய்யும்பொருட்டு அதனை அடையும் நெறியை அருளிச்செய்யத் திருவுளங்கொண்டு, யாவருக்கும் ஞானமெய்ந்நெறி நமச்சிவாய என்கின்ற மந்திரம் என்னுங் கருத்தையுடைய "காதலாகிக் கசிந்து" என்னும் நமச்சிவாயத் திருப்பதிகத்தைச் சமஸ்தருங் கேட்க அருளிச்செய்து, "இக்கலியாணங்காண வந்த எல்லீரும் உங்கள் சனனநோய் தீரும்பொருட்டு, இந்தச் சோதியினுள்ளே பிரவேசியுங்கள்" என்று திருவாய் மலர்ந்தருளினார். பிறவிக்கடலிலே கரைகாணாது அழுந்தி அறிவின்றி மயங்குகின்றவர்கள், பிள்ளையாருடைய திருமணத்தைச் சேவிக்கப் பெற்றமையால், அந்தச் சோதியினுள்ளே புகுந்தார்கள். திருநீலநக்க நாயனார், முருகநாயனார், சிவபாத விருதயர், நம்பியாண்டார் நம்பி, திருநீலகண்டப் பெரும்பாணர் முதலிய திருத்தொண்டர்கள் தங்கள் தங்கள் மனைவியரோடும் சுற்றத்தாரோடும் புகுந்தார்கள். பிள்ளையாருடைய முத்துச் சிவிகை முதலியவற்றைத் தாங்கிச் சென்றவர்களும் மற்றைப் பரிசனங்களும் தொழுது புகுந்தார்கள். சைவர், பாசுபதர், மகாவிரதர், காளாமுகர், வாமர், வைரவர் என்கின்ற அறுவகை உட்சமயிகளும் வைதிக சைவர்களும் சித்தாந்த சைவர்களும் ஆகிய சமஸ்தரும் அந்தச் சுத்த சோதியினுள்ளே புகுந்தபின், சர்வான்மாக்களையும் உய்விக்கும்பொருட்டுத் திருவவதாரஞ்செய்தருளிய சித்தாந்த சைவசமயாசாரியராகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தம்முடைய மனைவியாரைக் கைப்பற்றிக்கொண்டு, அந்தச் சோதியை வலஞ்செய்து, அதனுள்ளே புகுந்து, சிவசாயுச்சியம் அடைந்தார். அதன்பின் அந்தச்சோதி மறைந்துவிட, திருப்பெருமணமாகிய திருக்கோயில் தோன்றுதலும், உலகத்திலே பேறிலராகிய மற்றெல்லாருங் கவலை கொண்டார்கள். பிள்ளையார் சோதியுட் புகுந்தமையைத் தூரத்தே கண்டு நண்ணப்பெறாத அரிபிரமேந்திராதி தேவர்களும் முனிவர்களும் கவலை நீங்க எடுத்துத் தோத்திரம் பண்ணினார்கள். (இவ்வரலாறு பெரிய புராணத்தில் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் புராணத்திலே திகழ்ந்தது.)

## திருப்பாசுரம்.

பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்

வாழ்கவந்தணர்வானவரானினம்
வீழ்கதண்புனல்வேந்தனுமோங்குக
ஆழ்கதீயதெல்லாமரனாமமே
சூழ்கவையகமுந்துயர்தீர்கவே. (௧)

அரியகாட்சியராய்த்தமதங்கைசே
ரெரியரேறுகந்தேறுவர்கண்டமுங்
கரியர்காடுறைவாழ்க்கையராயினும்
பெரியராரறிவாரவர்பெற்றியே. (௨)

வெந்தசாம்பல்விரையெனப்பூசியே
தந்தையாரொடுதாயிலர்தம்மையே
சிந்தியாவெழுவார்வினைதீர்ப்பரா
லெந்தையாரவரெவ்வகையார்கொலோ. (௩)

ஆட்பாலவர்க்கருளும்வண்ணமுமாதிமாண்பும்
கேட்பான்புகிலளவில்லைகிளக்கவேண்டா
கோட்பாலனவும்வினையுங்குறுகாமையெந்தை
தாட்பால்வணங்கித்தலைநின்றிவைகேட்கத்தக்கார். (ச)

ஏதுக்களாலுமெடுத்தமொழியாலுமிக்குச்
சோதிக்கவேண்டாசுடர்விட்டுளனெங்கள்சோதி
மாதுக்கநீங்கலுறுவீர்மனம்பற்றிவாழ்மின்
சாதுக்கண்மிக்கீரிறையேவந்துசார்மின்களே. (ரு)

ஆடும்மெனவும்மருங்கூற்றமுதைத்துவேதம்
பாடும்மெனவும்புகழல்லதுபாவநீங்கக்
கேடும்பிறப்பும்மறுக்குமெனக்கேட்டீராகில்
நாடுந்திறத்தார்க்கருளல்லதுநாட்டலாமே. (சு)

கடிசேர்ந்தபோதுமலரானகைக்கொண்டுநல்ல
படிசேர்ந்தபால்கொண்டங்காட்டிடத்தாதைபண்டு
முடிசேர்ந்தகாலையறவெட்டிடமுக்கண்மூர்த்தி
யடிசேர்ந்தவண்ணமறிவார்சொலக்கேட்டுமன்றே. (எ)

வேதமுதல்வன்முதலாகவிளங்கிவைய
மேதப்படாமையுலகத்தவரேத்தல்செய்யப்
பூதமுதல்வன்முதலேமுதலாப்பொலிந்த
சூதன்னொலிமாலையென்றேகலிக்கோவைசொல்லே. (அ)

பாராழிவட்டம்பகையானலிந்தாட்டவாடிப்
பேராழியானதிடர்கண்டருள்செய்தல்பேணி
நீராழிவிட்டேறிநெஞ்சிடங்கொண்டவர்க்குப்
போராழியீந்தபுகழும்புகழுற்றதன்றே. (கூ)

மாலாயவனுமறைவல்லநான்முகனும்
பாலாயதேவர்பகரில்லமுதூட்டல்பேணிக்
காலாயமுந்நீர்கடைந்தார்க்கரிதாயெழுந்த
வாலாலமுண்டங்கமரர்க்கருள்செய்ததாமே. (க0)

அற்றன்றியந்தண்மதுரைத்தொகையாக்கினானுந்
* தெற்றென்றதெய்வந்தெளியார்கரைக்கோலைத்தெண்ணீர்ப்
பற்றின்றிப்பாங்கெதிர்வினூரவும்பண்புநோக்கிற்
பெற்றொன்றுயர்த்தபெருமான்பெருமானுமன்றே. (கக)

நல்லார்கள்சேர்புகலிஞானசம்பந்தனல்ல
வெல்லார்களும்பரவுமீசனையேத்துபாடல்
பல்லார்களுமதிக்கப்பாசுரஞ்சொன்னபத்தும்
வல்லார்கள்வானோருலகாளவும்வல்லரன்றே. (கஉ)

திருச்சிற்றம்பலம்.

---

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் மதுரைப்பதியில், பாண்டியர் அரமனையில், எழுந்தருளியிருந்தபொழுது, சமணர்கள் பாண்டியர் நகை உட்கொண்டு சொல்லிய சொற்பொருளை அறியாராகி, இரித்துணர்ந்து, "முன்னே இரண்டு

* "தெற்றென்று" எனவும்பாடம்.

தரம் வாதுசெய்தோம் இன்னும் ஒருதரம் செய்யவேண்டும் மூன்றுதரத்தில் ஒருதரமாயினும் வெற்றிபெறுவோம்" என்றார்கள். பாண்டியர் "இது என்ன வார்த்தை" என்று மறுத்தபின்னும், பிள்ளையார் சமணர்களைநோக்கி, "இனி என்னவாது செய்வோம்" என்று வினவியருள, சமணர்கள் "நாங்கள் இருபக்ஷத்தேரும் எங்கள் எங்கள் சமயவுண்மையை எழுதிய ஏட்டை ஓடுகின்ற வைகையாற்றிலே இடுவோம் எதிர்ந்து செல்லும் ஏடே மெய்ப்பொருளையுடையது" என்றார்கள். பிள்ளையாரும் "அப்படியே செய்வோம்" என்று அருளிச்செய்தார். அப்பொழுது குலச்சிறைநாயனார் சமீபத்தில வந்து, "இனிச் செய்யப்படும் இவ்வாதிலே தோற்றவர்கள் செய்வது யாது" என்றார். அதைக் கேட்ட சமணர்கள் அவர்மேற் கோபங்கொண்டு, பொறாமை காரணமாக, தங்கள் வாய்சோர்ந்து, "நாங்கள் வாதிலே தோற்றோமாயின், எங்களை இவ்வரசர் கழுவில் ஏற்றக்கடவர்" என்றார்கள். அதைக் கேட்ட அரசர் "வைகையாற்றிலே ஏடு இடும்பொருட்டுப் புறப்படுங்கள்" என்று சொல்ல; முன்னே பிள்ளையார் இரத்தினசிங்காசனத்தினின்றும் இறங்கிப் போய், முத்துச்சிவிகைமேற்கொண்டு சென்றார். அவர் பின்னே பாண்டியர் குதிரைமேற்கொண்டு சென்றார். சமணர்கள் மயக்கமேற்கொண்டு சென்றார்கள். சமுத்திரத்தை நோக்கித் திரையெறிந்து அதிவேகத்துடன் பாய்கின்ற வைகையாற்றின் கரையை அடைந்தவுடனே; பாண்டியர் "இருபக்ஷத்தாரும் தங்கள் தங்கள் சமயவுண்மையை எழுதிய ஏட்டை இடக்கடவர்கள்" என்றார். அரிசியாகிய உள்ளீடில்லாத நெற்பதர்போல அறிவாகிய உள்ளீடு இல்லாத மக்கட்பதராகிய சமணர்கள் "அத்திநாதி" என்று எழுதிய ஏட்டை, நதி அதிவேகத்துடன் பாய்தலைக் கண்டும், அவாவினமேலீட்டினாலே இடுதலும், அது விரைந்துகொண்டு கடலை நோக்கி ஓடிற்று. சமணர்கள், அது கொண்டோடும் ஏட்டைத் தொடர்ந்து எதிரே அணைப்பவர்போலக் கரைமேல் ஓடிப்போனார்கள். அவ்வேடு நாலுவிற்கிடைக்கு அப்பால் சென்றமையால், அதைக் காணுதற்கும் கூடாதவர்களாகி, வேறொரு செயலுமின்றி, தங்களுக்கு நாசகாலம் வந்ததென்று அஞ்சி நடுநடுங்கி, அரசருக்கு எதிரே வந்து; தங்கள் நெஞ்சில் அச்சம் வெளிப்பட ஒளிப்பார்போல, பிள்ளையாரை நோக்கி, "நீரும் உம்முடைய ஏட்டை இட்டால் அறியலாம்" என்றார்கள். பாண்டியராஜர் அவர்களை விட்டு, பிள்ளையாருடைய திருக்குறிப்பை நோக்க, தம்மை அடைந்த அன்பர்களுடைய ஜனன மரணங்களுக்கு ஏதுவாய் இருக்கின்ற மலமாயாகன்மங்களை நீக்கியருளுந் தேசிகோத்தமராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் பாண்டியராஜர் தம்முடைய அருமைத் திருக்கரத்தினாலே தீண்டி விபூதி பூசப்பெற்று மலபரிபாகமும் இருவினையொப்பும் உற்று நின்றமையால் அவருக்கும் அவர்போலப் பக்குவப்படும் சர்வான்மாக்களுக்கும் சைவசமயத் தன்மைப்பொருளை விளக்கும் தமிழ்வேதமொழியாகிய "வாழ்கவந்தணர்" என்னுந் திருப்பாசுரத்தைப் பாடி ஏட்டில் எழுதி, அத்திருவேட்டைத் தமது திருக்கரத்தினாலே வைகையாற்றிலே இட்டருளினார். அத்திருவேடு நதியிலே எதிர்ந்து, வேகத்தைக் கிழித்துக்கொண்டு, சர்வான்மாக்களுக்கும் இதுவே மெய்ப்பொருள் என்று காட்டிக்கொண்டு சென்றது. சிவபிரானே எல்லாப்பொருளும் என்று எழுதிய திருவேட்டிலே "வேந்தனுமோங்குக" என்று பாடியருளியபடியால் பாண்டியராஜருடைய கூன் நிமிர்ந்தது. ஏடு எதிர்ந்து செல்லும் பொழுது, தேவர்கள் அனைவரும் கண்டு, புஷ்பமாரி பொழிந்தார்கள். பாண்டியர் அதிசயங்கொண்டு நின்றார். சமணர்களெல்லாரும் அஞ்சிப் பதைபதைத்துத் தலைகுனிந்து நின்றார்கள்.

~~~
~~~

7813 புதுவிரிபொன்செயோலையொருகாதொருகாதுச்சரிசங்கினறுபுரள
விதிவிதிவேதகீதமொருபாடுமோதமொருபாடுமெல்லநகுமான்
மதுவிரிகொன்றைதுன்றுசடைபாகமாதர்குழலபாகமாகவருவ
ரிதுவிவாவண்ணவண்ணமிவள்வண்ணவண்ணமெழில்வண்ணவண்ணமியல்பே. ()

திருச்சிற்றம்பலம்.

## திருவங்கமாலை.

பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம.

தலையேநீவணங்காய - தலை
மாலைதலைக்கணிந்து
தலையாலேபலிதேருந்தலைவனைத்
தலையேநீவணங்காய. (க)

கண்காளகாணமினகளோ - கட
னஞ்சுண்டகண்டன்றனனை
யெணடோள்வீசிநின்றுடும்பிரான்றனனைக
கண்காள்காண்மினகளோ. (உ)

செவிகாளகேணமின்களோ - சிவ
னெம்மிறைசெம்பவள
மெரிபோன்மேனிப்பிரான்றிறமெப்போதுஞ
செவிகாளகேண்மின்களோ. (ங)

மூக்கேநீமுரலாய - முது
காடுறைமுக்கணனை
வாககேகோகியமஙகைமணாளனை
மூககேநீமுரலாய. (ச)

வாயேவாழ்த்துகண்டாய - மத
யானையுரிபோாததுப
பேய்வாழகாடடகததாடும்பிரானறனை
வாயேவாழ்த்துகண்டாய. (ரு)

நெஞ்சேநீநினையாய - நிமிா
புன்சடைநின்மலனை
மஞ்சாடுமமலைமஙகைமணாளனை
நெஞ்சேநீநினையாய். (சு)

கைகாள்கூப்பித்தொழீா - கடி
மாமலர்தூவிநின்று
பைவாய்ப்பாம்பரையார்த்தபரமனைக
கைகாள்கூப்பித்தொழீர். (எ)

7ப 30 வெந்தநீறருங்கலம்விரதிகட்கெலா
மந்தணர்க்கருங்கலமருமறையாறங்கந்
திங்களுக்கருங்கலந்திகழுநீண்முடி
நங்களுக்கருங்கலநமச்சிவாயவே. (ரு)

சலமிலன்சங்கரன்சார்ந்தவர்க்கலா
னலமிலனாடொறுநல்குவானலன்
குலமிலராகிலுங்குலத்திற்கேற்பதோர்
நலமிகக்கொடுப்பதுநமச்சிவாயவே. (சு)

வீடினாருலகினில்விழுமியதொண்டர்
கூடினாரந்நெறிகூடிச்சென்றலு
மோடினேனோடிச்சென்றுருவங்காண்டலு
நாடினேனாடிற்றுநமச்சிவாயவே. (எ)

இல்லகவிளக்கதிருள்கெடுப்பது
சொல்லகவிளக்கதுசோதியுள்ளது
பல்லகவிளக்கதுபலருங்காண்பது
நல்லகவிளக்கதுநமச்சிவாயவே (அ)

முன்னெறியாகியமுதல்வன்முக்கண
றன்னெறியேசரணாதறிண்ணமே
யந்நெறியேசென்றங்கடைந்தவர்க்கெலா
நன்னெறியாவதுநமச்சிவாயவே (கூ)

மாப்பிணைதழுவியமாதொர்பாகத்தன
பூப்பிணைதிருந்தடிபொருந்தக்கைதொழ
நாப்பிணைதழுவியநமச்சிவாயப்பத்
தேத்தவல்லார்தமக்கிடுக்கணில்லையே (க0)

திருச்சிற்றம்பலம்

---

திருநாவுக்கரசுநாயனார் ஈது, பாடலி புத்திரத்திலுள்ள பல்லவராஜனால் ஏவப்பட்ட யானையானது, நாயனாரை வலஞ்செய்து வணங்கி அப்புறம்போய், அமணர்களை அழித்து, அரசனுக்கு ஆகுலத்தை விளைத்தபின்பு அவ்யானைக்குத் தப்பிய சமணரெல்லாரும் மானமழிந்து மயங்கி மனம் வருந்தி, அரசனையடைந்து, "தருமசேனன் நம்முடைய சமயநூல்களிலே கற்றுக்கொண்ட மந்திரத்தின் பலத்தினாலே நாங்கள் விட்ட யானையைக்கொண்டே எங்கள் வலிமையைச் சிதைத்தான்" என்று சொல்லிப் புலம்பினார்கள். அரசன் கோபங்கொண்டு "இனி அவனுக்கு யாது செய்யவேண்டும்" என்று கேட்க, சமணர்கள் "அவனைக் கல்லோடு சேர்த்துக் கயிற்றினாலே கட்டிக் கடலிலே தள்ளவேண்டும்" என்றார்கள். அரசன் கொலைத்தொழில் செய்வோரை நோக்கி, "தருமசேனனைக் காவலோடு கொண்டுபோய், ஒரு கல்லோடு சேர்த்துக் கயிற்றினாலே கட்டி ஒரு படகில் ஏற்றி, சமுத்திரத்திலே விழும்படி தள்ளிவிடுங்கள்" என்று ஆஞ்ஞாபித்தான். கொலைத்தொழில் செய்வோர் அதைக் கேட்டு, சமணர்களும் உடன் செல்ல, அச்சஞ் சிறிதுமில்லாத திருநாவுக்கரசுநாயனாரைக் கொண்டுபோய், அரசன் சொல்லியபடியே கடலிலே தள்ளிவிட்டுத் திரும்பினார்கள்.

சமுத்திரத்திலே தள்ளிவிடப்பட்ட திருநாவுக்கரசுநாயனார் "அடியேனுக்கு யாது நிகழினும் நிகழுக, அடியேன் எம்பெருமானைத் தோத்திரம் பண்ணுவேன்" என்று நினைந்து, "சொற்றுணை வேதியன்" என்னு நமச்சிவாயத் திருப்

பதிகத்தைப்பாட; சமுத்திரத்திலே கல்லானது நாயனாருக்கு மேற்பக்கத்தி லிருக்கத் தெப்பமாய் மிதந்தது. கட்டிய கயிறு அறுந்துபோயிற்று. வருணபகவான் கல்லே சிவிகையாக அந்நாயனாரைத் தாங்கிக்கொண்டு திருப்பாதிரிப்புலியூர் என்னுஞ் சிவஸ்தலத்தின் பக்கத்திலே சேர்த்தான். நாயனார் அந்தத் திருப்பதியினின்றும் அரகரவென்னும் ஓசையுடன் தம்மை எதிர்கொண்ட சிவனடியார்களோடு, ஆலயத்திற்சென்று, சுவாமியை வணங்கித் திருப்பதிகம் பாடிக்கொண்டு அங்கே சிலநாள் எழுந்தருளியிருந்தார்.

---

## தசபுராணம்

### பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

பருவரையொன்றுசுற்றியரவங்கைவிட்டவிமையோரிரிந்துபயமாய்த
திருநெடுமானிறத்தையடுவான்விசைத்ததொருபோகமீண்டுவிசைபோய்ப
பெருகிடமற்றிதற்கொர்* பிதிகாரமொன்றையருளாயபிரானேயெனலு
மருள்கொடுமாவிடத்தையெரியாமலுண்டவவனண்டரண்டரரசே. (க)

நிரவொலிவெள்ளமண்டிநெடுவண்டமூடநிலநின்றுதம்பமதுவாய்
பரமொருதெய்வமெய்தவிதுவொப்பதில்லையிருபாலுநின்றுபணியப
பிரமனுமாலுமேலைமுடியோடுபாதமறியாமைநின்றபெரியோன
பரமுதலாயதேவர்சிவனாயமூர்த்தியவனாநமக்கொர்சரணே (உ)

காலமுநாள்களூழிபடையாமுனேகவுருவாகிமூவருருவிற
சாலவுமாகிமிக்கசமயங்களாறினுருவாகிநின்றதழலோன
ஞாலமுமேலைவிண்ணொடுலகேழுமுண்டுகுறளாயொராலினிலைமேற
பாலனுமாயவற்கொர்பரமாயமூர்த்தியவனாநமக்கொர்சரணே (ங)

நீடியவிண்ணுமண்ணுநெடுவேலைகுன்றொடுலகேழுமெங்குநலியச
சூடியகையராகியிமையோர்கணங்கடுதியோதிநின்றுதொழலும்
மோடியதாரகன்றனுடலம்பிளந்துமொழியாதசோரமொழிய
வாடியமாகடத்தெமலாடிடாதமையையாநமக்கொர்சரணே. (ச)

நிலைவலியின்றியெங்குநிலனோடுவிண்ணுநிதனருசெய்தோடுபுரமூன
றலைநலிவஞ்சியோடியரியோடுதேவரரணம்புகத்தனருளாற
கொலைநலிவாளிமூளவரவங்கைநாணுமலைபாயிறுபுரமா
மலைசிலைகையிலொல்கவளைவித்தவள்ளலவனாநமக்கொர்சரணே (ரு)

நீலநன்மேனிசெங்கண்வளைவெள்ளெயிற்றனெரிகேசனேடிவருநாட
காலனைமாலைகொண்டுவழிபாடுசெய்யுமறையோனைவந்துகுறுகப
பாலனையோடவோட்டப்பயமெய்துவித்தவுயிர்வவ்வுபாசமவிழக
காலனைவீடுசெய்தகழல்போலுமண்டர்தொழுதோதுசூடுகழலே. (சு)

உயர்தவமிக்கதக்கனுயர்வேள்விதன்னிலவியுண்ணவந்தவிமையோர
பயமுறுமெச்சனங்கிமதியோனுமுற்றபடிகண்டுநின்றுபயமா
யயனொடுமாலுமெங்களறியாமையாதிகமியென்றிறைஞ்சியகலச
சயமுறுதன்மைகண்டதழல்வண்ணனெந்தைகழல்கண்டுகொள்கைகடனே. (எ)

---

* "விதிகாரம்" என்றும் பாடம்.

நலமலிமங்கைநங்கைவிளையாடியோடிநயனத்தலங்கள்கரமா
வுலகினையேழுமுற்றுமிருண்மூடவிருளோடநெற்றியொருகண்
ணலர்தரவஞ்சிமற்றைநயனங்கைவிட்டுமடவாளிறைஞ்சமதிபோ
லலர்தருசோதிபோலவலர்வித்தமுக்கணவனாநமக்கொர்சரணே. (அ)

கழைபடுகாடுதென்றல்குயில்கூவவஞ்சுகணையோனணைந்துபுகலு
மழைவடிவண்ணனெண்ணிமகவோனைவிட்டமலரானதொட்டமதன
னெழில்பொடிவெந்துவீழவிமையோர்கணங்களெரியென்றிறைஞ்சியகலத்
தழல்படுநெற்றியொற்றைநயனஞ்சிவந்ததழல்வண்ணனெந்தைசரணே (கூ)

தடமலராயிரங்கள்குறைவொன்றதாகநிறையென்றுதன்கணதனா
லுடனவழிபாடுசெய்ததிருமாலையெந்தைபெருமானுகந்துமிகவுஞ்
சுடரடியான்முயன்றுசுழல்வித்தரக்கனுரமப்பிளந்தகொடுமை
யடல்வலியாழியாழியவனுக்களித்தவவனாநமக்கொர்சரணே. (க0)

கடுகியதேர்செலாதுகயிலாயமீதுகருதேலுன்வீரமொழிநீ
முடுகுவதன்றுதன்மமெனநின்றுபாகன்மொழிவானைநன்றுமுனியா
விடுவிடுவென்றுசென்றுவிரைவுற்றரக்கன்வரையுற்றெடுக்கமுடிதோ
ணெடுநெடுவிற்றுவீழவிரலுற்றபாதநினைவுற்றதென்றன்மனனே (கக)

திருச்சிற்றம்பலம்

## பாவநாசத்திருப்பதிகம்.

### பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

பற்றற்றார்சேர்பழம்பதியைப்பாசூர்நிலாயபவளத்தைச்
சிற்றம்பலத்தெந்திகழ்கனியைத்தீண்டற்கரியதிருவுருவை
வெற்றியூரில்விரிசுடரைவிமலர்கோனைத்திரைசூழ்ந்த
வொற்றியூரெமுத்தமனையுள்ளத்துள்ளேவைத்தேனே. (க)

ஆனைக்காவிலணங்கினையாரூர்நிலாயவம்மானைக்
கானப்பேரூர்க்கட்டியைக்கானூர்முளைத்தகரும்பினை
வானப்பேரார்வந்தேத்தும்வாய்மூர்வாழும்வலம்புரியை
மானக்கயிலைமழகளிற்றைமதியைச்சுடரைமறவேனே (உ)

மதியங்கண்ணிஞாயிற்றைமயக்கந்தீர்க்குமருந்தினை
யதிகைமூதூரரசினையையாறமர்ந்தவையனை
விதியைப்புகழைவானோர்கள்வேண்டித்தேடும்விளக்கினை
நெதியைஞானக்கொழுந்தினைநினைந்தேற்குள்ளநிறைந்ததே. (ங)

புறம்பயத்தெம்முத்தினைப்புகலூரிலங்குபொன்னினை
யுறந்தையோங்குசிராப்பள்ளியுலகம்விளக்குஞாயிற்றைக்
கறங்குமருவிக்கழுக்குன்றிற்காண்பார்காணுங்கண்ணானை
யறஞ்சூழதிகைவீரட்டத்தரிமானேற்றையடைந்தேனே. (ச)

கோலக்காவிற்குருமணியைக்குடமூக்குறையும்விடமுணியை
யாலங்காட்டிலந்தேனையமரர்சென்னியாய்மலரைப்
பாலிற்றிகழும்பைங்கனியைப்பராய்த்துறையெம்பசும்பொன்னைச்
சூலத்தானைத்துணையிலியைத்தோளைக்குளிரத்தொழுதேனே. (ரு)

மருகலுறை மாணிக்கத்தை வலஞ்சுழியின் மாலையைக்
கருகாவூரிற் கற்பகத்தைக் காண்டற்கரிய கதிரொளியைப்
பெருவேளூரெம் பிறப்பிலியைப் பேணுவார்கள் பிரிவரிய
திருவாஞ்சியத்தெஞ் செல்வனைச் சிந்தையுள்ளே வைத்தேனே. (௬)

எழிலாரிராசசிங்கத்தையிராமேச்சுரத்தெம் மெழிலேற்றைக்
குழலார்கோதைவரைமார்பிற் குற்றாலத்தெங் கூத்தனை
நிழலார்சோலை நெடுங்களத்து நிலாயநித்த மணாளனை
யழலார்வண்ணத்தம்மானை யன்பிலணைத்து வைத்தேனே. (௭)

மாலைத்தோன்றும் வளர்மதியை மறைக்காட்டுறையு மணாளனை
யாலைக்கரும்பினின் சாற்றை யண்ணாமலையெம் மண்ணலைச்
சோலைத்துருத்தி நகர்மேய சுடரிற்றிகழுந் துளக்கிலியை
மேலைவானோர் பெருமானை விருப்பால் விழுங்கியிட்டேனே. (௮)

சோற்றுத்துறையெஞ் சோதியைத் துருத்திமேய தூமணியை
யாற்றிற்பழனத்தம்மானை யாலவாயெம் மருமணியை
நீற்றிற்பொலிந்த நிமிர்திண்டோ ணெய்த்தானத்தெந் நிலாச்சுடரைத்
தோற்றக்கடலை யடலேற்றைத் தோணிக்குளிரத் தொழுதேனே. (௯)

புத்தூருறையும் புனிதனைப் பூவணத்தெம் போரேற்றை
வித்தாய் மிழலைமுளைத்தானை வேள்விக்குடியெம் வேதியனைப்
பொய்த்தார்புரமூன் றெரித்தானைப் பொதியின்மேய புராணனை
வைத்தேனென்றன் மனத்துள்ளே மாத்தூர்மேய மருந்தையே. (௰)

முந்தித்தானே முளைத்தானை மூரிவெள்ளேறூர்ந்தானை
யந்திச்செவ்வான் படியானை யரக்கனாற்றலழித்தானைச்
சிந்தைவெள்ளப் புனலாட்டிச் செஞ்சொன்மாலையடிசேர்த்தி
யெந்தைபெம்மானென்னெம்மா னென்பார்பாவநாசமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## விடந்தீர்த்த திருப்பதிகம்

### பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

ஒன்றுகொலாமவர் சிந்தையுயர்வரை
யொன்றுகொலா முயருமதி சூடுவ
தொன்றுகொலா மிடுவெண்டலை கையது
வொன்றுகொலா மவரூர்வது தானே (௧)

இரண்டுகொலா மிமையோர் தொழுபாத
மிரண்டுகொலா மிலங்குங் குழைபெண்ணா
ணிரண்டுகொலா முருவஞ் சிறுமான்மழு
விரண்டுகொலா மவரேந்தினதாமே. (௨)

மூன்றுகொலா மவர்கண்ணுதலாவன
மூன்றுகொலா மவர்சூலத்தின் மொய்யிலை
மூன்றுகொலாங் கணைகையது வினாண்
மூன்றுகொலாம் புரமெய்தனதாமே. (௩)

7561 நாலுகொலாமவர்தம்முகமாவன
நாலுகொலாஞ்சனனம்முதற்றோற்றமு
நாலுகொலாமவரூர்தியின்பாதங்க
ணாலுகொலாமறைபாடினதாமே. (௪)

அஞ்சுகொலாமவராடரவின்பட
மஞ்சுகொலாமவர்வெல்புலனாவன
வஞ்சுகொலாமவர்காயப்பட்டான்கணை
யஞ்சுகொலாமவராடினதாமே (௫)

ஆறுகொலாமவரங்கமமைத்தன
வாறுகொலாமவர்தம்மகனார்முக
மாறுகொலாமவர்தார்மிசைவண்டின்கா
லாறுகொலாஞ்சுவையாக்கினதாமே. (௬)

ஏழுகொலாமவரூழிபடைத்தன
வேழுகொலாமவர்கண்டவிருக்கை
யேழுகொலாமவராளுமுலகங்க
ளேழுகொலாமிசையாக்கினதாமே. (௭)

எட்டுகொலாமவரீறில்பெருங்குண
மெட்டுகொலாமவர்சூடுமினமல
ரெட்டுகொலாமவர்தோளிணையாவன
வெட்டுகொலாந்திசையாக்கினதாமே. (௮)

ஒன்பதுபோலவர்வாசல்வகுத்தன
வொன்பதுபோலவர்மார்பினினூலிழை
யொன்பதுபோலவர்கோலக்குழற்சடை
யொன்பதுபோலவர்பாரிடந்தானே. (௯)

பத்துக்கொலாமவர்பாம்பின்கண்பாம்பின்பல்
பத்துக்கொலாமெயிறுந்நெரிந்துக்கன
பத்துக்கொலாமவர்காயப்பட்டான்றலை
பத்துக்கொலாமடியார்செய்கைதானே. (க௦)

திருச்சிற்றம்பலம்

---

திருநாவுக்கரசு நாயனார் திருநல்லூரினின்றும் நீங்கி, திங்களூரின் வழியாகச் சென்று செல்லும்பொழுது, அவ்வூரிலே அப்பூதியடிகணாயனார் என்பவர் தம்முடைய புத்திரர்களுக்குத் திருநாவுக்கரசு என்னும் பெயரைத் தரித்தும், தம்முடைய அன்னசத்திரம் தண்ணீர்ப்பந்தல் முதலியவற்றிலும் தனித்தனியே "இது திருநாவுக்கரசு நாயனாருடையது" என்று தீட்டியும் இருத்தலைக் கேள்வியுற்று, அவருடைய வீட்டுக்கு எழுந்தருளினார். அப்பூதிநாயனார் அப்பமூர்த்தியைத் தம்முடைய மனைவியார் புத்திரர் முதலாயினாரோடும் வணங்கி, அங்கே திருவமுது செய்யும்படி பிரார்த்தித்தார், அதற்கு அந்நாயனார் உடன்பட்டது கண்டு, அமுது சமைப்பித்து, தமது புத்திரராகிய மூத்த திருநாவுக்கரசை நோக்கி, "தோட்டத்திற் சென்று வாழைக்குருத்து அரிந்துகொண்டு வா" என்று சொல்லியனுப்பினார். அவர் விரைந்து வாழைக்குருத்து அரியப்புகுந்த பொழுது, ஒரு பாம்பு அவரைத் தீண்டிற்று. அதை அவர் பேசாமல், அப்பமூர்த்தி திருவமுதுசெய்யும்படி குருத்தை அரிந்துகொண்டு, விரைவிலே திரும்பி வந்து, விஷந் தலைக்கொள்கையால் மயக்கமடைந்து, வாழைக் குருத்தைத்

ஏழுமாமலையேழ்பொழில்சூழ்கட
லேழுபோற்றுமிராவணன்கைநரம்
பேழுகேட்டருள்செய்தவன்பொற்கழ
லேழுஞ்சூழடியேன்மனத்துள்ளவே (௭)

எட்டுமூர்த்தியாய்நின்றியலுந்தொழி
லெட்டுவானகுணத்தீசனெம்மானற்றனை
யெட்டுமூர்த்தியுமெம்மிறையெம்முள்ளே
யெட்டுமூர்த்தியுமெம்முளொடுங்குமே. (௮)

ஒன்பதொன்பதியானையொளிகளி
யொன்பதொன்பதுபல்கணஞ்சூழவே
யொன்பதாமவைதீத்தொழிலினுரை
யொன்பதொத்துநின்றென்னுளொடுங்குமே. (௯)

பத்துநூறவன்வெங்கணவெள்ளேற்றண்ணல
பத்துநூறவன்பல்சடைதோணமிசை
பத்தியாமிலமாதலின்ஞானத்தாற
பத்தியானிடங்கொண்டதுபள்ளியே. (௧0)

திருச்சிற்றம்பலம்

## தனித்திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

மாசில்வீணையுமாலைமதியமும்
வீசுதென்றலும்வீங்கிளவேனிலு
மூசுவண்டறைபொய்கையும்போன்றதே
யீசனெந்தையிணையடிநீழலே. (௧)

நமச்சிவாயவேஞானமுங்கல்வியு
நமச்சிவாயவேநானறிவிச்சையு
நமச்சிவாயவேநாநவின்றேத்துமே
நமச்சிவாயவேநன்னெறிகாட்டுமே. (௨)

ஆளாகாராளானாரையடைந்துய்யார
மீளாவாட்செய்துமெய்ம்மையுணிற்கிலார
தோளாதசுரையோதொழும்பர்செவி
வாளாமாயந்துமண்ணாகிக்கழிவரே. (௩)

நடலைவாழ்வுகொண்டென்செய்திர்நாணிலீர்
சுடலைசேர்வதுசொற்பிரமாணமே
கடலினஞ்சமுதுண்டவர்கைவிட்டா
லுடலினார்கிடந்தூர்முனிபண்டமே. (௪)

பூக்கைக்கொண்டரன்பொன்னடிபோற்றிலார
நாக்கைக்கொண்டரனாமநவில்கிலா
ராக்கைக்கேயிரைதேடியலமந்து
காக்கைக்கேயிரையாகிக்கழிவரே. (௫)

குறிகளுமடையாளமுங்கோயிலு
நெறிகளுமவர்நின்றதோர்நேர்மையு
மறியவாயிரமாரணமோதிலும்
பொறியிலீர்மனமென்கொல்புகாததே. (௬)

வாழ்த்தவாயுநினைக்கமடநெஞ்சுந்
தாழ்க்கச்சென்னியுந்தந்ததலைவனைச்
சூழ்த்தமாமலர்தூவித்துதியாதே
வீழ்த்தவாவினையேனெடுங்காலமே. (௭)

எழுதுபாவைநல்லார்திறம்விட்டுநான்
றொழுதுபோகிநின்றேனையுஞ்சூழ்ந்துகொண்
டுழுதசால்வழியேயுழுவான்பொருட்
டிழுதைநெஞ்சமிதென்படுகின்றதே. (௮)

நெக்குநெக்குநினைபவர்நெஞ்சுளே
புக்குநிற்கும்பொன்னார்சடைப்புண்ணியன்
பொக்கமிக்கவர்பூவுநீருங்கண்டு
நக்குநிற்பரவர்தமைநாணியே. (௯)

விறகிற்றீயினன்பாலிற்படுநெய்போன்
மறையநின்றுளன்மாமணிச்சோதியா
னுறவுகோனட்டுணர்வுகயிற்றினான்
முறுகவாங்கிக்கடையமுன்னிற்குமே. (௧0)

திருச்சிற்றம்பலம்

---

திருநாவுக்கரசு நாயனார் அருளிச்செய்த மறுமாற்றத் திருத்தாண்டகத்தைக் கேட்ட பல்லவராஜனுடைய மந்திரிமார்கள், நாயனாரை வணங்கிப் பிரார்த்தித்து அழைக்க, "அவர் அடியேனுக்கு வரும் அபாயங்களுக்கெல்லாம் சிவபெருமான் இருக்கின்றார்" என்று போதற்கு உடன்பட்டார். அவர்கள் அழைத்துக் கொண்டுபோய், அரசனெதிர் சென்று அறிவித்தார்கள். அரசன் அதைக் கேட்டு, பக்கத்திலிருந்த சமணர்களை நோக்கி, "இனி இவனுக்கு யாது செய்வோம்" என்று கேட்க, சமணர்கள் "நீற்றறையில் இடல்வேண்டும்" என்றார்கள். அரசன் சமீபத்தில் நின்ற ஏவலாளர்களை நோக்கி, "இவனை இவர்கள் சொல்லியபடியே செய்யுங்கள்" என்று ஆஞ்ஞாபிக்க, அவர்கள் அந்நாயனாரைச் சூட்டினையுடைய நீற்றறையினுள்ளே விட்டுக் கதவைப் பூட்டினார்கள். திருநாவுக்கரசு நாயனார் சிவபிரானுடைய திருவடி நிழலைத் தலைக்கொண்டு, "சிவனடியார்களுக்கு இவ்வுலகத்திலே துன்பம் வருவதுண்டோ" என்று அக்கடவுளைத் தியானித்து, "மாசில் வீணையு மாலை மதியமும்" என்னுந் திருக்குறுந்தொகையைப் பாடித் தொழுது கொண்டு, அந்த நீற்றறையினுள்ளே எழுந்தருளியிருந்தார். அந்நாயனார் சிவபெருமானுடைய திருவடி நிழலாகப் பாவித்த அந்நீற்றறை, வீணாகானமும் சந்திரனும் தென்றலும் இளவேனிலும் பொய்கையும் போலக் குளிர்ந்தது.

ஏழுநாட் சென்றபின், பல்லவராஜன் சமணர்களை அழைத்து, "நீற்றறையைத் திறந்து பாருங்கள்" என்று சொல்ல, அவர்கள் நீற்றறையைத் திறந்து, நாயனார் யாதொரு ஊனமும் இன்றிக் களிப்புற்றிருத்தலைக் கண்டு, ஆச்சரியமடைந்து, அரசனிடத்திற் சென்று, "அவன் முன்னே நம்முடைய சமயத்தில் இருந்து செய்த மந்திரசாதகத்தினாலே வேவாமற் பிழைத்துக் கொண்டான். இனி அவனுக்கு நஞ்சு ஊட்டுவதே தகும்" என்றார்கள். அரசன் "அப்படியே

செய்யுங்கள்" என்று சொல்ல, அவர்கள் நாயனாருக்கு நஞ்சு கலந்த பாற்சோற்றை உண்ணக் கொடுத்தார்கள நாயனார் அவர்களுடைய வஞ்சனையை அறிந்து, "நஞ்சை அமுதாகக்கொண்ட கடவுளுடைய அடியார்களுக்கு நஞ்சும அமுதாம்" என்று, நஞ்சுகலந்த அந்தப் பாற்சோற்றை உணடு இருந்தார் சமணாகள் அதைக்கண்டு, "இவனுக்கு நஞ்சம் அமுதமாயிற்று இவவிடத்திலே இவன் பிழைப்பானுயில் நமக்கெல்லாம் நாசமுண்டாகும்" என்று பயந்து அரசனிடததிற் சென்று, "நாம் நஞ்சைச சோற்றிலே கலந்து உண்பித்தும், நம்முடைய சமயநூல்களிலே கற்றுக்கொண்ட மந்திரவலியினலே பிழைத்துவிட்டான். அவன் இறவாதிருப்பானுகில், எங்கள்உயிரும் உமமுடைய அரசாட்சியும் நீங்குவது திடம்" என்றாகள்

---

## தனித்திருககுறுநதொகை.

---

திருசசிற்றமபலம

ஏயிலானையெனிசசையகமபடிக
கோயிலானைக்குணடபெருஙகுனறினை
வாயிலானைமனோனமணியைபபெறற
தாயிலானைத்தழுவுமெனனுவியே. (க)

முனனைஞானமுதற்றனிவித்தினை
பின்னைஞானபபிறங்குசடையனை
யெனனைஞானத்திருளறுத்தாணடவன
றனனைஞானததனையிடடுவைபபனே.

ஞானததாறமெருழுவாாசிலஞானிகள
ஞானததாறமெருழுவேனுனைநானலேன
ஞானததாறமெருழுவாாகடொழககணடு
ஞானததாயுனைநானுநதொழுவனே. (ங)

புழுவுககுங்குணநான்கெனககுமமதே
புழுவுககிஙகெனககுளளபொலலாஙகிலலை
புழுவினுஙகடையேனபுனிதனறமா
குழுவுககெவவிடததேளசெனறுகூடடமே. (ச)

மலையேவநதுவிழினுமனிதாகா
ணிலையினினறுகலஙகபபெறுதிரோ
றலைவனாகியவீசன்றமாகளைக
கொலைகையானைதானகொனறிடுகிறகுமே. (ரு)

கறறுக்கொளவனவாயுளநாவுள
விட்டுக்கொள்வனபூவுளநீருள
கறறைசசெஞ்சடையானுளனுமுளோ
மெறறுககோநமனானமுனிவுண்பதே. (சு)

மனிதாகாளிங்கேவம்மொன்றுசொல்லுகேன
கனிதநதாறகனியுண்ணவுமவலலிரோ
புனிதன்பொறகழலீசனெனுஙகனி
யினிதுசாலவுமேசறறவாகட்கே. (எ)

